# அறிக்கை.

மெட்ரிக்யுலேஷன் தமிழ்ப்பாடபுத்தகத்திற்கு நடந்த பலவருஷங்களிற் போலவே, யாம் இந்தவருஷமும் உரையெழுதிவெளியிடலானோம்; அவ்வாறு செய்யத்தொடங்குகையில், புத்தகத்தை மேல்நோக்கிற் படித்தபோதே அதில் யாப்பிலக்கணத்திற்குமாறான பிழைகளும் [Errors of Prosody], காமா முதலிய குறியீட்டுப்பிழைகளும் [Errors of Punctuation], பிரித்தற் பிழைகளும் [Space mistakes], தலைப்புப்பிழைகளும் [Wrong headings], புணர்ச்சிப் பிழைகளும் [Errors of Syntax], இலக்கணப் பிழைகளும் [Grammatical errors], எழுத்துப் பிழைகளும் [Typographical Errors], அச்சுப் பிழைகளும் [Printer's devil] முதலியன நிறைந்திருந்தன. அவற்றை முழுவதும் எடுத்துத் திருத்திக்காட்டுவது அசாத்தியமாகத் தோன்றியபடியால், அவசியமான பிழைகளைமாத்திரம் இங்கே பிழைதிருத்தமாக எடுத்துக்காட்டலானோம். மாணாக்கர்கள் முதலில் இப்பிழைகளைத் தமது தமிழ்ப் பாட புத்தகத்தில் திருத்திக்கொண்டு, பிறகு படித்தால், அவர்கட்கு அநுகூலமாக இருக்கும்.

## யூநிவர்ஸிடி பாடபுத்தகத்தின் பிழை திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| சூசிபத்திரம். | 1 | சுந்தரமூர்த்திநாயனார்:— | சுந்தரமூர்த்திநாயனார் தேவாரம். |
| ,, | 2 | தேவாரம் | திருவிடைமருதூர் திருவடமுல்லைவாயிற் பதிகம். |
| ,, | 10 | தமிழின் பெருமை......25 | தமிழ்ச்சிறப்பு.........23. |
| ,, | 11 | | இங்கு, 7. தமிழ்த்தெய்வவணக்கம்...24. 8. கம்பரைப் பற்றிய தனியன்கள்... 25 என்ற இரண்டும் |
| 1 | 13 | மேயுன் | மேயுன [விடுபட்டன. |
| 2 | 9,10 | உந்தியை வனஞ்சுமர்ந்து | உந்தி யையவனஞ்சுமந்து |
| 4 | 1, 2, 3 | பெருமாள்திருமொழி.முதலாயிரம். நான்காம்திரு | முதலாயிரம். பெருமாள்திருமொழி. ஐந்தாந்திருமொ |
| ,, | 22 | எங்கும்போயுய்கே[மொழி. | எங்குப்போயுய்கே [ழி. |
| 6 | 16 | அறியோரின் | அறிவோரின் |
| 7 | 6 | அவன்கூறும் | அன்னை கூறும் |
| 8 | 2 | மேலறப் | மே லேறப் |
| 9 | 12 | உயிர் கண் மூர்ச்சித்தல். | உயிர்கண் மூர்ச்சித்தல். |
| 10 | 1 | பரிசத்தலால் | பரிசித்தலால். |
| ,, | 10 | தேவர் மாருதிக்கு அநுமநாமமளித்து வாழ்த்துதல் | தேவர் மாருதிக்கு வரமளிக்கத் தொடங்குதல். |
| 11 | 27 | அநுமான்செருக்கால் முனிவரிடங்களிற் புகுந்து குறும்புபுரிதல். | இந்தத்தலைப்பு அடுத்தபக்கத்தில் 31 - ஆவதுபாடலின் தலைப்பாக இருக்க |
| 12 | 10 | சீரைச்சுருக்கு | சீரைசுருக்கு [வேண்டும். |
| ,, | 32 | மருங்குங்குற் | மருங்குற் |
| 13 | 19,20 | ரவன்றனொட யிந்திர | ரவன்றனொ டயிந்திர |
| ,, | 23 | வுடமை | வுடைமை |
| 14 | 15 | உனக்கினி | [illegible]னி |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
| --- | --- | --- | --- |
| 17 | 7 | செய்யதான் | செய்யதாள் |
| ,, | 8 | பொங்கைவாய் | பொய்கைவாய் |
| 18 | 3 | தன்மனத்தே | தம்மனத்தே |
| ,, | 6 | மழைவிடை | மழவிடை |
| 19 | 1 | செருங்கதிர் | செருக்கதிர் |
| ,, | 16 | மற்றெவ்வருமொா | மற்றேறவொா |
| 20 | 18 | யிரங்கேசா | விரங்கேசா |
| ,, | 2 | வேதவீதி | வேதவிதி |
| 21 | 12 | தரித்த | தறித்த |
| ,, | 13 | பிரு | பிரா |
| 22 | 1 | பயனில் | பயனில |
| ,, | 19 | வஃகிதலார் | வஃதிலார் |
| 28 | 15 | ஸ்வர்ன | ஸ்வர்ண |
| 32 | 19 | பலவிமாக | பலவிதமாக |
| 36 | 27 | முகர்ந்துமுகர்ந்து | மோந்துமோந்து |
| 42 | 16 | பாம்மை | பாம்பை |
| 43 | 20 | இதுவே | இதுவோ |
| 45 | 9 | தருமநெரி | தருமநெறி |
| ,, | 27 | அரிசன | அாசன |
| 46 | 14 | தேறில் | தேரில் |
| ,, | 24 | உத்தரபாதத்தில் | உத்தரபாகத்தில் |
| 49 | 32 | ப்ராரத்வ | ப்ராரப்த [ம் |
| 52 | 32 | இருந்தோ தாக்ஷண்யம் | எங்கு இருந்தோ தாக்ஷிண்ய |
| 54 | 8 | ஐஸ்வர்யம் | ஐஶ்வர்யம் |
| 57 | 2 | சுபகரம் | சுபம் |
| 58 | 11 | மயிர்க்குச் | மயிர்க்கூச் |
| 60 | 1 | கற்கக் | கற்க |
| 62 | 4, 5 | மென்றும் | மென்னும் |
| ,, | 25 | என்றும் | என்னும் |
| 63 | 10 | முத்திரத்தார் | முத்திறத்தார் |
| 65 | 11 | புணை | பிணை |
| ,, | 25 | வரிதே | வறிதே |
| ,, | 29,30 | பொறிபுலன்களை | பொறிகளை |
| 66 | 11,12 | திருஷ்டாந்தரங் | திருஷ்டாந்தங் |
| 67 | 2, 3 | தெருவீதிவழி | தெருவழி அல்லது வீதிவழி |
| ,, | 16 | வறுமாறு | வருமாறு |
| ,, | 19 | விதந்துவாய் | விதந்துக்களாய் |
| 68 | 25 | யாவச்ஜீவபரியந்தம் | யாவத்ஜீவம் அல்லது ஜீவபர் |
| 70 | 1 | உரை | உறை [யந்தம் |
| ,, | 19,26 | சிரார்த்தங்கள் | சிராத்தங்கள் |
| 72 | 24 | பசுக்கல் | பசுங்கல் |
| ,, | 27 | வத்தி | வற்றி |
| 73 | 17 | உலேக | உலோக |
| 78 | 22 | சாமக்கிரியைகள் | சாமக்கிரிகள் |
| 81 | 11 | திருமங்கிலியம் | திருமங்கலியம் |
| 83 | 33 | இசைந்ததா | இசைந்தவளா |

ஸ்ரீ

# சுந்தரமூர்த்தி நாயனார் வரலாறு.*

சைவசமயத்திற் சிறந்த ஆசாரியர்கள் நால்வர்; அவராவார் - திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார், திருநாவுக்கரசு நாயனார், சுந்தரமூர்த்தி நாயனார், மாணிக்கவாசக சுவாமிகள் என்பவர். இந்நால்வரும், சைவசமயாசாரிய ரெனப்படுவர்.

இவர்களிலொருவரும் சிவபிரானது தனியடியார் அறுபத்துமூவரி லொருவருமாகிய சுந்தரமூர்த்தி நாயனார், திருமுனைப்பாடி நாட்டில் திருநாவலூரில் பிராமணசாதியில் ஆதிசைவர்மரபிலே, திருக்கைலாயத்தில் திருத்தொண்டு செய்யும் அடியார்கூட்டத்துட் சேர்ந்தவரான †ஆலாலசுந்தரரென்பவரது அமிசமாய்த் திருவவதரித்தார். இவரது தந்தையார் - சடையனார்; தாயார் - இசைஞானியார். இவர்க்குத் தந்தையிட்ட பெயர் - நம்பியாரூரர் என்பது.

இவர் குழந்தைப்பருவத்தில் வீதியில் விளையாடுகையில், அந்நாட்டுக்கு அரசனாகிய நரசிங்கமுனையனென்பவன், இவரைத் தனக்குத் தருமாறு இவரது தந்தையை வேண்டிப் பெற்று வளர்க்க, இவர் அரசனிடத்து வளர்ந்து வந்தும் தமது மரபிற்கு ஏற்ற ஒழுக்கத்தையே உடையவராகி, இளமையிலேயே வேதஆகமபுராணங்களையும் மற்றும் பல கலைகளையும் கற்று உணர்ந்து மகாபாண்டித்தியத்துடன் விளங்கினார்.

அப்பால், சடையனார், தமது புத்திரருக்கு விவாகஞ்செய்யவிரும்பி, புத்தூர்ச் சடங்கவிசிவாசாரியரது புத்திரியைத் தமது புத்திரருக்குத் தருமாறு கேட்டு நிச்சயித்து விவாகத்துக்கு ஒரு நன்னாள் குறிக்க, அந்நாளில் நம்பியாரூரர்திருமணக்கோலத்துடன் புத்தூர்ச்சடங்கவிசிவாசாரியர் மாளிகையிலே மணத்தின்பொருட்டு அலங்கரித்திருந்த திருமணப்பந்தரிற் போய் நிற்கையில், சிவபெருமான் இவரைப் பிரபஞ்சவாழ்க்கையில் மயங்கவிடாமல் தடுத்து ஆட்கொள்ளும்பொருட்டு ஒரு வயோதிகபிராமணவடிவங் கொண்டு அங்கு எழுந்தருளி, இவரை நோக்கி 'எனக்கும் உனக்கும் இருக்கின்ற வழக்கை முடித்திட்டுப் பிறகு உனது விவாகத்தை நடத்துவாய்' என்றார். நம்பியாரூரர் 'அவ்வழக்கு யாது? சொன்னால், அதை முடித்தபின்னரே விவாகஞ் செய்துகொள்வேன்' என்ன, அந்த முதியஅந்தணர் அங்குள்ள பிராமணர்களை நோக்கி 'இந்த நாவலூரானாகிய நம்பியாரூரன் எனக்கு அடியவன்' என்றார். நம்பியாரூரர் அவ்வுரையை இகழ்ந்து நகைக்க, அம்முதியவர் 'முற்காலத்திலே உன்னுடைய பாட்டன் எனக்கு எழுதித்தந்த அடிமையோலை இருக்கின்றது. அப்படியிருக்க, நீ இகழ்வது என்னை?' என்று கடிந்து பேசினார். நம்பியாரூரர் அம்முதியவரை நோக்கி, 'பிராமணருக்குப் பிராமணர் அடிமையாதல் இன்றைக்குத்தான் நீர்சொல்லக் கேட்டோம்; நீர் பித்தனோ?'

---

* இதனைப் பெரியபுராணத்திற் பரக்கக் காணலாம்.

† திருக்கைலாயமலையிலே யுள்ள நந்தவனத்தில் சுவாமிபூஜையின்பொருட்டுப் பூக்கொய்யச் சென்ற ஆலாலசுந்தரர், பார்வதிதேவியாரின்பொருட்டுப் பூக்கொய்யவந்த அவரதுசேடியரான கமலினி அநிந்திதை யென்னும் மகளிரைக் கண்டு காதல்கொள்ள, அவர்களும் சுந்தரர்மீது காதல்கொள்ள, பின்பு அவர்கள் மனத்தை ஒருவாறு திருப்பிப் பூக்கொய்துகொண்டு செல்ல, அக்குற்றத்தால் ஆலாலசுந்தரர் நம்பியாரூரராகவும், அவ்விரண்டு மங்கையரும் முறையே பரவையார் சங்கிலியாராகவும் இந்நிலவுலகத்திற் கடவுளின் நியமனப்படியே பிறக்க, ஆரூரர் அவர்களை மணஞ்செய்துகொண்டனரென்று விவரங் காண்க.

என்ன, முதியவர் 'நான் பித்தனானாலும் ஆகுக; பேயனானாலும் ஆகுக. நீ என்னை என்ன வைதாலும் நான் சிறிதும் பின்வாங்கேன். நீ என்னைச் சிறிதும் அறிந்திலை. இப்படி விளையாட்டுமொழிகளைப்பேசிக்கொண்டு பொழுது போக்கவேண்டா; அடிமைத்தொழில் செய்ய வா' என்றார். அப்போது நம்பியாரூரர், 'உம்முடையஓலையைக் காட்டும், பார்ப்போம்' என்ன, அதற்கு அந்தணர் 'ஓலையைப் பார்த்து நிச்சயித்தற்கு உனக்குத் திறமையில்லை யாதலால், இந்தச்சபையார்க்குக் காட்டி உடன்படச்செய்வேன்' என்ன, ஆரூரர் கோபங்கொண்டு அவர்கையிலிருந்த ஓலையைப் பறிக்குமாறு விரைய, அப்போது அவர் ஓடத் தாமும் ஓடித் தொடர்ந்து சென்று அம்முதியவரது கையிலிருந்த ஓலையைப் பறித்துக் கிழித்துப்போட, அவர் ஆரூரரைப் பிடித்துக்கொண்டு 'இது முறையோ?' என்று சத்தமிட, அருகில்நின்றவர்கள் 'உலகத்தில் எக்காலத்திலும் இல்லாத ஏற்பாட்டைக்கொண்டு வழக்காடுகின்ற அந்தணரே! நீர் எங்கு இருக்கின்றவர்?' என்ன, அவர் 'நான் இந்த வெண்ணெய்நல்லூரி லிருக்கின்றவன்; அது கிடக்க: இவன் என்கையிலிருந்தஓலையைக் கிழித்ததனால் தான் அடியவனென்பதை உறுதிப்படுத்தினான்' என்றார். அதற்கு நம்பியாரூரர் 'நீர் வெண்ணெய்நல்லூரில் இருப்பவரானால், அங்குத்தானே நாம் இருவரும் போய் வழக்கைத் தீர்த்துக்கொள்வோம்' என்ன, முதியவரும் அதற்கு உடன்பட்டு, முன்னே செல்ல, அந்தச் சுந்தரமூர்த்தி நாயனாரும் மற்றைப்பிராமணர்களும் பின்னேசென்று திருவெண்ணெய்நல்லூரை யடைந்தார்கள். பிறகு அவர்கள் அந்தவூரிலிருக்கும் பிராமணர்களின் சபையிலே புகுந்து தமதுவழக்கைத் தெரிவித்துக்கொள்ள, சபையோர் விசாரித்து முதியவரை நோக்கி, 'இவர் அடிமையென்பதற்கு ஆதாரம் உம்மிடத்தில் என்ன இருக்கின்றது?' என்ன, முதியவர் 'இவன் கிழித்த ஓலையின் மூலவோலை என்னிடத்தி லிருக்கின்றது' என்று சொல்லி அதனை எடுத்துக்காட்ட, சபையோர் அதனைப்பார்த்து விசாரித்துச் சாட்சியும் கையெழுத்தும் ஒத்திருந்தது கண்டு, சுந்தரமூர்த்திநாயனாரை நோக்கி, 'இனி நீர் தப்ப வழியில்லை; நீர் இவர்க்கு அடிமைசெய்ய வேண்டுவதே கடமை' என்று சொல்லி, அம்முதியவரைநோக்கி 'உமக்கு இந்த ஓலையிலே ஏற்படுகின்றபடி இந்தவூரிலே தலைமுறை தலைமுறையாக இருக்கின்ற வீடு இருக்க வேண்டுமே. அது எங்கே யிருக்கின்றது? காட்டும்' என்ன, பிராமணவடிவங்கொண்டு நின்ற கடவுள் 'இங்குள்ளவர்களில் ஒருத்தர்க்கும் எனதுவீடு தெரியாவிட்டால் நான் காட்டுகின்றேன், வாருங்கள்' என்று சொல்லி முன்னேநடந்து அவ்வூரிலுள்ள ஆலயத்தினுள்ளே சென்று அந்தர்த்தாநமாயினர்.

அப்போது சுந்தரமூர்த்தி தம்மோடு வழக்கிட்டவர் சிவபெருமானேயென்று தெளிந்து அப்பிரானது திருவருளின்திறத்தை வியந்து கோயிலினுட்சென்று கூப்பிட, சிவபிரான் அங்கு இடபாரூடராய்க் காட்சிதந்து, 'சுந்தரா! உன்னைப் பிரபஞ்சவாழ்க்கையில் மயங்கவிடாது தடுக்கும்பொருட்டே நாம் வந்து வழக்கிட்டோம். நீ எம்மோடு கடுமையாகப்பேசியதனால், 'வன்றொண்டன்' என்று ஒருபேர் உனக்கு உண்டாகுக. இனி நீ பாடல் திருத்தொண்டைச் செய்க' என்று திருவாய்மலர்ந்தருள, சுந்தரமூர்த்தி 'ஒன்றுக்கும் பற்றாத சிறியேன் தேவரீரது குணக்கடல்களில் எதை அறிவேன்? என்னவென்று பாடுவேன்?' என்ன, கடவுள் 'நீ என்னைப் பித்தனே?' என்று ஏசியதனால் "பித்தா" என்றே தொடங்கிப் பாடுக' என்று கட்டளையிட்டார். உடனே நாயனார் "பித்தா பிறைசூடீ" என்று தொடங்கித் திருப்பதிகம் பாடலானார்.

சுந்தரமூர்த்திநாயனார் திருவெண்ணெய்நல்லூரி லெழுந்தருளியிருக்கிற சிவபெருமான் தம்மை அடிமைகொண்டபின்பு, தலயாத்திரைசெய்பவராய்த் திருநாவலூர்க்கும் திருத்துறையூர்க்கும் சென்று பதிகம்பாடி, சிதம்பரத்

தைத் தரிசிக்கவேண்டிப் புறப்பட்டு இடைவழியிலே திருவதிகையினெல்லையை யடைந்து அத்தலம் திருநாவுக்கரசுசுவாமிகள் உழவாரப்படைகொண்டு கைத்தொண்டுபுரிந்த இடமாதலால் அதனை மிதிக்கவும் அஞ்சி அருகிலிருந்த சித்தவடமடத்தில் தங்கியிருக்க, அன்றிரவு திருவதிகையிலுள்ள சிவபெருமான் விருத்தபிராமணவடிவங்கொண்டு அங்கு வந்து சுந்தரமூர்த்திநாயனார் திருமுடியின்மேல் தமது திருவடிகளைத் தமொற்றத்தினால் வைத்துத் தூங்குபவர்போலப் பலதரம் செய்து, முடிவில் 'என்தலையை இவ்வாறு பலமுறை மிதிப்பவர் யாவர்?' என்று நாயனார் வினவ, அந்தமுதியபிராமணர் 'என்னை நீ அறியாயா?' என்றுகூறி மறைந்தருள, நாயனார் அது கண்டு 'ஆண்டவரை யறியாது என்னசொன்னேன்!' என்று இரங்கி, வீரட்டானேசுரர்மேற் பதிகம்பாடி, அங்கிருந்து புறப்பட்டுத் திருமாணிக்குழிக்கும் திருத்தினைநகருக்கும் போய்ப் பதிகம்பாடிச் சிதம்பரத்தையடைந்து கனகசபையில் ஆனந்ததாண்டவஞ்செய்யும் நடராஜப்பெருமானைத் தரிசித்து மனமுருகி ஆனந்தக்கண்ணீர்பெருக விழுந்து நமஸ்கரித்துக் களிப்புக்கடலில் மூழ்கிக் கைகுவித்துநின்று பதிகம்பாடினார். அப்பொழுது சிவபிரான் திருவருளால் 'திருவாரூர்க்கு வா' என்று தோன்றிய அசரீரிவாக்கைக் கேட்டு, சுந்தரமூர்த்திநாயனார், அக்கட்டளையைத் தலையாலேற்று அத்தலத்தினின்று புறப்பட்டுச் சீர்காழியையடைந்து திருஞானசம்பந்தமூர்த்திகள் திருவவதரித்த தலமாதலால் அதனை மிதிக்கலாகாதென்று அதன்புறவெல்லையிலிருக்கையிலே கடவுள் காட்சிகொடுத்தருளத் திருப்பதிகம்பாடி, அங்கிருந்து சென்று திருக்கோலக்கா முதலிய சிலதலங்களை வணங்கிக்கொண்டு திருவாரூரைச் சேர்ந்து வன்மீகநாதரை வணங்கி மனங்கசிந்து பதிகம்பாடித் துதிக்க, அப்போது கடவுள் ஆகாயவாணியாய் 'நாம் உனக்குத் தோழரானோம்; நீ முன்கொண்ட திருமணக்கோலத்தை என்றும் பூண்டு விளையாடுக' என்று கட்டளையிட்டருள, சுந்தரமூர்த்திநாயனார் 'தம்பிரான் தோழன்' என்று அடியார்கள் தம்மைக்கொண்டாடத் திருமணக்கோலத்துடன் அங்கு எழுந்தருளியிருந்தார்.

திருக்கைலாயமலையிற் பார்வதிதேவியாரது சேடியரிருவரில் கமலினியென்பவள் அவ்வூரில் உருத்திரகணிகையர்குலத்திற் பிறந்து பரவையார் என்று பெயர்பூண்டு மங்கைப்பருவமடைந்தவள், வழக்கப்படி தோழிமாரோடு ஆலயத்திற் சென்று சேவித்துவருகையில், பரிசனங்களோடு சிவதரிசனத்திற்கு எழுந்தருளிய சுந்தரமூர்த்திகள் அவளைக் கண்டு காதல் கொண்டு தாம் அவளை மணஞ்செய்துகொள்ளவேண்டுமென்று சுவாமிசந்நிதியில் விண்ணப்பஞ்செய்ய, சிவபெருமானும் பரவையாரை நாயனார்க்கு விவாகஞ்செய்து தரும்படி அடியார்கட்குக் கட்டளையிட்டருள, அவர்களும் அங்ஙனமே பரவையாரை நாயனார்க்கு விதிப்படி மணஞ் செய்வித்தார்கள். பரவையாரோடு நாயனார் அத்தலத்தில் மகிழ்ச்சிகொண்டு சிவபெருமானை நாடோறும் தரிசித்துவருகையில், ஒருகால் அங்குள்ள தேவாசிரியமண்டபத்தில் சிவனடியார் கூட்டங்களைக்கண்டு 'நான் இவர்கட்கு அடிமையாகும் நாள் எந்நாளோ?' என்று கவலைகொண்டு ஆலயத்தினுள்ளேசென்று தியாகராஜப்பெருமானை வணங்க, அந்நாயனாரதுவிருப்பத்தை நிறைவேற்றுதற்பொருட்டுத் தியாகராஜப்பெருமான் அடியார்களின்மீது பதிகம்பாடும்படி நியமித்து அவர் வேண்டுகோளின்படியே தமது அருமைத்திருவாக்கால் "தில்லைவாழந்தணர் தம் அடியார்க்கும் அடியேன்" என்று அடியெடுத்துக்கொடுத்து மறைந்தருள, நாயனார் மண்டபத்தை யடைந்து அடியவர்யாவர்க்கும் 'அடியேன் அடியேன்' என்று தனித்தனிகூறித் திருத்தொண்டத்தொகை என்னும் பதிகம் பாடினார்.

இங்ஙனம திருவாரூரில் சுந்தரமூர்த்திநாயனார் பரவையாரோடு வாழ்கை

யில், அருகேயுள்ள குண்டையூரிலிருக்கும் வேளாளராகிய குண்டையூர்க் கிழார் சுந்தரமூர்த்திகளது மகிமைகளைக் கேள்வியுற்றுத் தினந்தோறும் அவர்க்கு நெல் முதலியன கொடுத்து வழிபட்டுவருகையில் ஒருநாள் நெல் போதாமை கண்டு கவலையுற்றுத் தூங்குகையில் 'சிவபெருமான் அக்கிழாரது கனவில் தோன்றி 'உனக்கு நெல்லுக்கொடுத்தோம்' என்று சொல்லி நெல் லைத்தருமாறு குபேரனுக்குக் கட்டளையிட, அவ்வூரில் வானுற ஓங்கிய நென் மலையொன்று உண்டாயிறறு. பின்பு நாயனார் சிவபிரானருளால் அச்செயலை யறிந்து அங்கு நென்மலையைக் கண்டு திருவாரூர்க்குக் கொண்டுபோகும் பொருட்டுத் திருக்கோளிலியென்னும் தலத்திற்குச் சென்று பதிகம்பாட, பூதகணங்கள் சிவபெருமான்கட்டளையால் அதனைப் பரவையார்மாளிகையி லும் மற்றையிடங்களிலும் நிறைத்திட்டன.

பின்னர், சுந்தரமூர்த்திநாயனார் கோட்புலிநாயனாரது வேண்டுகோளின் படியே நாட்டியத்தான்குடியை யடைய, கோட்புலிநாயனார் வணங்கி வழிபட் டுச் சிங்கடியார் வனப்பகையார் என்னும் தமதுபுத்திரிகளை அடிமையாகக் கொண்டருளுமாறு பிரார்த்திக்க, சுந்தரமூர்த்திநாயனார் 'இவர்கள் எனதுபுத் திரிகள்' என்று அபிமானித்துச் சிங்கடியார்க்குத் தம்மைத்தந்தையாக நினைத்த படியால் அத்தலத்தைக்குறித்துப் பாடுகையில் திருக்கடைக்காப்பில் 'சிங்கடி யப்பர்' என்று தம்மைச்சிறப்பித்துக்கூறியருளி, அங்கிருந்து திருவலிவலத் திற்குச் சென்று கடவுளைத் தரிசித்துத் திருவாரூர்க்கு மீண்டனர். அங்குப் பரவையாருடன் வாழுநாளில், பங்குனியுத்தரத்திருவிழாச் சமீபிக்கவே, சுந் தரமூர்த்திநாயனார் பரவையார்க்குத் திருவிழாவிறகாகச் செலவுக்குப் பணந் தருதற்பொருட்டுத் திருப்புகலூரையடைந்து சுவாமியைநோக்கிப் பதிகம் பாடிப் பின்னர் அப்பெருமான் செங்கல்லைப் பொன்னாக்கித் தரப் பெற்றுக் கொண்டு, திருப்பனையூரை வணங்கித் தம்மூர்க்குத் திரும்பினார்.

பின்பு, சுந்தரமூர்த்திநாயனார் தலயாத்திரையாகப் பயணமாகித் திருநன் னிலம் திருவீழிமிழலை முதலிய தலங்களைத் தரிசித்துத் திருவாலம்பொழிலை யடைந்து சுவாமிதரிசனஞ்செய்து இரவில் தூங்குகையில் 'மழபாடியை மறந் தாயோ' என்று சுவாமி கனவில் அருளிச்செய்ய, பின் மழபாடிக்குப்போய்க் கடவுளைத்தரிசித்து, பிறகு காவேரியினிருகரையிலுமுள்ள தலங்களையெல் லாம் தரிசித்து, திருப்பாச்சிலாச்சிரமத்தையடைந்து பதிகம்பாடிப் பொற் குவைபெற்று, பலதலங்களையும் வணங்கி, கூடலையாற்றூர்க்குச் செல்லும் வழிக்குச் சமீபித்தும் அங்குச் செல்லாமல் திருமுதுகுன்றை நோக்கி நடக்க, கடவுள் பிராமணவடிவங்கொண்டு வழிகாட்டிச்சென்று மறையக் கூடலையாற் றூரையடைந்து பெருமானது கருணையை வியந்து பாடி, பின்பு திருமுது குன்றைச்சேர்ந்து பதிகம்பாடிப் பன்னீராயிரம் பொன் பெற்று, அப்பொன் னைத் திருவாரூரிற்சேர்க்குமாறு சுவாமியைப் பிரார்த்தித்துக் கடவுளின் நிய மனப்படியே அப்பொன்னை மச்சம்வைத்துக்கொண்டு மணிமுக்தாநதியிலிட் டுப் பலதலங்களையும் வணங்கிக்கொண்டு திருவாரூரைச் சேர்ந்து, பின்பு ஒரு நாள் செய்திசொல்லிப் பரவையாரை இட்டுக்கொண்டு திருமுதுகுன்றத்து மணிமுக்தாநதியிலிட்ட பொற்குவியலை அப்பரவையார்நகையாதபடி பதிகம் பாடிப் பெற்று மச்சத்தை ஒப்பிட்டுப்பார்க்க, குளத்திலிருந்தெடுத்த பொன் உரைதாழ்த்தது கண்டு மீண்டும் பதிகம்பாடியமாத்திரத்தில் பொன்னுக்குச் சரியான மாற்றுத் தோன்றக் கண்டு அகமகிழ்ந்திருந்தார்.

மற்றும் ஒருகால் சுந்தரமூர்த்திநாயனார் தலயாத்திரைசெய்ய விரும்பி, திருநள்ளாறு திருக்கடவூர் முதலிய தலஙகளை வணங்கிச் சீர்காழியை வலங் கொண்டு குருகாவூர்க்குப் போம்வழியில் சிவபெருமான் நாயனாரது இளைப் பைக் கண்டு ஒருபிராமணவடிவததுடனே ஒருபந்தரின்கீழிருந்துகொண்டு அச்சுந்தரமூர்த்திநாயனாரை உபசரித்து அவர்க்கும் அவரதுபரிஜனங்கட்கும்

பொதிசோறு முதலியன ஈந்து மறைந்தருள, பின்னர் நாயனார் சுவாமியினது திருவருளைச் சிந்தித்து வியந்து திருக்குருகாவூரைச் சேர்ந்து சுவாமி தரிசனஞ்செய்து திருக்கழிப்பாலையம் முதலியவற்றைத் தரிசித்து, தொண்டைநாட்டுத் தலங்களில் யாத்திரைசெய்ய விரும்பி, திருக்கழுக்குன்றத்திலே சென்று வேதகிரீசுவரரைத் தரிசித்துப் பின்பு திருக்கச்சூரிலே சுவாமிதரிசனஞ் செய்துவிட்டு அன்று நண்பகலாகியும் பரிஜநங்கள் பாகஞ்செய்யாமையால் நாயனார் பசித்திருக்க, சிவபெருமான் பிராமணவடிவங்கொண்டு வெற்றோட்டில் அன்னபிட்சையெடுத்துவந்து நாயனார்க்கும் பரிஜநங்கட்கும் அமுதூட்டி மறைய, நாயனார் கடவுளது கருணைத்திறத்தை வியந்து பதிகம் பாடிக் காஞ்சீபுரத்தில் திருவேகம்பம் முதலிய திருப்பதிகளை வணங்கிச் சிலநாள் அங்குத் தங்கியிருந்து, பிறகு திருப்பனங்காடு முதலிய தலங்கட்குச் சென்று பதிகம்பாடித் திருக்காளத்திமலையையடைந்து சுவாமியையும் கண்ணப்ப நாயனாரையுந் தரிசித்து, அங்குஇருந்தபடியே திருக்கேதாரம் முதலிய வடநாட்டுத்திருப்பதிகளைத் தியானித்துப் பதிகம்பாடி, அங்குநின்று நீங்கித் திருவொற்றியூரையடைந்து பதிகம்பாடித் திரிகாலங்களிலும் சுவாமியைத் தரிசித்துக்கொண்டு சிலகாலம் அங்குத் தங்கியிருந்தார்.

இங்ஙனம் சுந்தரமூர்த்திநாயனார் திருவொற்றியூரில் வாழ்ந்து வருகையில், ஒருநாள், ஞாயிற்றூரில் ஞாயிறுகிழார்க்குப் புத்திரியாகப் பிறந்து கோயிலதிருத்தொண்டு செய்யுஞ் சங்கிலியாரை அங்குக் கண்டு நாயனார் காதல்கொண்டு சுவாமிசந்நிதானத்தில் விண்ணப்பஞ்செய்ய, கடவுளும் நாயனாரது வேண்டுகோளை முற்றுவிப்பதாகக் கூறியருளி, சங்கிலியாரது சொப்பனத்திற் சென்று சுந்தரமூர்த்திநாயனாரை மணஞ்செய்துகொள்ளுமாறு தூண்டி, 'நாயனார் திருவாரூரில் விருப்பமுள்ளவராயிற்றே' என்று அஞ்சிய சங்கிலியார்க்கு நாயனாரிடத்தில் அவ்வூரைவிட்டுச் செல்லாதிருக்குமாறு சபதம் வாங்கிக்கொள்ளும்படி கட்டளையிட்டுச் சுந்தரமூர்த்திநாயனார்க்கும் அவ்விஷயத்தைத் தெரிவிக்க, பின்பு சுந்தரமூர்த்திநாயனாரது வேண்டுகோளின்படியே சிவபெருமான் மகிழமரத்தின்கீழிருந்து அதைத் தமது திருவருளாலுணர்ந்த சங்கிலியாரது தோழிமார் கேட்டுக்கொண்டதனால் சுந்தரமூர்த்திநாயனார் வேறுவகையில்லாமையால் மகிழமரத்தை மும்முறை வலம் வந்து 'உன்னை நான் பிரிவதில்லை' என்று சபதஞ்செய்து சங்கிலியாரை மணஞ்செய்துகொண்டார்.

சிலகாலம் சங்கிலியாருடன் சுந்தரமூர்த்திநாயனார் திருவொற்றியூரில் வாழ்ந்திருந்து பின்பு திருவாரூர்க்குச் செல்லவிரும்பித் திருவொற்றியூரை நீங்குகையில், நாயனாரது இரண்டுகண்களும் கெட்டன. 'சபதம் தவறினமையால் நேர்ந்ததாகும் இது' என்று துணிந்த நாயனார், கடவுளைக் குறித்துப் பாடியும் சிவபெருமான் கண்ணை ஈயாமலேயிருக்க, நாயனார் திருவாரூர்க்குச் செல்லவேண்டுமென்னும் பேரவாவினால் சிலர் வழிகாட்டப் புறப்பட்டுத் திருவடமுல்லைவாயிலுக்குப்போய்ப் பதிகம்பாடிப் பின் திருவெண்பாக்கத்தையடைந்து சுவாமியருளால் ஊன்றுகோல்பெற்றுக் காஞ்சீபுரத்தில் ஏகாம்பரநாதரைத் தரிசித்துப் பதிகம்பாடி இடக்கண்ணைப்பெற்று மகிழ்ந்து, தொண்டைமண்டலத்தைக் கடந்து சோழமண்டலத்தைச்சார்ந்து திருவாவடுதுறையையடைந்து ஒருகண்ணில்லாமையைக்குறித்து மனங்கவன்று பாடி, திருத்துருத்திக்குப்போய்ப் பதிகம்பாடிச் சுவாமிகட்டளையால் அவ்வூர்த்திருக்குளத்தில் மூழ்கி உடல்நோய் நீங்கப்பெற்று, திருவாரூரைச்சேர்ந்து சுவாமியைத் தரிசித்தற்கு ஒற்றைக்கண் போதாமையால் மனத்துயரங்கொண்டு பாடி மற்றைக் கண்ணையும் பெற்று, கடவுளின் கருணையை நினைந்து வியந்து ஆனந்தசாகரத்தில் மூழ்கி ஆடிப் பாடித் தேவாசிரியமண்டபத்தை யடைந்தார். சுந்தரமூர்த்திநாயனார் கோயிற்குச் சென்றபோதுதானே நாயனார் வருகையைத்

தெரிவித்தற்காகப் பரவையார் வீட்டுக்குச் சென்ற பரிஜனங்களிற் சிலர், சங்கிலியாரை நாயனார் விவாகஞ் செய்துகொண்ட செய்தியைக் கேள்வியுற்று மிக்கதுயரமுங் கோபமுங் கொண்ட அப்பரவையாரால் முகங்கொடுக்கப் பெறுமையோடு 'நாயனார் வந்தால் உயிர்விடுவேன்' என்று கூறிய உறுதிமொழியையும் அங்கு நாயனார்க்குத் தெரிவிக்க, அதனையறிந்த சுந்தரமூர்த்தி பரமசிவனைத் தியானித்து 'பரவையாரது ஊடலைத் தீர்க்கத் தூதுசென்றருளவேண்டும்' என்று பிரார்த்திக்க, சிவபெருமான், சிவார்ச்சனைசெய்கின்ற ஓர் ஆதிசைவரது வடிவங்கொண்டும் தாமாந்தன்மையை யறிதற்கேற்ற கோலத்தோடும் அர்த்தராத்திரியில் இருமுறை தூது நடந்துசென்று பரவையார்க்குச் சமாதானஞ்சொல்லி அவள்கொண்ட கோபத்தை ஆற்றுவிக்க, பின்பு நாயனார் பரவையாரது வீட்டுக்குச் செல்ல, பிறகு இருவரும் முன்போலவே அந்யோந்யமாக வாழ்ந்திருந்தார்கள்.

இங்ஙனம் திருவாரூரில் சுந்தரமூர்த்திகள் வாழ்ந்திருக்கையில், திருப்பெருமங்கலத்திலிருக்கும் ஏயர்கோன்கலிக்காமநாயனார் சுந்தரமூர்த்திகள் சிவபெருமானைத் தூதனுப்பியசெய்தியைக் கேள்வியுறறு நாயனார்மீது சினந்திருக்க, அதனை நாயனார் சுவாமிசந்நிதியில் விண்ணப்பஞ்செய்ய, சிவபிரான் கலிக்காமர்க்குச் சூலைநோயை யேவி 'இது சுந்தரமூர்த்திகள் வந்தாலன்றித் தீராது' என்று தெரிவிக்க, கலிக்காமர் அப்போதும் சுந்தரமூர்த்திகளைக் கொண்டு தமதுநோயைத் தீர்த்துக்கொள்ளுதற்கு உடன்படாமையைக் கண்டு சிவபெருமான் சுந்தரமூர்த்திகளைக் கலிக்காமரிடத்திற் போய் அவர்கொண்டுள்ள நோயைத் தீர்க்குமாறு கட்டளையிட, அவ்வாறேசென்ற சுந்தரமூர்த்திகளது வருகையை உணர்ந்த கலிக்காமர் அவரைத் தாம் நேரிற்கண்டு அளவளாவ விரும்பாது உடைவாளினால் தம்வயிற்றிலேகுத்திக்கொண்டு இறந்துகிடக்க, அதனைக்கண்ட சுந்தரமூாத்திகளும் உடைவாளினால் தாமும் உயிரைமாய்த்துக்கொள்ள நினைக்க, அபபோது சிவபெருமானருளால் கலிக்காமர் உயிர்பெற்றெழுந்து அவரைத் தடுக்க, பிறகு இருவரும் நண்பராகித் திருப்புன்கூர்க்குப்போய்ப் பதிகம்பாடித் திருவாரூர்க்கு மீண்டபின், கலிக்காமர் தம்மூர்க்கு விடைபெற்றுச்சென்றார். சுநதரமூர்த்திகள், சிலநாள் சென்றதும், திருநாகைக்காரோணத்துக்குப்போய்ப் பதிகம்பாடிப் பலபொருள்களையும் பெற்றுத் திருவாரூர்க்கு மீண்டு வந்து வாழ்ந்திருந்தனர்.

இங்ஙனம வாழ்கையில், கொடுங்கோளூரிலிருந்த சேரமான்பெருமாள்நாயனாரென்பவர் சுந்தரமூர்த்திகளது மகிமைகளைப் பரமசிவனாலறிந்து அவரைத் தரிசிக்க வர, சுந்தரமூர்த்திகள் அவர்பக்கல் பேரன்புபூண்டொழுகுவாராயினார்; அதனால், சுந்தரமூர்த்திநாயனார்க்கு 'சேரமான்தோழர்' எனறு ஒரு பெயருண்டாயிற்று. சிலநாள் சென்றதும், சுந்தரமூர்த்திநாயனார், சேரமான்பெருமாள்நாயனாரோடும் பலசிவதலங்களைத் தரிசித்தனர். பின்பு, சேரமான்பெருமாள்நாயனாரது வேண்டுகோளினாற் கொடுங்கோளூர்க்குப்புறப்பட்ட சுந்தரமூர்த்திநாயனார், இடைவழியிலே ஓடமுஞ் செல்லமுடியாதபடி இருகரையும் ஒருகரையாகப் பெருகிவரும் காவிரியின அக்கரையிலே திருவையாறு தோன்ற, 'ஐயாறுடையவடிகளோ' என்று மகுடம்வைத்துப் பதிகம்பாட, எம்பெருமான் 'ஓலம்' என்ன, காவிரிவெள்ளம் பளிக்குச்சுவர்போல நின்று வழிவிட, கடவுளின அருளை வியந்து அவ்விருவரும் சுவாமிதரிசனஞ் செய்துவிட்டுச் சென்று கொடுஙகோளூரையடைய, அங்குச் சேரமான்பெருமாள் சுந்தரமூர்த்திநாயனார்க்குப் பலவகையாகச் சிறப்புச்செய்தனர். பின்பு சிலகாலம் அங்குத்தங்கியிருந்து, சுந்தரமூர்த்திகள் திருவாரூர்க்குச் செல்லவிரும்பிச் சேரமான்பெருமாளிடத்தில் அரிதில் விடைபெறறு அவர்கொடுத்த பலவகைப்பொருள்களோடும் புறப்பட்டுச்செல்ல, இடைவழியிற் சிவபெருமான் கட்டளையால அப்பொருட்குவைகளையெல்லாம் வேட்டுவவடிவங்கொண்டு பூத

கணங்கள் பறித்துச் செல்ல, நாயனார் திருமுருகன்பூண்டியையடைந்ததும் பதிகம்பாடி இழந்தபொருளைப் பெற்றுத் திருவாரூரைச் சேர்ந்தனர்.

சிலநாள் சென்றபின், சுந்தரமூர்த்திநாயனார் சேரமான்பெருமாள்நாயனாரை நினைந்து கொடுங்கோளூர்க்குச் செல்லுமாறு மீண்டும் பயணப்பட்டுச் சோழநாட்டைக்கடந்து கொங்குநாட்டையடைந்து திருப்புக்கொளியூரிற் செல்லுகையில், அடுத்தாற்போலிருக்கின்ற இரண்டுவீடுகளுள் ஒன்றில் மங்கலவொலியும் மற்றொன்றில் அழுகையொலியும் தோன்றுவதைக் கண்டு விசாரிக்க, 'சமவயதுள்ள இரண்டு சிறுவர்களில் முதலைவிழுங்கியவனை நினைத்துப் புலம்பும் ஒலி ஒன்று ; மற்றது பிழைத்த மற்றொருவனுக்கு உபநயனஞ் செய்யும் ஒலி' என்று செய்திதெரிந்து, திருவுளமிரங்கி அவ்வூர்க் குளத்தையடைந்து பாடல்பாடி இறந்த புதல்வனை மீட்டுப் பெற்றோர்க்கு அளித்து உபநயனச்சடங்குஞ் செய்வித்து, பின்பு அந்நாட்டைக்கடந்து மலைநாட்டையடைந்து சேரமான்பெருமாள்நாயனார் எதிர்கொண்டழைக்கக் கொடுங்கோளூரிலே அவரில்லத்திற் சிலகாலம் தங்கியிருந்து மலைநாட்டுத்திருப்பதிகள்பலவற்றையும் வணங்கிவரலாயினர்.

இப்படிப் பலநாள் கழிகையில், ஒருநாள் சுந்தரமூர்த்திநாயனார், சேரமான்பெருமாள்நாயனார்நீராடுகையில் திருவஞ்சைக்களத்திற்குப்போய்ச் சுவாமியைத்தரிசித்து, தம்மைப் பிரபஞ்சவாழ்க்கையினின்று நீக்கித் திருவடியிலே சேர்த்துக்கொள்ளுமாறு மனங்கசிந்து பதிகம்பாட, அப்போது திருக்கைலாயத்திலே யெழுந்தருளியுள்ள பரமசிவனார் தமதுபரிஜநங்கட்கு 'சுந்தரனை வெள்ளையானையின்மீது ஏற்றிவாருங்கள்' என்று கட்டளையிட, அவ்வாறே பரிஜநங்களான தேவர்கள் வெள்ளையானையைக்கொணர்ந்து திருவஞ்சைக்களத்து ஆலயத்தின் வாயிலிலே வைத்துக்கொண்டு காத்திருந்து சுந்தரமூர்த்திநாயனார் வெளியேவருகையில் அவரைவணங்கி உபசரித்துச் சிவபிரானதுகட்டளையை விண்ணப்பஞ்செய்து அவரை யானையின்மீதுஏற்றி வாத்தியகோஷஞ்செய்து பூமாரிபொழிய, சிவபிரானது திருவருளை நினைந்துநினைந்து மனங்கசிந்து உருகிச் சுந்தரமூர்த்திநாயனார் சேரமான்பெருமாள்நாயனாரைத் திருவுள்ளத்திலே நினைத்துக்கொண்டே சென்றார்.

சேரமான்பெருமாள்நாயனார் சுந்தரமூர்த்திகளது செயலை யறிந்து ஒரு குதிரையின்மீது விரைந்துசென்று வஞ்சைக்களத்தையடைந்து, நாயனார் வெள்ளையானையின்மீது ஆகாயமார்க்கமாகச் செல்வதை யுணர்ந்து தமதுபரிமாவின்செவியில் ஸ்ரீபஞ்சாக்ஷரத்தையோத, அது வானவீதியையடைந்து சுந்தரமூர்த்திகளை வலம்வந்து அவர்க்குமுன்னே சென்றுகொண்டிருக்க, தம்மைத்தரிசித்துக்கொண்டு முன்செல்லும் சேரமான்பெருமாள்நாயனார்க்குப் பின்செல்லுஞ் சுந்தரமூர்த்திகள் "தானெனைமுன்படைத்தான்" என்னுந் திருப்பதிகம்பாடித் திருக்கைலாயத்தின் தெற்குவாயிலுக்குமுன்னே செல்ல, அங்கு இருவரும் வாகனத்தினின்று இறங்கித் திருக்கைலாயபதியைத் தரிசித்து இன்பக்கடலு ளாழ்ந்தனர். அப்போது, சிவபெருமானது திருவருளால் சுந்தரர் ஆலாலசுந்தரராகிப் பழவடிமைசெய்ய, சேரமான்பெருமாள்நாயனார் கணநாதராகித் திருத்தொண்டுசெய்யலாயினர்.

இங்ஙனம் சுந்தரமூர்த்திநாயனார் திருக்கைலாயத்தைப் பெற்ற தினம், ஆடிமாதத்துச் சுவாதிநட்சத்திர மென்பர்.

இவர் நிலவுலகத்தில் வாழ்ந்த பிராயம் - பதினெட்டு.

இவரதுகாலம் இன்னதென்று துணிவாகத் தெரியவில்லை ; பலர் பலவாறு கூறுவர். இப்பொழுதைக்கு சஉ௱ - வருடங்கட்குக் குறையாதென்பது, இக்காலத்து ஒருசாரார்கொள்கை ; மற்றொருசாரார் ௪000 - வருடங்கட்குமுந்திய தென்பர்.

---

# தேவாரம்.

சைவசமயாசாரியர் நால்வரில் அப்பர் சுந்தரர் சம்பந்தர் என்ற மூவரும் பல தலங்களிலும் சிவபிரான்விஷயமாகப் பாடிய தோத்திரப்பாடல்களின் தொகுப்புக்குத் தேவாரம் என்று பெயர். தே வாரம் என்றுபிரிந்து, தெய்வ விஷயமான இசைப்பாட்டென்று பொருள்படும். தே - தெய்வம்; இங்கு, பரதேவதையான சிவபெருமான். வாரம் - சொல்லொழுக்கமும் இசையொழுக்கமுமுடைய பாடல். தேவாரம் - ஆறும்வேற்றுமைத்தொகை; விஷயமாக வுடைமையே, வேற்றுமைப்பொருளாகிய சம்பந்தம். இனி, தே-கடவுளுக்கு, ஆரம் [ஹாரம்] - மாலைபோல்வது என்று பொருள்கொண்டு, அன்போடு சாத்தப்படுகின்ற பூமாலைபோ லினிய பாமாலையென்று கருத்து உரைப்பினுமாம்; அப்பொருளில், நான்காம்வேற்றுமைத்தொகை. ஓரெழுத்தொருமொழியாகிய 'தே' என்னும் பெயர்ச்சொல் ஏகாரத்தின்முன் உயிர்வர வகரவுடம்படுமெய் தோன்றிற்றென்க. [நன் - உயிர் - கஉ.] தேவஹாரம் என்ற வடமொழித்தொடர் தேவாரமென விகாரப்பட்ட தென்பர் ஒருசாரார். இனி, தேவார்ஹம் என்னும் வடமொழி தேவாரமெனத் திரிந்ததாகக்கொண்டு, கடவுளுக்கு உரியதென்று பொருளுரைக்கவும்படும்; தேவ அர்ஹம் எனப் பிரியும்.

வேதத்திற் கூறப்பட்டுள்ள சைவசித்தாந்தமே இவற்றில் வெளியிடப் பட்டதென்ற கருத்தால் இவை 'தமிழ்வேதம்' என்றும், சிவபிரானது திருவருளாற் பாடப்பட்ட பாடல்களாதலால், 'திருவருட்பா' என்றும் சொல்லப்படும்.

## ஏழாந் திருமுறை.

சைவசமயத்தில் வழங்குகின்ற பன்னிரண்டு திருமுறைகளுள் திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் தேவாரத்திருப்பதிகங்கள் முதல் மூன்று திருமுறைகளாகவும், திருநாவுக்கரசுநாயனாரது தேவாரத்திருப்பதிகங்கள் அடுத்தமூன்று திருமுறைகளாகவும், சுந்தரமூர்த்திநாயனாரது திருப்பதிகங்கள் ஏழாவது திருமுறையாகவும் அமைந்துள்ளன. தேவாரவேடுகளைப் பிற்காலத்திற் சிதம்பரத்திலே கண்டெடுத்தவர், அபயகுலசேகர சோழமகாராஜா. அவர்வேண்டுகோளின்படி தேவாரவேடுகளைக் கண்டுபிடித்தற்கு உதவிய நம்பியாண்டார் நம்பியே இத்தேவாரங்களைத் திருமுறைகளாக வகுத்தவர். திருஞானசம்பந்தமூர்த்திநாயனாருட னிருந்து அவர்பாடுந் திருப்பதிகங்களை யாழிலமைத்து வாசித்தவரான திருநீலகண்டப்பெரும்பாணநாயனாரது மரபிலே பிறந்த பெண்ணொருத்தியைக் கொண்டு அபயகுலசேகரசோழமகாராஜாவும் நம்பியாண்டார்நம்பியும் தேவாரத்திருப்பதிகங்களுக்குப் பண்ணடைவு வகுத்தார்கள்.

இம்மூவர்தேவார மடங்கிய திருமுறை - அடங்கன்முறை யெனப்படும். இப்பொழுது வழங்குகிற தேவாரச்செய்யுளின் தொகை - சற்றேறக்குறைய அ000. அவற்றில், சுந்தரமூர்த்திநாயனார்செய்யுளின் தொகை-(இப்பொழுது உள்ளவை) சற்றேறக்குறைய க0க-பதிகங்களின் வடிவமான ஏறக்குறைய க000-பாடல்களாம். (இவர்பாடிய பதிகங்கள் முப்பத்தேழாயிரம் என்றும், மூவர்தேவாரமும் எழுதிய ஏட்டுப்புத்தகங்கள் சிதம்பரத்துக் கனகசபைக்கு மேல்பாலுள்ள அறையில் வைத்து நெடுநாள்பூட்டியிருந்தவிடத்து அவற்றிற் பெரும்பான்மையன செல்லரித்துப் பழுதுபட்டுப்போய்விட்டன வென்றும், இக்காலத்துக்கு வேண்டியவற்றைமாத்திரம் சிவபெருமான் வைத்தருளின ரென்றும் திருமுறைகண்டபுராணம் கூறும்.)

# திருவிடைமருதூர்.

சுந்தரமூர்த்திநாயனர் தேவாரத்தில் இங்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட இரண்டு திருப்பதிகங்களும் - முறையே அறுபது அறுபத்தொன்பதாம் பதிகங்களாம். இவற்றுள், முதல்திருப்பதிகம் - மத்யார்ஜுநமெனப்படுந் திருவிடைமருதூரி லெழுந்தருளிய சிவலிங்கப்பெருமான்மீதும், இரண்டாந்திருப்பதிகம் - திருவடமுல்லைவாயிலி லெழுந்தருளிய சிவலிங்கப்பெருமான்மீதும் பாடியவை.

முதல் திருப்பதிகத்தில் 1, 3, 4, 7, 10 - ஆம் பாடல்களும், இரண்டாந் திருப்பதிகத்தில் 1, 3, 4, 5, 6 - ஆம் பாடல்களும் இங்குப் பாடமாகத் தேர்ந்தெடுக்கப்பட்டன.

திருவிடைமருதூர்ப்பதிகம்—" உய்வகையருளா யிடைமருதுறை யெந்தைபிரானே " என்பதையும், திருவடமுல்லைவாயிற்பதிகம் " பாசுபதா பரஞ்சுடரே " என்பதையும் மகுடமாகக் கொண்டன. வரிசையாகநின்ற பல செய்யுள்களின் ஈற்றில் ஒருசொற்றொடரே நின்றால், அது மகுட மெனப்படும்.

**திருவிடைமருதூர் :**—இடையில் மருதமர முடைய தாதலால், இத்தலம் இப்பெயர்பெற்றது ; சோழநாட்டி லுள்ளது ; முப்பத்துமுக்கோடி தேவர்களாலும் வசிஷ்டர் முதலிய ரிஷிகளாலும் பூஜிக்கப்பட்ட தலம் இது. 'சக்தியின்றிச் சிவம் இயங்காது' என்று சிவபெருமானருளியதன் உண்மையை உணராத பார்வதீதேவி சக்தியாகிய தாமே உயர்ந்தவரென்று தம்மை வியந்தபொழுது சிவபெருமான் 'உன்னிடத்து யாம் சேராதபோது உனக்கும் உணர்வில்லை' எனக்கூறி அதனைக் காட்டும்பொருட்டு ஒருகணம் அசைவற்றிருக்க, அதனால் உலகம்முழுவதிலும் பேரிருள் பரவி யாவும் ஜடமாய்விட, பின்னர்ச் சிவபெருமான் உலகத்தைப் பழையபடியே நிலைநிறுத்தக்கருதி உருத்திரர்கட்கு உணர்ச்சிநல்க, முற்றும் இருண்மயமாயிருக்கின்ற உலகத்தைக் கண்ட அவ்வுருத்திரர் நான்குயாமம் மருதப்பரைப் பூசித்து முன்போல எல்லாவற்றையும்படைத்த தலம்; வரகுணதேவர்க்கு நேர்ந்த பிரமஹத்திதோஷம் நீங்கப்பெற்ற தலம்; இப்பழியினுருவம் இக்காலத்தும் இத்தலத்துக் கீழைக்கோபுர வாயிலி லுள்ளது. வரகுணதேவர் அனேக அற்புதங்களை நடத்தி முத்திபெற்ற தலம்; கருவூர்த்தேவரால் திருவிசைப்பாப் பாடப்பெற்ற தலம்; மூவர்தேவாரமும் பெற்ற தலம்.

இத்தலத்துச் சிவபெருமான் திருநாமம் - மருதப்பர். அம்பிகையின் திருநாமம் - நன்முலைநாயகி. தீர்த்தம் - காவிரிநதி, பூசத்துறைத்தீர்த்தம், திருக்குளத்தீர்த்தம்.

---

1.—(இதன்பொருள்.) எந்தாய் - எனது தந்தையே! கழுதை - கழுதையானது, குங்குமம் சுமந்து - குங்குமப்பூப்பொதியைச் சுமந்து, எய்த்தால் - (அதனால்) இளைத்தாலும், பாழ் - வீணே, புகழ் அற்றது போல - புகழ்அழிந்ததாகப்பாவித்து, கைப்பர் - (உலகத்தோர்) வெறுப்பார்கள்; (அப்படியிருத்தலினால்),நான்—, பழுதில் உழன்று - வீணான (பிரபஞ்ச) காரியத்தில் வருந்தியுழைத்து, (அதனால்), உள் தடுமாறி - மனமலைந்து, படு சுழித்தலை - பெருஞ்சுழியிலே, பட்டனன் - அகப்பட்டுக்கொண்டேன்; (ஆதலால், என்னை உலகத்தவர் எவ்வாறுவெறுப்பார்களோ?) மனனே - (எனது) மனமே! நீ—, அழுது இருந்து - அழுதுகொண்டே யிருந்து, என் செய்தி - (இதற்குப் பரிகாரமாக) யாதுசெய்யமாட்டுவாய்? [நீஅழுவதனாற் பெறலாகும் பயன் யாதுமில்லை]; 'அம் கணா - அழகிய திருவருள்நோக்கமுடையவனே! அரனே - அரனென்னுக்

திருநாமமுடையவனே!' என மாட்டா - என்று சொல்வதற்கும் வகையில்லாத, இழுதையேனுக்கு - பெருங்குற்றமுடைய எனக்கு, இடை மருது உறை எந்தை பிரானே - திருவிடைமருதூரில் நித்தியவாசஞ்செய்கின்ற சிவபெருமானே! ஓர் உய் வகை அருளாய் - ஏதேனுமொரு ஈடேறுமுபாயத்தைக் கருணைசெய்வாயாக; (என்றவாறு.)

கழுதையானது சிறந்த குங்குமப்பூப்பொதியைச் சுமந்து இளைத்தாலும் அதனைப் பெருமைப்படுத்தாது 'குங்குமஞ்சுமந்த கழுதை' என்று உலகத்தவர் ஏளனஞ்செய்வர்; ஆகவே, அவ்வாறு சிறந்தபொருளைச் சுமத்தலாகிற சிறப்புமில்லாமல் வீணை இவ்வுலகவாழ்க்கையிற் பலகாலம் அலைந்து வருந்தித் தடுமாறுகின்ற என்னை எவ்வாறு பழிப்பார்களோ? மனமே! அதற்கு ஏற்ற பரிகாரத்தைத் தேடாமல் அழுது வருந்துவதனால் யாது பயன்? திருவிடைமருதூர்ச்சிவபிரானே! உனது திருநாமங்களை வாயினாலும் உச்சரித்தறியாத தீக்குணமுடைய அடியேனுக்கு நற்கதிபெறும்வகையை நீயே அருள்செய்ய வேண்டுமென்பதாம். இங்குக் குங்குமஞ்சுமந்தகழுதையாகிய உபமானத்தினும் சம்சாரத்தில் வீணேயலைகின்ற யான் என்ற உபமேயத்திற்கு இழிவு தோன்றுதலால், வேற்றுமையணியாம்; இதனை வடநூலார் வ்யதிரேகாலங்காரமென்பர்.

உலகவாழ்க்கையில் எத்தனைகாலம் உழன்றாலும் அதனாற் பெறலாவதொரு நற்பயனுமில்லையாதலின், அதனை 'பழுது' என்றே கூறினார். உள்தடுமாறுதல் - செய்வதுஇன்னதென்று தெரியாமல் திகைத்தல். உயிர்களைமாறிமாறிப் பலபிறப்பும் பிறக்குமாறு செய்து பிறவியிலே சுழலச்செய்கிறகருமங்கள். பிறவிக்கடலிடையே அகப்பட்ட பொருள்களைத் தன்னிலுழலச்செய்வதான பெரியநீர்ச்சுழி போலுதலால், இங்கு அவ்வினையை 'படுசுழி' என்றார்: "துட்டனுவினையதென்னுஞ் சுழித்தலையகப்பட்டேனை" என்றார் திருநாவுக்கரசுநாயனாரும்; "சன்மந்தரங்கங் கருமஞ்சுழி" என்பர் பிறரும். அரன் = ஹரன்; (அடியார்களுடைய) பாபத்தை யழிப்பவன். எந்தைபிரான் - எமது குலத்துமுன்னோர்தொட்டுத் தலைவனாயிருப்பவன்; குலதெய்வமென்றபடி.

குங்குமம் - வடசொல். தான் - அசை. 'எய்த்தால்' என்ற செயினென்னும் வாய்பாட்டு வினையெச்சத்தினீற்றில் உயர்வுசிறப்பும்மை விகாரத்தால் தொக்கது. கைப்பர் - வெறுஎன்னும் பொருளுள்ள 'கை' என்னும் வினைப்பகுதியினடியாப்பிறந்த பலர்பால் எதிர்காலவினைமுற்று. 'பாழ்' என்னும் பெயர்ச்சொல், தொக்குநின்ற 'அடைந்து' என்னும் எச்சத்தைத் தழுவும் இரண்டாம்வேற்றுமைத் தொகை. அற்றது என்னும் வினையாலணையும் பெயரில், அறு - முதனிலை. போல - ஒப்பில்போலி. உழன்று, உழல் - முதனிலை. பட்டனன் - 'அன்' விகுதி தன்மையொருமைக்கு வந்தது. எந்தாய்- 'எந்தை' என்பதன் ஈறுதிரிந்த விளி. என் - எவனென்னும் வினாச்சொல்லின் தொகுத்தல். 'செய்தி' - இகரவிகுதி முன்னிலையிலெதிர்காலங் காட்டும்; த் - எழுத்துப்பேறு. மனன் = மனம்: இறுதிப்போலி. அங்கணா - அங்கண்ணா; தொகுத்தல். மாட்டா - ஈறுகெட்ட எதிர்மறைப்பெயரெச்சம். உய்வகை - வினைத்தொகை. (க)

2—'முன்னமேயுனசேவடி' என்ற பாடமே ஓசைக்குப் பொருந்தும்.

(இ - ள்.) எந்தாய்—! இடை மருது உறை எந்தை பிரானே—! புல் நுனை பனி - புல்லின் நுனியிற் பொருந்திய பனியின்நீர்த்துளியானது, வெம் கதிர் - வெவ்விய கிரணங்களையுடைய சூரியனை, கண்டால் போலும் - பார்த்தமாத்திரத்திற்சிதறிவிடுதல்போன்ற [சிறிதும்நிலையில்லாத], வாழ்க்கை - இவ்வுலகவாழ்க்கையானது, நாளும்-எந்நாளிலும், பொருள் இலை-பயன்தருவதில்லை; இனி எனக்கு என் - இனிமேல் எனக்குப் பயன்தருவது யாதுஉளது? [ஒன்றுமில்லை]; (நான் இதுவரையிலும்), இற்றைக்கு நாளை என்று -'இன்றைக்குப்

பயன் கைகூடுமோ நாளைக்குப் பயன்கைகூடுமோ' என்று எண்ணி, இருந்து - பயனை எதிர்பார்த்திருந்து,(அது கிடையாமையால்), இடர் உற்றனன் - பெருந்துன்பமடைந்தேன்; முன்னமே - இளமையிலேயே, உன சேஅடி சேரா மூர்க்கன் ஆகி - உனது சிவந்த திருவடிகளைச் சரணமாகக்கொள்ளாத அறிவீனனாகி, காலம் கழிந்தன - (எனது) வாழ்நாள்கள் பயனிலவாகியொழிந்தன; இன்னம் - இனியாவது, என்தனக்கு - எனக்கு, உய்வகை அருளாய்—;

சிறிதும் நிலையில்லாததும் சாரமற்றது மாகிய இவ்வுலகவாழ்க்கையிற் பெரும்பயன் கிடைக்குமோவென்று இலவங்காத்தகிளிபோல வீணே எதிர் நோக்கியிருந்து சிறிதும்பயன்பெறாமல் வாளா வருந்தினேன்; யான் முன்னமே நினது திருவடிகளை அடைக்கலம்புகுந்திருந்தால் பெரும்பேறு பெற்றிருப்பேன்; அவ்வாறு புகாமல் எனதுவாழ்நாள்கள் வீணேகழிந்தன; இனியாவது நீ எனக்கு நற்கதியருளவேண்டும்; எனக்கு இனி உன்னைத்தவிர வேறு புகலிடமில்லை யென்பதாம்.

புல்லின்மேற் பிரகாசமாகத்தோன்றுகின்ற பனிநீர்த்துளியானது சூரியனைக்கண்டவுடனே சிதறி இருந்தஇடமுந்தெரியாது ஒழிதல், இயல்பு. சிறிதும்நிலையில்லாமைக்கு அப்புல்நுனிப்பனி உவமைகூறப்படுதலை, "புன்னுனிமே னீர்போல் நிலையாமை," "வெயின்முறுகப் புற்பனிப்பற்றுவிட்டாங்கு" என்றஇடங்களிலுங் காண்க. முன்னமே - முற்பிறப்புக்களிலேயே யெனினுமாம். நுனையெனினும், நுனியெனினும் ஒக்கும். மூர்க்கன் - தனக்கும் இதம் தெரியாது பிறர்சொல்லும் இதத்தையுங் கேளாத பிடிவாதமுடையோன்.

வெங்கதிர் - உஷ்ணகிரணன்: பண்புத்தொகைப்புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை. இன்று + கு = இற்றைக்கு: மென்றொடர் வன்றொடராய் ஐகாரச்சாரியை பெற்றது. இனி, நாளை, இன்னம் என்பன - எதிர்காலங் காட்டும் இடைச்சொற்கள். உன - நீ என்பதன் ஆறாம்வேற்றுமை விரி: அ - ஆறனுருபு: இவ்வுருபு பெரும்பாலும் வருமொழி பன்மையாயிருக்கும் போது வழங்கும். செம்மை + அடி = சேவடி: பண்புப்பெயர் ஈறுபோய் ஆதி நீண்டு முன்னின்றமகரமெய் வகரமாகத்திரிந்தது. அடி - பால்பகாவஃறிணைப்பெயர். (உ)

3.—(இ - ள்.) அந்தி வெள் பிறை சூடும் எம்மானே - மாலைப்பொழுதில்தோன்றுகிற வெண்மையாகிய பிறைச்சந்திரனை முடிமேலணிந்த எமது தலைவனே! ஆரூர் மேவிய அமரர்கள் தலைவா - திருவாரூரென்னுந் தலத்திலெழுந்தருளிய தேவாதிதேவனே! எந்தை - எமதுதந்தையே! இடைமருது உறை எந்தை பிரானே—!—முந்தி செய் வினை - (நான்) முற்பிறப்புக்களிற் செய்த தீவினை, இம்மைக்கண் நலிய - இப்பிறப்பில் வந்து வருத்த, (அதனால்), மூர்க்கன் ஆகி - நல்லறிவில்லாதவனாகி, காலம் கழிந்தன - (எனது) வாழ்நாள்கள் வீணேகழிந்திட்டன; சிந்தித்து மனம் வைக்கவும் மாட்டேன் - (உன்னைத்) தியானஞ்செய்து நிலையாக மனத்திற்கொள்ளவும் மாட்டேன்; சீறி - (நான்) கோபங்கொண்டு, இரப்பார்கட்கு - (என்னிடம்வந்து) யாசிப்பவர்கட்கு, சிறிதே ஒன்று - சிறியதொரு பொருளையேனும், ஈயேன் - கொடுத்திடேன்; நீ எனக்கு உய்வகை அருளாய்—; (எ - று.)

முற்பிறப்புக்களிற்செய்த தீவினைகளின் பயனாக உன்னைத்தியானித்தல் இரப்போர்க்கீதல் முதலாகிய நற்றொழில்களொன்றுஞ் செய்யப்பெறாமல் எனதுவாழ்நாள்கள் வீணேகழிந்தன; ஆயினும் எனதுதலைவனாகிய நீ உனது அடியவனாகிய எனக்கு, நம்மிருவர்க்குமுள்ள தொடர்பே காரணமாக யான் ஈடேறும்வழியை அருள்செய்யவேண்டு மென்பதாம்.

"இடும்பையாலடர்ப்புண் டிடுமினோ துற்றென் றிரந்தவர்க் கில்லையே யென்று, நெடுஞ்சொலால் மறுத்த நீசனேனுக்கோ நினைக்கிலேன் வினைப்

பயன்தன்னை, * * * *, * * * * நான்வந்துன் திருவடியடைந்தேன் கைமிசாரணியத்துளெந்தாய்" என்று பிறருங் கூறுபவாதலால், "முந்திச் செய்வினை இம்மைக்கணலிய * * * * சீறிச்சிறிதேயிரப்பார்கட்கொன்றீ யேன் * * * * எந்தைநீயெனக்குய்வகையருளா யிடைமருதுறையெந்தை பிரானே!" என்றார். முந்திச்செய்வினை – ஸஞ்சித மெனப்படும். சிந்தித்தலை 'மநநம்' என்றும், மனத்தில் உறுதியாகக்கொள்ளுதலை 'நிதித்யாஸநம்' என்றுங் கூறுவர். எந்தைநீ - எந்தையாகிய நீ என்றும பொருள்கொள்ளலாம்.

திருவாரூர் - சோழநாட்டுச்சிவதலங்களு ளொன்று; திருமகள் சிவபி ரானது திருவடிகளை வணங்கி எல்லாச்செல்வத்தையும் எக்காலத்தும் அழி வில்லாத மாங்கலியத்தையும் தான்பெறுமாறு சிறப்பாகத் தவஞ்செய்து வரம்பெற்ற தலம்; மநுநீதிகண்டசோழமகாராஜனைப் பசுவாகச்சென்று சோ தித்த தலம்; தன்னிற்பிறந்தவர்க்கு முக்திகொடுக்குந் தலம்; கமலாலய மென்றும், ஸ்ரீபுரமென்றும் மறுபெயர்களையுடையது, இது. இதனிலுள்ள சிவபிரான் திருநாமம் - தியாகராஜர், புற்றிடங்கொண்டார். அம்பிகை - அல் லியங்கோதை. தீர்த்தம் - கமலாலயம் முதலிய பலதீர்த்தங்கள். விருக்ஷம் - பாதிரி.

செய்வினை - செய்தவினையென இறந்தகாலங்கருதும் வினைத்தொகை. இம்மைக்கண் + நலிய = இம்மைக்கணலிய: தனிக்குறிலைச்சாராத ணகரம் வரு மொழிமுதல்நகரம் ணகரமாகத்திரிந்தவிடத்துக் கெட்டது; "குறிலணை வில்லா ணனக்கள்" என்ற சூத்திர விதி. நலிய - காரணப்பொருளதாய்வந்த செயவெனெச்சம். ஆகிக் கழிந்தன - இங்குச் செய்தெனெச்சம தன்வினை முதல்வினையைக் கொண்டுமுடியாமல் வேறுவினைமுதல்வினையைக் கொண்டு முடிதலால், மூர்க்கனாகக் கழிந்தன என எச்சத்திரிபாகக் கொள்ளவேண்டும்; [நன் - வினை - உ௫, உ௭.] நான்மூர்க்கனாக எனதுகாலங் கழிந்தன என்க. காலம் - பால்பகாவஃறிணைப்பெயர். சீறி ஈயேன் என இயையும். சிறிதே, ஏ - இழிவுசிறப்பு. ஒன்று - எண்ணலளவையாகுபெயர். அந்தி - ஸந்த்யா என்ற வடசொல்லின் சிதைவு. வெண்பிறை - இயற்கையடைமொழி; இனம் விலக்க வந்ததன்று. அமரர் - சாவாமருந்தாகிய அம்ருத முண்டதனால் மரண மில்லாதவர்: தேவர்: (இதன் எதிர்மொழி - மர்த்யர்.) எந்தை - இயல் பாகிய அண்மைவிளி.

'அந்திவெண்பிறைசூடும் எம்மான்' என்பதில் அடங்கிய கதை:— சந்திரன் தக்ஷமுனிவரது புத்திரிகளாகிய அசுவினி முதலிய இருபத்தேழு நட்சத்திரங்களையும் மணஞ்செய்துகொண்டு அவர்களுள் உரோகிணியென்ப வளிடத்து மிகவுங்காதல்கூர்ந்து அவளுடனே எப்பொழுதுங் கூடிவாழ்ந் திருக்க, மற்றைமகளிரது வருத்தத்தை நோக்கி, முனிவன் அவனை 'க்ஷய மடைவாயாக' என்று சபிக்க, அச்சாபத்தாற் சந்திரன் பதினைந்துகலைகளுங் குறைந்து மற்றைக்கலையொன்றையும் இழப்பதற்குமுன்னம் சிவபிரானைச் சரணமடைய, அப்பெருமான் அருள்புரிந்து அவ்வொற்றைக்கலையைத் தன் தலையிலணிந்து மீண்டுங் கலைகள்வளர்ந்துவரும்படி அநுக்கிரகித்தன னென் பதாம். இவ்வரலாற்றால், சிவபிரான் தன்னையடைந்தார்க்குக் குறைதீர்த் தருளுந் தன்மையனென்பது விளங்கும். (௩)

4.—(இ - ள்.) இடை மருது உறை எந்தை பிரானே—!—ஒள் பொருள் தன்னை - சிறந்தசெல்வத்தை, கொடுக்ககிற்றிலேன் - (எவர்க்கும்) கொடுக்கும் மனமுடையேனல்லேன்; குற்றம் (உம்) - தவறானசெயல்களும், செற்றம் (உம்) - பகைமைக்குணமும், வேட்கையும் - ஆசையும், சினமும் - (இச் சிக்கப்பட்ட பொருள் பெருமையால் தோன்றுகின்ற) கோபமும், இவை முதல் ஆக - இவை முதலியனவாக (உள்ள தீக்குணங்களை), விடுக்ககிற்றி லேன் - ஒழிக்குந்திற முடையேனல்லேன்; வேண்டில் - விரும்பினாலும்,

ஐம்புலன் - (எனது) ஐந்து இந்திரியங்களும், என் வசம் அல்ல - எனது அதீநத்தில் இருப்பனவல்ல; நடுக்கம் உற்றது - உடல்நடுங்குதலையுடைய, ஓர் மூப்பு - ஒருகிழத்தனம், வந்து எய்த - (என்னை) வந்துஅடைதலினால், நமன் தமர் - யமதூதர்கள், நரகத்து இடல் - நரகத்தில் தள்ளுவார்களே யென்பதுபற்றி, அஞ்சி - அச்சங்கொண்டு, இடுக்கண் உற்றனன் - பெருந் துன்பமடைந்தேன்; (ஆதலினால், எனக்கு அவ்வாறுதோன்றிய அச்சம் நீங்கும்படி), உய் வகை அருளாய்—; (எ - று.)

என்னிடத்தில் ஈகைமுதலிய நற்குணங்களில் யாதொன்று மில்லை; குற்றம் முதலிய தீக்குணங்களே நிறைந்திருக்கின்றன; முதுமைப்பருவ மோ வந்திட்டது; இந்நிலையில், யமபடர் என்னைப்பற்றிச் சென்று நரகத்தில் தள்ளிவருத்துவார்களே என்று என்மனம் கவல்கின்றது; இக்காலத்தில் அஞ்சேலென்று அபயமளித்துப் பாதுகாக்கவேண்டியவன் நீயே யென் பதாம்.

ஒண்பொருள் - முன்னுள்ள அறத்திற்கும் பின்னுள்ள இன்பத்திற்கும் காரணமாகிய பொருள்: "வடுவிலா வையத்து மன்னிய மூன்றில், நடுவண தெய்த விருதலையு மெய்தும்," "ஒண்பொருள் காழ்ப்ப வியற்றியார்க்கு எண் பொருள், ஏனை யிரண்டு மொருங்கு" என்பன காண்க. குற்றம் - செய்ய வேண்டிய தொழில்களில் தவறுபடுதல். செற்றம் - பிறரையழிக்கவேண்டு மென்னும் எண்ணங் கொள்ளுதல்; எனவே, பகைமையாம். வேட்கை - ஒருபொருளைப் பெறவேண்டுமென்னும் ஆசை. ஐம்புலன் = ஐம்பொறி; மெய் வாய் கண் மூக்குச் செவி யென்னும் பஞ்சேந்திரியங்கள். எனதுஐம் பொறிகளும் சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்னுந் தமதுபுலன்களின் வழியாக மனத்தைக் கவர்ந்து எனக்கு வசப்படாமல் நின்று உன்னைத்தியா னிக்கவொட்டாமற் செய்கின்றன என்பது, 'ஐம்புல னென்வசமல்ல' என்ப தன் கருத்து. முதுமைப்பருவத்தில் சுவாதீநமற்றுச் சோர்ந்து கை தலை முதலிய உறுப்புக்கள் நடுங்குதல் இயல்பாதலால், 'நடுக்கமுற்றதோர்மூப்பு' என்றார்; "தாழாத் தளராத் தலைநடுங்காத் தண்டூன்றா வீழாவிறகதும்" என்றது நாலடி. நமன்தமர் நரகத்திடலஞ்சி யிடுக்கணுற்றன னுய்வகையரு ளாய்—"கடுஞ்சொலார் கடியார் காலனார் தமரார் படுவதோர் கொடுமைக் கஞ்சி, நடுங்கி நான் வந்துன் திருவடியடைந்தேன்." துன்பநேருங்காலத் தில் கண் இடுங்குதல்பற்றி, துன்பத்திற்கு 'இடுக்கண்' என ஒருபெயர்: இடுங்கு + கண் = இடுக்கண்.

கொடுக்ககிற்றிலேன் - எதிர்மறைத் தன்மையொருமை வினைமுற்று; கொடு - பகுதி, க் - சந்தி, கு அ - சாரியைகள், கில் - ஆற்றலுணர்த்தும் இடைநிலை, து - சாரியை, இல் - எதிர்மறையிடைநிலை, உகரக்கேடுகளும் லகரதகரங்கள் றகரங்களாகத்திரிந்ததும் - சந்தி, என் - தன்மையொருமை வினைமுற்றுவிகுதி. செற்றம், செறு - முதனிலை. வேட்கை, நடுக்கம், மூப்பு - வேள், நடுங்கு, மூஎன்னும் பகுதியினடியாப்பிறந்த தொழிற்பெயர்கள். தமர் - முறைப்பெயர்; தாம் - பகுதி. (௪)

5.—'அகி லுந்தி யைவனஞ் சுமந்து' என்று திருத்திப் படிக்க.

(இ - ள்.) அரைக்கும் - அரைத்தற்குஉரிய, சந்தனத்தோடு - சந்தனமரங் களையும், அகில் - அகிற்கட்டைகளையும், உந்தி - தள்ளிக்கொண்டும், ஐவனம் - மலைநெற்களை, சுமந்து - தாங்கிக்கொண்டும், இரு பாலும் ஆர்த்து இரைக்கும்- இருகரைகளிலும் நிரம்பி மிக்கொலிக்கின்ற, காவிரி - காவேரிநதியினது, தென் கரைதன்மேல் - தெற்குப்பக்கத்துக்கரையின்மீது உள்ள, இடை மருது - திருவிடைமருதூரில், உறை - நித்தியவாசஞ்செய்கின்ற, எந்தை பிரானை - எமதுகுலதெய்வமாகிய சிவபெருமானை, உரைக்கும் - பாடல் பாடித் துதிக்கின்ற, ஊரன் - நம்பியாரூரனென்கிற சுந்தரமூர்த்திநாயனாரது,

ஒளி திகழ் மாலை - (பொருளினாற்) சிறப்புப்பெற்று விளங்குகின்ற (தமிழ்ப்) பாமாலையை, உள்ளத்தால் - தமது மனத்தினால், உகந்து - விரும்பி, ஏத்த வல்லார்கள் - துதிக்க வல்லவர்கள், நரைப்பு - மயிர்நரைத்தலும், மூப்பொடு - கிழத்தனமும், நடலையும் - உடல்நடுக்கமும், இன்றி - இல்லாமல், நாதன் - தலைவனாகிய சிவபெருமானது, சேவடி - சிவந்த திருவடிகளை, நண்ணுவர் - அடைவார்கள்; (எ - று.)—தாம் ஏ - ஈற்றசை; தேற்றமுமாம்.

சுந்தரமூர்த்திநாயனார் திருவாய்மலர்ந்தருளிய இப்பத்துப்பாடல்களையும் இவ்வுலகத்தவர் விரும்பிப் புகழ்வாராயின், அதன்பயனாக நரை திரை முதலிய முதுமைத்துன்பங்களொன்றுமின்றிச் சிவபெருமானது திருவடிகளைச் சேர்வரென்பதாம். முதலடி - காவிரிப்பெருக்கின் சிறப்பை விளக்கும்.

காவிரி - வடமொழித்திரிபு. காவேரீயென்ற வடசொல் - கவேரனென்னும்ராஜரிஷிக்கு மகளானவளென்று பொருள்படும்; தத்திதாந்தநாமம். இனி, இதனைத் தமிழ்ச்சொல்லாகவேகொண்டு, (இந்திரனது) காவைநோக்கி [நந்தவனத்தைநோக்கி] விரிந்தது [பெருகியது] என்று காரணப்பொருள் கூறுதலும் ஒன்று; கா - சோலை, விரி - செழித்துவளர்தற்குக் காரணமானது என்றலுமாம். சந்தனம், அகில், ஐவனம் - மலைபடுபொருள்கள். ஊரன் - நம்பியாரூரன் என்பதன் நாமைகதேஸநாமக்ரஹணம் [ஒருசொல்லின் ஒருபகுதியைக்கொண்டு அப்பெயர்முழுதையுங் குறித்தல்.] திருவடியே வீடாயிருக்குமாதலால், முத்தியடைதலை 'சேவடிநண்ணுவர்' என்றார்.

உந்தி, உந்து - பகுதி. ஆர்த்து = ஆர்ந்து: வலித்தல். இனி, ஆர்த்து என்பதற்கு - ஆரவாரித்து எனப் பொருள்கூறி, ஆர்த்துஇரைக்கும் என ஒருபொருட்பன்மொழியாகக் கொள்ளினுமாம். தெற்கு + கரை = தென்கரை: திசைப்பெயர் ஈறுகெட்டு றகரம் னகரமாயிற்று; [நன் - உயிரீற்றுப் - ந-சூ] மாலை - மாலா என்னும் வடமொழி ஆவீறு ஐயாயிற்று; பலவகைமலர்களைக்கொண்டு தொடுக்கப்பட்ட பூமாலைபோலப் பலவகைச்சொற்கள்கொண்டு தொடுக்கப்பட்ட பாமாலையென்க; எனவே, உவமையாகுபெயராம். இன்றி - எதிர்மறைக்குறிப்பு வினையெச்சம்.

இது, நாயனார் தம்மைப் பிறர்போலும் பதிகங் கூறியது. இது, சைவசம்பிரதாயத்தில் **திருக்கடைக்காப்பு** எனப்படும். (௫)

---

## திருவடமுல்லைவாயில்.

**திருவடமுல்லைவாயில்**:—தொண்டைநாட்டிலுள்ள தலம்; தொண்டைமான்சக்கரவர்த்தி தனது யானைக்காலிற் சுற்றிய முல்லைக்கொடியை வெட்டும்பொழுது சிவபெருமான் திருமேனி வடுப்பட்டு வரமருளித் திருநந்திதேவரைச் சக்கரவர்த்தியின்பின்னே யனுப்பிய தலம்; அக்காரணத்தால இன்னுந் திருநந்திதேவர் புறங்காட்டி வீற்றிருக்கின்ற தலம்; சுந்தரமூர்த்திநாயனார் சங்கிலிநாச்சியார்பொருட்டுத் தாம்செய்த சபதங் காரணமாகக் கண்ணிழந்தமை பற்றிப் பதிகமோதிய தலம்; தழுவமுடியாத இரண்டு எருக்கந்தூண்கள் நிலைபெற்றிருக்குந் தலம். சோழநாட்டில் திருமுல்லைவாயிலென்று ஒரு தலமிருத்தலால், அதனினும் வேறுபாடு விளங்க, இதனை 'திருவடமுல்லைவாயில்' என்பர்.

இத்தலத்திலெழுந்தருளிய **சிவபெருமான் திருநாமம்** - பாசுபதேச்சுரர், மாசிலாமணீச்சுரர். **அம்பிகைதிருநாமம்** - கொடியிடையாளம்மை. **தீர்த்தம்** - சக்கரதீர்த்தம்.

1.—(இ - ள்.) பாசுபதா - பாசுபதமென்னும் மதத்திற்கு உரிய கடவுளே! பரஞ்சுடரே - எல்லாவொளிகளினும் மிக்குவிளங்கும் பேரொளிவடிவ

மானவனே! முருகு அமர் - நறுமணம் பொருந்திய, சோலை - சோலைகள், சூழ் - சூழப்பெற்ற, திருமுல்லைவாயிலாய் - திருமுல்லைவாயி லென்னுந் தலத்தி லெழுந்தருளியிருப்பவனே!— 'திருவும் - (எனது) சிறப்புக்குக்காரணமும், மெய் பொருளும் - அழியாச்செல்வமாகிய முத்தியும், செல்வமும் - இவ்வுலகத்துச் செல்வமும் (ஆகிய யாவும்),—எனக்கு—, உன் சீர் உடை கழல்கள் - உனது சிறப்புடைய திருவடிகளேயாம்', என்று எண்ணி - என்று மாத்திரம் நினைத்து, ஒருவரை மதியாது - எவரையும் லக்ஷ்யஞ்செய்யாமல், உறாமைகள் செய்து - தகாதகாரியங்களையெல்லாஞ் செய்துகொண்டு, மூடியும் - (அவற்றைச்செய்ததாக வெளிக்காட்டாது) மறைத்தும், உறைப்பன் ஆய் - மனத்துணிவுடையவனாய், திரிவேன் - திரிந்துகொண்டிருப்பேன், (யான்); வாயினால் உன்னை பரவிடும் - வாக்கினால் உன்னை(க் கவிபாடி)த் துதிக்கின்ற, அடியேன் - அடியேனது, படு துயர் - பெருந்துயரை, களையாய் - போக்கியருள்வாயாக; (எ - று.)

நான் எவ்வளவு தகாதகாரியங்களைச் செய்துவந்தாலும் உனது திருவடிகளையே நம்பி ஒருவரையும் லக்ஷ்யஞ்செய்யாது கவலையற்றுத் திரிகின்றேன்; ஆதலால், பாடல்தொண்டுசெய்கின்ற அடியேன் பெருந்துயர்ப்படாமல் குறிக்கொண்டு பாதுகாக்கவேண்டுமென்று திருமுல்லைவாயிலிலெழுந்தருளியிருக்கின்ற சிவபிரானைச் சுந்தரமூர்த்திநாயனார் வேண்டுகின்றன ரென்பதாம்.

திரு - கண்டாரால் விரும்பப்படும் மேன்மை; இங்கு, அச்சொல் - இலக்கணையால், அதற்குக் காரணத்தை யுணர்த்திற்று. மெய்ப்பொருள் - இவ்வுலகத்துச்செல்வம்போன்று நிலையற்றுப்போகாது எக்காலத்தும் அழியாது நிலைநின்று நிரதிசயப்பேரின்பத்தைவிளைக்கும் முத்திச்செல்வம். செல்வம் - (எவரிடத்தும் நிலைத்திராமற்) செல்லுந்தன்மையதெனக் காரணக்குறி. கழலுக்குச் சீராவது - நம்பிச்சரணடைந்தார்க்குத் தவறாது நற்கதியளிக்குந் திறம். கழல் - வீரர்கள் தமதுபராக்கிரமத்துக்கு அறிகுறியாகக் காலிலணிவதோர் அணி; இது, வீரகண்டை யெனப்படும்: "வீரத்தின் வீக்கிய கழலே யாடவர் கான்மிசை யணிவடம்." கழல்கள் என்றது - அவற்றையணிந்த திருவடிகளைக் குறித்தலால், தானியாகுபெயர். உறாமை - எதிர்மறைத்தொழிற்பெயர்: தொழிலாகுபெயராய், இங்குத் தகுதியற்றசெயல் என்ற பொருளைத் தந்தது. உறாமைகளை மூடுதலாவது - தம்மிடத்துள்ள தகுதியற்றசெயலைப் பிறர்காணமுடியாதபடி மறைத்தல். படுதுயர் - பெருந்துயர்; படு - இறத்தற்குக்காரணமானகொடுமையென்னும் பொருளது; 'படுபாவி' முதலிய இடங்களிற்காண்க. பாசுபதன் என்பது - அத்தலத்துச்சிவபிரான்திருநாமங்களுள் ஒன்று. பாசுபதம் - பசுபதியைத் தெய்வமாகக்கொண்டுள்ள மதம்; இது, சிவபெருமானைத் தெய்வமாகக்கூறும் காபாலம் காளாமுகம் பாசுபதம் சைவம் என்ற நான்குபிரிவுகளு ளொன்று. பசுபதி - ஜீவாத்மாக்களாகிய பசுக்களுக்குத் தலைவனெனப் பொருள்படுங் காரணக்குறி. பரஞ்சுடர் - சந்திர சூரிய அக்கினியரென்னும் முச்சுடரினும் மேம்பட்ட ஒளிவடிவானவன். (க)

2.—(இ - ள்.) விண் பணிந்து ஏத்தும் - விண்ணுலகத்தவரான தேவர்களும் வணங்கித் துதிக்கும்படியான [மிகப்பெருமைவாய்ந்த], வேதியர் - (தாருகவனத்து) முனிவர்களது, மாதர் - மனைவியரான மகளிர், வெருவிட - அஞ்சும்படி, வேழம் ஒன்று - (அவ்வந்தணரால் ஏவப்பட்ட) ஒருயானையை, உரித்தாய் - தோலையுரித்துஉடுத்தவனே! தேவர்தம் அரசே - தேவாதிதேவனே! தண் பொழில் ஒற்றி மா நகர் உடையாய் - குளிர்ந்த சோலைகளையுடைய சிறந்த திருவொற்றியூரென்னுந் தலத்தை யுடையவனே! சங்கிலிக்கு ஆ - சங்கிலியாரின்பொருட்டு, என் கண் கொண்ட - எனது இரண்டுகண்களையும் குருடாக்கிய, பண்ப - குணமுடையவனே! பாசுபதா—! பரஞ்சுடரே—! செண்பகம் சோலை சூழ் திருமுல்லைவாயிலாய் - செண்பகமரச்சோலைகள்

சூழ்ந்த திருமுல்லைவாயிலென்னுந் தலத்தி லெழுந்தருளியிருப்பவனே!—நின் அடியேன் - உனது தொண்டனாகிய எனது, படுதுயர் களையாய்—; (எ -று.)

கொடிய வீரச்செயல்களைக் காண்கையில், அஞ்சுதல் மகளிர்குணமாதலால், தன்னைக்கொல்லவந்த யானையின் தோலைச் சிவபெருமான் உரித்தபோது வேதியர்மாதர் அஞ்சினரென்க. சங்கிலிக்காகக் கண்ணையிழந்த கதை, வரலாற்றிற் கூறப்பட்டது. தமது அடியவராயினும் வாய்மைதவறினால் அத்தீவினைக்குஏற்ற தண்டனையைப்பெறுவித்துப் பாவத்தையொழித்துப் பாதுகாக்கும் பேரருளுடைமையாகிய சிவபெருமானது குணத்தி லீடுபட்டு 'சங்கிலிக்காவென்கண்கொண்ட பண்ப' என்று விளித்தார். விண் - விண்ணுலகத்தார்க்கு இடவாகுபெயர். வேதியர் - வேதத்தை ஓதவும் ஓதுவிக்கவும் வல்லவர்: பிராமணர். வெருவிட, இடு - துணைவினை. செண்பகம் - சம்பகம் என்ற வடசொல்லின் சிதைவு.

திருவொற்றியூர் - தொண்டைநாட்டிலுள்ள தலம்; ஆதிபுரியென்னும் மறுபெயரினது. ஆதிசேஷன் பிரமா பார்வதி முதலியோர் பரமசிவனது நடனத்தைத் தரிசித்த தலம்; பஞ்சதியாகக்ஷேத்திரங்களுள் ஒன்றுஇது; (அவையாவன - திருக்கழுமலை திருவாய்மூர் திருவடமுல்லைவாயில் திருவெள்ளைவாயில் திருவொற்றியூர் என்பன.) கங்கை காசிதீர்த்தமென்னும் பெயரோடு இருக்கப்பெற்ற தலம்; சுந்தரமூர்த்திநாயனார் சங்கிலியாரை மணஞ்செய்துகொண்ட தலம்; கலியநாயனார்க்கு ஸாலோகபதவி யருளிய தலம்; ஐயடிகள்காடவர்கோன் க்ஷேத்திரவெண்பாப் பாடிய தலம்; பட்டினத்துப்பிள்ளைகள் பேய்க்கரும்பு தித்தித்ததனால் தமக்கு இறுதித்தலமென்று தெரிந்துகொண்டு கடற்கரையில் இலிங்கமாய் விளங்கிய தலம். இவ்வூர்ச்சிவபெருமான்திருநாமம் - படம்பக்கநாதர், மாணிக்கத்தியாகேசர். அம்பிகைதிருநாமம் - வடிவுடையம்மை. தீர்த்தம் - கிருபாதீர்த்தம், அலைவாய்த்தீர்த்தம். விருக்ஷம் - மகிழமரம்.

வேழமுரித்த கதை :—ஒருகாலத்துப் பரமசிவன் தன்னைமதியாத தாருகவனத்துமுனிவர்களுடைய கருவத்தைப் பங்கஞ்செய்யவும் அவர்கள்மனைவிமார்களின் கற்புநிலையைப் பரிசோதிக்கவுங் கருதித் தான் ஒரு விடவடிவங்கொண்டு அவர்கள்வீடுதோறுஞ் சென்று பிக்ஷாடனஞ்செய்து, தன்னைநோக்கிக்காதல்கொண்ட அம்முனிபத்தினியரது கற்புநிலையைக் கெடச்செய்ய, அதுகண்டு பொறுமைற் கோபம்மூண்ட அம்முனிவர்கள் அபிசாரயாகமொன்று செய்து, அவ்வோமத்தீயினின்று எழுந்த நாகங்கள் பூதங்கள் மான் யானை முயலகன் வெண்டலை முதலியவற்றையும் அவ்வோமத்தீயையும் சிவனைக்கொன்றுவிடும்படி ஏவ, சிவபெருமான் தன்மேற்பொங்கிவந்த நாகங்களை ஆபரணங்களாகவும் பூதங்களைத் தனதுகணங்களாகவுங் கொண்டு, மானை இடக்கையிலேந்தி, யானையைத் தோலையுரித்துஉடுத்து, முயலகனை முதுகிற் காலாலூன்றி, வெண்டலையைக் கையிற்பற்றிச் சடைமேலணிந்து, நெருப்பை வலக்கையிலேந்தி, இங்ஙனமே அவற்றையெல்லாம் பயனிலவாகச்செய்துவிட்டனனென்பதாம். (உ)

3.—'செங்நெலங்கழனி' என மூலத்தைத் திருத்துக.

(இ - ள்.) பாசுபதா—! பரஞ்சுடரே—! பொன் நலம் - மிக்கஅழகு வாய்ந்த, கழனி - வயல்களில், புது விரை மருவி - புதியதாகத் தோன்றிய நறுமணத்தைப் பொருந்தி, பொறி வரி வண்டு - புள்ளிகளையும் கோடுகளையுமுடைய வண்டுகள், இசை பாட - ரீங்காரஞ்செய்யாநிற்கவும்,—அம் நலம் கமலம் தவிசின்மேல் - மிகஅழகிய தாமரைமலராகிய ஆசனத்தின்மீது, உறங்கும் - தூங்குகின்ற, அலவன் - நண்டுகள், வந்து உலவிட - வெளியில் வந்து உலாவவும், அள்ளல் - குழைசேற்றையுடைய, செங்நெல் - செங்நெற்பயிர்கள் விளையப்பெற்ற, அம் - அழகிய, கழனி - கழனிகள், சூழ் - சூழ்ந்

துள்ள, திருமுல்லைவாயிலாய்—!—திரு புகழ் - (உனது) சிறந்த புகழை விருப்பால் - ஆசையோடு, பன்னல் அம் தமிழால் - (செவிக்கினியதென்று), சிறப்பாகப்பாராட்டப்படுகின்ற அழகிய தமிழ்ப்பாஷையினால், பாடுவேற்கு - பாடல்பாடித்துதிக்கின்ற அடியேனுக்கு, அருளாய்—; (எ - று.)

அடியேன் என்னதவறுசெய்தேனாயினும் உனதுதிருப்புகழ்களைப் பக்தியோடு வாயாரக் கவிபாடித் துதிக்கின்றேனாதலால், என்குற்றங்களையெல்லாம் பொறுத்து என்மீது கருணைபுரியவேண்டுமென்பதாம். முதல்மூன்றடிகளினால், திருமுல்லைவாயிலின் நீர்வளநிலவளங்கள் விளக்கப்பட்டன. பாட உலவிடச் சூழ் என இயையும். பொன்னலம், அந்நலம் - ஒருபொருட்பன்மொழிகள். பன்னல் - பன்னுதல்; பலகாற்சொல்லுதல்; பன்னு - பகுதி. பாடுவேன் - தன்மையொருமைவினையாலணையும்பெயர்.

'செந்நலங்கழனி' என்ற பாடத்துக்கு - செந்நலென்னும் மீன்வகையையுடைய அழகிய கழனியென்று சிலர் பொருள்கூறுவாராயினும், அது சம்பிரதாயமன்று. (ங)

4.—(இ - ள்.) பாசுபதா—! பரஞ்சுடரே—! சந்தனம் வேரும் - சந்தன மரத்தின் வேர்களையும், கார் அகில் குறடும் - கருநிறமுடைய அகிற்கட்டைகளையும், தண் மயில் பீலியும் - குளிர்ச்சிதரத்தக்க மயிற்கண்களையும், கரியின் தந்தமும் - யானைத்தந்தங்களையும், தரளம் குவைகளும் - முத்துக்குவியல்களையும், பவளம் கொடிகளும - பவளக்கொடிகளையும், சுமந்துகொண்டு - தாங்கிக்கொண்டு, உந்தி வந்து இழி - மோதிக்கொண்டுவந்திழிகின்ற, பாலி - பாலியாற்றினது, வடகரை - வடக்குக்கரையின்கணுள்ள, முல்லைவாயிலாய்—! மாசிலாமணியே - மாசிலாமணியென்னுந் திருநாமமுடையவனே—!— பந்தனை கெடுத்து - சம்சாரபந்தத்தை யறுத்து, என் படு துயர் களையாய் - எனது மிக்க பிறவித்துயரை நீக்குவாயாக; (எ - று.)

இதனால், சுந்தரமூர்த்திநாயனார் தாம் படுகின்ற துயரமிகுதியைப் பொறுக்கமாட்டாமல் சம்சாரபந்தத்தினின்று தம்மை விடுவிக்குமாறு கடவுளை வேண்டுகின்றனரென்க. முதலிரண்டடிகள் - பாலியாற்றின் பெருக்கச் சிறப்பைத் தெரிவிக்கும். திருமுல்லைவாயிலி லெழுந்தருளியிருக்கின்ற சிவபிரானது திருநாமம் மாசிலாமணியீசரென்பது தோன்றுமாறு, 'முல்லைவாயிலாய் மாசிலாமணியே!' என்றார். மாசு இலா மணி - குற்றஞ்சிறிதுமில்லாத இரத்தினம். சந்தனம், கரீ, தந்தம், தரளம், ப்ரவாளம், மணி, பந்தநா - வடசொற்கள். கரீ - துதிக்கையையுடையதெனக் காரணப்பெயர். குவை - 'குவி' என்னும் பகுதியினடியாப் பிறந்த தொழிற்பெயர். (ச)

5.—(இ - ள்.) வள்ளலே - வரையாதருளுந்தன்மையுடையவனே! பாசுபதா—! பரஞ்சுடரே—! செற்று - (உலகத்துஉயிர்களை) அழித்துக்கொண்டு, மீது ஓடும் - ஆகாயமார்க்கத்தில் திரிகிற, திரி புரம் - (அசுரர்களது) மூன்று பட்டணங்களையும், எரித்த - (சிரித்து) எரித்தழித்த, திருமுல்லைவாயிலாய்—! —அடியேன் - அடியவனாகிய நான்,—கள்ளமே பேசி - வஞ்சகமாகப் பேசி, குற்றமே செயினும் - (நற்காரியமொன்றுமின்றிக்) குற்றங்களையே செய்தாலும், குணம் என கொள்ளும் - (அவற்றையெல்லாம்) குணமென்று திருவுள்ளத்திற்கொள்ளுகின்ற, கொள்கையால் - தன்மை (உன்னிடத்தில்) இருப்பதனால், பல மிகை செய்தேன் - பலகுற்றங்களையே செய்திட்டேன்; (அவ்வாறு குற்றமேபெருகிய என்மீதும் உனது இயற்கைக்குணத்தினால் நீ திருவருள்செய்கின்றாய்; ஆதலால்), நான் பெற்றது ஆர் பெற வல்லார் - நான் பெற்ற பேற்றை(இவ்வுலகத்தில்)வேறுயாவர்தாம் பெறுந்தன்மையுடையவர்? [ஒருவருமில்லை யென்றபடி;] பற்று இலேன் - (உன்னையன்றி வேறொரு) ஆதாரமுமில்லாத அடியேன், உற்ற - அடைந்துள்ள, படு துயர் - மிக்கதுயரத்தை, களையாய்—; (எ - று.)

வெளிக்கு நல்லவன்போலப் பேசித் தொழிலினற் குற்றங்களையே யான் செய்திட்டாலும், நீ அவைமுழுவதையும் உனது இயற்கைக்குணத்தால் நற்றமாகவேகொண்டு திருவருள்பாலித்தாய்; நான் பெற்றபேறு யாவர்பெறுவார்? ஆகவே, உன்னையே நம்பியுள்ள எனது படுதுயரைப் போக்கிக் காத்தலும் உனக்குக் கடனென்பதாம். சுந்தரமூர்த்திநாயனர் பரவையார் சங்கிலியார் விஷயத்திற் காதல்கொள்ள, சிவபெருமான் அவற்றைக்குற்றமாகக்கொள்ளாமல் அவர்களை மணத்தற்கு உதவிபுரிந்ததோடு நில்லாமல் தமதுதிருவருளைப் பலகாலுங் காட்டியதனல், அப்பெருமானது கருணைத்திறத்தி லீடுபட்டு 'நான் பெற்றது ஆர்பெறவல்லார்' என்று வியந்து கூறினர். குற்றத்தைக் குணமாகக் கொள்ளுதல் - வாத்ஸல்யம் எனப்படும்: (வாத்ஸல்யமாவது - அன்றுஈன்ற கன்றின்மீதுஉள்ள அசுத்தங்களைத் தாய்ப்பசுவானது சிறிதும்அருவருப்புக் கொள்ளாமல் அன்போடு நாவினல்நக்கிப் போக்கியமாகக்கொள்ளுதல் போல்வது. வத்ஸம் - கன்று.)

மற்று - அசை. ஆர் - யாரென்பதன் மரூஉ. வள்ளல் - வரையாது கொடுக்குந்தன்மையுடையவன். குற்றமே என்னும் பிரிநிலையேகாரத்தால், ஒருநற்றொழிலுஞ் செய்வதில்லை யென்பது பெறப்படும். செயினும், உம்மை - இழிவுசிறப்பு. மிகை - மிகுஎன்னும் முதனிலையின் தொழிற்பெயர். பற்று - முதனிலைத்தொழிற்பெயர்.

**திரிபுரமெரித்த கதை**:—தாரகாசுரனது புத்திரர்களாகிய வித்யுந்மாலி தாரகாக்ஷன் கமலாக்ஷன் என்னும் மூவரும் மிக்கதவஞ்செய்து பிரமனிடம் பெருவரம்பெற்று மயனென்பவனல் சுவர்க்கம் பூமி பாதாளம் என்னும் மூன்றுஇடங்களிலும் முறையே பொன் வெள்ளி இரும்பினல் அரண்வகுத்து இயற்றப்பட்டு ஆகாயமார்க்கத்திற் சஞ்சரிக்குந் தன்மையையுடைய மூன்றுபட்டணங்களைப் பெற்றுச் சிவபூசைசெய்துகொண்டு அச்சிவபக்திமகிமையால் எவர்க்கும் அழிக்கவொண்ணுதவராய் அத்தகைய மற்றும் பல அசுரர்களோடு அந்நகரங்களுடனே தாம்நினைத்தஇடங்களிற் பறந்து சென்று, பலவிடங்களின்மேலும் இருந்து அவ்வவ்விடங்களைப் பாழாக்கிவருகையில், அத்துன்பத்தைப் பொறுக்கமாட்டாத தேவர் முனிவர் முதலியோரது வேண்டுகோளினல் திருமால் மாயையினல் ஜிநாவதாரமும் புத்தாவதாரமுஞ் செய்து பற்பலதீயவழிகளைக் கற்பித்து உபதேசித்து மயக்கி அவ்வசுரர்களைச் சிவத்துவேஷிகளாகச் செய்துவிட்டதன்பின்பு, தேவர்கள் பிரார்த்தனைப்படி சிவபெருமான் பூமியைத் தேராகவும், சந்திரசூரியரைத் தேர்ச்சக்கரங்களாகவும், நான்குவேதங்களையும் நான்குகுதிரைகளாகவும், பிரமனைச் சாரதியாகவும், மகாமேருவை வில்லாகவும், ஆதிசேஷனை வில்நாணியாகவும், விஷ்ணுவை வாயுவாகிய சிறகுஅமைந்து அக்கினியைமுனையாகவுடைய அம்பாகவும், மற்றைத்தேவர்களைப் பிறபோர்க்கருவிகளாகவும் அமைத்துக்கொண்டு யுத்தசன்னத்தனாய்ச்சென்று போர்செய்ய யத்தனித்துப் புன்சிரிப்புச்செய்து அவ்வசுரர்கள்பலரையும் பட்டணங்களோடு எரித்தருளினன் என்பதாம். (௫)

---

# குலசேகராழ்வார்சரித்திரம்.

ஸ்ரீவைஷ்ணவமதத்திற் சிறந்த மெய்யடியார்க ளென்று கொண்டாடப்படுகின்ற ஆழ்வார்கள் பன்னிருவர்; அவராவார்:—பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார், திருமழிசையாழ்வார், நம்மாழ்வார், (அவரது சிஷ்யரான) மதுரகவியாழ்வார், குலசேகராழ்வார், பெரியாழ்வார், (அவர் வளர்த்த திருமகளாரான) ஆண்டாள், தொண்டரடிப்பொடியாழ்வார், திருப்பாணாழ்வார், திருமங்கையாழ்வார் என இவர். †

பரமபத மென்கிற ஸ்ரீவைகுண்டலோகத்தில் எழுந்தருளியிருக்கின்ற ஸ்ரீமந்நாராயணன், பூலோகத்திலுள்ள ஜனங்களை உய்விக்கக் கருதி அவர்களைச்சீர்திருத்துதற்பொருட்டு ஸ்ரீதேவி பூதேவி நீளாதேவிகளையும், தனது பஞ்சாயுதங்களையும், ஸ்ரீவத்ஸம் கௌஸ்துபம் வநமாலை முதலிய சின்னங்களையும், அநந்தன் கருடன் விஷ்வக்ஸேநன் முதலிய சில முத்தியுலகத்து அடியாரையும் பார்த்து, 'நீங்கள் ஏற்றபடி பூலோகத்திலே பலசாதிகளிலும் பிறந்து பிரபஞ்சத்தவரைப் பிறவிப்பெருங்கடலினின்று கரையேற்றிவாருங்கள்' என்று கட்டளையிட்டு அனுப்ப, அவர்கள் அப்பணியைத் தலைமேற்கொண்டு ஆழ்வாராதியராக அவதரித்தார்கள். இவர்கள், பகவானுடைய சகல மங்கள குணங்களாகிய அமுதவெள்ளத்திலே முழுகி மிகவும் ஈடுபட்டு நன்றாக ஆழ்ந்திடுபவ ராதலால், 'ஆழ்வார்' என்று திருநாமம்.

இங்ஙனம் 'இந்த உலகில் இருள்நீங்க வந்துஉதித்து அந்தமிழால் நற்கலைகள் ஆய்ந்துரைத்த ஆழ்வார்க'ளில் குலசேகராழ்வார், திருமாலின் திருமார்பில் அணியப்பட்டுள்ள ஸ்ரீகௌஸ்துபமென்னும் இரத்தினவிசேஷத்தின் திருவவதாரமாவர்.

சேரநாட்டில் கோழிக்கூடு என்ற இராஜதானியில் அரசாண்ட த்ருடவ்ரதனென்ற அரசன் வெகுநாளளவும் பிள்ளையில்லாத குறையால் திருமாலுக்கு விசேஷமான ஆராதனத்தைச் செய்ய, அதன்பயனால் அவனுக்கு ஒருகுமாரன் மாசிமாதத்திற் புநர்வசுநக்ஷத்திரத்திலே ‡ பட்டத்து இராணியினிடத்தில் திருவஞ்சிக்களமென்ற ஊரிலே அவதரித்தனன். அச்செய்தியை அறிந்த அரசன் ஆனந்தக்கடலில் ஆழ்ந்து, உரியகாலத்தில் நாமகரணஞ் செய்யத்தொடங்கி, இம்மகன் தன்குலத்துக்குச் சிரோபூஷணம்போலச் சிறப்புத்தந்து யாவராலுங் கொண்டாடத்தக்கவனெனக் கொண்டு 'குலசேகரன்' எனப் பெயரிட்டான்.

பின்பு அவ்விளமகன் நாளொருவண்ணமும் பொழுதொரு மேனியுமாகச் சுக்கிலபக்ஷத்துச் சந்திரன்போல வளர்ந்து சௌளமும் உபநயநமும் தக்கபருவங்களில் தந்தையாற்செய்விக்கப்பெற்று, நல்லாசிரியரைத்துணைக்

---

* ப்ரஹ்மாண்டம் பாத்மம் மார்க்கண்டேயம் என்ற புராணங்களிலும், பார்க்கவம் வ்ருத்தபாத்மம் ப்ரவ்ருத்தபாத்மம் என்ற உபபுராணங்களிலும் எதிர்காலவரலாறுகளை விவரிக்குமிடத்துக் கூறியுள்ளவற்றைத் தழுவியெழுதியவையான திவ்யஸூரிசரிதம் ப்ரபந்நாம்ருதம் என்ற வடநூல்களிலும், குருபரம்பராப்ரபாவமென்கிற மணிப்ரவாளக்கிரந்தங்களிலும், பிரபந்தசாரம் உபதேசரத்தினமாலை முதலிய தமிழ்நூல்களிலும், மற்றுஞ் சிலவற்றிலும் பெருக்கமாகவும் சுருக்கமாகவும் கூறப்பட்டுள்ளதை அநுசரித்து இவ்வரலாறு சுருக்கமாக எழுதப்பட்டது.

† இவர்கள்சரித்திரத்தை, 'ஆழ்வார்கள் சரித்திரம்' என்னும் வசனநூலிற் பரக்கக்காணலாம்.

‡ 'கலியுகம்பிறந்த ௨௮ - ஆம் வருஷமான பராபவவருஷத்து மாசிமாதத்தில் சுக்கிலபக்ஷத்துத் துவாதசியும் வியாழக்கிழமையுங்கூடின சுபதினத்தில்' என்று விவரம் நூல்களிற் கூறப்பட்டுள்ளது. (இப்பொழுது நடக்கிற கலியுக வருஷம் - ௫௦௧௭ - ஆதலால், இவர்பிறந்தகாலம் இப்பொழுதைக்கு ௪௯௮௯ - வருஷத்துக்குமுன்பாகும்.)

கொண்டு, நான்கு வேதங்களையும் ஆறுசாஸ்திரங்களையும் தநுர்வித்தையையும் மற்றும் அரசர்க்குஉரிய நீதிநூல்களையும் யானை குதிரை தேர் முதலியவற்றின் நூல்களையும் சிறிதுகாலத்திலேயே ஐயந்திரிபுஅற முற்றக்கற்று வல்லனாயினன். அம்மைந்தனது திறத்தைக் கண்டு களிப்புக்கொண்ட காவலன் அவனுக்கு இளவரசுமுடி சூட்டினன்.

பின்னர், குலசேகரன் பராக்கிரமத்தாற் பகைவெல்லலுற்று, நால்வகைச்சேனையோடு புறப்பட்டுச்சென்று, சோழபாண்டியர்முதலிய அரசர்களனைவரையும் புறங்கொடுத்தோடுமாறு வென்று அவர்களைக் கீழ்ப்படுத்தி அவர்கள்நாடுகளைத் தன்வசப்படுத்தி, இங்ஙனம் சேர சோழ பாண்டியமென்னுந் தமிழ்நாடு மூன்றுக்குந் தலைமை பூண்டதனால், "கொல்லிகாவலன் கூடல்நாயகன் கோழிக்கோன் குலசேகரன்" என்னும்படி பல பிருதுகளைப் பெற்று மீண்டுவந்தனன். பிறகு த்ருடவ்ரதமஹாராஜா குமாரனுக்குப் பட்டாபிஷேகஞ் செய்து இராச்சியபாரம் முழுவதையும் அம்மகன் தோளில் நிலைநிறுத்தி க்ஷத்திரியசாதிமுறைப்படியே தான் தவஞ்செய்து உயர்கதிபெறுதற்பொருட்டுத் தவவனஞ்சென்றான்.

தந்தையின் பிரிவுக்கு ஆற்றாது வருந்தி மந்திரிகள்தேற்றத்தேறிய மன்னவகுமாரன், நடுவுநிலைமைதவறாது,சிறியவற்றைப் பெரியவை நலியாதபடி இராமராச்சிய மென்னுமாறு எதிரின்றி அரசாண்டு ஒரு பெண்மணியை மணந்து, திருமாலின் தேவிமார் மூவருள் நீளாதேவியின் அம்சமான இளையென்னும் ஒரு புத்திரியையும் த்ருடவ்ரத னென்று பிதாமகன்பெயரையே பெறும் ஒரு புத்திரனையும் பெற்றுக் கவலையற்றிருக்கையில், 'இம்மை மறுமை வீடு என்னும் மும்மை யின்பங்களையுந் தரவல்லனாய் முதலும் முடிவும் அற்ற முழுமுதற்கடவுள் யாவோ?' என்று பரதத்துவவிசாரம் பண்ணத் தொடங்கிப் பலபண்டிதர்களுடனே ச்ருதி ஸ்ம்ருதி இதிஹாஸம் புராணம் முதலிய சகலகலைகளையும் பரிசோதித்துப்பார்த்துவர, அதுவே சமயமென்று அவ்வரசனை ஆட்கொண்டு உய்விக்கக் கருதிய கருணாநிதியான கமலக்கண்ணனது திருவருள்நோக்கத்தால், ஸ்ரீமகாவிஷ்ணுவே சிறந்த தெய்வமென்கிற சத்தியமான சித்தாந்தம் அவனது ஞானக்கண்ணுக்குத் தெள்ளிதிற் புலப்பட்டது.

இப்படி எம்பெருமானை எல்லாவுயிர்கட்கும் இறைவனாக அறிந்து அப்பிரானது அநந்த கலியாணகுணகணங்களாகிய பெருங்கடலில் ஆழ்ந்து நெஞ்சுருகி ஈடுபட்ட இக்குலசேகராழ்வார், திருமாலின் விபவாவதாரங்களில் ஸ்ரீராமாவதார க்ருஷ்ணாவதாரங்களினிடத்திலும், அர்ச்சாவதாரத்தில் திருவரங்கம் திருவேங்கடம் முதலிய திவ்யதேசத்து எம்பெருமான்களிடத்திலும் மிக்க பக்திப்பெருங்காதல் கொண்டு, ஸ்ரீராமாயண காலக்ஷேபத்தையே எப்பொழுதும் தமக்குப்பொழுதுபோக்காகப்பெற்றும், ஸ்ரீவைஷ்ணவர்களைக் கண்டால் எதிர்கொண்டு அழைத்துவந்து விசேஷமாக உபசரித்தும், தமது திருமாளிகைத் திருவாராதனத்தில் எழுந்தருளியுள்ள ஸ்ரீராமசந்திரமூர்த்திக்கும் ஸ்ரீராஜகோபாலஸ்வாமிக்கும் நித்திய நைமித்திக உத்ஸவங்களைக் குறைவறச்செய்துகொண்டும் இருந்தார்.

இவர், ஒருநாள் ஸ்ரீராமாயண காலக்ஷேபஞ் செய்துவருகையில், ஆரணியகாண்டத்தில் 'இராவணன் தங்கையான சூர்ப்பணகை மூக்கு அறுப்புண்டு (தனக்குத் துணையாக இராவணனால் நியமிக்கப்பட்டு) ஜநஸ்தாநத்திலிருந்த கரதூஷணாதியரிடத்திற் போய் முறையிட்டதை யறிந்து அவர்கள் அதியுக்கிரமாக எண்ணிறந்தசேனைகளைத்திரட்டிக்கொண்டு படையெடுத்து வந்த சமயத்தில், பெருமாள், பிராட்டிக்குக்காவலாக விருக்கும்படி இளையபெருமாளைப் பர்ணசாலையிலே நிறுத்திவிட்டு, தமக்கு ஒருவருந் துணையின்றித் தாம் தனியே அவ்வரக்கர்களனைவரோடும்போர்க்குச்சென்று நின்றார்'

என்று பௌராணிகர் சொல்லக்கேட்டவுடனே, ஸ்ரீராமசரித்திரத்தில் தமக்குஉள்ள மிக்க பிரீதிவிசேஷத்தால், வெகுகாலத்துக்கு முன்பு நடந்த அந்தச் சரித்திரத்தை அன்றுதான் நடக்கின்றதாக நினைத்து, 'இப்படிப்பட்ட சங்கடகாலத்தில் எம்மால் இயன்ற உதவியைச் செய்யாதுவிடுவது சிறிதும் தக்கதன்று' என்று துணிந்து, தமதுசேனைகளையெல்லாம் போர்க்குச்சித்தமாய் முன்செல்லும்படி பணித்து, தாமும், ஜநஸ்தாநத்தை நோக்கிப் புறப்பட்டார். அச்சமயத்தில் யாவரும் இன்னதென்று அறியாது திடுக்கிட்டு நிற்கையில், அதிநிபுணரான ஆசிரியர், 'இராமபிரான் தாம் ஒருவராகவே நிர்ப்பயமாகப் பிரபலயுத்தஞ்செய்து சத்துருக்களத்தனை பேரையுஞ் சயித்துத் தமது ஆச்சிரமத்துக்கு மீண்டுவர, அவரைச் சீதாதேவி களிப்புடன் அணைத்து அவரது இளைப்பைத் தணித்தாள்' என்ற செய்தியை எடுத்துக்கூற, அதுகேட்ட ஆழ்வார் ஆனந்தமடைந்து சேனையைத் திருப்பிக்கொண்டு தாமும் பிரயாணத்தை நிறுத்தினர்.

அதுமுதல், இராமாயணங்கூறுபவர், எந்தெந்தப்பாகத்தில் இராமனது விஜயப்ரஸ்தாபம் வருகின்றதோ அந்தந்தப்பாகத்தையே வளர்த்துயுரைத்தும், அரக்கராதியரால் இராகவபிரானுக்குத் துன்பம் நேர்ந்த இடங்களையெல்லாம் சுருக்கியுரைத்தும் வந்தனர். இப்படியிருக்கையில் ஒருநாள், அந்தக்குரு வேறொருகாரியநிமித்தம் தாம் அவசியமாகப் பிறிதிடஞ்செல்லவேண்டிவந்ததனால், காலக்ஷேபஞ் சொல்லுதற்குத் தாம்வாராமல் தமது குமாரரை அனுப்பினர்.

அவர், குலசேகரருடைய இயற்கையை உணராமல், இராவணன் சீதையையெடுத்துப்போன வியசனகரமான செய்தியை உபந்யாசஞ்செய்ய, அது செவியிற்பட்டவுடனே குலசேகரர் மனங்கொதித்து 'நான் இப்பொழுதே வெகுவிரைவாகச் சென்று கடல்கடந்து இலங்கையை நீறுபடுத்தி ராக்ஷஸ ராஜனைப் பந்துமித்திரரோடும் போரில் தொலைத்து எனது அன்னையை மீட்டு வருவேன்' என்று சொல்லி எழுந்து ஆயுதங்களை யெடுத்துக்கொண்டு சேனாசமூகத்தோடு இலங்கையை நோக்கிப் பிரயாணமானர். அப்பொழுது விண்ணுலகத்தாரும் மண்ணுலகத்தாரும் இதனைக்கண்டு பெருவியப்புக்கொண்டு 'இதன்முடிவு என்னாகுமோ?' என்று பெருங்கவலையோடு பார்த்து நின்றனர். ஆழ்வார் கடலை நீந்தியேகடக்க நிச்சயித்துக் கழுத்தளவினதான தண்ணீரில் இறங்கிநின்ற சமயத்தில், இவரது அன்புக்கு இடமான இராமமூர்த்தி, இவரைத் தடுத்தற்கு வேறுவகை யொன்றும் இல்லாமையைக் கருதி, தாம் நேரிலே சீதையைக் கைப்பற்றிக்கொண்டு இலக்குமணனோடு எதிரில் வந்து நின்று தரிசனந் தந்து, தமது போர்வெற்றியையும் சத்துருவிநாசத்தையும் தேவியைமீட்டதையும் தெளிவாகக்கூறி, பிறவிப்பெருங்கடலினின்று கரையேற்றுதற்கு ஓர் அறிகுறியாகுமாறு இவரைக் கரையேற்றி நகரினுட்செலுத்திவிட்டு, பின்பு மறைந்தருளினர்.

இப்படி எம்பெருமானுடைய திவ்யசரித்திரங்களைக் கேட்பதில் மிக்க அன்பை யுடையரான குலசேகரர், புராணங்களிற் கூறப்பட்ட ஸ்ரீரங்கக்ஷேத்திர மகிமையைக் கேட்டு, 'திருவரங்கத்தைநோக்கிப் பிரயாணப்பட்டுச் செல்லுதலும், அத்திருப்பதிக்குச் செல்லவேண்டுமென்ற விருப்பமும், சகலகருமங்களையுந் தொலைக்கும்' என்ற தன்மையையும், 'அக்கோயிலில் நித்தியவாசஞ்செய்தலும், நம்பெருமாளைக் கண்ணாரக்கண்டு களித்தலும், பேரின்பத்தைத் தரும்' என்ற தகைமையையும் உணர்ந்து, அங்குப் போதற்குமிக்கதுதூகலமுடையராய்ப் பரிவாரங்களோடு புறப்படுபவரானர்.

இவர் இவ்விடத்தை விட்டு அவ்விடத்துச்சென்று பெரியபெருமாளைச் சேவிப்பாராயின் பின்பு இங்குமீளுதலரிதென்றும், அங்குத்தானே நித்தியவாசஞ்செய்யக் கருதிவிடுவரென்றும் நினைத்து அந்தயாத்திரையைத் தடு

தற்கு ஆலோசித்து மந்திரிகள் ஒருபாயஞ்செய்தார்கள்; அது யாதெனில்:— இவர் ஸ்ரீவைஷ்ணவர்களை உபசரிப்பதில் மிக்கவிருப்பமுள்ளவ ராதலால், அநேகபாகவதர்களை அமைச்சர்கள் வரவழைத்து இவர்முன் செலுத்த,இவர் 'அறுபதினாயிரம் வருஷகாலம் விஷ்ணுவை ஆராதநஞ்செய்த பயனும், ஒருகால் வைஷ்ணவர்களைப் பூசித்த பேற்றுக்கு ஈடாகாது' என்ற சாஸ்திர முறைமையை யறிந்தவ ராதலால், ஸ்ரீரங்கயாத்திரையை நிறுத்தி, ஷோடசோபசாரத்தோடு திருமாலடியார்களைப் பலவாறு உபசரித்தார். இவ்வாறு இவர் திவ்யதேசயாத்திரைதொடங்கும்பொழுதெல்லாம் மந்திரிகள்மெய்யடியார்களைக் கொணர்ந்துவிட்டுத் தடுத்துவந்தனர். ஆழ்வார் இங்ஙனம் அவர்களை அகங்களிந்த அன்போடு கொண்டாடிவருகையில், அந்நாடெங்கும் ஸ்ரீவைஷ்ணவர்திரள் மிக்கது.

அரண்மனையினுள்ளும் ஆலோசனைச் சபாமண்டபத்திலும் இன்னும் அந்தரங்கமான இடங்களிலும் பாகவதர்கள் எக்காலத்திலுஞ் சிறிதுந்தடையின்றிப் போக்குவரவுசெய்தலையும் தமது அரசன்பக்கல் இவர்கள் வரம்புகடந்த சுவாதந்திரியம் பாராட்டுதலையுங்கண்டு பொறாமைகொண்ட மந்திரிகள், இவர்களிடத்துக் குலசேகரர்க்கு வெறுப்பையுண்டாக்கக் கருதினர். இவ்வாறிருக்கையில்,அனைவருங்கொண்டாடத்தக்க ஸ்ரீராமநவமிமகோத்ஸவம் வந்தது. அதன்பொருட்டு, தோரணம் நாட்டியும், துவசங்களைக்கட்டியும், வாழைமரங்களை நிறுத்தியும் நகர் முழுவதும் அலங்கரிக்கப்பட்டது. பின்பு திருக்கோயிலில் அர்ச்சகர், இராமமூர்த்திக்கும் மற்றும்விக்கிரகரூபமாயுள்ள எம்பெருமான்கட்கும் திருமஞ்சனஞ்செய்தற்பொருட்டு அவர்களுடைய திவ்யாபரணங்களையெல்லாங் களைந்துவைத்தனர். பின்பு வேதகோஷத்தோடும் வாத்தியகோஷத்தோடும் திருமஞ்சனம் நடந்தேறிற்று. அச்சமயத்தில் யாவரும் சுவாமிசேவையிலே கருத்தூன்றிநிற்கையில், மந்திரிகள், ஒரு நவரத்தினமாலையைத் திருவாபரணத்திரளிலிருந்து எடுத்து ஒளித்துவைத்திட்டனர். பின்பு பெருமாளுக்கு அலங்காரஞ் செய்யும்பொழுது அவ்வணிகலத்தைக் காணாமல் அர்ச்சகர் கவலைப்பட்டு அரசரிடத்து அறிவிக்க, அதுகேட்டு ஆழ்வார் மனங்கலங்கி மந்திரிகளை அழைப்பித்து 'கள்வனை விரைவில் தேடிப்பிடியுங்கள்' என்று கட்டளையிட்டார். அதுவே வியாஜமாக அவர்கள் 'இதுகொண்டுபோனவர் வைணவரேயன்றி வேறு எவருமல்லர்; இவர்களே எப்பொழுதும் இங்கு எங்கும் தட்டின்றித் திரிகின்றவர்; பிறனொருவன் புதியனாகவந்து அஞ்சாதுஇத்தொழில்செய்யான்' என்று பாகவதர்மீது அடாப்பழி சுமத்தினர். நாராசம்புக்கதுபோல அக்கடுஞ்சொல் செவிபுகப்பெற்ற ஆழ்வார் அரிபக்தர்களின் நற்குணநற்செய்கைகளை நன்றாகஅறிந்தவ ராதலால்,அவர்கள்மேற் சற்றும்சங்கைகொள்ளாமல், அவர்களின்மீது குற்றங்கூறின தமதுமந்திரிகளையே கடிந்து 'வைஷ்ணவசிகாமணிகள் ஒருபோதும் இத்தகைய கடுந்தொழிலை நினைத்தலுஞ் செய்யார்; இது திண்ணம்: இதனை உங்கட்குஉறுதிப்படுத்துதற்காக,யானே பிரமாணங்காட்டுவேன்' என்று சொல்லி, பாம்பையுள்ளிட்டதொரு குடத்தைச் சபைமுன்பே தருவித்து, 'ஸ்ரீவைஷ்ணவர் மனம் மொழி மெய் யென்னுந் திரிகரணத்தாலும் சுத்தராயின், இப்பாம்பு என்னை யாதொன்றுஞ் செய்யாது; இல்லையாயின், இந்நாகம் இப்பொழுதே என்னைத் தீண்டிக் கொல்லும்' என்று சபதஞ்செய்து அக்குடத்தினுள்ளே கையிட்டனர். அப்பொழுது, சத்தியத்துக்குக் கட்டுப்படுந் தன்மையதான சர்ப்பம் சிறிது கொடுமையும் புரியாது தணிந்திருந்தது. அதுநோக்கி, அமைச்சர்கள், தமது சூழ்ச்சி கிஞ்சித்தும் பலியாதுவிட்டதே யென்று வருத்தமும்,தேர்ந்தஆராய்ச்சியின்றி இங்ஙனந் தவறுசெய்துவிட்டோமே யென்று கழிவிரக்கமும், இனி நமது கதி என்னாகுமோ வென்று பேரச்சமுங் கொண்டு, நடுநடுங்கி, தாம்கவர்ந்திட்ட அந்த ஆபரணத்தை உடனே கொணர்ந்து சமர்ப்பித்து,

தாம் அறியாதுசெய்த அப்பெரும்பிழையைப் பொறுத்தருளுமாறு பிரார்த்தித்து, ஆழ்வாரது திருவடித்தாமரைகளைச் சரணமடைந்தார்கள். ஆழ்வார் மிக்க பொறுமையுடையவராதலால் அமைச்சர்கள் பிழையைப் பொறுத்து, 'இனி நீவிர் பாகவதர்கட்கு எப்பொழுதும் பணிவிடை செய்வதே, நுமது குற்றம்தீரும் வகை' என்று சொல்லிவிட, அவர்கள் அங்ஙனமே அடியவர்க்குஅடியராய்க் குறிப்பறிந்து குற்றேவல்புரிந்து பேறுபெற்றனர்.

பின்பு குலசேகரர் பொய்ம்மைக்கு இடமான அரசாட்சியில் இருத்தற்கு இஷ்டப்படாமல் தமதுகுமாரனை த்ருடவ்ரதனுக்குப் பட்டாபிஷேகஞ்செய்துவைத்துத் தாம் திருவரங்கம்பெரியகோயிலுக்குச் சென்று நம்பெருமாளைச் சேவித்து, அவ்வழகியமணவாளனையே தனக்குஉரிய மணவாளனாகக் கருதிய தம்திருமகளை அப்பெருமானுக்கே உரியபொருளாகக் கொடுத்து மணஞ்செய்வித்து, பகவத்பாகவதகைங்கரியங்களை விதிமுறை வழுவாது நித்யமுஞ்செய்துகொண்டு அத்திருப்பதியிற்சிலகாலம்இருந்தனர்.

பிறகு மற்றுஞ் சில திவ்யதேசங்கட்கும் யாத்திரைசெய்ய எண்ணி, திருவேங்கடம், திருவயோத்தி, தில்லைத் திருச்சித்திரகூடம், திருக்கண்ணபுரம், திருமாலிருஞ்சோலை, திருவித்துவக்கோடு முதலிய திருப்பதிகட்குச் சென்று ஆங்காங்கு எழுந்தருளியிருக்கின்ற பெருமாளைக் கண்ணாரக்கண்டு சேவித்து, அப்பால், நம்மாழ்வாரது திருவவதாரஸ்தலமான திருக்குருகூர்க்கு அருகிலுள்ள பிரமதேசமென்னும் ஊரை யடைந்து, அங்கு ஸ்ரீராஜகோபாலஸ்வாமிஸந்நிதியிற் சிலகாலம் திருத்தொண்டு செய்துகொண்டிருந்து, தமது அறுபத்தேழாவது பிராயத்திற் பரமபதமடைந்தனர்.

இவர் எம்பெருமானை அனுபவிக்கும்போது அவ்வநுபவத்தாலாகிய ஆனந்தம் உள்ளடங்காமையால் அதனை வெளியே வழியவிடுவாராகி அருளிச்செய்த திவ்யப்பிரபந்தங்கள் - முகுந்தமாலை யென்னும் வடநூலும், பெருமாள்திருமொழியென்னுந் தமிழ்நூலுமாம். இவற்றால் இவர் வடமொழி தென்மொழி யிரண்டிலும் வல்லவரென விளங்கும்.

“அரசமர்ந்தானடிசூடு மரசையல்லா லரசாக வெண்ணேன் மற்றரசு தானே” என்று கோவிந்தபாதாரவிந்தத்தைச் சிரமேற்கொள்ளுதலையே கிரீடாபிஷேகமாகப் பாவிக்கின்ற இவர், பெருமாளுடைய [இராமபிரானுடைய] இன்பதுன்பங்களைத் தமது சுகதுக்கங்களாகக் கருதியதனால், இவர்க்கு 'பெருமாள்' என்றும் ஒரு பெயர் வழங்கும்.

இவ்வாழ்வார் “செடியாய வல்வினைகள் தீர்க்குந் திருமாலே, நெடியானே வேங்கடவா நின்கோயிலின்வாயில், அடியாரும் வானவரும் அரம்பையரும் கிடந்தியங்கும், படியாய்க்கிடந்து உன்பவளவாய் காண்பேனே” என்று வேண்டியமைபற்றி, விஷ்ணுவாலயங்களிற் கோயிலினுள்வாயிற்படி 'குலசேகரன்படி' என்று இவர்பெயரையிட்டு வழங்கப்படும்.

“ இன்னமுத மூட்டுகேன் இங்கேவா பைங்கிளியே
தென்னரங்கம் பாடவல்ல சீர்ப்பெருமாள்—பொன்னஞ்
சிலைசேர் நுதலியர்வேள் சேரலர்கோ னெங்கள்
குலசேக ரனென்றே கூறு.”

“ ஆரங்கெடப் பரனன்பர் கொள்ளாரென் றவர்களுக்கே
வாரங்கொடு குடப்பாம்பிற் கையிட்டவன் மாற்றலரை
வீரங்கெடுத்த செங்கோற் கொல்லிகாவலன் வில்லவர்கோன்
சேரன் குலசேகரன் முடிவேந்தர் சிகாமணியே.”



ஸ்ரீ

# முதலாயிரம்.

ஸ்ரீவைஷ்ணவ சம்பிரதாயத்தில் ஆழ்வார்கள் பன்னிருவராலும் அருளிச்செய்யப்பட்டு நாதமுனிகளென்னும் பூர்வாசாரியரால் வகுக்கப்பட்டதான தமிழ்வேதமாகிய நாலாயிரதிவ்வியப்பிரபந்தத்துள் முதலாவது; இது, திருப்பல்லாண்டு முதல் கண்ணிநுண்சிறுத்தாம்பு ஈறாகப் பத்துப்பிரபந்தங்களை யுடையது; அவற்றுள்

ஐந்தாவது,

## பெருமாள் திருமொழி.

குலசேகரப்பெருமாளுடைய சிறந்த வார்த்தை யென்பது, இதன்பொருள்; பெருமா ளென்னும் மறுபெயரையுடைய குலசேகராழ்வார் திருவாய்மலர்ந்தருளிய பிரபந்த மென்பது, கருத்து. குலசேகராழ்வார்க்கு 'பெருமாள்' என்ற திருமாலின்பெயர் வழங்கிய காரணம், சரித்திரத்தில் விளக்கப்பட்டது. திரு மொழி என்பது - மேன்மையான சொற்களினு லாகிய நூலைக் குறித்தலால், அடையடுத்த கருவியாகுபெயராம். பெருமாள் திருமொழி யென்ற தொடர்-ஆறாம்வேற்றுமைத்தொகையும், திருமொழியென்பது - பண்புத்தொகையுமாம். 'பெரியாழ்வார்திருமொழி' 'நாச்சியார்திருமொழி' என்ற இடங்களிற் போல, 'பெருமாள் திருமொழி' என்ற பெயரிலும், தொக்குநின்ற ஆறாம்வேற்றுமை யுருபு - செய்யுட்கிழமைப்பொருளதென அறிக. திருமொழியென்பதை, மேன்மையுடையசொல் என இரண்டாம்வேற்றுமையுருபும்பயனுந் தொக்கதொகையாகவுங் கொள்ளலாம்.

பெருமாள் =பெருமான்; பெருமையுடையவன் : இதில், பெருமை யென்ற பகுதி, ஈற்று ஐகாரம்மாத்திரம் கெட்டு, பெரும் என நின்றது; 'ஆன்' என்ற ஆண்பால் விகுதி, 'ஆள்' என்று ஈறு திரிந்தது; 'ஆள்' என்ற பெண்பால்விகுதியே சிறுபான்மை ஆண்பாலுக்கு வந்ததென்றலும் ஒன்று. † அன்றி, பெருமையை ஆள்பவனெனக் கொண்டால், ஆள் என்ற வினைப்பகுதி கருத்தாப்பொருள்விகுதி புணர்ந்துகெட்ட தெனவேண்டும். திரு - உயர்வை விளக்கும் அடைமொழி.

இனி, பெருமாள் திருமொழி யென்பதற்கு - திருமாலின் விஷயமான திவ்வியப்பிரபந்த மென்றும் பொருள்கொள்ளலா மாயினும், அது சம்பிரதாயமன்று; அன்றியும், அங்ஙனம் பொருள் கொள்ளுமிடத்து, இத்தொடர்மொழி, வைஷ்ணவதிவ்வியப்பிரபந்தங்கட்கெல்லாம் பெயராகத் தக்கதாய் இந்த ஒரு பிரபந்தத்திற்குக் காரணப்பெயராதற்கு ஏலாதாம்.

இப்பிரபந்தம், பத்துப்பதிகங்களாக அமைந்த ௧௦௫ - செய்யுளுள்ளது. ஸ்ரீராமாயணஸார மெனப்படும்.

இதற்குப் பெரியவாச்சான்பிள்ளையென்ற பூர்வாசாரியர் மணிப்ரவாளநடையிற் சிறந்த வ்யாக்யாநஞ் செய்துள்ளார்; இவர், நாலாயிரத்துக்கும் வ்யாக்யாநம் அருளியவர். ‡

---

* முதலது - முதலாயிரம்; இரண்டாம் ஆயிரம் - பெரியதிருமொழி; மூன்றாம் ஆயிரம் - இயற்பா; நான்காம் ஆயிரம் - திருவாய்மொழி.

† சீவகசிந்தாமணியுரையில், நச்சினார்க்கினியர், "பெருமான்" என்பதற்குப் பெண்பாலாகப் பொருளுரைத்தவிடத்து 'பெருமான்-னஃகானொற்று மகடூஉ உணர்த்திற்று' என்றது கொண்டு, பெருமாளென்பதில் ளஃகானொற்று ஆடூஉ உணர்த்துதல் அறிக.

‡ அந்த வியாக்கியானத்தைத் தழுவி வேறுவிஷயங்களையுஞ் சேர்த்து, இவ்வுரை எழுதப்பட்டது.

## ஐந்தாந்திருமொழி.

# வித்துவக்கோட்டம்மான் விஷயம்.

வித்துவக்கோடு அம்மான் என்றுபிரிந்து, திருவித்துவக்கோடு என்றதிருப்பதியில் எழுந்தருளியிருக்கிற எம்பெருமானென்று பொருள்படும்; ஏழாம் வேற்றுமையுருபும்பயனுந்தொக்கதொகை. வேற்றுமைப்புணர்ச்சியில் நிலைமொழிக்குற்றியலுகரத்தின் டகரவொற்று இரட்டிற்று; [நன்-உயிர்-௩௬.] அம்மான் = அந்த மஹாந். இத்தலத்து எம்பெருமான்விஷயமாகப் பாடிய இத்திருப்பதிகம், பெருமாள்திருமொழியின் ஐந்தாவது பதிகமாம். ஆகவே, நான்காம்திருமொழி என்று மூலபுத்தகத்திற்பதிப்பித்திருப்பதை ஐந்தாந்திருமொழியென்று திருத்திக்கொள்க.

செய்யுளை 'பாசுரம்' என்றும், பத்து அல்லது பதினொரு செய்யுள் கொண்டதாகிய தசகமென்னும்பதிகத்தை 'திருமொழி' என்றும், பத்துப் பதிகங்கள் சேர்ந்த நூறுபாடலாகிய சதகத்தை 'பத்து' என்றுங் கூறுவது, வைஷ்ணவசம்பிரதாயம். தற்சிறப்புப்பாயிரமாகிய ஈற்றுச்செய்யுள் உட்படப் பத்துச்செய்யுள் கொண்டது இப்பதிகம் என்று அறிக.

திருமகள்கணவனும் ஜ்ஞாநாநந்த ஸ்வரூபியும் ஸகலகுணபரிபூர்ணனும் பரமபதத்துக்கும் மற்றையபிரபஞ்சத்துக்குந் தலைவனும் எல்லாவற்றினும் மேம்பட்ட முழுமுதற்கடவுளுமாகிய திருமால் இயல்பிலே தனக்கு அடிமையான உயிர்களையெல்லாம் ஆட்கொண்டுஉய்வித்தற்பொருட்டுப் பெருங்கருணையினால் (பயிர்செய்பவன் பயிர்த்தலையிலே குடிசையமைத்துக்கொண்டு அதில் இருந்து அப்பயிரைப் பாதுகாப்பதுபோல) இந்நிலவுலகத்தில் அடியவர்க்கெளியனாய்த் திருக்கோயில்கொண்டு எழுந்தருளி யிருக்கின்ற திவ்வியதேசங்கள் நூற்றெட்டினுள் முதலதும் தலைமைபெற்றதுமான திருவரங்கம்பெரியகோயிலில் எழுந்தருளியிருக்கின்ற அடியவர்க்குஎளியனான நம்பெருமாள் விஷயமாக முதல் மூன்று பதிகங்களை விண்ணப்பஞ்செய்து 'கோயில் திருமலை பெருமாள்கோயில்' என்று அத்தலத்தையடுத்துக்கூறப்படுவதும் வடநாட்டுத்திருப்பதிகள் பன்னிரண்டனுள் முதலதுமான திருவேங்கடத்து எம்பெருமான்விஷயமாக நான்காம்பதிகத்தை விண்ணப்பஞ்செய்து, மலைநாட்டுத்திருப்பதிகள் பதின்மூன்றில் திருவித்துவக்கோடு என்ற தலத்தில் எழுந்தருளியிருக்கிற அவ்வெம்பெருமான்விஷயமாகச் செய்தது, இத்திருப்பதிகம். செல்வச்செருக்காலும் அதிகாரத்தாலும் அகங்காரமமகாரங்களை அடைதற்கு உரிய இராசகுலத்திலே பிறந்திருந்தும் பகவானுடைய கருணையினாலும் ஆசாரியனது உபதேசத்தாலும் அந்தத்துரபிமானங்கள் சிறிதும் இல்லாது ஒழியப் பகவானிடத்திற் பக்தியையும் அப்பெருமானது அடியார்களிடத்தில் பிரதிபத்தியையுமே மிகுதியாகப்பெற்றவராகிய குலசேகராழ்வார், ஜீவாத்மா பரமாத்மாவுக்குச் சகலவிதத்திலும் அடிமைப்பட்டதென்பதையும், அவ்வுயிரை வாழ்வித்தற்கு எவ்வாற்றாலுங்கடமைப்பட்டவன் அக்கடவுளே யென்பதையும் ஐயந்திரிபற அறிந்தவராகையாலே, அந்த ஸ்ரீமந்நாராயணனை யன்றித் தமக்கு வேறுகதியில்லாமையை, அநேக திருஷ்டாந்தபூர்வகமாக அவ்வெம்பெருமான்முன்னிலையிலே இப்பதிகமூலமாக விண்ணப்பஞ்செய்கின்றார்.

திருவித்துவக்கோட்டில் எழுந்தருளியுள்ள எம்பெருமானது திருநாமம்- உய்யவந்தபெருமாள், அம்பரீஷவரதர்.

நாச்சியார் திருநாமம் - வித்துவக்கோட்டுவல்லி.

அம்பரீஷமகாராஜனுக்குப் பிரத்யக்ஷம்.

1.—(இ - ள்.) விரை குழுவு - நறுமணம் மிக்க, மலர்-பூக்களையுடைய, பொழில் - சோலைகள், சூழ் - சூழ்ந்த, வித்துவக்கோடு-திருவித்துவக்கோட்டில் எழுந்தருளியிருக்கிற, அம்மானே - (எல்லாவற்றுக்குந்) தலைவனே!— தரு துயரம்-(நீயே எனக்குத்)தந்த இந்தப் பிறவித்துன்பத்தை, தடாயேல்-(நீயே)மாற்றாயானாலும், உன் சரண் அல்லால் சரண் இல்லை - உனது திருவடிகளேயன்றி (எனக்கு)வேறு புகலிடம் இல்லை; ஈன்ற தாய்-பெற்ற தாய், அரி சினத்தால் - மிக்ககோபங்கொண்டு அதனால், அகற்றிடினும் - (தனது குழந்தையைவெறுத்துத்) தள்ளினாலும், மற்று-பின்பும், அவள்தன் அருள் நினைந்து அழும்-அத்தாயினுடைய கருணையையே கருதி அழுகின்ற, குழவியதுவே-இளங்குழந்தையையே,போன்று இருந்தேன்-ஒத்துள்ளேன்,(யான்)

தாய்எவ்வளவுகோபங்கொண்டு கடிந்தாலும்,அத்தாயையொழிய வேறு கதி குழந்தைக்கு இல்லாதவாறுபோல,நீ என்னிடம்கருணைகொண்டுஅருள் செய்யாயாயினும் எனக்குஉன்னையொழிய வேறுகதியில்லையென்பதாம்.உவமையணி.அகற்றிடினும் என்ற உம்மையால், குழந்தையைக்கடிந்து அகற்றுதல் பெற்றதாய்க்கு இயல்பன்றென்பது விளங்கும்; அங்ஙனம்உபமேயத்திலும், எனது துன்பத்தை நீ நீக்காதிராய் என்பது வெளியாம். உபமானத்துக்கு ஏற்ப உபமேயத்தில் 'தடாயேலும்' என உம்மை விரித்து உரைக்க: அது செய்யுள்விகாரத்தால் தொக்கதென்க. குழந்தையை அணைக்கவும் அடிக்கவும் தாய்க்கு உரிமையிருத்தல்போல, என்னைக் காத்தற்கும் கடிதற்கும் உனக்கு உரிமையுண்டு என்பார், அதனை உவமைகூறினார்.

'யான்செய்த கருமத்தாலே எனக்குத் துன்பம் நேர்ந்தது'என்று தாம் சொன்னால்,'தானே கர்மம் பண்ணினவன்,தானே தக்கமுயற்சிசெய்து தவிர்த்துக்கொள்ளுகிறான்' என்று தம்மை எம்பெருமான் பழியிட்டுத் தள்ளிவிடுவனோ என்ற சங்கையால், அங்ஙனங்கூறாது, 'நீவிளைத்ததுக்கத்தை நீயே போக்கக்கடவை' என்றார். 'தான்செய்த கருமத்தின் பயனாகவே தனக்குத் தீங்கு நேர்கின்றது' என்று சாஸ்திரங்களிற் சொல்லியிருக்க, 'தருதுயரம்'என்று இவர் எம்பெருமானே தமக்குத் துன்பந்தந்ததாகச் சொல்லுகிறது என்னென்னில்,—சாஸ்திரசித்தாந்தத்தின் சாரமறிந்தவராதலால், தாமும் தாம்செய்த கருமமும் அதன்பலனும் முதலிய யாவும் எம்பெருமானுக்குப் பரதந்திரமானவை யென்ற கருத்தால் அங்ஙனங்கூறினாரென்க. 'நம்முடையமாயை ஒருவராற் கடக்க வொண்ணாதுகாண்' என்றும், 'இது கடக்கவேண்டியவன் நம்மையே பற்றிக் கழித்துக்கொள்வான்' என்றும் எம்பெருமான் தானே கூறியுள்ளதனால், இங்ஙனங்கூறுதலே தகுதியாம். கடவுளின் மாயையாலாகிய கட்டை மற்றொருவரால் விடுவிக்கமுடியாதாதலால், 'தருதுயரந்தடாயேல் உன்சரணல்லால் சரணில்லை' என்றார். இவ்வளவு அறிவை நீஎனக்குஉண்டாக்கியபின்பு நானும் எனக்குரக்ஷகனல்லேன்; பிறர்ரக்ஷகரானாலும் அவர்களை நான் ரக்ஷகராகக்கொள்ளேன்; ஸாதநாந்தரங்களும் எனக்கு ரக்ஷகமல்ல ; உன் திருவடிகள்தாம் கதி என்பார், 'உன்சரணல்லால் சரணில்லை' என்கிறார்: "களைவாய்துன்பங் களையாதொழிவாய் களைகண்மற்றிலேன்" என்றார் நம்மாழ்வாரும். அடியவன் தலைவனது தாளைப்பற்றியே காரியத்தைக்கொள்ளவேண்டியிருத்தலால், அதனையே கூறினார். சரண் - திருவடி, புகலிடம். இது - முதற்பொருளில் சரணமென்ற வடசொல்லின் விகாரமும், இரண்டாம்பொருளில் ஶரணமென்ற வடசொல்லின் விகாரமுமாம்.

விரைகுழுவுமலர்ப்பொழில்சூழ் வித்துவக்கோடு-அனைத்துலகத்தையும் தனதுஉடைமையாகவுடைய எம்பெருமான் திருவுள்ளமுவந்துநித்யவாஸஞ் செய்தற்கேற்ற வளப்பமுடைய இடம் என்றபடி; அன்றி, எம்பெருமான் எழுந்தருளியுள்ள இடமென்று தன்வளப்பத்தால்தோற்றும் என்றபடியுமாம்.

இட்டுதற்குஅரிய பரமபதத்திற்போலவன்றி அனைவரும் எளிதில்வந்து அடையும்படி இங்கு எழுந்தருளியுள்ளவ னென்பதும், குழந்தையைப்பாதுகாக்குந் தாய் குழந்தை படுக்குந் தொட்டிலின்கீழே தானும் படுத்துக்கொள்ளுதல்போல இவ்வுலகத்து உயிர்களை உய்வித்தற்காக இங்கே வந்து தங்கியுள்ளவ னென்பதும் தோன்ற, 'வித்துவக்கோட்டம்மானே' என்று விளித்தார். வித்துவக்கோடு என்பதற்கு - வித்துவான்கள் கூடியஇடமென்று காரணப்பொரு ளுரைப்பர்; 'விற்றுவக்கோடு' என்று வழங்குதலும் உண்டு.

'ஈன்றதாய்'என்கையாலே, பெறுகைக்கு நோன்புநோற்கையும், பத்து மாசம் சுமக்கையும்,பிரசவவேதனைப்படுகையும் என்ற இவையெல்லாம் உடையவளென்கை; இதனால் அகற்றமாட்டாமைக்குக் காரணங்காட்டியவாறு. அரிசினம் - அரிந்துபோடக்கருதுங் கோபம்; வினைத்தொகை. மற்று - அசையும், வினைமாற்றுமாம்; பின்பு எனினுமாம். அகற்றிடினும், உம் - இழிவுசிறப்போடு ஒருசார் எதிர்மறைப்பொருளு முடையது. இடு - துணிவை விளக்கும். குழ - இளமை (உரிச்சொல்); அதனையுடையது, குழவி; இ - பெயர் விகுதி: 'அது' - பகுதிப்பொருள் விகுதி. தடாய் - முன்னிலையொருமையெதிர்மறைமுற்று; தடு - பகுதி. நான்காம் அடியில் உள்ள ஏகாரம் மூன்றனுள், பின்னது - ஈற்றசை; தேற்றமுமாம்: மற்றவை - பிரிநிலை. (க)

2.—(இ - ள்.) விண் தோய் மதிள் புடை சூழ் வித்துவக்கோடு அம்மா - ஆகாயத்தை யளாவிய மதில்கள் எப்புறத்துஞ் சூழப்பெற்ற திருவித்துவக்கோட்டில் எழுந்தருளிய சுவாமீ!—கண்டார் இகழ்வனவே - பார்த்தவர்கள் எல்லாரும் இகழத்தக்க செயல்களையே, காதலன் தான் செய்திடினும் - தனது அன்புக்கு உரியனான கணவன் செய்தாலும், கொண்டானை அல்லால் அறியா - (தன்னை மணஞ்செய்து) உரிமைகொண்டவனான அக்கணவனையேயன்றி வேறொரு புருஷனை நினைத்தும்அறியாத, குலம் மகள் போல் - உயர்ந்தகுலத்துப்பிறந்த கற்புடையமகள்போல,— நீ கொண்டு ஆளாய் ஆகிலும் -(என்னை அடிமைகொண்டவனான) நீ குறையுந் தலைக்கட்டாமல் உபேக்ஷித்தாயானாலும், உன் குரை கழலே கூறுவன் - ஒலிக்கின்ற வீரக்கழலையுடைய உனது திருவடிகளையே துதிப்பேன், (யான்); (எ - று.)

தனது ஸ்வரூபத்துக்கு ஒவ்வாமையாலே உபேக்ஷித்தாலும் எதிரில் உபேக்ஷியாமலும் வேறுகதியை நாடாமலும், முன்புள்ள அவனது சம்பந்தத்தையே நினைத்து மற்றும் அவனால் உதவியைப்பெற நாடி அவன்காலிலேயே விழுந்துகிடக்குந் தன்மை, உவமையால் விளங்கும். தாம் சிறந்தபிரபந்நகுலத்திலே தோன்றி மறந்தும்புறந்தொழாதவ ராதலால், கொண்டானையல்லாலறியாக்குலமகளைத் தமக்கு உவமைகூறிக்கொண்டார். விண் தோய்மதிள் - மதிலின் மிக்க உயர்ச்சியை விளக்கும் அதிசயோக்தி. ஏ - பிரிநிலை. உம் - இழிவுசிறப்பு. மதிள் - மதில் என்பதன் இறுதிப்போலி. அம்மா - அம்மான் என்பது ஈறுகெட்டு விளியாயிற்று. மற்றும் பலசெய்யுள்களிலும் இதுகொள்க. 'அம்மான்' என்ற பாடத்துக்கு, இயல்பாகிய அண்மைவிளியென்க. குரை கழல் - வினைத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. (உ)

3.—(இ - ள்.) மீன் நோக்கும் - மீன்களெல்லாம (தாம்வசித்தற்கு மிகவுந்தகுதியான இடமென்ற ஆசையோடு) பார்க்கின்ற [நீர்வளம்மிக்க என்றபடி], நீள் வயல் - நீண்ட கழனிகள், சூழ் - சூழ்ந்த, வித்துவக்கோடு - திருவித்துவக்கோட்டில் எழுந்தருளிய, அம்மா-பெருமானே!—என்பால் நோக்காய் ஆகிலும் - (நீ) என்பக்கல் அருள்நோக்கம் செய்யாதிருந்தாலும், உன் பற்று அல்லால் பற்றிலேன் - (என்னைக்காக்கக் கடமையுடையனான) உன்னைச் சரணமாகப்பற்றுதலை விட்டு வேறொருவரைச் சரணம்புகமாட்டேன்; தார் வேந்தன் - (குடிகளைக்காத்தற்கென்று) மாலையணிந்துள்ள அர

சன், தான் நோக்காது-(அதற்கேற்றபடி) தான் கவனித்துப்பாதுகாவாமல், எத்துயரம் செய்திடினும் - எவ்வகைப்பட்ட துன்பங்களைச் செய்தாலும், கோல் நோக்கி வாழும் - (அவனுடைய) ஆளுகைமுறைமையையே எதிர்பார்த்துவாழ்கின்ற, குடி-சனங்களை, போன்று இருந்தேன்-ஒத்திருந்தேன், (யான்); (எ - று.)

வல்லவனான தலைவன் தன் கடமையைச் செய்யாதபொழுது அடிமைகள் செய்யலாவது ஒன்றுமில்லை யென்பதை உவமை விளக்கும். உபமானத்தில் 'நோக்காது எத்துயரம் செய்திடினும்' என்றதற்கு ஏற்ப, உபமேயத்தில், கடாக்ஷியாமையையே துயரஞ்செய்தலாகக் குறித்தன ரென்க. "வான்நோக்கி வாழும் உலகெல்லாம் மன்னவன், கோல்நோக்கி வாழுங் குடி" என்ற திருக்குறளும், அதன் பரிமேலழகருரையில் 'நோக்கிவாழ்தல்-இன்றியமையாமை. வானின் ஆய உணவை வானென்றும், கோலின் ஆய ஏமத்தை [பாதுகாப்பை]க் கோலென்றுங் கூறினார். அவ்வேமம் இல்வழி உணவு உளதாயினுங் குடிகட்கு அதனாற் பயனில்லை யென்பதாம்' என்றதும், "கோல்நோக்கி வாழுங் குடியெல்லாம் தாய்முலையின், பால்நோக்கி வாழுங் குழவிகள்—வானத், துளிநோக்கி வாழு முலகம்" என்ற நான்மணிக்கடிகையும் இங்கு நோக்கத்தக்கன. மீன்நோக்கும் நீள்வயல் சூழ் வித்துவக்கோடு - 'கடலில் மத்ஸ்யம், கடல்வற்றினால் நமக்குப்புகலிடமென்று நினைத்திருக்குந் தேசமாய்த்து' என்ற வியாக்கியானவாக்கியம் உணரத்தக்கது; இந்த அடைமொழி கொடுத்ததன் குறிப்பால், பரமபதத்திலுள்ளாரும் அதனை விட்டு வந்துசேரக் கருதுந் திவ்விய தேச மென்ற சிறப்பு விளங்குமென்று கொள்வது, சம்பிரதாயம். உன்பற்றல்லால் பற்றிலேன் - என்னுடைய ஸம்ரக்ஷணையில் உத்யுக்தனான உன்னைவிட்டுப் பாதகராக ஸம்ப்ரதிபந்நரானாரைப் பற்றவோ? நித்யஸம்ஸாரியாய் இவ்வளவாகச் சூழ்த்துக்கொண்ட என்னைப் பற்றவோ? என்னுடைய ரக்ஷணத்தில் என்னோபாதியும் ப்ராப்தியில்லாத பிறரைப் பற்றவோ? என்பதால், பால் - ஏழனுருபு. பற்றிலேன் -தன்மையொருமை யெதிர்மறைமுற்று; பற்று இலேன் என்று பிரித்தும் பொருள் கொள்ளலாம்.

'வேந்தன்' என ஒருமையான பாடமே, பழைய வியாக்கியானத்துக்கு ஒத்தது; திருக்குறளிலும் "மன்னவன் கோல்நோக்கி வாழுங் குடி" என ஒருமையாகவே வந்துள்ளது: 'தான்நோக்காது' என்ற விடத்திலுள்ள 'தான்' என்ற ஒருமைக்கும் அதுவே ஏற்றதாம். 'வேந்தர்' என்ற பாடத்துக்கு, அதனோடு 'தான்' என்றது-ஒருமைப்பன்மைமயக்கமெனவேண்டும்; [நன்-பொது - உக.] (ங)

4.—(இ - ள்.) வித்துவக்கோடு அம்மா - திருவித்துவக்கோட்டெம்பெருமானே!—வாளால் அறுத்து சுடினும் - (வைத்தியன்) கத்தியைக்கொண்டு அறுத்தலும் (ஊசியைக் காய்ச்சிச்) சூடுபோடுதலும் செய்தாலும், மருத்துவன்பால் மாளாத காதல் - அவ்வைத்தியனிடத்து நீங்காத அன்பையே செய்கின்ற, நோயாளன் போல்-நோயுடையான்போல,—நீ மாயத்தால் மீளா துயர் தரினும்-(என்னைப்பாதுகாத்தற்குஉரிய) நீ உன்மாயையினால் (ஒருகாலும்)நீங்காத துன்பத்தை(எனக்கு)விளைத்தாலும், அடியேன்-உனது அடியவனான நான், ஆள் ஆ(க)-அவ்வடிமை சித்திக்கைக்காக, உனது அருளே பார்ப்பன்-உன்னுடைய கிருபையையே நோக்கியிருப்பேன்; (எ-று.)

நீ எனக்குத் துன்பம்விளைத்தாலும் அதனையும் எனது நன்மையின் பொருட்டுச் செய்ததாகவே கருதி நான் உன்பக்கல் மேன்மேல் அன்பு செய்துவருவேனேயன்றி உன்னைச் சிறிதும் குறைகூறேன் என்பதனை உவமையால் விளக்கினார். ஸம்ஸாரதுக்கமாகிய வியாதியைப் பரிகரித்தற்கு ஏற்ற வைத்தியன் நாராயணனென்ற நூற்கொள்கைக்கு ஏற்ப, அவனுக்கு,

வைத்தியனை உவமைகூறினார். அறுத்தலும் சுடுதலும் நோய்தீர்க்கும் உபாயமாதல்போல, துயரமனுபவிப்பித்தலும் கருமத்தைப்போக்கும் உபாயமாம்.

மாயா என்ற வடசொல், மாயமெனத் திரிந்தது; மாயையாவது - ப்ரக்ருதிஸம்பந்தம். அது அவனுக்கு ஸ்வாதீநமாதலால், 'மாயத்தால் மீளாத் துயர்தரிலும்' என்றார். நோய் - தொழிற்பெயர்; ய்-விகுதி. மருத்துவன் - மருந்துதருபவன்; காரணக்குறி. 'ஆளா' என்ற பாடமே பழையவியாக்கியானத்துக்கு ஏற்றது; 'ஸ்வரூபாநுரூபமான வ்ருத்தியைப் பெறுகைக்காக' என்ற வியாக்கியானத்தைக் காண்க. இனி, 'ஆளாய்' என்ற பாடத்திற்கு, 'ஆய்' என்பதை 'ஆக' என எச்சத்திரிபாக்கி, இப்பொருள் கொள்ளக் கூடும்; அன்றி, ஆள் ஆய் -(உனக்கே நான்) தொண்டுபூண்டு, உனது அருளே பார்ப்பன் என்றலும் ஒன்று. ஆளாய் - (நீ என்னை) ஆட்கொண்டு காத்தருள்வாய் என்றுமாம். (௪)

5.—'எங்குப்போயுய்கேன்' என்று திருத்துக. 'எங்கும்போயுய்கேன்' என்றது, இங்குக்கூறுகின்றநீதிக்கு விபரீதப்படுதலால், உபேக்ஷிக்கத்தக்கது.

(இ - ள்.) வெம் கண் - பயங்கரமான கண்களையுடைய, திண் - வலிய, களிறு - (குவலயாபீட மென்கிற) யானையை, அடர்த்தாய் - கொன்றவனே! வித்துவக்கோடு அம்மானே—!—உன் இணை அடியே அடையல் அல்லால்- உனது உபயதிருவடிகளையே (நான்) சரணமடைவதல்லாமல், எங்கு போய் உய்கேன் - வேறு யாரிடத்துச் சென்று உய்வுபெறுவேன்? எறி கடல்வாய்- அலையெறிகின்ற கடலி னிடையிலே, எங்கும் போய் கரை காணாது-நான்கு திக்கிலும் போய்ப்பார்த்து எங்கும் கரையைக்காணாமல், மீண்டு - திரும்பி வந்து, ஏயும் வங்கத்தின் கூம்பு ஏறும் - (தான் முன்பு) பொருந்திய மரக்கலத்தின் பாய்மரத்தின்மீது சேர்கின்ற, மா பறவை போன்றேன் - பெரிய பறவையை ஒத்துள்ளேன், (யான்); (எ - று.)

கடலின்நடுவிலே செல்வதொரு மரக்கலத்தின் பாய்மரத்துஉச்சியிலே தங்கிய பறவை அதனைவிட்டுவேறொருபோக்கிடந்தேடித் தனதுபெரியஉடலின் வலிமையைக்கொண்டு நாலுபக்கத்திலும் விரைவாகப் பறந்துசென்று பார்த்தாலும் எங்கும் கரைகாணக்கிடையாமையாலே அம்மரக்கலத்தின் பாய்மரத்து உச்சியிலேயே கால்பாவிநிற்பதுபோல, உன்னைவிட்டுச் சென்றாலும் புகலிடம் வேறுஇல்லாமையாலே மீண்டும் உன்னையே அடைதற்கு உரியேன் யான் என்பதாம். அளத்தற்குஅரிய மிக்கபரப்பையுடையதாய் அலையெறிந்துகொண்டு அச்சந்தருகிற கடல் - வரம்பில்லாத பயங்கரமான பிறவித்துன்பத்துக்கும், அக்கடலைக்கடத்தற்குஉரிய கருவியாகிய மரக்கலம்-பிறவிப்பெருங்கடலைக் கடத்துங் கருவியாகிய எம்பெருமானுக்கும், அம்மரக்கலத்திற்பற்றுதற்குஉரிய இடமாகிய பாய்மரம் - பற்றுதற்கு உரிய அவனது திருவடிக்கும், அப்பாய்மரத்தையன்றி வேறுபற்றுக்கோட்டைப் பெறாத பறவை-அத்திருவடியையேயன்றி வேறுதஞ்சத்தைப்பெறாத ஆழ்வார்க்கும் உவமை யெனக் காண்க. 'எங்குப்போயுய்கேன்' என்றது, உய்யும்படி போமிடம்இல்லை, எங்குப்போனாலும் அழிவேநேரும் என்றவாறு; தேவாதிதேவனை விட்டு க்ஷுத்ரதேவதைகளைப் பற்றுகை அழிவுக்கே ஹேதுவாம்.

பிரபலமான பகையையும் எளிதில்அழிக்கவல்லா யென்பார், 'வெங்கட் டிண்களிறடர்த்தாய்' என்றார். களிறடர்த்த கதை:—வில்விழாவென்கிற வ்யாஜம் வைத்துக் கம்சனால் வரவழைக்கப்பட்டு ஸ்ரீக்ருஷ்ணபலராமர்கள் கம்ஸனரண்மனையை நோக்கிச் செல்லுகையில், அவனது அரண்மனைவாயில் வழியில் தம்மைக்கொல்லும்படி அவனால் ஏவி நிறுத்தப்பட்ட குவலயாபீட மென்னும் மதயானை தம்மைக்கொல்லும்பொருட்டுக் கோபித்துவர, அந்த யாதவவீரர் அதனை எதிர்த்து அதன்தந்தங்களிரண்டையும் சேற்றிலிருந்து கொடியையெடுப்பதுபோல எளிதிற்பறித்து அவற்றையே ஆயுதமாகக்கொ

ண்டு அடித்து அந்தயானையையுயிர்தொலைத்துஉள்ளேபோயினர்என்பதாம். துஷ்டநிக்கிரகசிஷ்டபரிபாலநஞ் செய்தற்பொருட்டு விபவாவதாரஞ் செய்தாற்போலவே,அர்ச்சாவதாரமும் செய்தருளியவனே யென்பார், 'வெங்கட்டிண்களிறடர்த்தாய் வித்துவக்கோட்டம்மானே' என்றார். விபவாவதாரத்துக்கு ஒருமுடிவுஉண்டு; ஆதலின், அது அக்காலத்தார்க்குமாத்திரமே உபயோகப்படும்: அர்ச்சாவதாரத்துக்கோ முடிவில்லை யாதலால், அது எக்காலத்தார்க்கும் உபயோகமாமென்ற சிறப்பை விளக்கும்பொருட்டு, 'களிறடர்த்தாய்' என்றதன்பின் 'வித்துவக்கோட்டம்மானே' என்றன ரென்க.

களிறு-மதக்களிப்புடையது; று-பெயர்விகுதி. இது-ஆண்மைப்பெயர்; இதன் பெண்பெயர் - பிடி. உய்கேன்,ககரவிடைநிலை-எதிர்காலங்காட்டும். 'அடையில்' என்ற பாடத்துக்கு - அடைந்தாலென்று பொருள். பறப்பது, பறவை;(பரவை-கடல்:பரவியது,இரண்டிலும்,)ஐ-கருத்தாப்பொருள்விகுதி.

6.—'வந்தழலைச்செய்திடினும்' என்று திருத்துக. 'வெந்தழலைச்செய்திடினும்' என்பது, ஒருவாறுபொருள்படுமாயினும், 'தாஹகமான அக்நிகிட்டி உஷ்ணத்தைப்பண்ணினாலும்' என்ற வ்யாக்யாநத்துக்குப் பொருந்தாது.

(இ - ள்.) வித்துவக்கோடு அம்மா—!—செம் தழலே வந்து- செந்நிறமுடைய நெருப்பு (தானாக) அருகில்வந்து, அழலை செய்திடினும்-வெப்பத்தைச் செய்தாலும், செம் கமலம் - செந்நிறமுடைய தாமரைகள், அந்தரம் சேர் வெம் கதிரோற்கு அல்லால் - வானத்தில்தோன்றுகின்ற வெவ்வியகிரணங்களையுடைய சூரியனுக்கு மலருமே யல்லது, அலரா - (நெருப்புக்கு) மலரமாட்டா; வெம் துயர் வீட்டா விடிலும் - (அனுபவித்தே தீரவேண்டியவையான) கொடிய என்பாவங்களை நீ போக்காதுவிட்டாலும், உன் அந்தம் இல் சீர்க்கு அல்லால் - உனது எல்லையில்லாத உத்தமகுணங்களுக்கே யல்லாமல், அகம் குழைய மாட்டேன் - (வேறொன்றுக்கு நான்) நெஞ்சு உருகேன் ; (எ - று.)—ஆல் - ஈற்றசை, ஏ - தேற்றம்.

தாமரையை மலர்த்தும் இயல்புள்ள உஷ்ணகிரணனான சூரியன் அதனை உபேக்ஷித்தவன்போல வானத்து நெடுந்தூரத்தில் நின்றாலும் அவனுடைய ஆயிரங்கிரணங்களைக் கண்டவளவில் அத்தாமரை மலருமேயல்லது அக்கினி வலியச்சமீபித்து மிக்கஉஷ்ணத்தைச்செய்தாலும் அதன் வெப்பத்துக்கு மலராதன்றோ? அதுபோலவே, எனது இருதயகமலத்தை மலரச்செய்தற்குஉரிய குணாதிசயங்களையுடையவனான நீ எனது பிறவித்துயரத்தை உடனே ஒழித்திடாமல் உபேக்ஷித்தாயாகிலும் அவ்வுள்ளத்தாமரை உனது அநந்த கல்யாணகுணங்களுக்கு நெகிழுமேயல்லது வேறொரு தெய்வம் தானாகவலியவந்து சிறந்தகுணத்தை வெளிக்காட்டி நின்றாலும் அதற்கு நெகிழாது என்பதாம். "ஒண்பூ, வுயருங் கதிரவனே நோக்கும்...ஒண்டாமரையாள்கேள்வ,னொருவனையே நோக்கு முணர்வு" என்றார் பொய்கையாரும். உபமானவாக்கியமும் உபமேயவாக்கியமும் தனியே பிம்பபிரதிபிம்பபாவம் தோன்ற நின்று உவமவுருபு பெறாமையால், எடுத்துக்காட்டுவமையணியாம்.

செந்தழல் என்றதில், செம்மை - இனமில்லாத அடைமொழி; செங்கமலம் என்றதில், செம்மை-இனமுள்ள அடைமொழி. கமலம் என்ற பால்பகா வஃறிணைப்பெயர், 'அலரா' என்ற பலவின்பால் முற்றைக் கொண்டதனால், பன்மைப்பொருளது. வீட்டுதல் விடுவித்தல் ; விடுஎன்பதன் விகாரமான வீடுஎன்ற பகுதி, தன்னொற்றுஇரட்டிப் பிறவினையாயிற்று. 'விடிலும்' என்றது, துணிவுப்பொருளைக் காட்டும். அகம்-அகத்துஉறுப்பு; இடவாகுபெயர். கமலம், அந்தரம், அந்தம் - வடசொற்கள். சீர் - ஸ்ரீ என்ற வடசொல்லின் சிதைவு என்பர்.

7.—(இ - ள்.) வித்துவக்கோடு அம்மா—!—வான்-மேகம், எத்தனையும் மறந்த காலத்தும் - எவ்வளவுகாலம் மழைபொழிவதைமறந்து பொழியாமல் உபேக்ஷித்தாலும், பைங்கூழ்கள் - பசிய பயிர்கள், மைத்து எழுந்த மாமுகிலே பார்த்து இருக்கும் - கருநிறங்கொண்டு வானத்தில் எழுகின்ற சிறந்த மேகங்களையே எதிர்பார்த்திருக்கும்; அவை போல் - அப்பயிர்கள் போல,—மெய் துயர் வீட்டாவிடினும்-தவறாது அனுபவிக்கப்படுகிற (என்) துன்பங்களை(நீ)போக்காமல் உபேக்ஷித்தாலும்,அடியேன் - உனது அடியவனான நான், என் சித்தம் உன்பாலே மிக வைப்பன் - என் மனத்தை உன்னிடத்திலேயே மிகவுஞ்செலுத்துவேன்; (எ - று.)—மற்று - அசை.

தாபத்தைத் தணித்துப் பயிரைக்காத்தற்கு உரிய மேகம் மழைபொழியாது நீட்டிக்கநீட்டிக்கப் பயிர் அதனை ஆவலோடெதிர்பார்க்குந்தன்மைமிகுதல்போல,பிறவித்துன்பத்தைஒழித்து என்னைப்பாதுகாத்தற்குஉரியநீ தண்ணளி செய்யாது உபேக்ஷிக்க உபேக்ஷிக்க என்மனம் உன்பக்கலிலே ஒருகாலைக்குஒருகால் மிகவும்அன்புகொண்டு ஆழ்கின்றது என்பதாம். பயிர் இங்ஙனம்இருத்தற்குக்காரணம் வேறொரு நீர்நிலத்தைத் தேடிப்போகமாட்டாமைபோலவே, ஆழ்வார் இங்ஙனமாதற்குக் காரணம் வேறொருபுகலிடத்தைப் பெறாமை யென்க.

உம்மைகள் - இழிவுசிறப்பு. முதலிரண்டு ஏகாரங்கள்-பிரிநிலை. வான்-ஆகாயம்: அதில் எழும் மேகத்துக்கு இடவாகுபெயர். 'வான் வறந்த காலத்தும்' என்றும் பாடம் உண்டு; பொருள் இதுவே. பசுமை + கூழ் = பைங்கூழ்: "ஈறுபோதல்"என்னுஞ் சூத்திர விதி. கூழ் என்ற உணவின் பெயர்-அதற்குக்காரணமான பயிரைக் குறித்தது; காரியவாகுபெயர். காலம், சித்தம் - வடசொற்கள். (எ)

8.—(இ - ள்.) மிக்கு இலங்கு-மிகுதியாய் விளங்குகிற, முகில்-காளமேகம்போன்ற, நிறத்தாய் - கரியதிருநிறமுடையவனே! வித்துவக்கோடு அம்மா—!புண்ணியனே- புண்ணியசொரூபியாயுள்ளவனே!—தொக்கு இலங்கு யாறு எல்லாம்-(நீர்ப்பெருக்குத்) திரளப்பெற்றுவிளங்குகிற நதிகளெல்லாம், பரந்து ஓடி - (கண்டஇடமெங்கும்) பரவியோடி, (முடிவில்), தொடு கடலே புக்கு அன்றி புறம் நிற்க மாட்டாத-ஆழ்ந்த கடலிலே சென்றுபுகுந்தல்லது மற்றோரிடத்தே புகுந்துநிற்கமாட்டா; அவை போல்-அவ்வாறுகள்போல,—புக்கு இலங்கு-உட்சென்று நோக்கநோக்க மேன்மேல் மிகுதியாய் விளங்குகின்ற,உன் சீர் அல்லால்-உனது குணங்களில்ஆழ்ந்திடுவேனேயல்லாமல்,புக்கிலன் - (உட்சென்றுநோக்கநோக்கக் கலக்கமுடைய இதரதேவதைகளின் குணங்களிலே) ஆழ்ந்திடேன்; (எ - று.)—காண்-தேற்றம். மற்று - அசை.

நதியானது நாடெங்கும் சென்றாலும் முடிவில் தான்சென்று சேர்தற்குத் தக்க இடமாகிய கம்பீரமான சமுத்திரத்தையே அடைதல்போல,நான் பிரபஞ்சவியாபாரங்களில் எவ்வளவுஅலைந்தாலும் முடிவாகப் பரமகதியான உன்னையே அடைவேன் என்பதாம்.ஆறுபுகுந்தால் கடலுக்கு ஒருநிறைவும் புகாவிடில் கடலுக்கு ஒருகுறைவும் இல்லையேயாகிலும் அதுதான் தன் இயல்பால் புறம்பேகின்று தரிக்க அரியதாய் அளவிறந்தகடலிற் புகுதல்போல, யான் உன்னையடைந்தால் உனக்கு ஒருநிறைவும் அடையாவிடில் உனக்கு ஒருகுறைவும் இல்லையேயாகிலும் யானே என் இயல்பால் புறத்தே நிற்கமாட்டாமல் உனது அநந்தகலியாணகுணத்தில் ஆழ்வேன் என்றவாறு. கடலிற்புக்க ஆறு அதிலேயே லயப்பட்டு மீண்டும் அதனினின்று வெளிப்படாத விதம்போல, உன்குணக்கடலிலே இறங்கிய நான் அதிலேயே யீடுபட்டு ஆழ்ந்திடுவேனே யன்றி மீளமாட்டேனென்பது, உவமையாற் புலப்படும். "பெயருங் கருங்கடலே நோக்கு மாறு;... ஒண்டாமரையாள்கேள்வனொருவனையே நோக்கு முணர்வு", "யதாநத்யஸ் ஸ்யந்தமாநாஸ் ஸமுத்ரே,

அஸ்தம் கச்சந்தி நாமரூபேவிஹாய,ததாவித்வாந் புண்யபாபேவிதூய,நிரஞ்ஜநः பரமம் ஸாம்யமுபைதி" என்பன காண்க. 'முகில் நிறத்தாய் வித்துவக்கோட்டம்மா' என்ற சேர்க்கையால், அம்மேகம் படிந்த மலை போன்றது அம்மலைநாட்டுத்திருப்பதி யென்று விசேஷார்த்தம் உரைப்பர்.புண்ணியன்-நல்வினைதானே ஒருவடிவமெடுத்தாற்போன்றவன். யான் இங்ஙனமாதற்குக் காரணம் உனது பேரியல்பே என்பார்,'புண்ணியனே'என விளித்தார்.

புக்கு அன்றி=புகுந்தாலன்றி. இலங்கியாறு-வினைத்தொகை; குற்றியலிகரம்: இலங்கி எனப் பிரித்து, வினையெச்சமாக வுரைப்பினும் அமையும். தொடுகடல் - வினைத்தொகை; (சகரபுத்திரரால்) தோண்டப்பட்ட கடல். புக்கிலங்கு என்றதில், புக்கு - புக என்ற செயவெனெச்சத்தின் திரிபு.புக்கிலன் - தன்மையொருமை இறந்தகாலமுற்று;புகு என்ற பகுதி, ஒற்றிரட்டி இறந்தகாலங்காட்டிற்று; இல் - எதிர்மறையிடைநிலை, அன் - விகுதி. (அ)

9.—(இ - ள்.) மின்னையே சேர் திகிரி-மிக்கவொளியையே கொண்டுள்ள (சுதரிசநமென்னுஞ்) சக்கராயுதத்தையுடைய, வித்துவக்கோடு அம்மா—! —நின்னையே வேண்டி - உன்னையே விரும்பி, நீள் செல்வம் வேண்டாதான்தன்னையே - மிக்கசெல்வத்தை விரும்பாதவனையே, தான் வேண்டும் - தான்வலியச்சேரவிரும்பிச் சமயம்பார்த்து நிற்கின்ற, செல்வம்போல்-அந்த ஐசுவரியம்போல,—மாயத்தால் - உன்மாயையால், (நீ என்னை உபேக்ஷித்தாயாகிலும்), அடியேன் - உனது அடியவனான நான், நின்னையே வேண்டி நிற்பன் - உன்னையே (அடைய)விரும்பிநிற்பேன்; (எ - று.)—முதலடியிலும், நான்காமடியிலும், தான் - அசைநிலை.

ஒருவன் எம்பெருமானிடத்திலே அன்பைச்செலுத்தி அதனால் ஐசுவரியத்தை உபேக்ஷிப்பானானால் அவன் உபேக்ஷிக்க உபேக்ஷிக்க அவனதுநல்வினைப்பயனால் அவனை அச்செல்வம் விடாது விரும்பி வலியத்தொடர்ந்து சேர்தல் இயல்பு; அதுபோலவே, நீ உன்உடைமையாகிய என்னை உபேக்ஷிக்க உபேக்ஷிக்க நான் உன்னையே விடாது பற்றிநிற்பேன் என்பதாம். 'மின்னையே சேர் திகிரி வித்துவக்கோட்டம்மா' என்றது, என்போன்ற அடியார்களுக்கு நேருந் துன்பங்களைப் போக்கி எங்களைக்காத்தற்பொருட்டாகவே கையும் சக்கரமுமாய் இங்கே வந்துள்ளாய் நீ என்றபடி.

செல்வம் என்பதற்கு - மோக்ஷலக்ஷ்மி யென்று உரைப்பாரும் உளர். நீள் செல்வம் - வினைத்தொகை. (கூ)

10.—(இ - ள்) வித்துவக்கோடு அம்மா—!—நீ வேண்டாயே ஆயிடினும் - நீ (என்னை) உபேக்ஷித்தனையேயாகிலும், மற்று ஆரும் பற்றிலேன் - வேறெவரையும்(நான்)சரணமடைந்திடேன்,என்று—,அவனை தாள் நயந்த-அவ்வெம்பெருமானது திருவடிகளை ஆசைப்பட்ட, கொற்றம் வேல் தானை குலசேகரன்-வெற்றியைத்தரும் வேற்படையையும் சேனையையும் உடையவரான குலசேகராழ்வார், சொன்ன - அருளிச்செய்த, நல் தமிழ் பத்தும் - நல்ல தமிழ்ப்பாடல்கள்பத்தையும், வல்லார் - வல்லவர்கள், நரகம் நண்ணார்-(தீவினைசெய்திருந்தாலும்) நரகத்திற் சேரமாட்டார்; (எ - று.)—ஈற்றுஏகாரம் - தேற்றம்.

'அவனைத் தாள்நயந்த கொற்றவேல் தானைக் குலசேகரன்' என்று எம்பெருமான் திருவடிகளை விரும்புதலை ஆயுதத்தோடும் சேனையோடும் வைத்துக்கூறியதனால், புறப்பகைவர்களை யொழித்து வெற்றிபெறுதற்குக் கருவியாக ஆயுதத்தையும் சேனையையும் வைத்துள்ளவாறுபோல, அகப்பகையாகிய பிறவித்துயரத்தை யொழித்துப் பேறுபெறுதற்குக் கருவியாகப் பகவத்பக்தியையுடையவர் ஆழ்வாரென்பது விளங்கும். அன்றியும், அவ்வடைமொழி, அவர் செருக்குக்குக்காரணமான அரசச்செல்வத்தையுடையரா

யிருந்தும் செருக்கின்றி எம்பெருமான் திருவடிக்கு அடிமைபூண்டொழுகின அருமையையுங் காட்டும். அவனைத் தாள் நயந்த கொற்றம் என எடுத்து, பகவத்பக்தியாகிய வெற்றியையுடைய என்றலும் ஒன்று; அப்பொழுது, வெற்றி - எல்லாவற்றினும் மிக்க மேம்பாடு. 'நயந்து' என்றும் பாடம்; அவனைத் தாள்நயந்து குலசேகரன் சொன்ன எனக. தமிழ் - அதனாலாகியபாடலுக்குக் கருவியாகுபெயர். 'வித்துவக்கோட்டம்மா நீ வேண்டாயேயாயிடினும்' என்றது, என்போலியரைப் பாதுகாத்தற்பொருட்டாகவே இங்கு வந்திருக்கிற நீ என்னை உபேக்ஷித்தாயாகிலும் என்றபடி. 'நல்தமிழ்பத்தும்' என்பதற்கு விசேஷார்த்தம்—'கடல் பேராழமாயிருக்கச்செய்தே உள்ளுள்ள பதார்த்தங்கள் தோற்றும்படியாயிருக்குமாபோலே அர்த்தம்மிக்கிருக்குமாய்த்து இத்திருமொழி' என்று வியாக்கியானத்திலே காண்க. இப்பதிகம் வல்லதனாற் பெறுகின்ற எம்பெருமானருளால் தீவினையொழிதல்பற்றி 'நரகம் நண்ணார்' என்றார். நரகம்நண்ணார் என்பதற்கு - நரகவேதனைக்குச் சமமான பிறவித்துயரத்தையடையார் என்று பொருள்கொள்ளினுமாம்; முக்திபெறுவரென்பது கருத்து.

ஆர்-யார் என்பதன் மரூஉ. அவனைத்தாள்நயந்த - அவன் தாளை நயந்த என உருபுபிரித்துக் கூட்டுக. அன்றி, அவனையென்பதை இரண்டனுருபு ஆறனுருபின்பொருளில் வந்த உருபுமயக்கமெனினும் அமையும். கொற்றம்- (பகைவரைக்) கொன்று அடைவது; வேல் - வெல்லுங் கருவி; இரண்டும், காரணக்குறி. வேல் - மற்றை ஆயுதங்களுக்கும் உபலக்ஷணம். தமிழ் - த்ரவிட மென்ற வடசொல்லின் சிதைவென்பர். நரகம் - தற்சமவடசொல்.

இச்செய்யுள், இப்பதிகத்தின் பயனுரைத்தது. இது, திருநாமப்பாட்டு எனவும் பெயர்பெறும். இதனை நாந்தி, பதிகம், பாயிரம் என்ற சொற்களால் வழங்குதலும் உண்டு. இது, ஆழ்வார் தம்மைத் தாமே பிறர்போலக் கூறியது; பிரயோகவிவேகநூலார் 'இது, தன்னைப் பிறன்போலும் நாந்தி கூறுகின்றது', 'வடநூலார் தாமே பதிகமும் உரையும் செய்வார்', 'இனிச் சம்பந்தர் சடகோபர் முதலாயினாரும் திவாகரரும் பதினெண்கீழ்க்கணக்குச்செய்தாரும் முன்னாகப்பின்னாகப் பதிகங்கூறுவதுங் காண்க' என்றவை, இங்கு அறியத்தக்கன. இது ஒருவகைக்கவிசமய மாதலால், தற்புகழ்ச்சியாகாது. (௧௦)

---

ஆழ்வார், இப்பதிகத்தின்(௧)முதற்பாசுரத்தில், எம்பெருமானுக்குத் தாயையும் தமக்குக் குழந்தையையும் உவமைகூறியதனால், பரமாத்மாவுக்கும் ஜீவாத்மாவுக்குமுள்ள சம்பந்தம் தாய்க்கும் குழந்தைக்கு முள்ள உறவுமுறை போன்றதென விளங்கும்; அதாவது-பிராணிவர்க்கங்களையெல்லாம் படைத்துக்காப்பவன் எம்பெருமானே என்பது. (௨) இரண்டாம்பாசுரத்தில், எம்பெருமானுக்குக் கணவனையும் தமக்கு மனைவியையும் உவமைகூறியதனால், பரமாத்மாவுக்கும் ஜீவாத்மாவுக்குமுள்ளசம்பந்தம் கணவனுக்கும் மனைவிக்குமுள்ள தொடர்புபோன்றதெனத் தோன்றும்; அதாவது-பரமாத்மாவினது தலைமையும், ஜீவாத்மாவினது அடிமையும், ஜீவாத்மா பரமாத்மாவுக்கே உரியதாயிருக்கையும், ஜீவாத்மா பரமாத்மாவினது சேர்க்கையால் இன்பத்தையும் பிரிவினால் துன்பத்தையும் அடைதலும், பரமாத்மாவையே ஜீவாத்மா கரணங்க ளெல்லாவற்றாலும் அநுபவித்து ஆனந்தித்தலும் முதலியன. (௩)மூன்றாவதுபாசுரத்தில், எம்பெருமானுக்கு அரசனையும் தமக்குக்குடிகளையும் உவமைகூறியதனால், பரமாத்மாவுக்கும் ஜீவாத்மாவுக்குமுள்ள சம்பந்தம் அரசனுக்கும் குடிகளுக்கு முள்ள இயைபுபோன்றதெனத் தெரியும்; அதாவது-முறையே காப்பவனும்காக்கப்படுபவனுமாதல். (௪)நாலாம்பாசுரத்தில், எம்பெருமானுக்கு வைத்தியனையும் தமக்கு நோயாளியையும் உவமைகூறியதனால், பரமாத்மா ஜீவாத்மாவுக்கு இதஞ்செய்தலிலேயே ஊன்றியவனாதலும், ஜீவாத்மா பரமாத்மாவினிடத்து நம்பிக்கைகொள்ளவேண்டியவனாதலும் தெளிவாம். (௫)ஐந்தாவது பாசுரத்தில், எம்பெருமானுக்கு மரக்கலத்தையும் தமக்குப் பறவையையும் உவமைகூறியதனால், ஜீவாத்மாவுக்குப் பரமாத்மாவையின்றி யமையாதென்பதும், பரமாத்மா ஜீவாத்மாவுக்கு ஆதாரமாதலும் வெளியாம். (௬)ஆறாவதுபாசுரத்தில், எம்பெருமானுக்குச் சூரியனையும் தமக்குத் தாமரையையும் உவமைகூறியதனால், பரமாத்மா இன்பந்தருபவனும் ஜீவாத்மா இன்பமனுபவிப்பவனுமாதல் வெளிப்படும்: இதில், இரண்டாவதுபாசுரத்திற் காட்டியது போன்ற நாயகநாயகிபாவம் தொனிக்கும். (௭) ஏழாவதுபாசுரத்தில், எம்பெருமானுக்குக் காளமேகத்தையும் தமக்குப் பயிரையும் உவமைகூறியதனால், உலகத்து உயிர்கட்கெல்லாம் ஜீவநாதாரம் பரமாத்மாவே யென்று அறியலாம். (௮)எட்டாவதுபாசுரத்தில், எம்பெருமானுக்குக் கடலையும் தமக்கு நதியையும் உவமை கூறியதனால், பரமாத்மாவினது பெருமையும், ஜீவாத்மாவினது சிறுமையும், முடிவில் ஜீவாத்மா பரமாத்மாவை யடைதலும் புலனாம்; இதிலும் நாயகநாயகிபாவம் தொனிக்கும். (௯)ஒன்பதாவது பாசுரத்தில், செல்வத்துக்கு உரியவனை எம்பெருமானுக்கும் செல்வத்தைத் தமக்கும் உவமைகூறியதனால், பரமாத்மாவின் உடைமை ஜீவாத்மாவென்பது புலப்படும். (௰) இங்ஙனம் ஆழ்வார் தமதுகுறையை எம்பெருமான்பக்கலிலே ஒருமுறைக்கு ஒன்பதுமுறை விண்ணப்பஞ்செய்ததனால், அவனுக்கு ஆழ்வாரிடம் உண்டான கருணையின்பெருக்கு அவ்வாழ்வாரது அருளிச்செயல்களில் ஆழ்பவரளவும் செல்லுமென்பது, பத்தாவது பாசுரத்தில் அமையும்.

இவ்வாறே இப்பதிகச்செய்யுள்களை ஆழ்ந்துநோக்கநோக்க மேல்மேல் தோன்றும் விசேஷார்த்தங்களையெல்லாம் ஸ்ரீவைஷ்ணவஸம்ப்ரதாயம் வல்லார்வாய்க் கேட்டு உணர்க.

---

ஸ்ரீ

# புகழேந்தி யொட்டக்கூத்தர் வரலாறு.

---

நளவெண்பாவைப் பாடியவர்—புகழேந்தி என்னுஞ் சிறந்தபுலவர்.

புகழேந்தி பிறந்த இடம்—†தொண்டைநாட்டில் செங்கற்பட்டுக்குச் சமீபத்திலுள்ள (பொன்விளைந்த)களத்தூர் என்பது. (இவ்விஷயம், படிக்காசுப்புலவர் பாடிய தொண்டைமண்டலசதகத்தில் "மாலார் களந்தைப் புகழேந்தியுந் தொண்டை மண்டலமே", "காரார் களந்தைப் புகழேந்தி" என்றவற்றாலும், தொண்டைமண்டலசதகத்து மேற்கோட்செய்யுளொன்றில் "ஐயன் களந்தைப் புகழேந்தி யாண்டார்" என்றதனாலும் விளங்கும். இவர் தமது நளவெண்பாவின் இறுதியில் வாழ்த்தாகக்கூறிய ‡"வாழ்க மலைநாடு வாழ்கவளஞ் சோணாடு, வாழ்க வழுதி வளநாடே—வாழ்கவே, முன்னீர்மை யோடு முதனீர்மை காத்தோம்பும், நன்னீர் வயற்றொண்டை நாடு" என்ற செய்யுளில் பின்னிரண்டடிகளால் சேரசோழபாண்டியநாடுகளினும் தொண்டைநாட்டைச் சிறப்பித்துக்கூறியிருப்பதும் இதனை வற்புறுத்தும்.)

புகழேந்தி வாழ்ந்த இடம்—முதலில் $பாண்டியநாடும், பின்பு §சோழநாடும், அதன்பின்பு அந்நாட்டின் ஒருபகுதியாகிய மள்ளுவநாடும் என இவர் சரித்திரத்தால் அறியப்படும். இவரது சாதி—வேளாளசாதி யென்பர்.

புகழேந்தியின் மதம்—வைஷ்ணவர்கள் வைஷ்ணவமென்றும், சைவர்கள் சைவமென்றும் கூறுவர். சிறந்தவித்துவான்கள் தமதுமதத்தில் இருந்ததாகச் சொல்வது தம்தம்மதத்திற்கு ஒருபெரியகௌரவமென்றகருத்தினால்,

---

* சென்னை இராஜதானிவித்தியாசாலைத் தமிழ்த்தலைமைப்புலவர்களாயிருந்த ம-ா-ா-ஸ்ரீ. அஷ்டாவதானம். வீராசாமிசெட்டியாரவர்கள்விநோதரசமஞ்சரியிலும், ஸ்ரீ-உ-வே. தி-ஈ. ஸ்ரீநிவாசராகவாசாரியர்ஸ்வாமி நளவெண்பாவுரையிலும் தம்தம்கல்விகேள்விகளால் எழுதியவற்றைப் பிரதான ஆதாரமாகக்கொண்டும், மற்றும்சில ஆதாரங்களால் வேறுசிலவிஷயங்களைச் சேர்த்தும், ஒருவாறு சுருக்கமாக எழுதப்பட்டது, இது.

† "மேற்குப் பவளமலை வேங்கடம் நேர்வடக்காம், ஆர்க்கும் உவரி யணிகிழக்குப்—பார்க்குளுயர், தெற்குப் பினாகி திகழிருபதின்காதம், நற்றொண்டை நாடெனவே நாட்டு" என்ற தனிப்பாடலினால் தொண்டை நாட்டின் எல்லை விளங்கும்.

‡ இந்தப்பாடல் அச்சுப்பிரதியில்இல்லையாயினும்ஏட்டுப்பிரதியில்உள்ளது.

$ "வெள்ளாறது வடக்காம் மேற்குப் பெருவழியாம், தெள்ளார் புனற்கன்னி தெற்காகும்—உள்ளார, ஆண்ட கடல்கிழக்காம் ஐம்பத் தறுகாதம், பாண்டியநாட் டெல்லைப் பதி" என்ற தனிப்பாடலினால் பாண்டியநாட்டின் எல்லை விளங்கும்.

§ "கடல்கிழக்குத் தெற்குக் கரைபொரு வெள்ளாறு, குடதிசையிற் கோட்டைக் கரையாம்—வடதிசையில், ஏணாட்டுப் பெண்ணை இருபத்து நாற்காதம், சோணாட்டுக் கெல்லையெனச் சொல்" என்ற தனிப்பாடலினால் சோழநாட்டின் எல்லை விளங்கும்.

தமிழில் திருவள்ளுவர் பரிமேலழகர் கம்பர் முதலிய வித்துவான்களையும் இவ்வாறே அவரவர் தம்தம் மதத்தவ ரென்று கூறுவது வழக்கமாயிருக்கின்றது. ஒருநூலாசிரியரது மதம் இன்னதென்று வேறுகாரணத்தால் விளங்காமல் அவர்செய்துள்ள நூலைக்கொண்டே துணியவேண்டியவிடத்து, அவர்பாடிய கடவுள்வாழ்த்துச்செய்யுள்களும், அவர் நூலின் இடையிலேவரும் சிலசொல்தொடர்களும் யாவராலும் ஆதாரமாகக்கொள்ளப்படும். அவ்வாறே இவரது கடவுள்வாழ்த்துக்களைப்பற்றிப் பார்க்குமிடத்து, நளவெண்பாவின் முதலில் 'நேச ரிதங்கூற நிலவலயந் தாங்குநளன், மாசரிதங் கூற வருந்துணையாப்— பேசரிய, மாமகிழ் மாறன் புகழாம் வண்டமிழ் வேதம்விரித்த, மாமகிழ் மாறன் றாள் மலர்"என நம்மாழ்வார்விஷயமாகவும், சுயம்வரகாண்டத்தின் தொடக்கத்தில் "ஆதித் தனிக்கோல மானு னடியவற்காச், சோதித் திருத்தூணில் தோன்றினான் —வேதத்தின்,முன்னின்றான் வேழம் முதலேயென வழைப்ப, என்னென்றா னெங்கட் கிறை" எனவும், கலிதொடர்காண்டத்தின் தொடக்கத்தில் "முந்தை மறைநூல் முடியெனலாம் தண்குருகூர்ச், செந்தமிழ் வேத சிரமெனலாம்—நந்தம், புழைக்கைக்கும் நேயப்பொதுவர் மகளிர்க்கும்,அழைக்கைக்குமுன்செல் லடி"எனவும்,கலிநீங்குகாண்டத்தின் தொடக்கத்தில் "மூலப் பழமறைக்கு முன்னேயுங் காணலாம், காலிக்குப் பின்னேயுங் காணலாம்—மால்யானை, முந்தருளும் வேத முதலே யென வழைப்ப,வந்தருளுஞ்செந்தாமரை"எனவும் திருமால்விஷயமாகவும் வணக்கங்கூறியுள்ளவை, வைஷ்ணவர்க்கு ஆதாரமாம். இவ்வாறே இவர் நளவெண்பாவின்முதலில் "நேச ரிதங்கூற நிலவலயந் தாங்குநளன், மாசரிதங் கூற வருந்துணையாம்—ஈசன்.கரியா னனத்தான் கருதுபுகழ் பூண்ட, கரியா னனத்தான் கழல்" என விநாயகர் விஷயமாகவும், சுயம்வரகாண்டத்தின் தொடக்கத்தில் "கலாப மயிலிருந்த பாகத்தார் கங்கை, உலாவு சடைமே லுறையும்—நிலாவை, வழியவார்த்தா லன்ன மாநீற்றார் நாகம், கழியவார்த்தார் நமக்கோர் காப்பு" எனவும்,கலிதொடர்காண்டத்தின் தொடக்கத்தில் "செக்கர் நெடுவானில் திங்கள் நிலாத்துளும்பி, உக்கதெனச் சடைமே லும்பர்நீர்—மிக்கொழுகும், வெள்ளத்தான் வெள்ளிநெடுங்கிரியான் மெய்யன்பருள்ளத்தா னெங்கட் குளன்" எனவும், கலிநீங்குகாண்டத்தின் தொடக்கத்தில் "போதுவார் நீறணிந்து பொய்யாத ஐந்தெழுத்தை, ஓதுவாருள்ள மெனவுரைப்பார்—நீதியார், பெம்மா னமரர்பெருமா னொருமான்கை, அம்மானின் றுடுமரங்கு" எனவும் கூறியுள்ளவை, சைவர்க்கு ஆதாரமாம். இங்ஙனம் இவர் "அரனதிகன் உலகளந்த அரியதிகன் என்று உரைக்கும் அறிவு" இல்லாமல் நிஷ்பட்சபாதமாய் இரண்டுகடவுளரையும் சமமாகக்கூறியுள்ளவற்றில் சைவமானபாடல்களைப் பிற்காலத்தில் யாரோ செய்து சேர்த்தவையென்று வைஷ்ணவரும், வைஷ்ணவமான பாடல்களை நூலாசிரியர்வாக்கல்லவென்று சைவரும் கூறுதல் நியாயமற்றதாய்க் காணப்படுகின்றது. 'சைவரான இவர், தமது நூலுக்குவரும் இடையூறுகளை நீக்கிப் பாதுகாக்கும் பொருட்டு, காத்தல்தொழிற்குஉரிய கடவுளான விஷ்ணுவின் விஷயமாகவும், அவரது சிறந்த அடியாரான நம்மாழ்வார் விஷயமாகவும் தோத்திரஞ்செய்த மாத்திரத்தால், இவர்மதம் வைஷ்ணவமாய்விடமாட்டாது' என்று சைவர்களும், 'வைஷ்ணவரான இவர்,தமது நூலுக்கு வரும் இடையூறுகளை அழிக்கும்பொருட்டு, அழித்தல்தொழிற்குஉரியகடவுளான சிவபிரான்விஷயமாகவும், அவரது மூத்தகுமாரரும் விக்கினேசுவரரு மான விநாயகர்விஷயமாகவும் தோத்திரஞ்செய்த மாத்திரத்தால், இவர்மதம் சைவமாய்விடமாட்டாது' என்று வைஷ்ணவர்களும் தோன்றினபடியெல்லாம் கூறும் தர்க்கங்களும் தகுதியற்றனவாகவே தோன்றுகின்றன. ஆதலால் அவற்றையொழித்து இவர் நூலில் மற்றையபாடல்கள்போலவே எட்டுப்பிரதிகளிலுங்காணப்படுகின்ற கடவுள்வாழ்த்துச்செய்யுள்களையெல்லாம் இவர்பாடியனவாகவே

கொண்டு, மதத்துவேஷம்பாராட்டாமல் உண்மைநோக்குமிடத்து, இவர், அரியையும் அரனையும் ஒப்பநினைக்கும் அத்வைதசமயத்தவரெனவே துணியப்படும். உலகத்தில் இரண்டுபொருளை ஒரேசமமாக மனத்திற் கருதுவது யார்க்கும் அரிதாதலால், அத்துவைதசமயத்தவரிலும்பலர் சிறிதுவைஷ்ணவ அபிமானம் முதிர்ந்தும், வேறுபலர் சிறிது சைவ அபிமானம் முதிர்ந்தும் இருத்தல் இயற்கை. ஆனால், அவர்கட்கு, வீரவைஷ்ணவ வீரசைவர்கட்குப் போல மற்றொருதெய்வதத்தினிடத்தில் விரோதமான அபிப்பிராயம் இராது. அப்படி வைஷ்ணவஅபிமானம் முதிர்ந்தவர் புகழேந்திப்புலவர் என்பதை இவர் நளவெண்பாவில் கலிதொடர்காண்டத்தில் "நாராயணாய நமவென்றவனடியிற், சேராரை வெந்துயரம் சேர்ந்தாற்போல்—பாராளும், கொற்றவனைப் பார்மடந்தை கோமானை வாய்மைநெறி, சுற்றவனைச்சேர்ந்தான்கலி" என்ற செய்யுளில் 'சிறந்தமந்திரத்தைச் சொல்லித் திருமாலின் திருவடிகளிற் சரணமடையாதவர்களைக் கொடியபிறவித்துன்பம் அடைதல்போல, கலி நளனை அடைந்தான்' என்றும், இதற்குஎற்பவே கலிநீங்குகாண்டத்தில் "மிக்கோ னுலகளந்த மெய்யடியே சார்வாகப், புக்கோ ரருவினைபோற்போயிற்றே—அக்காலம், கானகத்தே காதலியைநீத்துக்கரந்துறையும், மானகத் தேர்ப் பாகன் வடிவு" என்ற செய்யுளில் 'தேவாதிதேவனான திருமாலின் உலகமளந்த திருவடிகளையே கதியாக அடைந்தவர்களது கருமம் ஒழிதல் போல, நளனது விகாரவடிவம் ஒழிந்தது' என்றும் வெளியிட்டிருப்பதனால் தெளிவாக அறிக. சுயம்வரகாண்டத்தில் "அறங்கிடந்த நெஞ்சும் அருளொழுகு கண்ணும், மறங்கிடந்த திண்டோள் வலியும்—திறங்கிடந்த, செங்கண்மா லல்லனேல் தேர்வேந்த ரொப்பரோ, அங்கண்மா ஞாலத்து அவற்கு" என்ற செய்யுளில் 'தருமசிந்தை, கருணாகடாக்ஷம், புஜபலபராக்கிரமம்முதலிய சிறந்தகுணங்களில் திருமாலொழிய வேறெவரும் நளனுக்குச் சமமாகமாட்டார்' என்றுகூறியுள்ளதும், வைஷ்ணவசம்பிரதாயத்தில்திருமங்கையாழ்வார் பாடிய திருநெடுந்தாண்டகமென்னும் திவ்வியப்பிரபந்தத்தில "செங்கால மடப்புறவம்பெடைக்குப்பேசும்சிறுகுரலுக்கு உடலுருகிச் சிந்தித்து" என்ற தன்சொற்பொருள்களைத்தாமெடுத்துக்கொண்டு "சேவல் குயிற்பெடைக்குப் பேசுஞ் சிறுகுரல் கேட்டு, ஆவி யுருகி யழிந்திட்டான்" என்று இவர்பாடியுள்ளதும் இதனை உறுதிப்படுத்தும். இதுவரையிலுங் கூறியதனால், புகழேந்திப்புலவர் வைஷ்ணவஅபிமானமுடைய அத்வைதி யென விளங்கும்; சிவத்வேஷமில்லாத வைஷ்ணவ ரெனினும் தவறாகாது.

இவரது காலம்—இப்பொழுதைக்குஏறக்குறைய ஆயிரம்வருஷத்துக்கு முன்: என்பது-இவருடன் இருந்த புலவர் ஒட்டக்கூத்தராதலாலும், ஒட்டக்கூத்தர் கம்பர்காலத்தவ ராதலாலும், "எண்ணிய *சகாத்த மெண்ணூற்றேழின்மேல்" என்ற கம்பராமாயணச்சிறப்புப்பாயிரச்செய்யுளால்கம்பர்காலம் ஆயிரம் வருஷத்துக்குமுன் என்று தெரிதலாலும், நன்குவிளங்கும். ஔவையார்க்கும் இவர்க்கும்சிலசம்பாஷணை நடந்ததாகச் சரித்திரத்தில்வருதலால், ஔவையாரும் இவர்காலத்திலேஇருந்தனர். 'ஔவை திருவள்ளுவரதுஉடன் பிறந்தவ ராதலாலும், ஔவையும்திருவள்ளுவரும் கடைசசங்கமிருந்தகாலத்தில் இருந்தவ ராதலாலும், கடைச்சங்கத்தார்காலம் புகழேந்திப்புலவர் காலத்துக்கு வெகுநாளைக்குமுந்தினதாதலாலும், இவர்காலத்திலிருந்தஔவை பிரசித்தமான அந்த ஔவையா ரல்லள்; ஔவையென்பது-தவஞ்செய்யும் பெண்பிள்ளைக்குப் பேராதலால், அப்படிப்பட்ட வேறொருவருடன் புகழேந்திக்குச் சம்பாஷணை நடந்திருக்கலாம்' என்று இதனைச் சிலர் மறுத்து

* இங்கே 'சகாத்தம்' என்றது, சாலிவாகனசகாப்தத்தை; இப்பொழுது நடப்பது, சாலிசகம் - ௧௮௩௨.

இரண்டௌவை கொள்வர்; ஔவையார் அதிகமான் நெடுமானஞ்சியென்னும் அரசனிடத்திலிருந்து அமிழ்தமயமானதொரு நெல்லிக்கனியைப் பெற்று உண்டு அதனால் நெடுங்காலம் ஜீவித்திருந்தனர் என்று புறநானூற்றினாலும், சிறுபாணாற்றுப்படையினாலும், திருக்குறள்பரிமேலழகருரையினாலுந் தெரிதலால், சங்கத்தார்காலத்துத் திருவள்ளுவருடன்பிறந்த ஔவையாரும் புகழேந்திப்புலவர் கம்பர் ஒட்டக்கூத்தர் இவர்கள்காலத்தில்இருந்த ஔவையாரும் ஒருவரே யென்று கொள்ளவும் இடமுண்டு.

இவர்செய்த பிரசித்தமான நூல்கள் - நளவெண்பாவும், இரத்தினச்சுருக்கமும். அல்லியரசாணிமாலை, பவழக்கொடிமாலை, புரந்தரன்களவுமாலை என்னுஞ் சிறுநூல்களும் இவர்செய்தனவாகவே வழங்கும். செஞ்சிக்கலம்பகம் முதலிய சிலவும் உண்டு. இனி, இவர்சரித்திரங் கூறப்படும்:—

தொண்டைமண்டலத்தில்பொன்விளைந்தகளத்தூரில்வேளாளசாதியில் ஆயிரம்வருஷத்துக்குமுன் பிறந்த இவர், கல்வி கேள்வி முதலியவற்றிலும் கவிபாடுதலிலும்மிகவல்லவராய், பாண்டியநாட்டில்மதுரைநகரத்திற்சென்று ஒரு *பாண்டியராசனது சமஸ்தானவித்துவானா யிருந்தார். அக்காலத்தில் சோழநாட்டில் உறையூரில் அரசாண்டிருந்த ஒரு †சோழராசனது தந்தை, தனது மகனுக்கு இராச்சியபட்டாபிஷேகஞ்செய்வித்துத்தான் இறக்குந்தருணத்தில், தனது சமஸ்தானவித்துவானும் தன்மகனுக்கு உபாத்தியாயருமான ஒட்டக்கூத்தரிடம் அப்புத்திரனை ஒப்பித்து, அவனுக்குப் பாண்டியன் மகளை மணஞ்செய்விக்கும்படி சொல்லிச் சென்றான். அவ்வாறே அப்புலவர் மதுரைக்குச்சென்று பாண்டியனிடம் அதுவிஷயமாகப் பேசிக்கொண்டிருக்கையில், பாண்டியராசன் பரிகாசமாய் 'சோழராசன் எங்கள்குலத்துப் பெண்ணைக் கொள்ளத்தக்கவனோ? எங்களிலும் ஏற்றமானவனோ? சொல்லும்' என, ஒட்டக்கூத்தர், சோழராசன் பெருமை தோன்ற, அவனது குதிரை நதி மாலை குலம் பராக்கிரமம் கொடி நகரம் நாடுமுதலியவற்றிற்குப் பாண்டியனுடைய குதிரை முதலியன சமமாகமாட்டா என்னுங் கருத்தை அமைத்து

‡" கோரத்துக்கு ஒப்போ கனவட்டம் அம்மானே !
  கூறுவதும் காவிரிக்கு வையையோ அம்மானே !
ஆருக்கு வேம்பு நிகராகுமோ அம்மானே !
  ஆதித்தனுக்கு நிகர் அம்புலியோ அம்மானே !

---

*இவனை வரகுணபாண்டிய னென்பர்.

†இவனைக் குலோத்துங்கசோழ னென்பர்.

‡அரசனே! சோழர்களது கோரமென்னும்பெருள்ளசிறந்தகுதிரைக்குப் பாண்டியரது கனவட்டமென்னுங் குதிரை சமமாகுமா? மாரிக்காலத்திலன்றிக்கோடைக்காலத்திலும்பெருவெள்ளம்பெருகிப்பாய்ந்துபொன்கொழித்து வந்து சோழநாட்டுக்கு வளங்கொடுக்கிற காவிரியாற்றிற்குப் பாண்டியநாட்டில் மழைக்காலத்தில்மாத்திரமே வெள்ளம்பெருகும்வையையாறு ஒப்பாகச் சொல்லத்தக்கதோ? சிவபிரானது திருவுளத்துக்கு உவப்பாகச் சோழர்கள் அணியும்ஆத்திப்பூமாலைக்குப் பாண்டியரதுவேப்பம்பூமாலைஒப்பாமா? சோழகுலத்து ஆதிபுருஷனான சூரியனுக்குப் பாண்டியகுலத்துஆதிபுருஷனான சந்திரன் சிறிதேனும் சமானமானவனோ? வீரர்களுட் சிறந்தவீரனென்று புகழ்பெற்றவன் சோழனேயன்றிப் பாண்டியனோ? சோழர்கொடியில் வடிவமெழுதப்படும் பராக்கிரமமுடைய புலிக்குப் பாண்டியன்கொடியில் வடிவமெழுதப்படும் வலிமையில்லாத மீன் இணையாமோ? சோழரது இராசதானியான உறையூர்க்கு ஒப்பான சிறப்புள்ளதோ, பாண்டியரதுஇராசதானியான கொற்கையென்னும்நகரம்? நிலவளப்பத்துக்குக்காரணமான நீர்வளமிகுதியால் 'புனல்நாடு' என்று பிரசித்தமான சோழவளநாட்டுக்கு, அப்படிப்பட்டசிறப்பில்லாத பாண்டியநாடு ஈடாமோ? என்பது இதன்பொருள்.

வீரர்க்குள் வீர னொருமீனவனோ அம்மானே!
வெற்றிப் புலிக்கொடிக்கு மீனமோ அம்மானே!
ஊருக்கு உறந்தைநிகர் கொற்கையோ அம்மானே!
ஒக்குமோ சோணாட்டுக்குப் பாண்டிநாடு அம்மானே!"

என்று ஒருபாடலைச்சொன்னார் அப்பொழுது அருகிலிருந்த பாண்டியசம்ஸ்தானவித்துவானான புகழேந்திப்புலவர், இதுகேட்டவுடனே இதற்குமாறாக, பாண்டியரது மலை நகரம் கொடி குலம் நதி மாலை சிறப்பு பராக்கிரமம் இவை சோழரதுமலைமுதலியவற்றினும்மிகச்சிறந்தவைஎன்னுங்கருத்தை அமைத்து,

* "ஒருமுனிவன் நேரியிலோ உரைதெளித்தது அம்மானே!
ஒப்பரிய திருவிளையாட்டு உறந்தையிலோ அம்மானே!
திருநெடுமா லவதாரஞ் சிறுபுலியோ அம்மானே!
சிவன்முடியி லேறுவதுஞ் செங்கதிரோ அம்மானே!
கரையெதிரே டேறியது காவிரியோ அம்மானே!
கடிப்பகைக்குத் தாதகியங் கண்ணியோ அம்மானே!
பரவை பணிந்ததுஞ் சோழன் பதந்தனையோ அம்மானே!
பாண்டியனார் பராக்கிரமம் பகர்வெளிதோ அம்மானே!"

என்று ஒரு பாடலைப் பாடி இவர் சொன்னதை மறுத்தார். அப்பொழுதே ஒட்டக்கூத்தர்க்கும் புகழேந்திக்கும் பகைமையுண்டாயிற்று. பின்பு ஒட்டக்கூத்தர் எற்றபடி பலவாறுபேசிப் பாண்டியன்மகளைச் சோழனுக்கு மணஞ்செய்விக்கும்படி நிசசிதார்த்தஞ்செய்துவந்து சோழனுக்குச் செய்தியைஅறிவித்தார். உடனே அவன் தனக்குப் பிரதிநிதியாகச் சிலநாள் அரசாளும்படி ஒட்டக்கூத்தரை உரையூரில் வைத்துச் சேனைகளோடும் இஷ்டசனபந்துவர்க்கத்தோடும் மதுரைக்குச் சென்று பாண்டியன்மகளை மணஞ்செய்துகொண்டான். அப்பொழுது பாண்டியன் தன்பெண்ணுக்குத்தான்கொடுத்த ஸ்த்ரீதனவரிசையுடன் புகழேந்திப்புலவரையும் அவளுக்குஎற்றசமயங்களில் தக்கஅறிவுகூறும்பொருட்டு அனுப்பினான். (இவ்வரலாறு,

"நளனைப் புகழ்கின்ற வெண்பாவைப் பாடி நன்றாட்கவிதை
கழகத்தின் மிக்க புகழேந்தியாங் கவிராசன் தன்னைத்

---

* அரசனே! ஒப்பற்றமுனிவரான அகஸ்தியர் தமிழ்ப்பாஷையை அபிவிருத்திசெய்தது, பாண்டியநாட்டிலுள்ள பொதியமலையில் இருந்துதானே: சோழநாட்டிலுள்ள நேரிமலையில் இருந்தன்றே; சோமசுந்தரக்கடவுள் ஒப்பில்லாத அறுபத்துநான்கு திருவிளையாடல்களைச் செய்தது, பாண்டிநாட்டிராசதானியான மதுரையில்தானே: சோழநாட்டிராசதானியான உறையூரிலன்றே; ஸ்ரீமகாவிஷ்ணு மீனாக அவதரித்தனரே யன்றிப் புலியாகப்பிறக்கவில்லையே: ஆதலால், மீன்தானே சிறந்தது; புலிக்கு என்னசிறப்பு உண்டு? சிவபிரானது சடைமேல் ஏறியிருப்பது சந்திரனேயன்றிச் சூரியனோ? ஆதலால், சந்திரகுலந்தானே சிறப்புடையது; சமணர்களை வெல்லும்பொருட்டுத் திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் பாசுரம்எழுதி இட்ட எட்டை நீரின் ஓட்டத்துக்கு மாறாகச் செலுத்தியும், நாலடிநானூறுபாடல்களை நீரோட்டத்துக்குஎதிர்செலுத்தியும் சிறப்புடையமதத்தின்பெருமையையும், தமிழ்ப்பாடல்களின் அருமையையும் தெரிந்துவெளியிட்ட எற்றம், பாண்டியநாட்டு வைகை நதிக்கு உள்ளதே யொழிய, சோழநாட்டுக் காவிரிநதிக்கு இல்லையே; பேய் அணுகவொட்டாமல் அதற்குப் பெரும்பகையாய்த்தோன்றி அதனை ஓட்டுவது, சோழரது ஆத்தியோ? பாண்டியரது வேம்புதானே: ஒருகாலத்துப் பொங்கிவந்த சமுத்திரம் அஞ்சிவந்து வணங்கினது, சோழன்கால்களையோ? பாண்டியன்பதத்தையேயன்றோ; பாண்டியரது பராக்கிரமம் சொல்லமுடியுமோ? என்பது இதன்பொருள்.

தளவப்பெருநகைமாதொடு தென்னவன் தான் மணஞ்செய்
வளவற்குச் சீதனமீந்தது பாண்டியன் மண்டலமே"
எனப் பாண்டிமண்டல சதகத்தும் எடுத்தாளப்பட்டுள்ளது.)

அப்படி புகழேந்திப்புலவர் சோழனிடம்வந்ததை அறிந்து ஒட்டக்கூத்தர் பழையபகைமையினால் அவரிடம் கறுக்கொண்டு 'இவன் முன் உமக்குப் பெண்கொடுக்கவொட்டாமல் தடைசெய்து உம்முடைய குலம் முதலியவற்றைப் பாண்டியனெதிரில் மிகப்பழித்துப் பேசியவன்' என்று தம் அரசனுக்குச் சொல்லி அவரைச் சிறைச்சாலையில் வைப்பித்தார்.

அவர் அந்தச்சிறையில் இருந்துகொண்டு, அதனருகே தண்ணீர்க்குப் போகிற பெண்களின் செவிக்கு இனிமையாக, இக்காலத்தில் நங்கைப்பாட்டென்று வழங்குகிற அல்லியரசாணிமாலை, பவழக்கொடிமாலை, புரந்தாள்களவுமாலை என்னுஞ் செம்பாகமான பாடல்களைப் பாடி அவர்கட்குக் கொடுத்து அதற்காக அவர்கள் மகிழ்ந்து கொணர்ந்துகொடுத்த நல்ல அரிசி முதலியவற்றைச் சாளரவழியாய்ப் பெற்று அவற்றைக் கொண்டு சமைத்து உண்டு மிகுதியைக் காவலாளிகட்குக் கொடுத்து அவர்களைக் கைவசப்படுத்திக்கொண்டிருக்கையில், ஒருநாள் வீதியில் யானையின்மேல் வருகிற சோழராசன், சிறைச்சாலையின் மேல்தளத்தில் நின்ற புகழேந்தியை ஒட்டக்கூத்தர்க்குக் காட்டி, 'இவர் தமிழில் மகாசமர்த்தரன்றோ?' என்றுசொல்ல, ஒட்டக்கூத்தர் புகழேந்தியை இகழ்ந்து 'தமக்குமுன் அவன்எவ்வளவு'என்னுங் கருத்துத் தோன்ற,

* "மான்நிற்குமோ இந்த வாளரி வேங்கைமுன் வற்றிச் செத்த
கான்நிற்குமோ இவ் வெரியுந் தழல்முன் கனைகடலின்
மீன்நிற்குமோ இந்த வெங்கட் சுறவமுன் வீசுபனி
தான்நிற்குமோ இக் கதிரோ னுதயத்தில் தார்மன்னனே"

என்று ஒருபாடலைச் சொன்னார். அதுகேட்ட புகழேந்தி அங்கிருந்தே 'அப்பாடலை †வெட்டிப்பாடவோ? ஒட்டிப்பாடவோ?' என்று சோழனைக்கேட்க, அவன் 'ஒட்டிப்பாடும்' என, அவ்வாறே புகழேந்தி,

‡"மான் அவன் நான் அந்த வாளரி வேங்கையும் வற்றிச்செத்த
கான் அவன் நான் அவ் வெரியுந் தழலும் கனைகடலின்
மீன் அவன் நான் அந்த வெங்கட் சுறவமும் வீசுபனி
தான் அவன் நான் அக் கதிரோனுதயமுந் தார்மன்னனே"

என்று இப்பாடலைப்பாடி ஒட்டக்கூத்தரை எதிர்த்தார். அப்பொழுது அவ்வரசன் புகழேந்தியினிடம் மதிப்பும் கருணையும் உடையனானாலும், ஒட்டக்கூத்தரிடமுள்ள தாட்சிண்ணியத்தால், புகழேந்தியைச் சிறைமீட்கவில்லை.

புகழேந்திப்புலவர், சிறையி லிருக்கையில், அங்கு ஒட்டக்கூத்தராற் சிறையிடப்பட்ட புலவர்களைக்கொண்டு ஒட்டக்கூத்தரைப் பங்கஞ்செய்

---

* கொடிய வேங்கைப்புலியின்முன் மான் நிற்குமா? எரிகின்ற கடுநெருப்புக்குமுன் பட்டுப்போனமரம் நிற்குமா? ஒலிக்கிறகடலில் பயங்கரமான சுறாமீனுக்கு முன் சிறுமீன் நிற்குமா? வீசுகின்ற பனி சூரியோதயத்துக்கு முன் நிற்குமா? (அவ்வாறே கல்வியில் எனக்குமுன் இவன்நிற்கமாட்டுவனோ?) என்பது இதன்பொருள்.

†வெட்டிப்பாடுதல் - ஒருவர்பாடின பாடலி லுள்ள சொற்பொருள்களோடுமாறுபட்ட சொற்பொருள்களை அமைத்துப்பாடுதல். ஒட்டிப்பாடுதல்- ஒருவர்பாடின சொற்பொருள்களை வைத்துக்கொண்டே கருத்துமாறுபடப் பாடுதல்.

‡ மானும், உலர்ந்தமரமும், மீனும், பனியும் அவ்வொட்டக்கூத்தன்; வேங்கையும், நெருப்பும், சுறாமீனும், சூரியோதயமும், நான் என்பதுபொருள்.

விக்கக்கருதி, அவர்களில் நல்லபுத்திமான்களான குயவன், அம்பட்டன், கருமான், வேளாளன் முதலிய சிலபேரைத் தெரிந்தெடுத்து அவர்கட்குச் சிறைச்சாலையிலேயே தாம் விசேஷமாகக் கல்விகற்பித்துவைத்து, சிறையிலடைபட்ட வித்துவான்களை நவராத்திரிகாலத்தில் ஒட்டக்கூத்தர் வரவழைக்கும்போது, மற்றைப்புலவர்கள் கல்வியிற்குறைந்தவர்களாயிருந்ததனால் அவர்களை அனுப்பாமல், குயவன் முதலியவரை ஒருவர்பின் ஒருவராய் ஒட்டக்கூத்தரெதிரிற் போய்த் தைரியமாய்நின்று அவர்கேட்டகேள்விகட்குத் தக்கவிடைகூறி அவரிடம் தோல்வியடையாமல் அவரை வெல்லும்படி திட்டஞ்செய்து அனுப்பினார். அவ்வாறே முதலில் குயவன் போய் ஒட்டக்கூத்தரெதிரில் வணங்காமல் மிடுக்காய்நின்றான். அப்பொழுது, அவர், தம்மைப் பெரிய மதயானையாகவும், அவனை ஓர் அற்பப்பிராணியாகவுங் கருதிச் செருக்குக்கொண்டு, அவனது கவித்திறத்தை அறியும்படி, அவனைப்பார்த்து,

*"மோனை முத்தமிழ் மும்மதமும் பொழி
யானைமுன் வந் தெதிர்த்தவ னாரடா"

என்று செய்யுள்நடையால் வினவினார். அதற்கு அவன், யான் ஒரு குசவனென்றும், யானையை அடக்கவல்ல அங்குசமென்னும்ஆயுதத்தை [மாவெட்டியை] யுடைய பாகனென்றும் சிலேடையாகப் பொருள்படும்படி,

†"கூனையுங் குடமுங் குண்டு சட்டியும்
பானையும் வனையு மங்குசப் பையல் யான்"

என்று மற்றையிரண்டடிகளைப்பாடி விடைகொடுத்து அச்செய்யுளைப்பூர்த்தி செய்தான். அதுகேட்டுஒட்டக்கூத்தர் அவனைவிட்டு மற்றொருவனை அழைப்பிக்க, அம்பட்டன் வந்துநின்றான். ஒருகண்பொட்டையான அவனைப் பார்த்து, ஒட்டக்கூத்தர், அவன் தமக்குமுன் மிகஅஞ்சி உடம்புநடுங்குவதாகத் தாமே கற்பித்து அக்கருத்தமைத்து,

‡"விண்பட்ட கொக்கு வல்லூறு கண்டென்ன விலவிலக்கப்
புண்பட்ட நெஞ்சொடு மிங்கு நின்றாய் பொட்டையாய் புகல்வாய்"

என்று பாதிப்பாடல் சொல்லி வினவினார். அதற்கு அவன் பின்வாங்காமல்,

§"கண்பொட்டையாயினும் அம்பட்டன் நான் கவிவாணர் முன்னே
பண்பட்ட செந்தமிழ் நீயுந் திடுக்கிடப் பாடுவனே"

என்று மற்றொருபாதியைப் பாடி விடைகொடுத்தான். அதுகேட்டு ஒட்டக்

---

* மோனைமுதலிய செய்யுளுறுப்புக்க ளமைந்த இயல் இசை நாடகமென்னும் மூன்றுவகைத்தமிழாகிய மூவகைமதசலத்தைச் சொரிகின்றதொரு யானைபோன்ற என்முன் அச்சமில்லாமல்வந்து எதிர்த்துநிற்கின்ற நீ யாரடா? என்று பொருள்.

† கூன் குடம் குண்டுசட்டி பானை முதலிய மட்கலங்களைச் செய்யும் அழகிய ஒரு சிறுகுயவன் நான் என்று பொருள்; இதில், வேண்டியபடியெல்லாம் வனைஞ்செய்யவல்ல யானைமதத்தை அடக்கும் மாவெட்டிக்காரன் நான் என்ற பொருளும் சிலேடையால் தோன்றும்; அம் குசப்பையல் என்றும், அங்குசம் பையல் என்றும் பிரிக்க.

‡ அடா, பொட்டைக்கண்ணா! ஆகாயத்திலே பறக்கிற கொக்கு, வல்லூறு [ஒருவகைப் பருந்து] என்னும் பறவையைக் கண்டவுடனே அச்சத்தால் நடுக்கமடைவதுபோல, என்னைக்கண்டவுடனே மிகப்பயந்து நடுநடுங்கிக்கவலைப்பட்டமனத்துடன் இங்குவந்துநின்றாயே; நீயார்? சொல்லென்றுபொருள்.

§ கண்பொட்டையானாலும், அம்பட்டனாகியநான் பலகவிகளின்முன்னிலையிலே நீயுங்கேட்டுநடுங்கும்படி இலக்கணமமைந்தசெந்தமிழ்ப்பாடல்களைப் பாடவல்லேன் என்று பொருள்; இதில், அம்பட்டன் என்பது-அம் பட்டன் எனப்பிரிந்து, அம் - அழகிய, பட்டன் - புலவன் என்றும் பொருள்படும்.

கூத்தர் அவன்மேல் மிக்ககோபங்கொண்டும் அக்கிரமமாக ஒன்றுஞ்செய்யாமல், அவனையும்விட்டு, வேறொருவனை அழைக்க, கருமான் போய்கின்றான்; அப்பொழுது, அவர், முன்பு குயவனையும் அம்பட்டனையுங் கேட்டதுபோலக் கவிசொல்லிக் கேள்விகேளாமல் வாய்மொழியாகவே அவனை 'நீ யார்? உன்பெயர் என்ன? உன்வரலாறு யாது? உன்குலம் எது? சொல்' என்று சிலகேள்வி கேட்டார்; அதற்கு அவன்,

*"செல்வன் புதல்வன் திருவேங்கடவன் செகத்குருவாங்
கொல்லன் கவியைக் குறைசொன்ன பேரைக் குறடுகொண்டு
பல்லைப் பிடுங்கிப் பருந்தாட்ட மாட்டிப் பகைவர்முன்னே
அல்லும் பகலு மடிப்பேன் கவியிருப்பாணி கொண்டே"

என்று ஒரு பாடலைப் பாடிக் கடுமையாக விடைகொடுத்தான். அதுகேட்டு ஒட்டக்கூத்தர் அவனையும்விட்டு மற்றொருவனை அழைப்பிக்க, வேளாளன் வந்துநின்றான்; அவனைப்பார்த்து, அவர், 'பிரபலவித்துவானாகிய எனதுஎதிரிலே அற்பகவியாகிய நீயும் ஒருபுலவனாக வந்து வெளிப்பட்டுநிற்பது தகுதியோ?' என்றார். அதற்கு அவன்,

† "கோக்கண்டு மன்னர் குரைகடல் புக்கிலர் கோகநகப்
பூக்கண்டு கொட்டியும் பூவா தொழிந்தில பூதலமேழ்
காக்கின்ற மன்ன கவியொட்டக் கூத்த நின் கட்டுரையாம்
பாக்கண் டொளிப்பர்களோ தமிழ்பாடிய பாவலரே"

என்ற ஒரு பாடல் பாடி விடைகொடுத்தது மன்றி, முன்பு ஒட்டக்கூத்தர் பாடியிருந்த அண்டத்துப்பரணியென்னும் நூலிற் குற்றமும் கூறினான்.‡ இவ்வாறு இவர்கள்செயலைக் கண்டு ஒட்டக்கூத்தர் மனவருத்த மடைந்து, இவையெல்லாம் புகழேந்தியால் நேர்ந்தனவென்று அறிந்து, அவர்மேல்இன்னும் அதிக கோபங் கொண்டு, அவர் ஒருவரொழிய மற்றெல்லோரையும் சிறைவிடுத்து அனுப்பினார். அவர்களும் புகழேந்திப்புலவரை வாழ்த்திக் கொண்டு சென்றார்கள்.

---

* செல்வப்பஆசாரியின் மகன் யான்; திருவேங்கடஆசாரி யென்பது என்பெயர்; நான் லோககுருவாகிய கருமான்; என்பாடலை யாராவதுபழித்தால், அவரை நான் குறடுகொண்டு பற்களைப்பிடுங்கி மிகவருத்திப் பலபகைவர்முன்னிலையிலே இரவும் பகலும் ஓயாமல் எனது பாடல்களாகியஇருப்பாணிகளைக்கொண்டு அவர்வாயிற் கடாவுவேன் என்று பொருள்.

† உலகத்தில் பேரரசனைப் பார்த்துச் சிற்றரசர்கள் ஒலிக்கின்றகடலிற் போய் விழுந்து இறந்திலர்; எல்லாமலர்களினுஞ்சிறந்த தாமரைமலரைப் பார்த்து அதனருகிலிருக்கிற கொட்டிமுதலிய அற்பக்கொடிகள் பூவாமலிருத்தலில்லை; அவ்வாறே, எழுதீவுகளையும்ஆளுகிற அரசனே! கவியாகியஒட்டக்கூத்தனே! உனது பாடலைக் கண்டு மற்றைக் கவிபாடும்புலவர்கள் ஓடி ஒளியார் என்று பொருள். அரசன் ஒட்டக்கூத்தர்க்கு அதிகமாகஇடங்கொடுத்ததுபற்றி,இவன்,ஒட்டக்கூத்தரையே அரசனுக்குமுன்னிலைப்படுத்தினான்.

‡" சொன்ன சந்தக் கவி யாவருஞ் சொலலுவர் சொற்சுவைசேர்
இன்ன சந்தக் கவியே தென்ற போதி லெதிர்த்தவரை
வன்ன சந்தங் கெட வாயைக் கிழித் திந்த வாச்சியினாற்
கன்ன சந்தங்களினிற் கவி யாப்பைக் கடாவுவனே,"

" திகிரி வட்டக் குடைச் செங்கோ லபயன் செழுஞ்சிலம்பிற்
பகுதி யொட்டக்கூத்த பட்டனை நாணப் பணைக்கவியின்
மிகுத வொட்டத் தட்டி விட்டகை யோட்டி லுருக்கிக்குத்திப்
புகுத வொட்டித் தட்டி மேலணுகா வண்ணம் போர்செய்வனே"

என்றவை, முறையே தச்சனும் தட்டானும் பாடியனவாக வழங்கும்.

இச்செய்திகளையெல்லாம் ஒருநாள் பரிசாரிகைப்பெண்களாற் சோழராசன்மனைவி அறிந்து மிக்க மனஸ்தாப மடைந்து, ஒட்டக்கூத்தர்வார்த்தையைக்கேட்டுத் தன்கணவன் தனதுதந்தையின் சம்ஸ்தானவித்துவானை புகழேந்திப்புலவரைச் சிறையில் இருத்தி நெடுநாளாக விடுதல்செய்யாமலிருத்தற்காகக் கோபங்கொண்டு,அவரைவிடுவிக்கக்கருதி, தன்பிராணநாயகன் சயனகிருகத்துக்கு வரும்பொழுது தான் உள்ளேயிருந்து கதவைத் தாழ்பூட்டிக்கொண்டாள். அதுகண்டு சோழராசன், பலபலவிதமாய் இதம் பேசியும் கதவுதிறவாதபடியால், அவளது ஊடலைத் தணிப்பிக்கும்பொருட்டு ஒட்டக்கூத்தரை அனுப்பினான்.* அவர் சென்று,

† "நானே யினி யுன்னை வேண்டுவ தென்கொல் நளினமலர்த்
தேனே கவாடந் திறந்திடுவாய் திறவாவிடிலோ
வானே றனைய இரவிகுலாதிபன் வாசல் வந்தால்
தானே திறக்கும் நின் கைத்தல மாகிய தாமரையே"

என்று ஒரு செய்யுளைச் சொன்னார். அது கடுமையாயிருந்ததனால், அவள், 'ஒட்டக்கூத்தர்பாட்டுக்கு இரட்டைத்தாள்' என்று மற்றொரு தாளையும் போட்டிட்டாள். இதனைக்கேள்வியுற்ற சோழராசன், 'புகழேந்திப்புலவரை நெடுநாளாகச் சிறைமீட்காமையால், தன்மனைவிக்கு ஊடல் உண்டாயிற்று' என்று ஊகித்துஅறிந்து, உடனே புகழேந்திப்புலவரைச்சிறைநீக்கி இராணியின்கோபத்தைத் தணிக்கும்படி அனுப்ப, அவர் அந்தப்புரம்போய் அவளது ஊடல் தணியும்பொருட்டு,

‡ "இழையொன் றிரண்டு வகிர்செய்த நுண்ணிடை யேந்திய பொற்
குழையொன் றிரண்டு விழியணங்கே கொண்ட கோபந் தணி
மழையொன் றிரண்டுகைம் மானாபரணன் நின்வாசல் வந்தால்
பிழையொன் றிரண்டு பொறாரோ குடியிற் பிறந்தவரே"

என்று ஒருகவியைப் பாட,அதுகேட்டவுடனே மகிழ்ச்சியடைந்து இராணி கோபந்தணிந்து கதவுதிறந்தாள். அதுமுதல் சோழராசன் புகழேந்திப்புலவரை அன்பாகவே நடத்திவந்தானாயினும், அவர், ஒட்டக்கூத்தருடைய பொறாமையினாலும், அவர்பேச்சைக்கேட்டு அரசன் அதன்படி நடப்பதனாலும்,அங்கு நிலையாய் இருக்க இஷ்டப்படாமல்,அந்நாட்டிற்சேர்ந்த மள்ளுவ

---

* ராஜஸ்திரீகளுக்கு ஊடல் நிகழும்பொழுது அதனை அரசர்கள் புலவர்களைக்கொண்டு தணிப்பித்தல், மரபு.

†தாமரைமலரில்வசிக்குந்தேன்போல் இனிய இலக்குமியைப்போன்ற அழகியவளே! நீ கதவைத் திறந்துவிடு; திறவாவிட்டாலோ,குவிந்த தாமரை சூரியனைக் கண்டமாத்திரத்தில் இதழ்திறந்து மலர்தல் போல, வானத்தின் பேரிடிபோற் பகைவர்கட்குப் பயங்கரனான சூரியகுலத்தலைவனாகிய சோழராசன் உன்வாயிலில்வந்தால் அப்பொழுது விரல்களாகிய இதழ்களையுடைய உன்கையாகிய தாமரை தானே தாள் திறந்துவிடும்; அதைக்குறித்து நான் இனி உன்னைப் பிரார்த்திக்கவேண்டுவது என்ன? என்று பொருள்.

‡ இருபிளவாகப்பகிர்ந்த மெல்லிய ஒருநூலின் ஒருபிளவை யொத்த நுண்ணிய சிற்றிடையையும்,பொற்குழைகளையணிந்த காதுகளை அளாவுகிற இணைக்கண்களையு முடைய தெய்வப்பெண்போல்பவளே! மேகத்தினும்பலமடங்கு மிகுதியாகப் பொருள்பொழிகிற கைகளையுடையவனும், பெருமையையே அணிகலமாகவுடையவனுமாகிய கணவன் உன் வாயிலைத் தேடிவந்தால், அவன்மேற் கோபம்பாராட்டுவது தருமமா? உயர்குடிப்பிறந்த மகளிர் தம்கணவர்செய்த இரண்டொருபிழைகளைப் பொறுக்காமலிருப்பரோ? நீ கொண்ட கோபந் தணியவேண்டும் என்பது இதன்பொருள்.

மென்னுஞ் சிறியநாட்டில் மூரதூரிலிருந்த சந்திரன்சுவர்க்கியென்னுஞ் சிற்றரசனிடஞ் சேர்ந்து, அவன்விரும்பினபடி, நளவெண்பா என்னும் நூலைச் செய்து பரிசுபெற்று வாழ்ந்திருந்தார். பின்பு அச்செய்தியைக் கேள்விப்பட்டுச் சோழராசன் புகழேந்திப்புலவரை மிக்கசிறப்புடன்வரவழைத்து உபசரித்துத் தனதுசபையிலே நளவெண்பாவைப் பிரசங்கிக்கச்சொன்னான். அவ்வாறு புகழேந்தி பிரசங்கஞ் செய்துகொண்டுவருகையில்,

* "மல்லிகையே வெண்சங்கா வண்டூத வான்கருப்பு
வில்லி கணைதெரிந்து மெய்காப்ப—முல்லைமலர்
மென்மாலை தோளசைய மெல்ல நடந்ததே
புன்மாலை யந்திப் பொழுது"

என்னும் இப்பாடலைச் சொல்லும்போது, ஒட்டக்கூத்தர், 'இதில், மல்லிகையரும்பைச் சங்காகவும், வண்டைச் சங்கநாதஞ்செய்கிறவனாகவும் கற்பித்தது உசிதமே; சங்கவாத்தியம் வாசிப்பவர், அதனடியையன்றோ, வாயில்வைத்து ஊதுவார்கள்; அவ்வாறு வண்டுகள் அடிப்புறத்து ஊதுகிறதில்லையே; மேற்புறத்திலன்றோ மொய்த்து ஒலிக்கிறது; ஆதலால், அந்த வர்ணனை குற்றம்' என்று ஆட்சேபித்தார். அதற்குப் புகழேந்திப்புலவர் 'கட்குடியனுக்கு வாயென்றும் மற்றொன்றென்றும் தெரியுமா?' என்றார். இன்னும் ஒட்டக்கூத்தர் இவ்வாறுசெய்த ஆட்சேபங்கட்கெல்லாம் புகழேந்தி உடனுக்குடனே சாதுரியமான உத்தரஞ்சொல்லி அவர்வாயை அடக்கினார். கம்பர்முதலிய வித்துவான்கள், புகழேந்திக்குச் சார்பாய் நின்று புகழ்ந்தார்கள். பழைய பகைமைபற்றி, ஒட்டக்கூத்தர் புகழேந்தியை வெளிக்குஅவமதித்துவந்தும், உள்ளத்தில் அவர்கவித்திறத்தைப்பற்றி வியப்படைந்தேயிருந்தார். ஒருநாள் ஒட்டக்கூத்தர்தம்மனைவியோடு நளவெண்பாவைக்கொண்டாடிப் பேசிக்கொண்டிருக்கையில், அவரைக்கொன்றுவிடும்பொருட்டு அவர்வீட்டுப்புறத்தில் ஒளிந்து கேட்டிருந்த புகழேந்தி, அதுகேட்டு அவரிடத்திலிருந்த பகைமையை விட்டு அவரிடஞ்சென்று அவரோடு சிநேகங்கொள்ள, அவரும் மனமொத்துச் சிநேகம்பாராட்டினார்.

இதுகேட்டு அரசனும் சந்தோஷித்து, அவ்விருவரையும் நோக்கி, ஒருநாள், திருநெய்த்தானமென்னுந் தலத்தி லெழுந்தருளியிருக்கிற சிவபிரான்மேல் 'நெய்த்தானத்தானைச் சேவித்தே' என்பதை மகுடமாகவைத்துச் சந்தவிருத்தம் பாடும்படி சொல்ல, ஒட்டக்கூத்தரும் புகழேந்தியும்,

"விக்கா வுக்கா வித்தா விப்போய் விட்டார் நட்டார் சுட்டோர் புக்கார்
இக்கா யத்தா சைப்பா டுற்றே யிற்றே டிப்போய் வைப்பீர் சிற்பீர்
அக்கா டப்பேய் தொக்கா டச்சூ ழப்பா டத்தீ யெப்பா டப்பூண்
நெக்கா டக்கா னத்தா டப்போம் நெய்த்தா னத்தா னைச்சே வித்தே"

"தற்கோ லிப்பூ சற்பா சத்தே தட்டா மற்சா கைக்கே கிற்பீர்
முற்கோ லிக்கோ லிப்பூ சித்தே முட்டா மற்சே வித்தே கிற்பீர்

---

* 'மல்லிகையே வெண்சங்கா வண்டூத' என்ற இக்கருத்து "எலவியம் போதிருஞ்சிறைவண்டெம்பெருமான்குணம்பாடி, மல்லிகைவெண்சங்கூது மதிளரங்கமென்பதுவே" எனப் பெரியாழ்வார் திருமொழியிலும், "மல்லிகைப்போதின்வெண்சங்கம்வண்டூத" எனத் திருக்கோவையாரிலும் பயின்றிருப்பினும், ஒட்டக்கூத்தர் ஆக்ஷேபித்தது, அவர்க்குப் புகழேந்தியினிடம் நெடுநாளாகவுள்ள மாற்சரியததினாலென்றுஅறிக. "எல்லாம், வெகுண்டார் முன் தோன்றாக் கெடும்," "காய்வதன்கண் உற்றகுணம் தோன்றாதாகும்" என்பன மாற்சரியத்தையாதல் கண்டுகொள்க.

வற்றா நெட்டோ டைப்பா ரைச்சேல் மைப்பூ கத்தே றித்தா விப்போய்
நெற்றா ளூற்றா லைப்பா கிற்சேர் நெய்த்தா னத்தா னைச்சே வித்தே"

என்ற பாடல்களை முறையே பாடினார்கள்."

பின்பு ஒருநாள் திருக்குறுங்குடி யென்னுந் தலத்தில் எழுந்தருளி யிருக்கிற திருமாலின் விஷயமாக வல்லோசையுள்ள கலித்துறைகளைப் பாடும்படி அரசன் சொல்ல, முறையே ஒட்டக்கூத்தரும் புகழேந்தியும்,

" திக்கு ளெட்டுக்கயந் தூக்கமுற்றுத் திடுக்கிட் டலற
மைக்கடற்குட் சாந்தைக்க விட்டோர்க் கிட மாமதுர
விக்கு மூற்றிக் கணுச் சற்று விட்டுத் தெறித்திட்ட முத்தைக்
கொக்கு மொக்கிக் கக்கி விக்கு மச்சோலைக் குறுங்குடியே"

" எட்டெழுத்தைக் கருத்திற் குறித்திட்டு நித்தம் பரவும்
சிட்டர்கட்குத் திருப்பொற் பதத்தைச் சிறக்கத் தருமவ்
வட்டநெட்டைப்பணி மெத்தை யத்தற் கிடம் வாரிசப்பொ
குட்டி னத்துக்குலந் தத்தி முத்தீனுங் குறுங்குடியே"

என்ற பாடல்களைப் பாடினார்கள். ஒன்றுக்கு ஒன்று உயர்வுதாழ்வில்லாமற் சிறந்திருக்கிற அப்பாடல்களை அரசன் கேட்டு அவற்றின் சொற்செறிவு பொருட்பொலிவுகளையும் கற்பனையலங்காரங்களையும் கண்டு களித்து இருவர்க்குஞ் சமமாகச் சம்மானஞ்செய்துவந்தான்

சோழராசன் தனதுசபையில் ஒட்டக்கூத்தர்க்குத் தன்வலப்பக்கத்திலும், புகழேந்திக்குத் தன் இடப்பக்கத்திலும் ஆசனங்கொடுத்துக் கொலுவீற்றிருக்கையில், ஏவலாளர் ஓடிவந்து 'நினது பட்டத்துயானை பெருமதங்கொண்டு கால்விலங்கை முறித்திட்டு நிலைபெயர்ந்துபோகின்றது' என்று செய்திதெரிவிக்க, அதுகேட்டவளவிலே, * அருகிலிருந்த அச்சமஸ்தானகவித்துவானான ஒட்டக்கூத்தர் சோழனதுசிறப்புத் தோன்ற

" இன்னங் கலிங்கத் திகல்வேந்த ருண்டென்றோ
தென்னன் தமிழ்நாட்டைச் சீறியோ—சென்னி
அகளங்கா வுன்ற னயிராவதத்தின்
நிகளங் கால்விட்ட நினைவு"

என்று ஒருகவி சொல்ல, அதுகேட்டமாத்திரத்திலே அச்செய்யுளிற் பாண்டியராசனை மிகஇழித்துரைத்தமைக்கு மனம்பொறாத அச்சமஸ்தானவித்துவானான புகழேந்திப்புலவர் உடனே அதற்குமாறாகப் பாண்டியனதுபெருமைவிளங்கச் சோழனைக் கீழ்மைப்படுத்தி

"தென்னவன் தென்னர் பெருமான் திறன்மதுரை
மன்னவன் கோக்களிற்றின் வல்லிக்கும்—பொன்னிநா
டாலிக்கும் வேந்தா மபயகுலன் மகளிர்
தாலிக்கு மொன்றே தளை"

என்று ஒருகவிபாட, அவரதுதிறத்தைக் கண்டு வியந்த அரசன் அவரை மிக நன்குமதித்து அன்றுமுதல் அப்புகழேந்திக்குத் தன்வலப்புறத்திலும், ஒட்டக்கூத்தர்க்குத் தன் இடப்புறத்திலுமாக ஆசனங்களைமாற்றுவித்தான். (இவ்வரலாற்றில், ஒட்டக்கூத்தரது ராஜாபிமானமும் செருக்கும், புகழேந்தியின் ராஜாபிமானமும்மனத்துணிவும், சோழராசனது நடுவுநிலைமையும்விளங்கும்.)

---

* இச்செய்தியை, ஒட்டக்கூத்தரைப் புகழேந்தி வென்றதாக, அடியில் வருந் தொண்டைமண்டலசதகச்செய்யுள் தெரிவிக்கும்:—

" நூலார் கலைவல்ல செம்பியன் கேட்க நொடித்து மிக்க
கோலாகல னொட்டக்கூத்தனை யன்று தற்கோலி யென்று
மேலார் கவிசொல்லி நெய்த்தானத்தே சென்று வென்றுகொண்ட
மாலார் களந்தைப் புகழேந்தியுந் தொண்டை மண்டலமே."

மற்றொருநாள் இராசசபையில்ஒட்டக்கூத்தர்'அரசர்களுள் சோழராச ஞெருவனே போரில் என்றும் பகைவர்க்குப் புறங்கொடாது முகங்கொடுத் துப் பொருபவன்' என்னுங் கருத்துத் தொனிக்குமாறு தமது அரசனைச் சிறப்பித்து

"வென்றி வளவன் விறல்வேந்தர் தம்பிரான்
என்றும் முதுகுக்கு இடான் கவசம்"

என்று ஒருபாதிபாடியவுடனே புகழேந்திப்புலவர் ராஜாபிமானத்தால் மனம்பொறாராய் அவ்வரசனைத் தாழ்த்தித் தம்அரசனைச் சிறப்பித்து

"—துன்றும்
வெறியார் தொடைகமழு மீனவர்கோன் கைவேல்
எறியான் புறங்கொடுக்கி னென்று"

என மற்றொருபாதியைப்பாடிமுடித்துஒட்டக்கூத்தரது செருக்கையடக்கினர்.

அரசன் ஒருநாள் சபையில் ஒட்டக்கூத்தரை நோக்கி 'எனக்கு இரவிலுங் குடைபிடிக்கக் காரணம் என்ன? சொல்லுக' என்று வினவ, அதற்குக் கூத்தர் எற்றவிடை யாதும் கூறமாட்டாராய் வாளாநிற்கவே, அரசன் உடனே புகழேந்தியைநோக்கி 'நீர் சொல்லுக' என்ன, அவர் 'நீ இராத்திரியிலும் குடைபிடித்தற்குக் காரணம், வானத்தில் நக்ஷத்திரவடிவமாகவிளங்குகிற அருந்ததியும் நினதுவடிவத்தைக் காண்பளாயின் அதனழகில் ஈடுபட்டு நின்மீது காதல்கொண்டு கற்புநிலைகுலைவளாதலின், அங்ஙனம் அவள் காணுதபடி நின்வடிவை மறைக்கவேண்டுமென்னுந்தருமசிந்தையுடைமையே' என்னுங் கருத்தை யமைத்து

"அண்டமீ துலவி வாழு மருந்ததிக் கற்பா ளுன்னைக்
கண்டதா லுவகை யெய்திக் கற்பழிந் திடுவ ளென்றே
யெண்டிசை புரக்கும் வேந்தா யிரவினிற் கவிகை நீழல்
கொண்டுமா நடாத்து மாறு குலோத்துங்கா நீதி தானே"

என்று ஒருகவிகூற,அதுகேட்டவளவில், அரசன்,மகளிர்கற்பைப்பாதுகாத்தல் அரசர்கடமை யென்பதை ஆதாரமாகக்கொண்டு புகழேந்திப்புலவர் அவ்வாறு சமயத்துக்குஏற்பக் கற்பனைகூறிய அற்புதத்திறமையைப் பாராட்டி அவரை மிகநன்குமதித்தனன்.

ஒருநாள் உறையூரில் சோழராசன்,ஒட்டக்கூத்தரோடும்புகழேந்தியோடும் வீதியிற் கால்நடையாய் உலாவிச்செல்லும்பொழுது,ஒருவீட்டுத்தெருத்திண்ணையில் இரண்டு கால்களையும் நீட்டிக்கொண்டு உட்கார்ந்திருந்த ஔவையார், சோழனைக்கண்டவுடன் ஒருகாலை மடக்கிக்கொண்டனர்; அருகிற் புகழேந்திப்புலவரைப்பார்த்தவுடனே மற்றக்காலையும்மடக்கிக்கொண்டனர். அவர்களையடுத்துவந்த ஒட்டக்கூத்தரைக் கண்டவுடனே,அவரைக் கர்வபங்கஞ்செய்யும்பொருட்டு,இரண்டுகால்களையும்நீட்டினர்; இதைப்பார்த்தஒட்டக்கூத்தர் அவமானமும் கோபமு முடையவராய் 'இவ்வாறு என்னை அவமதித்ததென்ன?' என்றுஔவையாரைக்கேட்க, அவர்'அரசன் நாட்டுக்குத் தலைவனுதலால், அவனுக்குஒருகாலையும், மன்னனிற்கற்றோன்சிறப்புடையனுதலால், மகாவித்துவானுன புகழேந்திப்புலவர்க்காக இரண்டுகாலையும் மடக்கினேன்; நீயோ கல்விநிறைவின்றி வீண்புலமைபாராட்டுபவனுதலால், உனக்கு இரண்டுகாலையும் நீட்டினேன்' என்றுசொல்லி, 'உண்மையாகவே நீயும் புகழேந்திபோலச் சிறந்தபுலவனுயின், சோழனையும் அவன்நாட்டையுஞ் சிறப்பித்து, சந்திரனுக்குப்பெயராகும் ஒருபதத்தை ஒருபாடலின் ஈற்றடியில் மூன்றிடங்களிற் பிரயோகித்துப்பாடு; பார்ப்போம்' என்று சொன்னர்; அதற்கு ஒட்டக்கூத்தர்,

"வெள்ளத் தடங்காச் சினவாளை வேலிக் கமுகின் மீதேறித்
துள்ளி முகிலைக் கிழித்து மழைத்துளியோ டிறங்குஞ் சோணுடா

கள்ளக் குறும்பர் குலமறுத்த கண்டா வண்டர் கோபாலா
பிள்ளை மதிகண் டப்பேதை பெரிய மதியு மிழந்தாளே"

என்று ஒருபாட்டுப் பாடினர்; அதுகேட்டு ஔவையார் ஒட்டக்கூத்தரை நோக்கி, 'உன்பாடலில் ஒருசந்திரன் குறைந்ததே'என்றும், 'உனக்கு அறிவு கெட்டதே' என்றுஞ் சிலேடையாகப் பொருள்படும்படி, "ஒட்டா ஒருமதி கெட்டாய்" என்று கூறி, உடனே புகழேந்தியைப்பார்த்து 'நான்சொன்ன படி நீர் பாடும்' என்றார்; உடனே ஆசுகவியாக அவர்,

"பங்கப் பழனத் துழுமுழவர் பலவின் கனியைப் பறித்ததென்று
சங்கிட் டெறியக் குரங் கிளநீர்தனைக்கொண் டெறியுந் தமிழ்நாடா
கொங்கர்க் கமராபதி யளித்த கோவே ராசகுலதிலகா
வெங்கட்பிறைக்குங் கரும்பிறைக்கு மெலிந்தப்பிறைக்கும்விழிவேலே"

என்று ஓரடியில்மூன்றுபிறைவரும்படி பாடினர்;இதைக்கேட்டுஔவையார் புகழேந்தியை மிகுதியாகக் கொண்டாடினர்.

அரசன் ஔவையை நோக்கி'நீ புகழேந்தியைப் பெருமைப்படுத்தி ஒட்டக்கூத்தரைச் சிறுமைப்படுத்தியது என்?' என்றதற்கு, அத்தவப்பெண் 'உனதுகுடையின்கீழ் அடங்காதவை இவ்வுலகத்தில் இரண்டுஉண்டு;அவை யாவையென்று இருவரையும்வினவி,அவர்களில்,இன்னவையென்றுஅறிந்து கூறுபவனைச் சிறந்தபுலவ னென்று நீ அறிந்துகொள்' என்றுசொல்ல, அரசன் அங்ஙனமே இருவரையும் வினவ, ஒட்டக்கூத்தன் ஒன்றுங்கூறானாக, புகழேந்தி,

"மற்றொப்பிலாக்கொடைச் செம்பியராச வரோதய நின்
வெற்றிக் கிரண்டுண் டடங்காத காரிய மேருகிரிச்
சுற்றிலுங் கீர்த்தி யடங்காது நின்னுடைத் தோள்தழுவாக்
கற்றைக் குழலிக்கு மாலடங்கா திது கைகண்டதே"

என்ற ஒருகவியினால் அவை இன்னவையென்று உரைத்துத் தமதுபுலமைச் சிறப்பு விளங்கப்பெற்றன ரென்பர் ஒருசாரார்.

இப்புகழேந்திப்புலவர்,வெண்பாப்பாடுதலில் ஒப்புயர்வில்லாமல் மிகச் சிறந்தவர்; இதனை,

"வெண்பாவிற்புகழேந்திபரணிக்கோர்சயங்கொண்டான்விருத்தமென்னும்
ஒண்பாவி லுயர்கம்பன் கோவை யுலா வந்தாதிக் கொட்டக்கூத்தன்
கண்பாய கலம்பகத்திற் கிரட்டையர்கள் வசைபாடக் காளமேகம்
பண்பாகப் பகர்சந்தம் படிக்காசலா லொருவர் பகரொணாதே"

எனப் பின்புள்ளார் பாடியுள்ளதனாலும் அறிக.

இவர் பாடிய நளவெண்பா - சொற்செறிவு பொருட்பொலிவு முதலிய வற்றில் மிகச்சிறந்தது; மிக்க கற்பனையலங்காரங்களை யுடையது; நானூற்றுச்சொச்சம் பாடல்களால் அமைந்தது.

இவர் தமக்குப்பலசெல்வமுங்கொடுத்து ஆதரித்துத் தம்மைக்கொண்டு நளவெண்பாவைப் பாடும்படி செய்வித்த சந்திரன்சுவர்க்கி யென்னும் அரசனை இப்பெருங்காப்பியத்தில் இடையிடையே புகழ்ந்துபேசியுள்ளார்.

"மாமனுநூல் வாழ வருசந்திரன்சுவர்க்கி
தாமரையாள் வைகுந் தடந்தோளான்—காமருபூந்
தாரான் முரணைநகர் தானென்று சாற்றலாம்
பாராளும் வேந்தன் பதி"

என்ற பாடலில்,சந்திரன்சுவர்க்கியினது முரணைநகரத்தை நளனதுமாவிந்த நகரத்துக்கு உவமை கூறினார்.

"மாமுத்த வெண்குடையான் மால்களிற்றான் வண்டிரைக்குந்
தாமத் தரிச்சந்திரன்சுவர்க்கி—நாமத்தார்

பாவேய்ந்த செந்தமிழா மென்னப் பரந்ததே
கோவேந்தர் செல்வக் குழாம்"

என்ற பாட்டில், சந்திரன்சுவர்க்கியின் விஷயமான தமிழ்ப்பிரபந்தம் உலக மெங்கும்பரவுதல்போல, சுயம்வரத்துக்குவந்த அரசர்கூட்டம் குண்டினபுரி யெங்கும் பரவியது என்றார்.

"தாருவெனப் பார்மேல் தரு சந்திரன்சுவர்க்கி
மேருவரைத் தோளான் விரவார்போற்—கூரிருளிற்
செங்கா னகஞ்சிதையத் தேவியைவிட் டேகினான்
வெங்கா னகந்தனிலே வேந்து"

என்கிற பாடலில், நளன் மனைவியைவிட்டுக் காட்டில்நடந்துசெல்லுதற்கு, சந்திரன்சுவர்க்கியின் பகைவர்கள்அஞ்சித்தோற்றுஓடிச்செல்வதை ஒப்புமை காட்டினார்.

"சங்க நிதிபோல் தரு சந்திரன்சுவர்க்கி
வெங்கலிவாய்நின் றுலக மீட்டாற்போல்—மங்கையைவெம்
பாம்பின்வாய்நின்று பறித்தான் பகைகடிந்த
காம்பின்வாய் வில்வேடன் கண்டு"

என்கிற கவியில், வேடன் தமயந்தியைப் பாம்பின்வாயினின்று மீட்டதற்கு, சந்திரன்சுவர்க்கி உலகத்தைக் கலியிலிருந்து மீட்டதை உவமைகுறித்தார்.

"வண்டார் வளவயல்சூழ் மள்ளுவநாட் டெங்கோமான்
தண்டார் புனை சந்திரன்சுவர்க்கி—கொண்டாடும்
பாவலன்பால் நின்ற பசிபோல நீங்கிற்றே
காவலன்பால் நின்ற கலி"

என்னுஞ் செய்யுளில், நளனைவிட்டுக்கலிநீங்குதற்கு, சந்திரன்சுவர்க்கியைக் கொண்டாடும் பாவலரை விட்டுப் பசிநீங்குதலை ஒப்பிட்டார்.

இப்படி பாலில் விஷங்கலப்பதுபோலப் புண்ணியசரித்திரத்தினிடையிலே ஒருமனிதனைத் துதித்தல் தகுமோ? நர கவனம் நரக வனமன்றோ? என ஓர்ஆட்சேபந்தோன்றலாம்; இங்ஙனம்தோத்திரிப்பது தகுதியன்றாயினும், அரசன் தமக்குச்செய்த நன்றியை மறவாமல் உபகாரஸ்மிருதியாகப் பாடினார் என்பதுபற்றி, பலரும்அங்கீகரிப்பார்கள். அன்றியும், பிரஸ்துதமாகிய உபமேயமுகத்தால் அவன்பெயரைப் பிரஸ்தாபிக்காமல், அப்பிரஸ்துதமான உபமானமுகத்தாற்புகழ்ந்துகூறியதும்ஒருசமாதானமாகலாம். இங்ஙனமே தம்மைப் பாதுகாத்த பிரபுக்களைத் தாம்செய்யும் நூல்களில் நன்றியறிவுகாரணமாக எடுத்தேத்துதல், புலவர்களியற்கை. கம்பர் தமது இராமாயணத்தில் திருவெண்ணெய்நல்லூர்ச் சடையப்பவள்ளலையும், வில்லிபுத்தூராழ்வார் பாரதத்தில் வக்கபாகைநகரத்து வரபதியாட்கொண்டானையும், மண்டல புருஷன் சூடாமணிநிகண்டில் கிருஷ்ணதேவராயனையும் ஆங்காங்குச்சிறப்பித்துக்கூறியிருக்குமாறு காண்க.

இன்னும் இவர், நளவெண்பாவில், தமயந்திசுயம்வரத்துக்குவந்த அரசர்களில், சோழன்பாண்டியன்சேரன் இத்தமிழ்நாட்டுமூவேந்தரையும்முதலில் எடுத்து மிகச்சிறப்பித்துக் கூறியிருக்கிறார். "வண்டமிழ்வாணர்ப் பிழைத்த வான்குடிபோல் தீத்தழல்மீ, மண்டு கொடுஞ்சுரத்து" எனத் தமிழ்ப்புலவரது ஆற்றலைத்தெரிவித்தார். இங்ஙனம் தமதுதேசாபிமான பாஷாபிமானங்களை வெளிப்படுத்துவது யாவர்க்கும் வழக்கமேயாம்.

இவர்பாடியஇரத்தினச்சுருக்கம் - மகளிரதுகூந்தல்முதல்பாதம்ஈறாக உள்ள உறுப்புக்களுக்குக் கூறத்தக்க பலஉவமைகளைத் தனித்தனியெடுத்து விளக்கிக்காட்டுவதோடு, காவியங்களில் அறியத்தக்க மற்றும் சில விஷயங்களையுந் தெரிவிக்கும்.

இவர் பெண்களுக்கென்று பாடிய அல்லியரசாணிமாலை முதலியன அவர்கள் தகுதிக்கு ஏற்ப மிகஎளியநடையுடையன.

இப்புலவர்பெருமானது பெருமையை, புகழேந்தி என்ற இவர்பெயரே நன்குவிளக்கும்; கீர்த்திபெற்றவர் என்று பொருள். "கேட்டாலு மின்பங் கிடைக்குங் கண்டீர் கொண்ட கீர்த்தியோடு, பாட்டாலுயர்ந்த புகழேந்தி சொன்னபடி" எனப்படிக்காசுப்புலவர்எடுத்துக்கூறியிருக்குமாறுகாண்க. நளவெண்பாவின் சிறப்புப்பாயிரமாகிய

"பாரார் கிடத பதி நளன்சீர் வெண்பாவாற்
பேரார் புகழேந்தி பேசினான்—தாரார்
செழியனையுஞ் சென்னியையுஞ் சேரத் திறைகொள்
மொழியின் சுவையே முதிர்ந்து"

என்ற செய்யுளுங் காணத்தக்கது.

## ஒட்டக்கூத்தர் வரலாறு.

உத்தரராமாயணம் என்று வழங்குவதும், இராமாயணத்தின் ஏழாவது காண்டமுமாகிய உத்தரகாண்டத்தைத் தமிழிற் பாடியவர், ஒட்டக்கூத்தரென்னுஞ் சிறந்த புலவர்.

சோழநாட்டில் உறையூரில் செங்குந்தரெனப்படுகிற கைக்கோளர்மரபிற் பிறந்த இவரது இயற்பெயர் ஆணர்தக்கூத்தரென்பது. இவர் இளமையிலேயே இயற்கையாகிய நுண்ணறிவோடு செயற்கையாகிய நூலறிவையுமுடையராய்க் கல்விகேள்விகளிற் சிறந்து அவற்றிற்குஏற்ற நற்குணநற்செய்கைகளோடுங் கூடி இனியகவிகளை எளிதிற்பாடுந் திறமும் பிரசங்கசக்தியும் வாய்ந்து புலமைநிரம்பியவராய் மிக்கபிரசித்திபெற்றிருந்தார். அக்காலத்தில் அந்நாட்டில் அவ்வுறையூரில் அரசாண்டிருந்த சோழராஜன் இவருடைய திறமைகளைக் கேள்வியுற்று அறிந்தவனாய் இவரிடத்து மிக்க மதிப்புக்கொண்டு இவரை வெகுமரியாதையோடு தனதுசபைக்கு வருவித்து இவருடைய வல்லமைகளைக் கண்ணாரக்கண்டு களித்து இவர்க்குப் பலவகைச் சம்மானங்கள் செய்து இவரைத் தனது சம்ஸ்தானவித்துவானாக வைத்துக்கொண்டான். பின்பு அந்தச் சோழராஜனது குமாரனாகிய குலோத்துங்க சோழனுக்குஅத்தந்தையின்கட்டளைப்படி இவரேபோதகாசிரியராகஅமர்ந்து கல்விகற்பிப்பாராகி, அரசனிடத்து மிக்க செல்வாக்குப் பெற்றிருந்தனர்.

ஈட்டியெழுபது பாடியதும், ஒட்டக்கூத்தரென்னும் பெயர் வந்த வகையும்:—இவர் இவ்வாறு சிறப்புப்பெற்றிருக்கையில் இவரதுசாதியாராகிய கைக்கோளர்கள் இவரிடம் வந்து 'சிற்சில புலவர்கள் நூல்களியற்றி அவற்றால் தம்தம்சாதியார்சிறப்பைவிளக்குதல்போல, நீவிர் ஒருநூல்செய்து நமது சாதிச்சிறப்பை உலகத்தில் விளங்கவைக்கவேண்டும்' என்று வேண்ட, இவர் 'அது சரியே; ஆயின், நமதுபாடலுக்கு யாது பரிசு தருவீர்?' என்ன, அவர்கள் 'அளவற்ற செல்வம் தருகிறோம்' என்று சொல்ல, இவர் 'அரசன் தந்த செல்வம் எமக்கு நிரம்ப உள்ளதாதலால், நமக்குச் செல்வம் வேண்டுவதில்லை: உங்கள்தலைப்பிள்ளைகளில் எழுபதுபேருடைய தலைகளை நீங்கள்தருவீராயின், நமதுமரபினர்பெருமை விளங்க, நமது ஆயுதமாகிய ஈட்டியைச் சுட்டி எழுபதுபாடல்களால் 'ஈட்டியெழுபது' என்னும் நூலைச் செய்து தருகிறேன்' என்றுசொல்லினர். இவ்வாறு இவர் தலைப்பிள்ளைகளின் தலைப் பரிசுவேண்டியதைச் செவியுற்று அவர்கள் மிகவும்எண்ணியிருக்க, இவர் தமது மரபில்தோன்றிய முன்னோருடைய வீரசூரச்செயல்கள்பலவற்றைஎடுத்துச் சொல்லிப் பிரசங்கிக்க, அதுகேட்டவளவில் அக்கைக்கோளர்கள் சூரத்துவமடைந்து தம்மகையால் தம்தலைப்பிள்ளைகளின் தலைகள் எழுபதேயன்றி அளவிறந்தவற்றை அறுத்துப்பெருங்கூடைகளில்இட்டுத்தாமேசுமந்துகொண்டு

வர, இவர் 'அவற்றைச் சோழராசனது அரண்மனைவாயிலிற் குவியுங்கள்' என்று கட்டளையிட, அங்ஙனமே அவர்கள் அங்குக் குவிக்க, அதுகண்ட சோழராசன் இவரை வருவித்து 'கூத்தரே! இது என்ன கூத்து?' என்று கேட்க, இவர், நடந்தசெய்திகளை அரசனுக்குவிளங்கச்சொல்லி அத்தலைகளை ஒருங்குசேர்த்துக் குவியல்செய்து ஒருசிங்காசனம்போலாக்கி அத்தலைச்சிங்காசனத்தின்மீது தாம் ஏறிவீற்றிருந்து 'ஈட்டியெழுபது' என்னும் பிரபந்தம் பாடிமுடித்துச் சரசுவதியைநோக்கி

"கலைவாணி நீ யுலகி லிருப்பதுவுங் கல்வியுணர் கவிவல்லோரை
நிலையாகப் புரப்பதுவு மவர்நாவில் வாழ்வதுவு நிசமே யன்றோ
சிலைவாண னுமிருக் காயிரம் புயங்கள் துணிந்து முயர்சீவ னுற்றான்
தலையாவிகொடுத்திடுஞ்செங்குந்த ருயிர்பெற்றிடநீதயைசெய்வாயே"

என்னும் பாடலைப் பாடிப் பிரார்த்திக்க, முன்னம் அவ்வவ்வுடம்பைவிட்டு அறுபட்ட தலைகள் சென்றுமீண்டும் அவ்வவ்வுடம்போடுசேர்ந்துஒன்றியிட, மாண்டபிள்ளைகள் மீண்டு எழுந்தனர். இவ்வாறு துணிபட்ட தலைகளையும் உடல்களையும் ஒட்டப்பண்ணிய காரணத்தால்,அதுமுதல் இவர்க்கு 'ஒட்டக்கூத்தர்'என்று பெயராயிற்று.(ஒட்டன் -ஒட்டுதற்றொழிலுடையவன்;ஒட்டனாகிய கூத்த னென்க.) இப்படிப்பட்ட ஒப்புயர்வற்ற சிறப்புத் தமக்கும் தமது சாதிக்கும் அக்கைக்கோளர்களால் உண்டானமையை,

"நிலைதந்தார் புவியினுக்கும் யாவருக்கு மானமதை நிலைக்கத் தந்தார்
கலைதந்தார் வணிகருக்குச் சீவனஞ்செய்திட வென்றே கையிற் றந்தார்
விலைதந்தார் தமிழினுக்குச் செங்குந்தர் என்கவிக்கு விலையாகத்தான்
தலைதந்தாரெனக் கொட்டக்கூத்தனெனும் பெயரினையுந்தாம்தந்தாரே"

என்று இவர்தாமே புகழ்ந்து கூறியுள்ளார். இக்கதையில் கைக்கோளர்களுடைய சூரத்தன்மை விளங்குவதோடு,ஒட்டக்கூத்தருடைய தெய்வப்புலமையும், அவரிடமிருந்த சரசுவதிகடாக்ஷமும் நன்குவிளங்கும்.

பின்பு சோழராஜன் தன்மகனுக்கு இளவரசுமுடி சூட்டிவைத்து, தான் இறக்குந் தருணத்தில், தனது சம்ஸ்தானவித்துவானும் தன் மகனுக்கு உபாத்தியாயரு மாகிய ஒட்டக்கூத்தரிடம் அப்புத்திரனை ஒப்பித்து, அவனுக்கு அக்காலத்திற் பாண்டியநாட்டில் மதுரையில் அரசாளுகிற வரகுணபாண்டியராஜனது மகளை மணஞ்செய்துவைக்கும்படி சொல்லிச்சென்றான். அவ்வரசன் காலஞ்சென்றபின் தலைமைவாய்ந்த இவர் குலோத்துங்க சோழனுக்கு வெகுவிபவமாகப் பட்டாபிஷேகஞ் செய்துவைத்தார். அச்சமயத்தில் அந்தணர்கள் வேதமந்திரஞ்சொல்லி ஆசீர்வதிக்க,பாவலர்கள்பாமாலைசூடி வாழ்த்த, பலரும் பலவாறு மங்கலங்கூற, ஒட்டக்கூத்தர் அவனுக்கு க்ஷேமமுண்டாம்படி தாம் ஒருகவி பாடவேண்டுமென்று தொடங்கி

" ஆடுங் கடைமணி நாவசையாம லகிலமெங்கு
நீடுங் குடையைத் தரித்த பிரான்"

என்று கொஞ்சங்குறைய இரண்டுஅடிவரையிற் பாட, அதனைக்கேட்டு அவ்வரசன், இவர் தனக்குக் கல்விகற்பித்த ஆசிரியராதலால் தன்னைத்துதிசெய்வது தகாது என்று நினைத்து, அதற்குமேல்

"இந்த நீணிலத்திற்
பாடும் புலவர் புகழொட்டக்கூத்தன் பதாம்புயத்தைச்
சூடுங் குலோத்துங்க சோழனென்றேயென்னைச் சொல்லுவரே"

என்று மற்றைப்பகுதியைத் தானேபாடி அச்செய்யுளைப் பூர்த்திசெய்தான். இதனால், அவ்வரசனுக்கு நல்லாசிரியராகிய இவர்பக்கல் உள்ள நன்குமதிப்பும் நன்றியறிவும் விளங்குவதோடு, இவர் தமது அடிமேல் அரசன் முடி வைத்து வணங்கும் பெருமை வாய்ந்தவ ரென்பதும் நன்கு விளங்கும். எத்தனையோ அரசர் எத்தனையோ புலவர்களைத் தமது புலமைத்திறத்தால் வசப்

பக்திப் பெருமை பெற்றிருந்தாலும், இப்படிப்பட்ட சிறப்பைப் பெறுதல் அரிதன்றோ! இதனைக் கொண்டாடி முருகதாசர் புலவர்புராணத்தில்

"எத்தனை புலவரோ முன் னிறைவரை வயஞ்செய் தாற்று
ரத்தனை பேருளாரு மருந்தமி ழொட்டக்கூத்த
னொத் தவர் முடிமேல் தந்தா ளுறவைத்த தில்லையில்லை
யித்தனை யதிட்ட மன்னோற் கிசைந்தமை யேற்றந் தானே"

என்று பாடியதும் காண்க.

சக்கரவர்த்தியாகிய ஓர் அரசன் தனது ஆளுகையில் நல்லநீதியை நிலைக்கச்செய்யும்பொருட்டு அதற்குஇடையூறான கொடுங்கோன் மன்னர்களையும் கொடியசனங்களையும் சமயமறிந்து பிடித்துச் சிறையிலிருத்திப் பின்பு உரிய காலத்தில் விசாரணைசெய்து குற்றமில்லாதாரை விடுத்துக் குற்றவாளிகளைத் தக்கபடி தண்டித்தல் போலவே,கவிச்சக்கரவர்த்தியாகிய ஒட்டக்கூத்தர் தமது ஆட்சியில் நல்ல புலமையை நிலைக்கச்செய்யும்பொருட்டு அதற்கு இடையூறாகத் தக்க கல்வித்திற மில்லாமலே அத்திறமுடையார்போல நடிக்கின்ற போலிப்புலவர்களை அவர்கள் அரசனிடத்துச் சம்மானம்பெறவருகிற சமயத்திற் பிடித்துக் காவலில்வைத்துத் தேவிகொலுவிருக்கின்றநவராத்திரியுத்ஸவத்தில் அவர்களைச் சிறையிலிருந்துவருவித்துத் தக்ககேள்விகள்கேட்டு அவற்றிற்கு ஏற்ற விடை கூறினவர்களை அரசனைக்கொண்டு வெகுமதி செய்து அனுப்பி அங்ஙனம் உத்தரஞ்சொல்லாதவர்களை அவமதித்து இருவர் இருவராகக் குடுமியோடு குடுமி முடிபோட்டு இறங்கிநிற்கத் தேவிமுன் பாகநிறுத்திப் பிடாரிக்குச்சோடுகடாவெட்டுவதுபோலச் சற்றும் இரக்கமில்லாமல் அவர்கள்தலைகளைப் பதைக்கப்பதைக்க வெட்டிப் பலிசெலுத்தும் வழக்கத்தை மேற்கொண்டிருந்தனர்.

"குட்டுதற்கோ பிள்ளைப் பாண்டிய னிங்கில்லை
குறும்பியளவாக் காதைக் குடைந்து தோண்டி
யெட்டினமட் டறுப்பதற்கோ வில்லி யில்லை
யிரண்டொன்று முடிந்து தலையிறங்கப் போட்டு
வெட்டுதற்கோ கவி யொட்டக்கூத்த னில்லை
விளையாட்டாக் கவிதைதனை விரைந்து பாடித்
தெட்டுதற்கோ அறிவில்லாத் துரைக ளுண்டு
தேசமெங்கும் புலவரெனத் திரிய லாமே"

என வழங்குந் தனிப்பாடலினாலும் இத்தன்மை அறியப்படும். தமிழ்நாவலர் சரிதையில் 'கவிகளை அறுத்தபோது சோழனும் பாண்டியனும் பாவமென்று ஓலை வரவிட, இராஜா வெட்டவந்தபோது பாடியது':—

"அன்றையினு மின்றைக் ககன்றதோ வல்லாது
குன்றெடுத்து நீ திருத்திக் கொண்டாயோ—என்றும்
அடைந்தாரைத் தாங்கு மகளங்கா நீயும்
நடந்தாயோ நாலைந் தடி"

என்றதும் காண்க.

ஒருவன் பாடும் பாட்டில் ஏதாவது குற்றங் கண்டால் கண்டவுடனே அவன்தலையில் நறுக்கென்று குட்டுவது, பிள்ளைப்பாண்டியனென்னும் அரசனது ஏற்பாடு; அவனிடம் பரிசுபெறவந்த வித்துவான்கள் பலரும் 'குட்டுப் பட்டாலும் மோதிரக்கையாற் படவேண்டும்' என்கிற பழமொழியைப் புது மொழியாக ஞாபகப்படுத்திக்கொண்டு வந்தவழியே திரும்பிப்போய் மேன்மேற் கல்விகற்கமுயல்வது, அவன்காலத்தில் இயல்பாயிருந்ததாம். வில்லிபுத்தூரார், வித்தியாசாமர்த்தியத்தால் வாதஞ் செய்யும்பொழுது கல்விச்

செருக்குள்ள எதிரிகள்தோற்றால் வெற்றிக்கு அடையாளமாகத் தமது கையில் எப்பொழுதும் ஆயுதமாக ஏந்தியுள்ள துறட்டை அவர்கள் காதில் மாட்டிப் பிடித்திழுத்துக் காதை ஒட்ட அறுத்து, யானையின் மதக்களிப்பை அங்குசத்தால் அடக்குவதுபோல அவர்களது கல்விச்செருக்கைத் தமது துறட்டுக்கோலா லொழிப்பதைத் தமது வழக்கமாக வைத்துக்கொண்டு பிருதுகூறிச் சென்று திக்குவிசயஞ் செய்துவந்தார். அவைபோலவே, ஒட்டக்கூத்தரும் செருக்கியபோலிப்புலவர்களை சிறைவைத்துப் பரீக்ஷித்துத் தோற்றவர்கள் தலைகளை வெட்டிவந்தனர். அரசன் இவரிடத்தில் மிகவும் பிரீதிவைத்திருந்ததனால், இவர் இங்ஙனஞ்செய்தற்கு இடங்கொடுத்துவந்தான்.

[கல்வியின் அருமையைத்தெரிவிக்கிறநல்லவழியாகையால் இவர்செய்துவந்த இது பாதகமாகாதென்றும், இவர்க்கு இடங்கொடுத்துவந்த அரசன் கொடுங்கோல்மன்னனாகானென்றும், இங்ஙனமில்லாவிடின் அக்காலத்தும் இக்காலத்திற்போலச் சிற்றறிவுடையோரும் பேரறிவுடையோர்போலவே பண்டிதர் மகாபண்டிதர் கவி கவிராயர் வித்துவான் வித்வச்சிரோமணி என்பவை முதலாகக் கண்டதுகண்டபடி பல பட்டப்பெயர்களை எவரும் கொடுக்கவேண்டிய அவசியமில்லாமலே தாங்களே சொந்தத்தில் வைத்துக்கொண்டு தாந்தோன்றிகளாய்த் திரிவார்களென்றும், இப்படிப்பட்ட கெட்ட வழக்கத்தை நிறுத்துவதற்கு ஏதுவானதனால் இவர்செய்துவந்தது லோகோபகாரமான காரிய மென்பதற்குச் சிறிதுந் தடையில்லை யென்றும், இல்லாவிடின் கல்வி அபிவிருத்தியாகா தென்றும், இக்காலத்தில் வழங்குகிற ராஜபாஷைப் பரீட்சைக்கு உரிய பட்டங்களை அப்பரீட்சைதேறாத பிறர் வைத்துக்கொண்டாற் குற்றமாவதுபோலவே முற்காலத்திலும் தகுதியில்லாதவர் பட்டப்பெயர்களைச் சூடுவது குற்றமாயிருந்ததென்றும், அக்காலத்து அரசர் முதலிய பிரபுக்கள் தகுதியுடைய பண்டிதர்களின் யோக்கியதையைத் தக்கபடி யறிந்து அதற்கேற்ப வெகுமானங்கள் செய்துவந்தார்க ளாகையால் தகுதியல்லாதவர்கள் புலவர்களென்று நடித்தால் அவர்களைச் சிட்சிப்பதற்கு வேண்டிய ஏற்பாடுகளுஞ் செய்யப்பட்டிருந்தன வென்றும், இக்காலத்தி லோ சம்மானஞ்செய்வது இல்லாமையால் அவமானஞ்செய்வதும் இல்லையாயிற் றென்றுங் கூறுவர்.]

இவர்செய்த பிரசித்தமான நூல்கள் - உத்தரராமாயணம், ஈட்டியெழுபது, வீரபத்திரப்பரணியென்றுவழங்கும் தக்ஷயாகப்பரணி, அஷ்டத்துப்பரணி, அரும்பைத் தொள்ளாயிரம், நாலாயிரக்கோவை, குலோத்துங்க சோழன்கோவை, மூவருலா முதலியன. கலிங்கத்துப்பரணியும் இவர்செய்தது என்பர் ஒருசாரார்; அது சயங்கொண்டார்செய்ததென்பதே சரி.

ஒட்டக்கூத்தர், கோவை உலா அந்தாதி பாடுவதில் ஒப்புயர்வில்லாமல் மிகச்சிறந்தவர்; இதனை, "வெண்பாவிற் புகழேந்தி" என்ற தொடக்கத்துச் செய்யுள்கொண்டும் அறிக.

ஒட்டக்கூத்தர் இராமாயணம் பாடியது:—இங்ஙனம் இருக்கையில், சோழநாட்டில் திருவழுந்தூரில் வேளாளவருணத்திற் பிறந்து திருவெண்ணெய்நல்லூர்ச் சடையப்பவள்ளலினால் ஆதரிக்கப்பெற்று வளர்ந்துவரும் இளமையிலேயே சரசுவதிகடாக்ஷமும் கம்பரென்னும் பெயரும் பெற்ற புலவர், சோழராசனையடுத்து அவனதுசபையில் நாள்தோறும்வந்து சமயோசிதமாகவும் சாதுரியமாகவும் பலகவிகள் பாடிப் பிரசங்கித்து 'கல்வியிற்பெரிய கம்பர்' என்றும், 'புலவர்பெருமான்' என்றும் பெரும்பெயர்பெற்றார். பின்பு ஒருநாள் சடையப்பவள்ளல் கம்பரது புலமைத்திறம் விளங்குமாறு அவரை ஏதாவது ஒரு பிரபந்தம் பாடும்படி செய்யவேண்டுமென்று சோழராசனுக்கு அறிவிக்க, அவன் 'தனியே ஒருவரைப் பாடச்செய்தலினும், இருவரை ஒருசேரப் பாடும்படி செய்தால், புலமைத்திறம் நன்றாகவிளங்கும்' என்று

நினைத்து, கம்பர் ஒட்டக்கூத்தர் இருவரையும் நோக்கி, 'ஸ்ரீராமசரித்திரத்தைத் தமிழ்ப்பாவினாற் பாடிமுடிக்கவேண்டும்' என்று கூறினன். அதுமுதல் ஒட்டக்கூத்தர் தமிழில் இராமாயணம் பாடத்தொடங்கிச் சுந்தரகாண்டம் வரையில் முடித்து யுத்தகாண்டம் இயற்றிக்கொண்டிருக்குமளவும் கம்பர் சிறிதும் பாடத்தொடங்காமலே யிருந்தனர். அதனை யறிந்து அரசன் ஒரு நாள் இருவரையும் வருவித்து 'இராமசரித்திரம் எவ்வளவு பாடியாயிற்று?' என்று வினவியதற்கு, ஒட்டக்கூத்தர் 'யுத்தகாண்டத்திற் கடல்காண்படலமளவும் ஆயிற்று' என்றார். கம்பர் ஒரு பாட்டும் பாடாதிருந்தும் தாம் ஒட்டக்கூத்தரினும் அதிகமாய்ப்பாடினதாகச் சொல்லவேண்டுமென்று நினைத்து 'அதற்குமேல் சேதுபந்தனப்படலமளவும் பாடினேம்' என்றார். 'அதனைச் சற்றே பிரசங்கியும்; கேட்போம்' என்று அரசன் சொல்ல, கம்பர் உடனே அப்படலத்தைமாத்திரம் ஆசுகவியாகப் பாடி மனத்தில் அமைத்துக்கொண்டு அதில்

> "குமுத னிட்ட குலவரை கூத்தரின்
> திமித மிட்டுத் திரியுந் திரைக்கடல்
> துமித மூர்புக வானவர் துள்ளினார்
> அமுத மின்னு மெழுமெனு மாசையால்"

என்ற பாடலை எடுத்துச்சொல்லிப் பிரசங்கித்தார். அதுகேட்டவுடனே ஒட்டக்கூத்தர் கம்பரை நோக்கி 'துளியைத் துமியென்றீரே, இதற்கு எங்கேனும் ஆதாரம் உண்டா?' என்று ஆக்ஷேபிக்க, கம்பர் 'இது, செய்யுள்வழக்கில் இன்றாயினும், உலகவழக்கி லுள்ளது' என்றுசொல்ல, கூத்தர் 'அவ்வுலகவழக்கை மெய்ப்பிக்கவேண்டும்'என்று வற்புறுத்த, 'நாளை அங்ஙனமே செய்வோம்' என்று சொல்லிப் பிரசங்கத்தை முடித்துப் பின்பு வீட்டிற்குச் சென்ற கம்பர் சரசுவதியைப் பிரார்த்தித்து அக்கலைமகள் பிரசன்னமாய் அநுக்கிரகித்தபடி மறுநாளுதயத்தில் ஒட்டக்கூத்தரையும்சோழராசனையும் இடைத்தெருவுக்கு அழைத்துச்செல்ல, அப்பொழுது நாமகள் அங்கு ஓர் இடைப்பெண்ணாக வடிவுகொண்டு சிலபிள்ளைகளுடனே வந்து குடியிருந்ததொருவீட்டில் தங்கித் தயிர்கடைகின்றவளாய் அருகிலிருந்த சிறுவர்களை நோக்கி 'பிள்ளைகளே! உங்கள்மேல் மோர்த்துமி தெறிக்கப்போகிறது; எட்ட இருங்கள்' என்றுசொல்ல, கம்பர் ஒட்டக்கூத்தரைநோக்கி 'அது கேட்டீரோ'என்ன, அவர் அதனை ஒப்புக்கொண்டு அவ்வீட்டினுட்சென்று பார்க்குமளவில், அங்கிருந்த இடைப்பெண்ணும் சிறுபிள்ளைகளும் தயிர்த்தாழியுமுதலியனவும் தமதுகண்ணுக்குத்தோன்றியவுடனே மறைந்துவிட்டதனால், இது சரசுவதியின் திருவிளையாடலேயென்று அறிந்து அதிசயித்தனர். இவ்வாறு கம்பர் மறுபடி அரசனால் தூண்டப்பட்டு வெகுவிரைவாக நாளொன்றுக்கு எழுநூறுபாடல்வீதம் பதினயிரத்தைஞ்நூறுபாடல்களாற்பதினைந்துநாளில் இராமாயணத்தில் பாலகாண்டம்முதல் யுத்தகாண்டமளவும் ஆறுகாண்டங்களைச் செய்துமுடித்தனர். அவ்வளவிலே, ஒட்டக்கூத்தர் தமதுயுத்தகாண்டத்தை முடித்து உத்தரகாண்டத்தையும் பாடி நூலைப் பூர்த்திசெய்தார். கம்பர் தாம் இராமாயணம் இயற்றுகிறபொழுதே அதன்பாடல்சிலவற்றை இராசசபையில் எடுத்துச்சொல்லிப் பிரசங்கிக்க, அதுகேட்ட ஒட்டக்கூத்தர் தாம்செய்த இராமாயணம் கம்பராமாயணத்துக்குமுன் தலையெடாதென்று எண்ணித் தமது இராமாயணச்செய்யுள்கள் எழுதிய ஏடுகளை முதலாக ஆதி தொடங்கிக் கிழித்தெறிந்துகொண்டிருக்க, அச்சமயத்தில் அங்குவந்த கம்பர் அதுகாணுமளவில், யுத்தகாண்டம்வரையிற் கிழிபட்டுப்போயிருக்க மிச்சமான உத்தரகாண்டத்தையாவது அப்படியே கிழியாதுவைத்திருக்கும்படி வேண்டினதுமன்றி, தாம் அக்காண்டம்பாடுவதில்லை யென்றுங் கூறினார். அதற்கு இசைந்து ஒட்டக்கூத்தர் அக்காண்டத்தைக்கிழியாது நிறுத்தினர்.

ஒட்டக்கூத்தருடைய மதம் சைவமே. அவர்பாடிய உத்தரராமாயணத்தினால், அவர்க்கு இராமபக்தி மிகுதியாயிருக்கிறதுபோலத் தோன்றினாலும், அவர் சைவசமயத்தவ ரென்பதை மறுக்கமுடியாது. ஆனால், விஷ்ணுத்வேஷம் பாராட்டுகிறவரல்ல ரென்றவளவே கூறலாம்.

கம்பர் இறந்த செய்தியைக் கேட்டவுடனே இவர்

"இன்றைக்கோ கம்ப னிறந்தநாள் இப்புவியில்
இன்றைக்கோ என்கவிதை யேற்குநாள்—இன்றைக்கோ
பூமடந்தை வாழப் பொறைமடந்தை வீற்றிருக்க
நாமடந்தை நூலிழந்த நாள்"

என்று பாடி இரங்கின ரென்பர்.

தமிழ்நாவலர்சரிதையில் 'ஒட்டக்கூத்தர் உலாப்பாடியபோது பேராசிரியர் நேமிநாதர்பட்டோலைபிடிக்கப் பாடியது' என்று தலைப்புக்கொடுத்துஒரு செய்யுள்காணப்படுதல்கொண்டு, பேராசிரியரும் நேமிநாதரும் ஒட்டக்கூத்தர்காலத்தவ ரென அறியலாம். சிலப்பதிகாரவுரையாசிரியராகிய அடியார்க்குநல்லார் அந்நூற் பதிகத்து "ஆரஞர்" என்றதன் விசேடவுரையில்,

"'மக்களிழந்தவிடும்பையினும் மனையாளிழந்தவிடும்பையினும்
மிக்கவிடும்பை யோவாத விதவையிடும்பை யெனவிளம்பத்
தக்க ததனு லென்கழுத்திற் றாலிகீதந்தரு ளென்று
தொக்கமணிப்பூண்முடியானைத் தொழுதுபின்னுமிவைசொல்லும்"

என்றார் பிறரும்' என்று மேற்கோள்காட்டிய செய்யுள் ஒட்டக்கூத்தரது உத்தரகாண்டத்துத் திக்குவிசயப்படலத்திலே காணப்படுதலால், ஒட்டக்கூத்தர் அடியார்க்குநல்லார்க்கு முந்தியவர் அல்லது சமகாலத்தவர் என்றூகிக்கலாம்.

மற்றும் இவ்விருபுலவர்களுடையசரித்திரக்குறிப்புக்களைத்தொண்டைமண்டலசதகம், தமிழ்நாவலர்சரிதை, பாண்டிமண்டலசதகம், சோழமண்டலசதகம், புலவர்புராணம் முதலிய நூல்களிற் காணலாம்.

---

ஸ்ரீ

# இராமாயணம்.

ராமாயணம் என்ற வடசொல், தமிழில் வரும்போது, இராமாயணம் என முதலில் இகரம்பெறும்; "ரவ்விற்கு அம்முதலாம் முக்குறிலும்,... மொழி முதலாகி முன்வருமே" என்பது காண்க. இப்பெயர் - ராம அயந என்ற இரண்டுமொழி சேர்ந்தது; வடமொழிப்புணர்ச்சி, தீர்க்கசந்தி: 'அ ஆ முன் அ ஆ வரின் இரண்டுங்கெட ஓர் ஆகாரம் தோன்றும்.' இது ஒன்றற்கு இயற்பெயராதலால், வடநூல்விதிப்படி ராமாயணம் என நிலைமொழியின் ரகாரத்தை நோக்கி வருமொழியின் நகாரம் ணகாரமாயிற்று. தனது திரு மேனியழகினாலும் நற்குணநற்செய்கைகளினாலும் எல்லோரையும் மகிழ்விப் பவன் என்பது, 'ராம' என்னுஞ் சொல்லுக்குப் பொருள்; அயநம்- அறிவிப் பது: ஆகவே, இராமகதையைத் தெரிவிக்கும் நூல் என்பது திரண்டபொ ருள். அயநம் - ஸ்தாநம்; அதாவது விஷயம் எனப் பொருள்கொண்டு, இரா மனை விஷயமாகவுடைய நூலெனக் கூறுதலும் உண்டு. ராமா அயநம் என்று பிரித்து சீதையை அறிவிக்கும் பிரபந்தமென்றும் சிலர் பொருளுரைத்திருக் கின்றனர்; [ராமா-சீதை.] ராமாயணம் என்பது முதலில் வால்மீகிமுனிவர் செய்தநூலுக்கு இயற்பெயராய், "முதனூல் கருத்தன் அளவுமிகுதி, பொருள் செய்வித்தோன் தன்மைமுதல் நிமித்தினும், இடுகுறியானும் நூற்கு எய்தும் பெயரே" என்றபடி அதன்வழிநூலாகிய இத்தமிழ் நூலுக்கும் பெயராயிற்று.

இந்நூல், பெருங்காப்பியமாம்; (பெருங்காப்பியமாவது - வாழ்த்து, தெய்வவணக்கம், தலைமைப்பொருளுரைத்தல் என்கிற மூன்றுவகை மங்க ளங்களுள் ஒன்றை முதலிற் பெற்று, அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நாற்பொருளையுந் தருந் தன்மையதாய், சிறந்தவொருதலைவன்மேலதாய், நாடு நகரம் மலை கடல் காலம் சந்திரசூரியஉதயஅத்தமனங்கள் விவாகம் முடிகவித்தல் பொழில்விளையாட்டு நீர்விளையாட்டு மதுபானம் மக்கட்பேறு கலவியிற்களித்தல் புலவியிற்புலத்தல் மந்திரம் தூது போர்ச்செலவு போரி டல் வெற்றி முதலிய பலவகைவருணனைகளை யுடையதாய், சருக்கம் இலம் பகம் பரிச்சேதம் முதலான பாகுபாடு பொருந்தி, வீரம்முதலிய சுவைக ளும் அவற்றைவிளக்குங்கருத்துக்களும் விளங்க, காதுக்குஇனிய ஒருதிறப் பாட்டாலாயினும் பலதிறப்பாட்டாலாயினும் கட்டுரையாலாயினும் கற்றோ ராலியற்றப்பட்டு நிற்பதாம். இங்குக்கூறிய வருணனைகளுட் சில குறைந்து வரினுங் குற்றமில்லை. இங்ஙனங்கூறியதனால், இது, ஒருகதையின்மேல தென்றதாயிற்று.

(மேற்கூறியவாறு பலவருணனைகளைப் பெறுமலும் அறம் பொருள் இன் பம் வீடு என்னும் நான்கினுள் ஒன்றும் பலவுங் குறைந்தும் வருவன - சிறு காப்பியமென்றும், காப்பியமென்றுங்கூறப்படும்; அவை-உலா, பரணி, ஆற் றுப்படை, பிள்ளைத்தமிழ், கோவை, கலம்பகம், அந்தாதி, மாலை முதலியன.)

இதிகாசம் புராணம் என்ற பகுப்பு இரண்டனுள், இராமாயணம் இதி காசமாம்; மகாபாரதமும் அப்படியே. உபதேசபரம்பரையில் வந்த ஒருவ ருடைய பழையசரித்திரமொன்றைப்பிரதானமாகஎடுத்துப் பலகிளைக்கதை களோடு புணர்த்து விரித்துக்கூறும் நூல் இதிகாசமென்றும், உலகத்தின் தோற்றம், ஒடுக்கம், முனிவர்கள் அரசர்கள் மரபு, அவர்கள் சரித்திரங்கள், மநுவந்தரம் என்னும் ஐந்துவிஷயங்களை விரவிக்கூறும் நூல் புராணமென்

**றும் வேறுபாடு உணரத்தக்கது: [இதிகாசம் - பழையஒருவரலாற்றை விரித்துக்கூறும் நூல். புராணம் - மேற்குறித்த ஐந்து இலக்கணங்களும் அமையப் பழைய பல வரலாறுகளைக் கூறும் நூல்.]**

முதனூலாகிய வடமொழிவால்மீகிராமாயணத்தோடு,அதன் வழிநூலாகிய இத்தமிழ்ராமாயணம் சிற்சிலவிடத்துச் சிறிதுசிறிது வேறுபடுதலும் உண்டு. அது, "முன்னோர் நூலின் முடிபொருங் கொத்துப், பின்னோன் வேண்டும் விகற்பங் கூறி, அழியா மரபினது வழிநூலாகும்" என்ற வழிநூலிலக்கணவிதிபற்றித் தமிழாசிரியர்களாற்பிறநூல்மேற்கோள்கொண்டாவது தமதுகற்பனாசக்திகொண்டாவது அமைக்கப்பட்டதெனக்கொள்ள வேண்டும்; இப்படி மாறுபடுகின்றவிடத்து, 'ஸ்ரீராமாயணத்தில் இல்லையேயாகிலும், இதிகாசாந்தரபுராணாதிகளிலேயாதல் கல்பாந்தரத்திலேயாதல் உண்டென்று கொள்ளவேணும்' என்று ஆன்றோர் அருளிச்செய்து அமைத்திருத்தல் உணரத்தக்கது. இதிகாசாந்தரமாகிய பாரதத்திலும், பாத்மம் வைஷ்ணவம் ஸ்காந்தம் கூர்மம் முதலிய புராணங்களிலும் இராமசரித்திரம் சிற்சிலவேறுபாடு அமையக் கூறப்பட்டிருத்தல் காணலாம்.

இவ்விராமாயணம், அந்தந்தப்பாகத்துச் சரித்திரத்தின் முக்கியமான விஷயத்தைக் குறிக்குஞ் சொற்களால், பாலகாண்டம் அயோத்தியாகாண்டம் ஆரணியகாண்டம் கிஷ்கிந்தாகாண்டம் சுந்தரகாண்டம் யுத்தகாண்டம் உத்தரகாண்டம் எனப் பெயர்பெற்ற எழுகாண்டங்களை யுடையது.

இராமாயணத்தை முதலில் வடமொழியிற் செய்தவர், வால்மீகி மகாமுனிவர். இவர் ஸ்ரீராமபிரான் பூலோகத்தில் எழுந்தருளியிருக்கையிலேயே இராமாயணம் முழுவதையுஞ் செய்தருளி அவர் அசுவமேதயாகஞ்செய்யத் தொடங்கியசந்தர்ப்பத்தில் அவர்சந்நிதியிலே அவர்குமாரர்களான குசலவர்களைக்கொண்டு அரங்கேற்றினார். (ஆனால்,பாலகாண்டம்முதல்யுத்தகாண்டமீறாக ஆறுகாண்டங்களும் உத்தரகாண்டத்தில் அசுவமேதமளவுந்தான் இராமபிரான் சபையிற் கேட்டனர். உத்தரகாண்டத்தில் எதிர்காலவரலாற்றை முனிவர் ஞானக்கண்ணினால் முந்தியறிந்து கூறியதான மற்றைய பகுதியை அப்பெருமான் பிரமதேவர் சொன்னபடி எகாந்தத்திற் கேட்டனர்.) இது, நாரதமுனிவரது உபதேசத்தாலும் பிரமதேவரது அநுக்கிரகத்தாலும் செய்யப்பட்ட நூலாகையால், சிறந்தபிரமாணமாக வைதிகமதத்தவரெல்லாராலும் ஒப்புக்கொள்ளப்படுகிறது. இது, ஸம்ஸ்கிருதபாஷையில், ஆதிகாவியம். பின்பு பிறமுனிவரும் கவிஞரும் இதனைப் பலவகைக்காவியங்களாகவும் நாடகங்களாகவும் இயற்றியிருக்கின்றனர். இவ்வாறே வேறுபாஷைகளிலும் அந்தஅந்தவித்துவான்கள் செய்திருக்கிறார்கள். தமிழில் சங்கத்துராமாயணமென்று ஒன்று இருந்ததாகச் சொல்வதேயன்றி வழங்கிவருவது கம்பராமாயணந்தான்.

இராமாயணத்தின் முதல் ஆறுகாண்டங்களைக் கம்பரும்,ஏழாவதுகாண்டத்தை ஒட்டக்கூத்தரும் வடமொழி வால்மீகிராமாயணத்தைப் பெரும்பாலும் தழுவித் தமிழிற் பாடினார்கள். ஏறக்குறைய, கம்பர்பாடல் - ௧0௫00; ஒட்டக்கூத்தர்பாடல் - ௧௫00; ஆக - ௧௨000. வடமொழி வால்மீகிராமாயணம், ௨௪000 - சுலோகங்களையுடையது.

ஏழாவது

# உத்தரகாண்டம்.

உத்தரம் என்றால், பிற்பட்டது என்று பொருள். (இதன் எதிர்மொழி- 'பூர்வம்' என்பது; அதன்பொருள், முற்பட்டதென்பது.) ஆகவே, பட்டாபிஷேகத்துக்குப் பிற்பட்ட கதையைச் சொல்லுங்காண்டமென்பது திரண்டபொருள்; எனவே,உத்தரகாண்டமென்ற வடமொழித்தொடர்-இரண்டாம்

வேற்றுமை உருபும்பயனும் உடன்தொக்க தொகையாம். காண்டம்-கூட்டம்; இப்பொதுப்பெயர்-இங்கு, சரித்திரத்தின் ஒருபாகத்தை யுணர்த்துஞ் செய்யுட்களின் கூட்டமென்று சிறப்பாகக் கொள்ளத்தக்கது; இங்குப் பெரும் பிரிவுக்குப் பெயராக வழங்கப்பட்டது. இது உத்தரராமாயணமென்றும் வழங்கும்: பிற்பட்டதாகிய ராமாயண மென்று பொருள்; என்றால், இராமாயணத்திற் பட்டாபிஷேகத்துக்குப் பிந்தினசரித்திரத்தைக் கூறுகிற பாகமென்றே கருத்து: உத்தரமாகிய ராமாயண மெனப் பண்புத்தொகையாக விரிக்க. *

இக்காண்டம், திருவோலக்கப்படலம் முதல் சந்திரகேது நகர்ப்படலம் ஈறாகப் பகுக்கப்பட்ட கஅ - படலங்கள் அடங்கிய (ஏறக்குறைய) ௩௫00 - செய்யுள் உள்ளது. இந்நூலின் அச்சுப்பிரதிகளையும் ஏட்டுப்பிரதிகளையும் வைத்துக்கொண்டு ஒப்புநோக்கியவிடத்து, அளவிறந்த பாடபேதங்கள் இடந்தோறுங் காணப்படுகின்றன. அன்றியும், சிலசெய்யுள்கள் கூடியுங் குறைந்தும் பிறழ்ந்தும் உள்ளன. படலங்களின் பெயர்களிலும் பகுப்பிலும் பலமாறுபாடுகளும் உண்டு. இக்காண்டத்தில்

பதினொன்றாவது

## அநுமப்படலம்.

அநுமானைப்பற்றிக் கூறும் பாகம் என்று பொருள்; இரண்டனுருபும் பயனும்தொக்கதொகை. அநுமானுடைய சம்பந்தமாகிய படலமென்று ஆறும்வேற்றுமைத்தொகையாக விரித்து, அநுமானின்விஷயமான பாகமென்று கருத்து உரைப்பினுமாம். அநுமன் படலம் எனப் பிரிக்க. நிலைமொழி ஈற்று மெய் கெட்டு வருமொழிமுதல்வலிஇரட்டியது, "சிலவிகாரமாம் உயர்திணை" என்றதனால். அநுமன் - ஹநுமாந் என்ற வடசொல்லின் திரிபு. இவன், பிறந்தவுடனே இளஞ்சூரியனைக் கனிந்தபழமென்று கருதிப் பிடிக்கப்பாய்ந்தபொழுது, அதனையறிந்து கோபங்கொண்ட இந்திரனது வச்சிராயுதத்தினால் அடிக்கப்பட்டுச் சிதைந்தகன்னமுடையவனானதனால், இவனுக்கு ஹநுமான் என்று பெயராயிற்று; ஹநு-கன்னம், மாந்-வடமொழிப்பெயர்விகுதி. இவனுக்கு இப்பெயர் இந்திரனால் இடப்பட்டது; 25-ஆம் செய்யுளிற் காண்க. இவ்வாநரவீரன், சுக்கிரீவனுக்கு மந்திரியும் சிநேகிதனுமானவன்; இராமனுக்கும் சுக்கிரீவனுக்கும் நட்புச்செய்வித்தவன்; இராமதூதனாய்ச் சென்று கடல் கடந்து இலங்கைசேர்ந்து சீதையின் வரலாற்றை அறிந்து மீண்டுவந்து இராமபிரானிடம் செய்திகூறி அதன்பின் இராமன் சென்று இராவணன் முதலிய அரக்கர்களைக் கொன்று வெல்லுதற்கு மிக்க உதவிபுரிந்தவன். படலமென்னும் வடசொல்லுக்கும் கூட்டமென்பது பொருளாயினும், அது, சங்கேதத்தால், இங்கு, ஒருபெரியவகுப்பினுட்பட்ட சிறியபாகத்தைக் குறிக்கும்.

அநுமானுக்கு 'திருவடி' என்று ஒருதிருநாமம் ஸ்ரீவைஷ்ணவசம்பிரதாயத்தில் வழங்குகிறது; அதற்குக் காரணம் - அவன் எம்பெருமானது திருவடிக்கு அடியவனாயிருத்தல். அநுமானைச் சிறியதிருவடி யென்றும், கருடனைப் பெரியதிருவடி யென்றும் வழங்குதல் மரபு; இராமாவதாரத்தில்மாத்திரமே திருமாலுக்கு அநுமான் அடிமையாய் உதவியதும், எப்பொழுதும் திருமாலுக்குக் கருடன் அடிமையாய் உதவுதலு மாகிய வேறுபாடு அதற்குக் காரணமாம்.

*சென்னை ராஜதானிவித்தியாசாலைத் தமிழ்ப்பிரதமபண்டிதராயிருந்தவரும், வடமொழி தென்மொழி இருமொழியிலும் நிரம்பியபுலமை வாய்ந்தவருமான ஸ்ரீ. உ. வே - தி. ஈ - ஸ்ரீநிவாசராகவாசாரியர், உத்தரகாண்டத்தைப் பெரும்பாலும் வடமொழிமுதனூற்போக்கைவிடாது தழுவித் தமிழில் வசனரூபமாக எழுதியுள்ளார்; அது, உத்தரராமாயணவசன மெனப்படும்.

இவன் - சிரஞ்சீவிகள் எழுவருள் ஒருவன்; மற்றையோர்-அசுவத்தாமா, பலிசக்கரவர்த்தி, வியாசன், விபீஷணன், கிருபன், பரசுராமன் என்பவர். சிரஞ்சீவி - நெடுங்காலம் [அதாவது - கற்பகாலமளவும்] சீவித்திருப்பவன்.

இவன், நித்தியப்பிரமசாரி.

விலங்கினமாகிய வாநரசாதியில் தோன்றிய அநுமானை உயர்திணையாகக் கூறுதல் இலக்கணத்திற்கு ஒக்குமோ? எனின்,—உயர்திணை அஃறிணை என்ற பகுப்பிற்குக் காரணம் முறையே அறிவின் நிறைவும் குறைவுமே யாதலால், அவ்வறிவிற் குறைவின்றி ஐம்பொறியறிவோடு பகுத்தறிவையுங் கொண்டு மனிதன்போலவே தொழில்திறமமைந்த தெய்வக்குரங்கை உயர்திணையின்பாற்படுத்துதல் ஒக்குமென்க. இத்தன்மை, மற்றும் வானரசாதியாகிய வாலி சுக்ரீவன் அங்கதன் நீலன் முதலியோர்க்கும், கரடியாகிய சாம்பவானுக்கும், கழுகாகிய சடாயு சம்பாதி என்பவர்க்கும் பொருந்தும். தொல்காப்பியத்துமரபியலில் உரைகாரர் "மாவும் மாக்களும் ஐயறிவினவே" என்ற சூத்திரத்தின்கீழ்க் குரங்கை விலங்கினமென்று பொதுவகையாற்கூறியவர் தாமே "மக்கள்தாமே ஆறறிவுயிரே" என்ற அடுத்தசூத்திரத்தின்கீழ் 'குரங்கு முதலாகிய விலங்கினுள் அறிவுடையனஎனப்படும் மனவுணர்வுடையன உளவாயின் அவையும் ஈண்டு ஆறறிவுயிராய் அடங்கும்' என்றமை காண்க. 'ஒரோவழி அஃறிணைப்பொருள்கள் மொழியாற் பேசுவன உளவாயின் அது தெய்வத்தன்மைமுதலிய விசேடத்தா னன்றிப் பொருட்டன்மையான் அன்மையின், அமைத்துக்கொள்வது' என்ற இலக்கணவிளக்கச்சூறாவளியும் இங்குக் காணத்தக்கது.

கதைத்தொடர்ச்சி.

[இராமாயணகதை மிகவும் பிரசித்தமானதாதலால், இந்தப் படலத்துக்கு முன்கதைத்தொடர்ச்சி சுருக்கமாகவே எழுதப்படுகிறது.]

இராவணன் முதலிய கொடிய அரக்கர்களின் உபத்திரவத்தைப் பொறுக்கமாட்டாமல் அவர்களைக்கொல்லும்படிபிரார்த்தித்ததேவர்களின் வேண்டுகோளுக்கு இரங்கிய ஸ்ரீமகாவிஷ்ணுவினது ஏழாவது திருவவதாரமாகக் கோசலதேசத்தில் அயோத்தியாநகரத்தில் தசரதசக்கரவர்த்தி குமாரனாய்த் திருவவதரித்த இராமபிரான் தனது சிறியதாயான கைகேயிக்குத் தனது தந்தை கொடுத்திருந்த வரங்களை நிறைவேற்றுதலின்நிமித்தம் அக்கைகேயியின்மகனான பரதனுக்கு இராச்சியத்தைக் கொடுத்துத் தான் பதினான்கு வருடம் வனவாசஞ்செய்ய உடன்பட்டு மனைவியாகிய சீதையோடும், தன்னைவிட்டுப் பிரியாத தம்பியான இலக்குமணனோடும் நகரத்தைவிட்டுப் புறப்பட்டுத் தண்டகாரணியஞ்சேர்ந்து அதில் கோதாவரிநதிதீரத்தில் பஞ்சவடியாச்சிரமத்தில் வசிக்கையில், அரக்கர்தலைவனாய் இலங்கையில் வாழ்கின்ற இராவணன், தனதுதங்கையான சூர்ப்பணகையினால் தூண்டப்பட்டுச் சீதையினிடம் பெருங்காதல்கொண்டு சந்நியாசிவேடம் பூண்டுவந்து, மாயமான் வடிவுகொண்ட மாரீசனது சூழ்ச்சியால் ராமலக்ஷ்மணர்களை அப்புறப்படுத்தி, தனித்துநின்ற சீதையை அச்சமயம்பார்த்து வஞ்சனையாக எடுத்துச் சென்று இலங்கையில் அசோகவனத்தில் அரக்கியர்சூழச் சிறைவைத்திட்டான். பின்பு சீதையைத்தேடிக்கொண்டு இலக்குமணனுடனே சென்ற ஸ்ரீராமன், வழியில் எதிர்ப்பட்ட அநுமான்மூலமாகச் சுக்கிரீவனோடு நண்பு கொண்டு அவன்வேண்டுகோளின்படி அவனது தமையனும் வாநரராசனுமான வாலியைத் தந்திரமாகக்கொன்று சுக்கிரீவனைக் கிஷ்கிந்தைநகரத்து அரசனாக முடிசூட்டிவைத்தபின் அவ்வாநரராசன் சீதையைத்தேடும்பொருட்டு அநுமான் முதலிய பலவாநரவீரர்களை ஆங்காங்குத் தூதனுப்ப, அங்ஙனம் இராமதூதனாய்த் தென்திசையிற் சென்ற அநுமான் கடல்கடந்து

சென்று சீதையுள்ளவிடத்தைத் தேடிக்கண்டுபிடித்து அவளுடன்பேசியபின் இலங்கைநகரத்தைஎரித்து மீண்டு வந்து செய்திகூறியவுடனே, இராமன் பெரிய வாநரசேனையைச் சித்தப்படுத்திக்கொண்டு புறப்பட்டுக் கடற்கரை சேருமளவில், தன்னை வந்துசரணமடைந்த இராவணன்தம்பியான விபீஷணனுக்கு அபயமளித்து அவனால் இலங்கையின் நிலைமையை அறிந்தபின்பு அவ்வாநரங்களைக்கொண்டு மலைகளைக்கொணர்ந்து அணைகட்டுவித்து அவ்வழியாற் கடல்கடந்து இலங்கை சேர்ந்து அங்குப் பெரும்போர்புரிந்து இராவணனைச் சேனையோடும் புத்திரமித்திரரோடுங் கொன்று விபீஷணனுக்கு முடிசூட்டிவைத்துப் பிராட்டியை மீட்டுக்கொண்டு விபீஷணனுடனும், அவனைச்சார்ந்த சில அரக்கர்களுடனும், சுக்கிரீவன் முதலிய வாநரவீரர்களுடனும் தானும் தன்மனைவியும் தம்பியுமாகப் புஷ்பகவிமானத்தில் ஏறித் திருவயோத்தி சேர்ந்தனன். அங்கு இராமன்வரவை எதிர்பார்த்திருந்த பரதன், தம்பியான சத்துருக்கினனுடனே எதிர்கொண்டுவந்து இராமபிரான்முதலானவர்களை வணங்கி உபசரித்து அழைத்துக்கொண்டுசெல்ல, அங்கு ஸ்ரீராமபட்டாபிஷேக மஹோத்ஸவம், வசிட்டர் சுமந்திரர் முதலிய பெரியோர்களால் வெகுசம்பிரமமாக நடந்தேறிற்று.

(இது, கீழ்அறுகாண்டத்தின் கதை; இனி, உத்தரகாண்ட வரலாறு:—)

இவ்வாறு இராமபிரான் திருவயோத்தியில் திருமுடிசூடியெழுந்தருளியிருக்கையில், அகஸ்தியர் ஜமதக்கினி பாரத்துவாசர் வசிஷ்டர் கௌதமர் கௌசிகர் காசியபர் அத்திரி தௌமியர் முதலிய முனிவர்கள் பலர் அந்தச் சக்கரவர்த்தித்திருமகனைக் கண்டு கொண்டாடக் கருதிக்கொண்டு அங்கு வந்து சேர, சபையில் வீற்றிருந்த இராகவபிரான் அவர்களை எதிர்கொண்டு அழைத்து வணங்கி உபசரித்துத் திவ்வியமான ஆசனங்களில் வீற்றிருக்கச்செய்து யோகக்ஷேமங்களை வினவ, அதற்கு அம்முனிவர்கள் 'எங்கட்கும் எல்லோர்க்கும் நெடுநாளாகப் பெருந்துன்பங்களை விளைத்துவந்த கொடிய இராட்சசராசனான இராவணனையும், அவன் தம்பியான கும்பகர்ணனையும், அவர்களினும் மிகக்கொடியவனும் இராவணன்மகனுமான இந்திரசித்தையும், மற்றும்பல அரக்கர்களையும் வேரோடு அழித்தருளிய நுமது கருணை இருக்க, எங்களுக்கு என்ன குறை?' என்று கொண்டாடிப் பேச, அதுகேட்ட இராமசந்திரன் 'அவ்வரக்கர்களுடைய பிறப்பும், வலிமையும், செயலும், அவர்கள்பெற்ற வரங்களும் முதலிய வரலாறுகளையெல்லாம் அருளிச்செய்யவேண்டும்' என்று அம்முனிவர்களை வினவ, அவர்களில் அகஸ்தியமாமுனிவர் அனைத்தையுஞ் சொல்பவராய்ப் புலஸ்திய வம்சவிருத்தாந்தத்தையும், பூர்விகராக்ஷசர் செய்தியையும், இராவணாதியர்பிறப்பையும், அவர்கள்பெற்ற வரங்களையும், இந்திரசித்தின் உற்பத்தியையும், இராவணன் திக்விசயஞ்செய்த விவரத்தையும், அவன் ஆங்காங்குச் சாபம்பெற்ற வகையையும் கூறியபொழுது, தசரதகுமாரர் அகஸ்தியரை நோக்கி 'அக்காலத்தில் இராவணனை வெல்லவல்ல ஓர் அரசனாயினும் வேறு ஒருவனாயினும் இல்லாமற்போனதோ?' என்று கேட்க, அம்முனிவர் அவ்விராவணன் ஒருசமயத்தில் கார்த்தவீரியார்ச்சுனனால் வென்று சிறையில் வைக்கப்பட்டதையும், மற்றொருசமயத்தில் வாலியினாற் பிடிக்கப்பட்டதையும் சொல்லி 'அப்படிப்பட்ட வாலியைக் கொன்ற உமக்குச் சமானமானவர் எவருமில்லை' என்று புகழ, பிறகு இராமபிரான் அநுமானைப் புகழ்ந்து கூறலாயினன்.

---

['அநுமான் தன்வலிமையைத் தான்அறியாதிருக்குங்காரணம் என்ன?' என்று இராமபிரான் அகஸ்தியரை வினவுதல்.]

1.—(இ - ள்.) பிறியா அறத்தின் - நீங்காத தருமத்தையுடைய [தருமத்தை விட்டுநீங்காத], அநுமான்—, வளர்ச்சி - தன்உடம்புவளரவேண்டுவனாயின், பெரு மேருவின் பெரியன் ஆம் -(உலகத்தில்) மிகப்பெரும்பொருளாகிய மகாமேருமலையைக்காட்டிலும் பெரியவனாவன்; மேனி சிறிது ஆய் ஒடுக்கும் எனின் - அவ்வுடம்பைச் சிறியதாக ஒடுங்கச்செய்யவேண்டுவனாயின், அற்பம் அணு ஆனதின் சிறியன் ஆம் - மிகச்சிறியதான அணுவைக்காட்டிலும் சிறியவனாவன்; உறு காரணத்தின் அளவு ஆம் உரு கொள் - (இவ்வாறு அப்பொழுதப்பொழுது நேரும்) காரணத்திற்கு ஏற்ற அளவாகிற வடிவத்தைக் கொள்ளுகின்ற, உயர் வீரன் - சிறந்த வீரனான இவ்வனுமான், உற்ற வலி - (தன்னிடத்துப்) பொருந்திய வலிமையை, தான் அறியாது இருக்கும் அது - தான் அறியாமலிருக்குந் தன்மை, ஏது - என்னகாரணம் பற்றியது? முற்றும் - அக்காரணம்முழுவதையும், அறிவான் உரைத்தி - உனது அறிவினால் [நீ அறிந்தபடி] கூறுவாய், என - என்று, (எ - று.)—'உரைத்தி' என அடுத்த கவியோடு தொடரும்.

ஆகவே, இக்கவியும் அடுத்த கவியும் - குளகமாம்; ஒருதொடரெனப்படும். குளகமாவது - பலபாடல்கள் தொடர்ந்து ஒருவினையைக்கொண்டு முடிவது: "குளகம் பலபாட் டொருவினை கொள்ளும்." குளகமல்லாதது - முத்தகமெனப்படும்; அது - ஒருசெய்யுள் தனியேநின்று முடிவது; "முத்தகச்செய்யுள் தனிநின்று முடியும்."

தருமசீலனான அநுமான் மகாமேருவைப்போலப் பெரியதாகவும் அணுவைப்போல மிகச்சிறியதாகவும் தான் நினைத்தபடியெல்லாம் வடிவங்கொள்ளும் சித்திவலிமையுடையனாயிருந்தும் தனதுபலபராக்கிரமம் தான் அறியாமைக்குக் காரணம்யாது? என்று இராமபிரான் அகஸ்தியமுனிவரை வினவினனென்பதாம்.

மேனிவளர்ச்சி மேருவிற்பெரியனாதலும், மேனிஒடுக்கம் அணுவிற்சிறியனாதலும் - அணிமா மஹிமா கரிமா லகிமா ப்ராப்தி ப்ராகாம்யம் ஈஶத்வம் வசித்வம் என்ற எட்டுவகை யோகசித்திகளுள் முறையே மஹிமா அணிமா என்னுஞ் சித்திகளாம்; மிகவும்பெரிதாதல் - மஹிமா. மிகவுஞ்சிறிதாதல் - அணிமா. இத்தன்மைகளை அநுமான் உடையவனாயிருந்ததை இராமாயணத்தில் சீதையைத்தேடச் சென்றபொழுது முதலிய பலவிடத்துக் காணலாம். இங்ஙனம் மிக்கமகிமையையுடைய இவன், தன்வலியைத் தான் அறியாதிருந்தமை, இவன் தனது உயிர்த்தோழனாகிய சுக்கிரீவனுக்கு வாலியினால் நேர்ந்த துன்பத்தைத் தனதுவலிமையைக்கொண்டு நிவிருத்திசெய்யாமை முதலியவற்றால் விளங்கும். உறுகாரணத்தினளவாமுருக்கொள் உயர்வீரன் - சமயம்வாய்த்தபோது அவ்வச்சமயத்திற்கு ஏற்றபடி சிறிய உருவமும் பெரிய உருவமுங் கொள்ளவல்ல வீரனென்றபடி. இவ்வாறு வேண்டும் வடிவங்கொள்பவர், 'காமரூபிகள்' எனப்படுவர்.

பிரிதலென்பதுபோலப் பிறிதலெனத் தனியே ஒருவினை உள்ளதென்றாவது, பிரியென்ற பகுதி எதுகைநோக்கி விகாரப்பட்டதென்றாவது கொள்க. அநுமான் வளர்ச்சி பெரியன் - உயர்திணைதொடர்ந்த அஃறிணையாகிய தொழில், அவ்வுயர்திணைமுடிபையே கொண்டது; [நன் - பொது - உ௯.] அணு - மிகச்சிறுபொருள். மேரு, அணு, வீரன், காரணம் - வடசொற்கள். அற்பம், உரு - அல்பம், ரூபம் என்ற வடசொற்களின் திரிபு. மேருவின், அணுவானதின் என்பவற்றில், இன் - ஐந்தாமுருபு, எல்லைப்பொருள். அணுவானதின் என்பதில், ஆனது என்பது - பகுதிப்பொருள்விகுதி. அறிவான்

ஆன் - மூன்றனுருபு. அறிவான் - (நான்) அறியும்படி எனினுமாம்; 'வான்' விகுதிபெற்ற எதிர்காலவினையெச்சம். உரைத்தி - ஏவலொருமை முற்று.(௧)

[அநுமானது வரலாற்றை அகஸ்தியர் சொல்லத்தொடங்குதல்.]

2.—'அறிவோரின்' என்று திருத்துக: அறியோரென்பது - அறிவையுடையவரென்ற பொருளிற் பயிலாமை காண்க.

(இ - ள்.) மறவோர் - கொடிய பகைவர்களுடைய, குலத்தை - கூட்டத்தை, அற - அழியும்படி, வேர் அறுத்த - வேரோடு அறுத்தவனும், மனு நீதி பற்றி அரசு ஆள் - மநுதர்மசாஸ்திரத்திற் சொல்லப்பட்ட நியாயமுறைமையைத் தவறாது கைக்கொண்டு அரசாட்சிநடத்துகிறவனுமாகிய, திறலோன் - வல்லமையையுடைய இராமபிரான், உரைத்த - சொன்ன, அமிழ்து ஊறு சொற்கள் - அமிருதம்போன்ற மிக்க இனிமை மேன்மேற்சுரக்கப்பெற்ற சொற்களை, செவி வாய் மடுத்து நுகரும் - காதில் நிறைத்து உண்ணுகிற [நன்றாகக்கேட்டு ஆநந்திக்கிற], குறியோன் - குறுகியவடிவமுடையவரான அகஸ்தியமுனிவர்,—(இராமபிரானை நோக்கி), 'நெடியோய் - பெருமைக் குணமுடையவனே! குறிக்கொள் - (யான்சொல்வதைக்) கருத்தோடு கேட்பாய்', என - என்றுசொல்லி,—மேதினிக்குள் அணி சீர் - பூமியில் அழகான புகழைப் பெற்ற, அறிவோரின் மிக்க அநுமான் - அறிவுடையாரெல்லாருள்ளுஞ் சிறந்த அனுமானுடைய, உதிப்பும் - பிறப்புவரலாற்றையும், அதி வேகம் செயலும் - மிக்க பராக்கிரமச்செய்கைகளையும், உரைக்கும் - கூறுவார்; (எ - று.)—அவற்றை, மேலிற் கவிகளிற் காண்க.

ஸ்ரீராமபிரான் வினவியதனால், அகத்தியமுனிவர் அநுமானது பிறப்பு வரலாற்றையும், வீரசெயலையுங் கூறலாயின ரென்பதாம்.

செவிவாய்மடுத்து நுகரும் - "பருகுவனன்ன ஆர்வத்தனாகிச், செவி வாயாக நெஞ்சுகளனாகக், கேட்டவை கேட்டவை விடாது உளத்தமைத்து" என்றாற்போலக் கொள்க. 'அமிழ்தூறுசொற்கள்' என்றதற்கு ஏற்ப, 'செவி வாய்மடுத்துநுகரும்' என்றார்; அமிருதத்தை வாயில் நிறைத்து அவ்வழியாக வயிற்றினுட் கொள்ளுதல்போல இன்சொற்களைக் காதில் நிறைத்து அவ்வழியாக நெஞ்சினுட் கொண்ட தென்க. "செவிக்குணவு" என்றார் திருவள்ளுவரும்.

அமிழ்து - அம்ருதமென்ற வடசொல்லின் திரிபு: சாவாமருந்து என்பது பொருள். மறவோர்குலம் - ராக்ஷஸகுலம். குலத்தை அற வேரறுத்தல் - வம்சமுழுவதையும் நிர்மூலமாக்குதல். 'அறவேரறுத்த' என்று பாடமுண்டு. மநு என்ற செய்தவன்பெயர், அவனாற் செய்யப்பட்ட நூலின்மேல் நிற்பதனால், கருத்தாவாகுபெயர். குறியோன் - குறுமையென்னும் பண்பினடியாப் பிறந்த ஆண்பாற்பெயர்; நெடியோய் - நெடுமையென்னும் பண்பினடியாப் பிறந்த நெடியானென்னும்பெயரின் விளி; இவற்றில், னகரயகரமீற்று அயல் ஆகாரம் ஓவாயிற்று. குறியோனுரைக்கும் நெடியோய் என அடியில் மாறுபட்டசொற்கள் வந்தது - முரண்தொடையாம்; "சொல்லினும் பொருளினும் முரணுதல் முரணே". திருமாலினாற்கொல்லப்பட்ட மதுகைடபரென்னும் அசுரர்களுடைய மேதசினால் [உடற்கொழுப்பினால்] நனைந்தமைபற்றி, பூமிக்கு மேதினி என்று வடமொழியிற் பெயர். அணிசீர் - வினைத்தொகை. அடிமையென்ற பொருள்தரும் வேகமென்ற வடசொல், தமிழில் வீரமென்ற பொருளிற் பெரும்பாலும் பயிலும். அதி என்பது - மிகுதிப்பொருள்தரும் வடமொழி யிடைச்சொல். உரைக்கும் - செய்யுமென்முற்று; ஆண்பால்.(௨)

[வாயுகுமாரனாய் அஞ்சனைவயிற்றில் ஒருமகன் பிறத்தல்.]

3.—(இ - ள்.) பாரில் - பூலோகத்தில், சூரியன் தரு வரத்தனன் - சூரியனாற் கொடுக்கப்பட்ட வரம் பெற்றவனும், சுவண மேரு எனும் பேரினன் - ஸ்வர்ணமேருவென்னும் பெயரையுடையவனும், செறி பெரு வரை தோனி

னன் - (வலிமை) மிக்க பெரிய மலைபோன்ற தோளையுடையவனுமான ஒரு வானரவீரனால், பேணும்-விரும்பி (மனைவியாக)க் கொள்ளப்பட்டவளாகிய, அஞ்சனை - அஞ்சநாதேவியினது, வயிற்றினில் - வயிற்றில், பவனனுக்கு - வாயுதேவனது சம்பந்தத்தால்,யாரினும் பெரு வலி உடை எழில் மணி புதல்வன் - எல்லோரினும் மிக்க பலத்தை யுடைய அழகிய இரத்தினம்போன்ற ஒருகுமாரன், உதித்தோன் - பிறந்தான் ; (எ-று.)

அஞ்சனையென்பாளிடத்தில் வாயுதேவனால் இவ்வனுமான் உதித்தனனென்பதாம். அந்த அஞ்சனாதேவியினது கணவனான வானரனது பெயர், கேசரியென்றே பலநூல்களிலும் பிரசித்தம். அங்ஙனம் இருக்க, இச்செய்யுளில் வேறுவகையாகக் காணப்படுவது, தகுதியற்றதாகவே தோன்றுகின்றது. ஸ்ரீவால்மீகிராமாயணத்தில் உள்ள * சுலோகத்தின் சரியானபொருள் இதில் அமையவில்லை. சூரியனால்கொடுக்கப்பட்ட வரத்தினால் சுவர்ணரூபமான சுவர்ணமேருவென்று பிரசித்திபெற்றது ஒரு பர்வதம்; அதில் இவனது தந்தையான கேசரியென்பவன் அரசாண்டிருந்தனனே என்பது அதன் சரியானபொருள். அந்தப்பொருள் அமையவேண்டுமானால், இச்செய்யுள் "சூரியன்தருவரத்தினிற் சுவணமேரு வெனும், பேரினிற் செறி பெருவரைக் கேசரி பேணும். பாரி யஞ்சனை......" என்றிருக்கவேண்டும்.

பிரமன்முதலிய தேவர்களின் வேண்டுகோளின்படி இராவணாதியரைச் சங்கரித்தற்பொருட்டுத் தசரதகுமாரனாய்த் திருவவதரித்தற்கு உடன்பட்ட திருமால், அத்தேவர்களைநோக்கி, அப்பொழுது தனக்குப் பணிசெய்தற்பொருட்டு வானரம்முதலிய விலங்குகளாகப் பிறக்கும்படி கட்டளையிட,அவர்கள் அங்ஙனமே தம்தம்அம்சத்தாற் பற்பலரைத் தோற்றுவித்தனர். அவர்களுள் வாலியும் வாலியின்மகனான அங்கதனும் இந்திரன்அம்சம். சுக்கிரீவன்-சூரியன்அம்சம். அனுமான்-வாயுவின் அம்சம்; அதோடு அனுமான் சிவபிரானது அம்சமுமாதலை,"வாயு மற் றெனதுகூறு மாருதியெனவு மற்றோர்,காயுமர்க் கடங்களாகிக் காசினியதனின்மீது, போயிடத்துணிந்தோமென்றார் புராரி மற்றியானே வாத, சேயெனப் புகன்றான் மற்றைத் திசையுளோர்க் கவதியுண்டோ" என்ற பாலகாண்டச்செய்யுளால் உணர்க.

ஸூர்யன், வரம், ஸ்வர்ணமேரு, அஞ்ஜநா, பவநன், மணி - வடசொற்கள். வரம் - வேண்டியதுபெறுதல். பேர் = பெயர் ; மரூஉ. தோளுக்கு மலை உவமை - ஆயுதங்களால் அழிவடையாத வலிமைக்கும், பெருமைக்கும். வரையென்ற சுனுவின் பெயர் - அதனையுடைய மூங்கிலைக் குறித்தலால் சினையாகுபெயரும், பின் அச்சொல் அம்மூங்கில் விளையும் மலையைக் குறித்தலால் தானியாகுபெயருமாய்; இங்ஙனம் ஒருசொல் இருமுறையாக வந்தது, இருமடியாகுபெயராம். பார் - பருமையையுடையது, அல்லது பார்க்கப்படுவது எனப் பூமிக்குக்காரணப்பெயர்;லோகம் என்ற வடசொற்போல. பவநன் - (எப்பொழுதும்) சஞ்சரிப்பவன். உடை - உடைய என்பதன் விகாரம். எழில் = எழுச்சி; தொழிற்பெயர்; எழு - பகுதி, இல்-விகுதி. எழில்-வளர்ச்சியுமாம். புதல்வனுக்கு மணி உவமை - அருமைக்கு. உதித்தான் என்ற வினைமுற்று, உதித்தோன் என ஆ ஓவாயிற்று : "பெயர்வினையிடத்து னளரயஈற்றயல், ஆ ஓவாகலுஞ் செய்யுளுள் உரித்தே" என்பது நன்னூல்விதி; 'வினையாலணையும்பெயர்க்கண் அன்றி வினைக்கண்ணும் ஒரோவழி ஆ ஓவாதலின் அதனையும் உடன்கூறினர்' என்ற விருத்தியுரையையுங் காண்க.

[அப்பிள்ளையைக் கண்டு தாய்தந்தையரும் தேவர்களும் மகிழ்தல்.]

4.—(இ-ள்.) பிறந்த போழ்தின்-பிறந்தபொழுதே, இ பிள்ளை தன் இந்தப் பிள்ளையினுடைய, பெருவலி-மிக்கவலியை, அறிந்த-தெரிந்துகொண்ட,

---

* "ஸூர்யதத்தவரஸ்வர்ணஃ-ஸுமேருர்நாமபர்வதஃ-யத்ராராஜ்யம் ப்ரசாஸ்த்யஸ்ய - கேஸரீநாமவைபிதா".

சிறந்த தாயரும் தந்தையும்-அன்பிற்சிறந்த தாயாரும் தந்தையும், சிந்தையுள் மகிழ்ந்தார் - மனத்தில் மகிழ்ச்சியடைந்தார்கள்; 'மறம் கொள் நெஞ்சு உடை-கொடுமையைக்கொண்ட மனத்தையுடைய, வாள் எயிறு-வாள்போற் கூரிய கோரப்பற்களோடுகூடிய, அரக்கர் - இராட்சசர்கள், தம் வாழ்நாள் குறைந்துளார் - (இனித்) தங்கள் ஆயுள் குறைந்தவராவர்', என - என்று எண்ணி, வானவர் கூட்டம் - தேவர்களுடைய சமூகம், குனித்தது - (ஆனந்தத்திஞற்) கூத்தாடிற்று; (எ - று.)

'பிறந்தபோழ்தின் இப்பிள்ளைதன் பெருவலி யறிந்த' என்ற தொடர்-தாயரும் தந்தையும், என்பவற்றோடு இயைவதேயன்றி, 'வானவர் கூட்டம்' என்பதனோடும் இயையும். அரக்கர்களை அழித்தற்கு உதவுதற்பொருட்டுத் தேவாம்சமாய்ப்பிறந்த ஆஞ்சநேயர் 'விளையும்பயிர் முளையிலேதெரியும்' என்றபடி பிறந்தபொழுதே மிக்கபலமுடையவராயிருந்ததைக் கண்டு, தேவர்கள், இவரால் தமக்குப் பகைவராகிய அரக்கர்கூட்டம் விரைவில் தவறாது அழியு மென்றெண்ணி, அதனாலாகிய அளவிறந்த களிப்பினால் நர்த்தனஞ்செய்தன ரென்க.

'பெருவலியறிந்து' என்று பாடம். போழ்து - பொழுது என்பதன் மரூஉ. பிள்ளை-இளமைப்பெயர். அன்பிற்சிறத்தலால் 'சிறந்ததாயர்' என்று அடைமொழிகொடுத்து முதலிற்கூறினர். தாயர் என்பதில், 'அர்' என்ற பலர்பால்விகுதி உயர்வுபற்றியது. தந்தை—தாம்-பகுதி, முதல்குறுகிற்று; தை - முறைப்பெயர்விகுதி. இங்கே, தந்தை - வாயு; கேசரியுமாம். அரக்கர் வாழ்நாள் குறைந்துளார் - உயர்திணைதொடர்ந்த அஃறிணையாகிய காலப்பெயர், அவ்வுயர்திணை முடிபையே கொண்டது: [நன் - பொது - உக.] வாழ்நாள் - வாழும்நாள்: வினைத்தொகை. 'மாளுநாள்' என்றும் பாடம். குறைந்துளார் என்று இறந்தகாலத்தாற் கூறினது-விரைவுந் தெளிவும் பற்றிய காலவழுவமைதி; [நன் - பொது - ௩௩.] வானவர் - வானத்தில் உள்ளவர். (௪)

[அம்மகன், தனக்கு இரை யாதென்று தாயைக் கேட்டு அறிதல்.]

5.—(மூலபுத்தகத்தில் இப்பாட்டின் தலைப்பில் 'அவன் கூறும் விடையும்' என்ற தொடரில் 'அவன்' என்பது தவறுதல் காண்க. அநுமன் தனக்கு உணவு என்னையென்று தாயைவினவலும், அதற்கு அவள் கூறும் விடையும் என்று படிக்க.)

இதுவும், அடுத்த கவியும் - குளகம்.

(இ - ள்.) புதல்வனும் - அப்புத்திரனும், துனிவு இலா மதி அன்னையை - துன்பமில்லாத அறிவையுடைய [களிப்புள்ள மனத்தையுடைய] தன்தாயான அஞ்சனையை, தொழுது - வணங்கி, 'இங்கு - இவ்விடத்தில், எனக்கு இனியது ஆம் இரை யாது - எனக்கு இனியதான உணவு எது? இயம்புதி - சொல்வாய்', என்ன - என்று வினவ,—(அதற்கு), அன்னை - தாயாகிய அந்த அஞ்சனை, 'பனி உலாவிய சோலையில் - குளிர்ச்சி பொருந்திய சோலையிலுள்ள, பருவத்தில் சிவந்த கனி எலாம் - முதிர்ந்தபருவத்திலே செந்நிறமடைந்த பழங்களெல்லாம், உனக்கு ஆவது - உனக்கு இரையாவன', என்று—, கழற - (விடை) கூற,—(எ - று.)—'பாய்ந்தான்' என அடுத்த கவியில் முடியும்.

அநுமன் பிறந்ததும், தன்தாயை நோக்கி 'எனக்கு உணவாவன யாவை' என்று வினவ, அவளும் 'சோலைகளிற் பழுத்த பழங்களெல்லாம் நினக்கு உணவாகும்' என்றன ளென்பதாம். தெய்வத்தன்மையுள்ள குழந்தையாதலின், பிறந்தபொழுதே பேசின னென்க. 'பருவத்திற்சிவந்தகனி' என்பதற்கு - அவ்வக்காலங்களில் தோன்றுகிற செந்நிறமான பழங்கள் எனினுமாம்.

தான் - அசை. மதி, பர்வம் - வடசொற்கள். இரை - விலங்கின் உணவு. கனியெலாம் ஆவது - பன்மை யொருமை மயக்கம்: [நன் - பொது - உக.] தனித்தனிஆவது என்க; ஆவன என்பது -வழக்கிலே. கனி - பால்பகா வஃறிணைப்பெயர். கனிந்தது, கனி. (ரு)

[தாய் இரைதேடச்சென்றவளவில்,வாயுகுமாரன் சூரியன்மேற் பாய்தல்.]

6.—(இ - ள்.) செழு மலர் - (எல்லாமலர்களிலும்) அழகியதான தாமரைமலரில் வாழ்கின்ற, திரு-இலக்குமியை, அனைய - ஒத்த, தாய் - தனது தாயான அஞ்சனை, செழு கனி நாடி - செழிப்பான பழங்களைத் தேடுபவளாய், பழுவம் உற்றிட - சோலைக்குச் சென்றிருக்க, (அச்சமயத்தில்), பசியினால் பதைபதைத்து இரங்கி அழுது அரற்றிய பாலகன் - பசியினால் துடிதுடித்து விசனமுற்றுப் புலம்பிக் கதறிய சிறுபிள்ளையான அவன்,—(எதிரில் தோன்றிய சூரியனைக் கண்டு), அன்னை நமக்கு முன் உரைத்த பழம் இது ஆம் என - நமதுதாய் நமக்கு (உரியஇரையாக) முன்புசொன்ன பழம் இதுவாமென்று எண்ணி,பரிதிமேல் பாய்ந்தான்-சூரியன்மேற் பாய்ந்தான்.

'இவனன்னை இவனை ஈன்றுவைத்துக் கனிகள்கொணர்வதற்குக் காட்டிற்கு ஏகாநிற்ப, பசிபொறுக்கமாட்டாமல் இவன் காலையில்உதித்த ஆதித்த விம்பத்தைக் கனியெனக்கருதிக் கவர்வான் எழும்பினன்' என்பது, உத்தர ராமாயணவசனம்.

"பூவிற்குத் தாமரையே" என்றபடி தாமரை சிறத்தலால், 'செழுமலர்' எனப்பட்டது. தாய்க்குத் திருமகள் உவமை - அன்புடைமைக்கும், அழகுக்கும் என்க. பதைபதைத்து - இரட்டைக்கிளவி. பாலகன் என்பதில், 'க'ப்ரத்யயம் - சிறுமைகுறிக்கும். அன்னை - தாய்: இருதிணைப்பொதுப்பெயர். முன் - காலமுன். பழுத்தது, பழம்; அம் - கருத்தாப்பொருள்விகுதி. நமக்கு - இயல்புபற்றிய தனித்தன்மைப்பன்மை. பரிதி - வடசொல்; 'பருதி' என்றும் பாடமுண்டு. அனைய - குறிப்புப் பெயரெச்சம்: அன் - உவமவுருபிடைச்சொல்-பகுதி, ஐ - சாரியை, ய் - சந்தி, அ - விகுதி. (சு)

[தேவர் முதலியோர் அவனதுவேகத்தைக் கொண்டாடி வாழ்த்துதல்.]

7.—(இ - ள்.) பாய - (இவன் இவ்வாறு)பாய, நோக்கின - அதனைப்பார்த்த, வானவர் - தேவர்களும், தானவர்- அசுரர்களும், பழிப்பு இல் தூய மாதவர்-பழிக்கப்படுவதான தீயொழுக்கமில்லாத பரிசுத்தியையுடைய பெருந்தவமுள்ள முனிவர்களும், முதலினோர்-முதலானவர்கள்,—தோன்றிய வியப்பால் - தமக்கு உண்டான ஆச்சரியத்தினால், 'வாயு வேகமும் - வாயுவினுடைய வேகமும், வயினதேயன் தன் மா கதியும் - கருடனுடைய சிறந்தநடையும் [வேகமும்], இவனிடத்தினில் - இவனிடத்தில், ஓய்வுஇலாது இருக்க- எப்பொழுதும் ஒழிவில்லாமல்இருக்கக்கடவன', என்றுஉரைத்தார் - என்று வாழ்த்துக்கூறினார்கள்; (எ - று.)

வேகத்திற்சிறந்த வாயுவேகமும் கருடவேகமும் போன்ற மகாவேகத்தைஇவனிடத்திற்கண்டதனால் வியப்புக்கொண்டவர்கள், 'அவ்வேகம் இவனிடத்தில் ஆரம்பசூரத்துவமாகாமல் எப்பொழுதும்ஓய்வின்றி நிலைத்திருக்கக்கடவது' என்று அன்புகொண்டு வாழ்த்தினரென்க.

தானவர் - (காசியபமுனிவரது மனைவிமார்களுள்) தநுஎன்பவளிடம் பிறந்தவர்: வடமொழித் தத்திதாந்தநாமம். முனிவர்க்குப் பழிப்பு - கூடாவொழுக்கமும், விரதக்கேடும். தூய - தூய்மையென்னும் பகுதியினடியாப் பிறந்த குறிப்புப்பெயரெச்சம். வயினதேயன் - வைநதேயன் என்ற வடசொல்லின் விகாரம்: அது - (காசியபமுனிவரது மனைவிமார்களுள்) விநதையினிடம் பிறந்தவனென்று பொருள்படும்; இவன் - பறவைகளுக்கு அரசன்; திருமாலுக்கு வாகனமானவன். வாயுவேகம், கதி - வடசொற்கள். இருக்க-

வியங்கோள். 'இருக்கும்' என்ற பாடத்துக்கு, இருக்கின்றன வென்று இயல்பைக் கூறியதாகக் கொள்க. (எ)

[இதுவும் அது.]

8.—(இ - ள்.) பின்னும் கூறுவார் - (அததேவர்கள் முதலியோர்) மற்றும்சொல்வார்கள்: (அது யாதெனின்—), இவன்—, பிறந்த போதே - பிறந்த அப்பொழுதே, பிதாவே அன்ன வேகத்தன் (தனது) தந்தையாகிய வாயுவையே போன்ற வேகத்தையுடையவனாய், ஆற்றலால் - வலிமையினால், அருக்கன்மேல் பாய்ந்தான் - சூரியன்மீது பாய்ந்திட்டான்; மன்னும் மாருதி - (இத்தன்மை) பொருந்திய இவ்வாயுகுமாரன், வளர்ந்தபின் - வளர்ச்சியடைந்த பின்பு, மருவலர் ஆனோர் - பகைவர்களாகிய இராட்சசர்கள், இவன கையால் - இவனுடைய கையினால், என்னது ஆகி என் படுவரோ - எந்தவிதமாய் என்னபாடுபடுவார்களோ?' என்றார் - என்று சொன்னார்கள்; (எ - று.)

இவன் பிறந்தபோதே இவ்வாறு சூரியன்மீது வேகமாகப்பாயும் வலிமைபெற்றுள்ளானாதலால், பருவம்வரும்போது இவன்பகைவர்களாகிய அரக்கர்கள் இவன்கையிலகப்பட்டுச் சின்னபின்னப்படுவது திண்ணமெனஅநுமனது திறத்தை வியந்தவாறு. பாலியச்செயலைக்கண்டு பருவம்வரும்போது செய்யுஞ் செயலை ஊகித்ததனால், அநுமாநாலங்காரமாம். இராவணன் முதலிய இராக்கதர்கள் தேவர்கட்கும் முனிவர்கட்கும் போலவே அசுரர்கட்கும் தீங்குசெய்துவந்ததனால், அவர்களும் இவர்களை 'பகைவர்' என்று குறித்தார்கள்.

பிதா - தற்சமவடசொல். ஏ - பிரிநிலையோடு உயர்வுசிறப்பு. மாருதி - வடமொழித் தத்திதாந்தநாமம்: மாருதனது மகன்; மாருதன் - வாயு. மருவலர் - சேராதவர்; எதிர்மறைவினையாலணையும்பெயர்: அல் - எதிர்மறையிடைநிலை. என்னது - எகரவினாவடியாப்பிறந்த அஃறிணையொன்றன்பாற் குறிப்புமுற்றாலணையும்பெயர். 'என்னவாகி யென்படுவரோ' என்று பாடம்.

['சூரியன் சுடாதிருக்க' என்று வாயு அநுக்கிரகித்தல்.]

9.—(இ - ள்.) வானவர் தானவர் முதலினோர் - தேவர்கள் அசுரர்கள் முதலானவர்கள், ஈது இயம்ப - இவ்வாறுசொல்ல,—வாத ராசன் - காற்றுக்குத் தலைவனான வாயுதேவன், ஈது இயம்பினன் - இதனைச் சொன்னான்: (அது யாதெனில்—)—, 'வாவும் என் மைந்தன்மீது - பாய்ந்துசெல்லுகின்ற எனதுமகன்மேல், வெய்யவன் வெம் கதிர் - சூரியனுடைய உஷ்ணமான கிரணங்கள், வெள் நிலா என்ன - வெண்ணிறமான நிலாப்போல, சீதம் சந்தனம் சீதளம் ஆகுக - குளிர்ச்சியான சந்தனம்போலக் குளிர்ச்சியாகக் கடவன,' என்றான் - என்று அருள்செய்தான்; (எ - று.)

ஈது - இது என்ற சுட்டுப்பெயர் நீண்டது: இதற்கு விதி - "ஏகாரவினாமுச்சுட்டின்முன்னர்" என்ற சூத்திரத்து 'நெறி' என்ற மிகையால் அமையும். வாதராஜன், சீதசந்தநம், சீதலம் - வடசொற்கள். மைந்து - இளமை; அதனையுடையவன் - மைந்தன். வெய்யவன் - வெம்மையுடையவன்: உஷ்ணகிரணன்; பண்பினடியாப்பிறந்த பெயர்; வெம்மையென்னும் பண்புப்பெயர், ஈறுபோய், முன்நின்ற மகரமெய் யகரமாத்திரிந்து 'வெய்' என நின்றது. வெங்கதிர் - வெயில். வெங்கதிர், வெண்ணிலா, சீதசந்தனம் என்றவற்றில், வெம், வெள், சீதம் என்ற அடைமொழிகள் இயல்புகுறிக்க வந்தன; இயற்கையடைமொழி; இனம்விலக்கவந்தனவல்ல. என்ன - உவமவுருபு. ஆகுக - வியங்கோள்: இதில், ஆகு - பகுதி யென்றாவது; ஆ - பகுதி, கு - சாரியை யென்றாவது கொள்க. (கூ)

[அம்மகனைச் சூரியன் சுடாமை.]

10.—'அருக்சன்மேலேற' என்று திருத்துக. 'அருக்கன் மேலற' என்று பதிப்பித்துள்ள பாடம், நான்காஞ்சீர் விளச்சீரும் ஐந்தாஞ்சீர் மாச்சீருமாக வரும் முன்பின் செய்யுள்களோடு மாறுபடுதலால், உபேட்சிக்கத்தக்கது.

(இ - ள்.) ஆய்ந்த தாதை - (செய்வனவற்றையுந் தவிர்வனவற்றையும்) ஆராய்ந்தறிந்த தந்தையான வாயு, ஈது இயம்பிட - இவ்வாறுசொல்ல,— (அக்குமாரன்), அருக்கன்மேல் ஏற பாய்ந்து-சூரியன்மீது நெடுகப்பாய்ந்து, மண்டிலம் பற்றினன் - (அச்சூரிய)மண்டலத்தைப் பிடித்தான்; கௌவலும்- அவ்வாறுபிடித்தவளவிலே, அதனுக்கு எய்ந்த வெய்யவன் - அந்தமண்டலத்துக்கு உரியவனான சூரியன், இவன் சிசு என மனம் இரங்கி - இவன் சிறு குழந்தையென்றகாரணத்தால் மனத்தில் இரக்கங்கொண்டு, காய்ந்திலன்- (இவனைத் தனது உஷ்ணகிரணங்களால்) காயாதவனாய். பெரு கருணையால் - மிக்க அருளோடு, காதல என்றான் - 'பிள்ளாய்!' என்று சொல்லி அழைத்தான்; (எ-று.)

அநுமான் பாய்ந்தபோது வாயுதேவன் அநுக்கிரகித்தபடியே சூரியபகவானும் அம்மகனைச் சுடாமல் குழந்தையென்றகாரணத்தால் அவன்மீது அன்புபாராட்டினனென்பதாம்.

தாதை, மண்டிலம் - தாத, மண்டலம் என்ற வடசொற்களின் விகாரம். சிசு-வடசொல். காய்ந்திலன் - எதிர்மறையாண்பால் இறந்தகால முற்றெச்சம்: (நிகழ்காலத்தில் 'காய்கின்றிலன்' என வரும்) கௌவலும் - 'உம்' விகுதி பெற்ற இறந்தகாலவினையெச்சம்; பிற்பொருளோடு விரைவையுங் குறிக்கும். மண்டலம் - வட்டம். காதல் - அன்பு; அதனையுடையவன் - காதலன்; (இதன் பெண்பால் - காதலி.) (௧0)

[அம்மகனைக்கண்டு அஞ்சி இராகு இந்திரனிடம் செல்லுதல்.]

11.—(இ - ள்.) அற்றை நாளில் - அன்றைத்தினத்தில் [அப்பொழுது], இராகு - இராகுவானவன், அ அலர் கதிர் மண்டிலம் அதனை - பரந்த கிரணங்களையுடைய அச்சூரியமண்டலத்தை, பற்றுவான் சென்று - (வழக்கப்படி தான்) பிடிக்கற்குப் போய், பற்றலும் - பிடித்தவளவிலே,—பற்றியே நின்ற கொற்றம் மாருதிதனை கண்டு - முன்னமே அதனைப்பிடித்துநின்ற வலிமையையுடைய வாயுகுமாரனைப் பார்த்து, குலைந்து போய் - அஞ்சியோடி, வெற்றி விண்ணவர் வேந்தனை கண்டு - சயத்தையுடைய தேவராசனான இந்திரனைப் பார்த்து, இவை விளம்பும் - இவ்வார்த்தைகளைச் சொல்வான்; (எ-று.)—அவற்றை, அடுத்தகவியிற் காண்க.

தான்பிடிக்கவேண்டிய சூரியமண்டலத்தை அநுமான் முன்னமேபற்றிநின்றதைக் கண்ட இராகு தமதுதலைவனான தேவராசனிடம் முறையிட வேண்டிச் சென்றனனென்பதாம். வாயுகுமாரன் சூரியனைப்பிடித்தசமயம் சூரியக்ரஹணகாலமென்று அறிக.

அன்று+நாள் = அற்றைநாள் : மென்றொடர் வன்றொடராய் ஐகாரச் சாரியை பெற்றது; [நன் - உயிர்-௩௪, ௩௫.] அன்றாகியநாள் என இருபெயரொட்டு. அலர்கதிர் - வினைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. பற்றுவான் - 'வான்' என்னும் விகுதி எதிர்காலங்காட்டும் வினையெச்சம். ராஹு-வடசொல்; இவன், நவக்கிரகங்களில் எட்டாமவன். இவனும், கேதுவும் - சாயாகிரகமெனப்படுவர். வெற்றி -தொழிற்பெயர்;வெல்-பகுதி, றி - விகுதி, லகரம் றகரமானது - சந்தி விண் - வானம்; அதிற் சஞ்சரிப்பவர் - விண்ணவர். 'கோன்றனை' என்றும் பாடம். (௧௧)

[இராகு இந்திரனிடம் முறையிடுதல்.]

12.—(இ - ள்.) 'மன்னும் - (அரசனாக) நிலைபெற்ற, இந்திர - தேவேந்திரனே!—மதி கதிர் மண்டிலம் - சந்திரமண்டலத்தையும் சூரியமண்டலத்

தையும், விழுங்க - விழுங்கும்படி, முன்னமே - முற்காலத்திலே, எமை-எங்களை, விதித்தனை-(நீ) நியமித்திருக்கிறாய்; முறை கெட - அந்த நியாய ஒழுங்கு கெடும்படி, வேறு ஓர் அன்னியன் புகுந்து - எங்களினும்வேறான அயலானொருவன் வந்து, அலர் கதிர் மண்டிலம் கௌவி - பரந்த ஒளியையுடைய சூரியமண்டலத்தை(த் தான்)பற்றிக்கொண்டு, இன்னமும் விடான் - இன்னமும் விடாமலிருக்கிறான்; இவை என்ன நியாயங்கள் - இப்படிப்பட்டசெயல்கள் என்ன நியாய ஒழுங்குகளாம்?' என்றான் - என்று (இந்திரனிடம் இராகு) முறையிட்டான ; (எ-று.)

பாற்கடல்கடைகையில் உண்டான அமிருதத்தையெடுத்துக்கொண்ட திருமால் மிகஅழகிய மோகினியென்னும் பெண்வடிவத்தால் அசுரர்களை மயக்கித் தேவர்கட்கே அந்த அமிருதத்தைப் பங்கிட்டுக்கொடுத்து வருகையில், இராகு வென்னும் ஓர் அசுரன், தான் இருத்தற்குஉரிய அசுரர்கூட்டத்தை விட்டுத் தந்திரமாகத் தேவர் கூட்டத்தினிடையிலே புகுந்து கையேற்று அமிருதத்தை வாங்கியுண்ண, அதனைச் சூரியசந்திரர் குறிப்பித்தமாத்திரத்தில் எம்பெருமான் அவனை அகப்பையால் அடித்துத் தலைவேறு உடல் வேறாக்க, அமிருதமுண்டதனால் உயிர் நீங்காத அந்தத் தலையும் உடம்பும் விஷ்ணுவின் அநுக்கிரகத்தால் இராகுகேதுக்களென இரண்டுகிரகங்களாகிச் சூரியன் முதலிய ஏழுகிரகங்களோடு சேர்ந்து,தம்மேற்கோள்சொன்ன சூரியசந்திரர்க்குப் பகையாய்ச் சிற்சிலகாலத்தில் அவர்களைப் பிடித்துக் கொள்கின்றன வென்பது, கதை. இப்படி திருமால் வரங்கொடுத்ததையே, திரிலோகாதிபதியாய் அவ்வரத்தை நடப்பிக்கிற தேவராசன்மேல் ஏற்றி, இராகு இந்திரனைநோக்கி,'மதி கதிர் மண்டிலம் விழுங்க முன்னமேயெமை விதித்தனை' என்றான்.

இந்திரன் - பரமைசுவர்யமுடையவன்: வடசொல். கதிர் - ஆயிரங்கிரணங்களையுடைய சூரியனுக்குச் சினையாகுபெயர். 'எமை' என்றது, கேதுவைக் கூட்டிக்கொண்ட உளப்பாட்டுத்தன்மைப்பன்மை. அந்யன், ந்யாயம்- வடசொற்கள். 'இன்னம்' என்பது - இடைச்சொல். இவை என் அநியாயங்கள் என்று பதம்பிரித்து, இவை என்ன அநீதிகள்? என்றும் பொருள் கொள்ளலாம். 'சந்திர சூரிய மண்டலம் விழுங்க' என்றும் பாடம். (கஉ)

[இந்திரன் ஐராவதத்தின்மீது ஏறிவந்து இராகுவைச் சூரியனைப் பிடிக்கச்சொல்லல்.]

இதுவும், அடுத்த கவியும் - குளகம்.

13.—(இ - ள்.) என்று கூறிட - என்று (இராகு) குறைசொல்ல, இந்திரன்—, எரி விழித்து - (கோபத்தால்) நெருப்புப்புறப்படக் கண்விழித்து, வெள்ளி குன்று போல் அயிராவதம் மேல் கொண்டு - வெள்ளிமலைபோன்ற ஐராவதமென்னும் (தனது) வெள்ளையானையின்மேல் ஏறிக்கொண்டு, குறுகி சென்று - (சூரியனருகிற்) போய்ச்சேர்ந்து, இராகுவை - இராகுவைப் பார்த்து, தினகரன் பற்று என செப்ப - '(நீ) சூரியனைப் பிடி' என்று கட்டளைகூற, இது நன்று என்றவன் - இது நல்லதென்று கொண்டாடியவனாய், சென்று நாயிறுதனை நண்ணி - போய்ச் சூரியனைச் சமீபித்து,— (எ-று.)— 'இரவிமண்டிலம் பற்றுவான் எண்ணிய இராகு' என வருங் கவியோடு தொடரும்.

தேவேந்திரன் தேவகணங்கட்கெல்லாந் தலைவனாதலாலும், அசுரர்களும் பதினெண்தேவகணத்துட் சேர்ந்தவராதலாலும், அவ்வசுரரிற்சேர்ந்த இராகு தமதுதலைவனான இந்திரனிடத்தில் வந்து முறையிடவே, அவ்விந்திரன் தன்னாணைக்கு மாறாக நிகழ்ந்ததனைக் கேட்டதனாற் கோபித்து, தம் ஆணை செல்லாத தேசத்துத் தாமே சென்று தம்மாணையைச்செல்லச் செய்யுந் தண்டத்தலைவர்போல, தன்னாணையை நிறைவேற்றுதற்குச் சூரி

யனை அநுமான் பற்றியிருந்தவிடத்து இந்திரன் தானேசென்று சூரியனைப் பற்றுமாறு இராகுவுக்குக் கட்டளையிட்டனனென்பதாம்.

ஐராவதம் - நான்கு தந்தமுடையதும், இந்திரனுக்கு உரியதும், திருப்பாற்கடலினின்று தோன்றியதும் ஆகிய வெள்ளையானை. நிறமும் பெரிய வடிவமும் வலிமையும் பற்றி, இதற்கு, வெள்ளிக்குன்றை உவமைகூறினார். வெள்ளிக்குன்று - கைலாசம்; வெள்ளிமயமான மலை. வெள்ளி - வெண்மையையுடையது எனக் காரணப்பொருள்படும்; இ - பெயர்விகுதி. ஐராவதம் என்ற வடசொல் - அயிராவதமென முதற்போலி பெற்றது; [நன் - எழுத்து - ௭0] திநகரன் - பகலைச்செய்பவன். திநகரற்பற்று "இயல்பின்விகாரமும்" என்ற சூத்திரவிதியால், உயர்திணையில் ஐயுருபு தொக்கது; தொக்கவிடத்து உயர்திணைப்பெயரீறு விகாரப்பட்டது. செப்பு - தெலுங்கில் வழங்குந் திசைச்சொல். என்றவன் - வினையாலணையும்பெயர், வினையெச்சப் பொருளில் வந்தது. எரிவிழித்தல் - கடுங்கோபக்குறி. (கங)

[வாயுகுமாரன் சூரியமண்டலத்தை விட்டு இராகுவைப் பிடிக்க, அவன் இந்திரன் பாதங்களில் விழுதல்.]

14.—(இ - ள்.) இரவி மண்டிலம் பற்றுவான் - சூரியமண்டலத்தைப் பிடித்தற்கு, எண்ணிய - நினைத்த, இராகு - இராகுவினது, வரவு - வருகையை, கண்டனன் - பார்த்தவனாய்,—மாருதி - வாயுகுமாரன்,—மண்டிலம் விட்டே - சூரியமண்டலத்தைக் கைவிட்டு, அரவின்மேல் உற பாய்தலும் - கரும்பாம்புவடிவமான இராகுவின்மேல் வேகமாகப்பாய்ந்தவளவிலே,—ஆங்கு அவன் கதறி - அங்குநின்ற அந்த இராகு கதறிக்கொண்டு, வெருவி ஓடினன் - அஞ்சியோடி, விண்ணவர் கோன் அடி வீழ்ந்தான் - தேவராசனான இந்திரனது பாதங்களில் விழுந்து வணங்கினான்; (எ - று.)

ஒவ்வொருசமயத்தில் சூரியனைமறைக்கிற சந்திரனது சாயையையும், சந்திரனைமறைக்கிற பூமியினது சாயையையும் இராகுகேதுவென்னும் கரும்பாம்பு செம்பாம்புகளாகக் கூறுதல், நூற்கொள்கை. தலைவேறு உடல்வேறானவற்றுள் தலையாகிய இராகு பாம்பின்வடிவத்தோடும், உடலாகிய கேது பாம்பின்தலையோடும் கூடி வடிவுநிறைந்து தொழில்செய்கின்றனவென்க. ரவி - வடசொல். பற்றுவான் - வினையெச்சம். அரவு - அரா என்னுங் குறியதன்கீழ் ஆ, குறுகி உகரம்பெற்றது. ஆங்கு - அங்கு என்பதன் நீட்டல். (கச)

[அருகில்வந்த ஐராவதத்தின்மேல் வாயுகுமாரன் பாய்தல்.]

15.—வேகம் + அரி என்பது புணர்ந்தால் வேகவரி எனப் புணருமேயன்றி வேக அரி எனப் புணராதாகையாலும், புணர்ச்சியைக்கருதாதபோது வேகம்அரி என்றே நிற்குமாதலாலும், 'வேகவரி' என மூலத்தைத் திருத்துதல் நலம்.

(இ - ள்.) வெருவி ஓடின - (இவ்வாறு) அஞ்சியோடுகின்ற, வெம் அராவினை - கொடிய அப்பாம்பை [இராகுவை], தொடர் - (பிடித்தற்குத்) தொடர்கிற, வேகம் - விசையையுடைய, அரியின்மேல் - குரங்கின்மீது அரி - இந்திரன், அழன்று - கோபங்கொண்டு, அயிராவதம் உந்த - ஐராவதத்தைச் செலுத்த,—காற்றினும் கடியான் - காற்றைக்காட்டிலும் வேகமுடையவனான அந்த வாயுகுமாரன், பெரியது ஓர் கனி பெற்றனன் என பெரிது உவந்து - 'பெரியதொரு பழத்தைப் பெற்றேன்' என்று மிகவும்மகிழ்ச்சிகொண்டு, கரியின்மேல் எழ பாய்ந்தனன் - அந்த வெள்ளையானையின்மேல் வேகமாகப்பாய்ந்தான்; (எ - று.)

அநுமான் தன்மீதுபாய்ந்ததனால் இராகு அஞ்சி இந்திரனைச் சரணமடையவே, அவ்விந்திரன் அநுமானதுசெயலைக் கண்டிக்கவேண்டி அநுமானுக்

குச்சமீபத்தில் தானேறியிருந்த ஐராவதத்தைச் செலுத்த, அநுமான் தான் பிடிக்கச்சென்ற இராகு ஓடிவிட்டதனால் அவ்விசையைக்கொண்டே ஐராவதத்தின்மீது தாவிப்பாய்ந்தன னென்பதாம். "பிதுஃஸதகுணம் புத்ர: [தந்தையினும் பலமடங்கு மேம்பட்ட மைந்தனும் உளன்]" என்றபடி தந்தையாகிய வாயுவினும் பலமடங்கு அதிகமான வேகமுடையவன் மைந்தனாகிய அநுமானென்பார், 'காற்றினுங் கடியான்' என்றார்.

அரி - ஹரியென்ற வடசொல்லின் விகாரம். அப் பலபொருளொரு சொல் - குரங்கைக் குறிக்கையில் பொருள்களைவிடாதுபற்றுவது என்றும், இந்திரனைக் குறிக்கையில் பகைவரையழிப்பவனென்றும் காரணப்பொருள் படும்; அரித்தல் - கவர்தலும் அழித்தலும். பெற்றனன் என்பதில், அன் விகுதி - தன்மையொருமைக்கு வந்தது. பெற்றனன் - கிடைக்கப்பெற்றேனென்றபடி. அழன்று, அழல் - பகுதி. பெரிது - பெருமை யென்னும் பண்பினடியாப் பிறந்த ஒன்றன்பாற்குறிப்புமுற்றெச்சவினையுரி. கரி - கரீ என்ற வடசொல் ஈயீறு இகரமாயிற்று. கரம் - கை; இங்கே, துதிக்கை; அதனையுடையது கரி யெனக் காரணக்குறி: இதற்கு - கருநிறத்தையுடையதென்று காரணப்பொருள் கூறலாகாது; வடசொல்லாதலின். காற்றின், இன்-ஐந்தனுருபு, எல்லைப்பொருள். உம் - உயர்வு சிறப்பு. கடியான்-ஆண்பாற்குறிப்புவினையாலணையும்பெயர்; கடியென்னும் உரிச்சொல்லினடியாப் பிறந்த தென்றாவது, கடுமையென்னும் பண்பினடியாப் பிறந்த தென்றாவது கொள்க. (கரு)

[இந்திரன் வச்சிரத்தால் அடிக்க, வாயுகுமாரன் மூர்ச்சித்துவிழுதல்.]

16.—(இ - ள்.) இன்ன காலையின் - இப்படிப்பட்ட சமயத்திலே, இந்திரன்—,எதிர் வரும் கூற்றம் அன்ன மாருதிமேல் - (ஐராவதத்தைநோக்கித்) தன்எதிரில்வருகிற யமனைப்போன்ற அந்தவாயுகுமாரன்மேல், கனல் ஆலகாலம் என - அக்கினியும் கொடிய ஆலகாலவிஷமும் போல, கொன்னுனை பெரு குலிசம் - (அகப்பட்டவுயிர்களைக்) கொல்லும் நுனியையுடைய பெரிய தனதுவச்சிராயுதத்தை, விட்டு எறிதலும் - வீசியெறிந்தவளவிலே,— (அவ்வாயுகுமாரன்),கொண்ட தன் நினைப்பினை மறந்துபோய் - (ஐராவதத்தைப்பற்றும்படி) கொண்ட தனதுநினைப்பை மறந்துவிட்டு, தாரணியில் வீழ்ந்தான் - தரையில் விழுந்திட்டான்; (எ - று.)

'நாம் திரிலோகாதிபதியாயிருந்தும் நம்மையும் பொருள்செய்யாது நமது வாகனத்தின்மீது இச்சிறுவன் பாய்கின்றனனே' என்று பெருங்கோபங்கொண்டு, சிறுவன் பசிபற்றி இவ்வாறு செய்கின்றனனென்றும் ஆலோசியாது இந்திரன் வச்சிராயுதத்தால் தாக்க, வாயுகுமாரன் தரையில் விழுந்திட்டன னென்பதாம்.

இன்ன - இகரச்சுட்டடியாப்பிறந்த குறிப்புப்பெயரெச்சம்; ன் - சாரியை, ன் - சந்தி. காலம் என்றது, காலையென விகாரப்பட்டது; சாமரம் சாமரை, சரிதம் - சரிதை, வதம் - வதை என்பனபோல. இன் - ஏழனுருபு. கூற்றம்-உடம்பையும் உயிரையும் பிரித்து வெவ்வேறுகூறாக்குகிற தேவன். பயங்கரமான தன்மைக்கும், மிக்கவலிமைக்கும், யமனை உவமைகூறினார். ஹாலாஹலம் என்றவடசொல், ஆலகால மென விகாரப்பட்டது. அன்ன -அன் என்ற உவமவுருபிடைச்சொல் லடியாப் பிறந்த குறிப்புப்பெயரெச்சம். குலிஸம், தரணீ - வடசொற்கள். தரணி - பொருள்களைத் தரிப்பது என்று காரணப்பொருள்படும். கொண்டதன்நினைப்பினைமறந்து - பிரஜ்ஞைதப்பி.

'சுரபதி சிறிதுசினங்கொண்டு வச்சிரத்தால் மெல்லப்புடைக்க, இக்கபிக்குழந்தை பருப்பதத்தின்மேல் விழுந்து இடக்கவுளில் அறைபட்டுச் சும்பிப்போய் மூர்ச்சித்துக் கிடந்தது' என்பது, உத்தரராமாயண வசனம். (கசு)

[அதுகண்டு வாயுதேவன் கோபித்து எங்கும் இயக்கம்ஒழிதல்.]

இதுவும், அடுத்த கவியும் - குளகம்.

17.—(இ - ள்.) மைந்தனை வீழ கண்ட - தன்மகனை மூர்ச்சித்துவிழக் கண்ட, வாயு - வாயுவானவன்,—வாசவன்மேல் சீறி - இந்திரன்மேற் கோபங்கொண்டு, இந்த மூவுலகு முற்றும் இமைப்பினில் கெடுப்பன் என்று சிந்தையின் எண்ணி - (அந்தஇந்திரனது ஆளுகைக்குஉட்பட்ட) இந்தமூன்று லோகத்துஉயிர்களையெல்லாம்ஒருநொடிப்பொழுதிலேஅழிக்கக்கடவேனென்று மனத்தில்நினைத்து,அந்த சேயினை எடுத்துக்கொண்டு - அந்தத்தனது புத்திரனை யெடுத்து மடியில்வைத்துக்கொண்டு, அந்தரத்து இயக்கம்இன்றி- வானத்தில் சஞ்சரித்தல் இல்லாமல், அடங்கினன்-தம்பித்தவனாய், ஆங்கு - அவ்விடத்தில் [தன்மகன்விழுந்தஇடமான சுமேருமலையில்]. இருந்தகாலை- இருந்தபொழுது,—(எ - று.)—'புவனத்துள்ளோர் வீழ்ந்தனர்' என அடுத்த கவியில் முடியும்.

ஸதாகதியாய் எங்கும் சஞ்சரிக்கின்ற வாயுதேவன் தன்குமரனை இந்திரன் வச்சிராயுதங்கொண்டு எறிந்ததனாற் சினங்கொண்டு அவ்விந்திரனது ஆளுகைக்குஉட்பட்ட மூவுலகத்துஉயிர்களும் தவித்துப்போம்படி தம்பித்திருந்தன னென்பதாம்.

மைந்தனைவீழக்கண்ட - மைந்தன்வீழ்தலைக் கண்ட. வாஸவன் - வடசொல்: வசுக்களுக்குத்தலைவ னென்றும்,செல்வமுடையவ னென்றும் பொருள்படும்; தத்திதாந்தநாமம்: வசு - தேவர்களுள் ஒருபகுப்பினரும், செல்வமுமாம். மூவுலகு - சுவர்க்கம், பூமி, பாதாளம். இங்கு, இடவாகுபெயராய், உலகத்துஉயிர்களைக் குறிக்கும். இமைப்பு - இயல்பில் மனிதர் ஒருகால் கண்இமைத்தற்கு வேண்டும் பொழுது: ஒருமாத்திரை; இது, விரைவுகுறிக்கும். அந்த - அகரச்சுட்டின் மரூஉ. அந்தரம் - வடசொல். இயக்கம் - இயங்கு என்ற பகுதியின் தொழிற்பெயர்: அம் - விகுதி, வலித்தல் - விகாரம். சேய் - செம்மை யென்னும் பண்புப்பெயரின் விகாரம்; ஈறுபோய் ஆதிநீண்டு முன்நின்ற மகரமெய் யகரமாகத் திரிந்தது; இது, முதலிற் பண்பாகுபெயராய் முருகக்கடவுளையும், அது - பின்பு (குமாரனென்னும் வடமொழி போல) உவமையாகுபெயராய் அம்முருகக்கடவுள்போல அழகிலும் பல பராக்கிரமங்களிலுஞ் சிறந்த மகனையும் குறித்தலால், இருமடியாகுபெயராம். கெடுப்பன்—அன்-தன்மையொருமைவிகுதி. இமைப்பு - தொழிலாகுபெயர். உலகு - லோகமென்ற வடசொல்லின் விகாரம். (கஎ)

[அதனால் உலகத்தில் உயிர்கள் துன்பப்படுதல்.]

18.—(இ - ள்.) உறு வலி இல்லா - (தானாகஇயங்குதற்கு) ஏற்ற வலிமையில்லாத, மாயம் உடம்பினை - பிரகிருதிசம்பந்தத்தா லாகிய உடம்பை, பிறிவு இலாது உள்ளே நின்று இயக்குகின்ற - அதனைவிட்டுவேறுபடுதலில்லாமல் அகனுள்ளே நின்றுகொண்டு புடைபெயரச்செய்கிற, பிராண வாயு- உயிர்க்குஆதாரமான வாயுதேவன், கோவிப்ப - இவ்வாறு கோபங்கொண்டு எங்கும் அசைவற்றுநிற்க, (அதனால்),—அறு கயிறு ஊசல் போல - அற்றகயிற்றையுடைய [கயிறற்ற] ஊஞ்சல்போலவும், உள் நின்று அங்கொடு இங்கு ஆட்டு பொறி அறு பாவை போன்று-உள்ளேநின்று அங்குமிங்குமாக ஆடச்செய்கிற யந்திரசூத்திரம் அற்ற பொம்மைபோலவும், புவனத்து உள்ளோர்- உலகங்களில் உள்ள எல்லோரும், வீழ்ந்தனர்-செயலற்றுவிழுந்திட்டார்கள்.

வாயுதேவன் சினந்து தம்பித்ததனால் மூவுலகத்துப்பிராணிகளும் மூச்சுவிடவும் முடியாது செயலற்றுஒடுங்கிவீழ்ந்தன ரென்பதாம். உவமையணி. 'அதுகண்டு வாயுபகவான் கோபங்கொண்டு சகலபிராணிகளின் மலமூத்திராசயங்களில் தம்பித்திருந்தனன்; அப்படியிருக்கவே, எவரும் வயிறு

வீங்கிச் சுவாசம்விடமாட்டாமல் தவித்ததனால் வேள்விமுதலிய வைதிகமொன்றும் நடவாமல் தேவதைகட்கு மகிமைகுறையலாயிற்று' என்பது உத்தர ராமாயணவசனம்.

இங்குச் சிறப்புப்பற்றி உயர்திணைமேல் வைத்துக் கூறினாராயினும், இது, மற்றைப்பிராணிகள் யாவும் இயக்கமின்றி ஒழிந்ததற்கும் உபலக்ஷணமாம்; (உபலக்ஷணமாவது - ஒருமொழி ஒழிந்த தன்இனத்தையுங் குறிப்பது: நன் - பொது - எ.) மூலப்ரக்ருதியினின்றும் ஒன்றிலிருந்து ஒன்றாக மஹாந் அஹங்கார மநஸ்ஸுக்களும், பஞ்சபூதங்களும், மெய் வாய் கண் மூக்குச் செவி என்கிற ஞாநேந்திரியங்களைந்தும்,சப்தஸ்பர்ச ரூப ரஸ கந்தங்களாகிய விஷயங்களைந்தும், வாக் பாணி பாத பாயு உபஸ்தங்களென்கிற கர்மேந்திரியங்களைந்துந் தோன்ற, இங்ஙனந்தோன்றிய இருபத்துநான்கு தத்துவங்களினாலேயே இந்தப் பிரபஞ்சமுழுதும் நடத்தலால்,'மாயவுடம்பு' என்றார்: (ப்ரக்ருதியென்று கூறுவது மற்றை இருபத்துமூன்று தத்துவங்களுள்ளும் தான் முதலாயிருத்தலா லென்க.) மாயவுடம்பு-நிலையில்லாதவுடம்பும்,எம்பெருமானது மாயையினாலாகிய உடம்புமாம். 'உறுவலியில்லா' என்ற தொடர், 'உடம்பு'என்பதனோடு இயையும். இல்லா-ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்; பகுதி எதிர்மறைகுறித்ததனால், ஆ-சாரியை. மாயம் - மாயா என்ற வடசொல்லின் திரிபு - கோவிப்ப = கோபிப்ப. 'அங்கொடு இங்கு ஆட்டு' என்றதை, ஊசற்கயிற்றுக்கும் அடைமொழியாக்கலாம். பாவை - கயிறுகொண்டு ஆட்டப்படும் சித்திரப்பாவை. புவநம் - வடசொல்.'பிறிவிலாதுள்ளேநின்று' என்றது - ஜீவதசையில் உடம்புக்கும் உயிருக்கும்உள்ள ஒற்றுமையை விளக்கும். வாயுக் கோவிப்ப - உயர்திணைப்பெயரின்முன் வலி இரட்டியது, செய்யுளோசைப்பொருட்டென்க. (கஅ)

[தேவர்கள் முதலியோர் சென்று பிரமனைச் சரணமடைதல்.]

இது முதல் மூன்றுகவிகள் - குளகம்.

19.—(இ - ள்.) ஆயவை நிகழும் காலை - இங்ஙனம் ஆகிய உபத்திரவங்கள் உண்டானபொழுது,—வாயு கோபத்தினாலே மகோதரர் ஆகி உள்ளோர் - வாயுவினது கோபத்தால் வீங்கிய வயிறுள்ளவர்களாகிய, அமரர் - தேவர்களும், தானவர்கள் - அசுரர்களும், ஆய தூய மா தவர்கள் - மேன்மையுள்ளோரான பரிசுத்தியையுடைய பெருந்தவஞ்செய்த முனிவர்களும், சித்தர் - சித்தர்களும், விஞ்சையர் - வித்தியாதரர்களும், துறக்கத்து உள்ளோர் - மற்றும் சுவர்க்கலோகத்தில் உள்ளவர்களான (கந்தருவர் கின்னரர் முதலிய) தேவசாதியார்களும்,—நாயகன் நாபி வந்த நான்முகன் தன்னை நண்ணி - (எல்லாவுயிர்களுக்குந்) தலைவனான திருமாலினது திருநாபித்தாமரைமலரினின்று தோன்றிய பிரமனை யடைந்து, — (எ - று.) — 'என்று இயம்ப' என உக - ஆஞ் செய்யுளோடு தொடரும்.

அமரர் - (அமிருதமுண்டதனால்) மரணமில்லாதவர். 'ஆய' என்ற விடத்து 'ஆய்ந்த' என்றும் பாடம்; ஆராய்ந்தறிந்த என்று பொருள். சித்தர் - யோகசித்திபெற்றவர். விஞ்சையர் - மாயவித்தையைத் தரிப்பவர். வாயு கோபம் என்பதற்கு - வாயுவின் அடக்க மென்றும் பொருள்சொள்ளலாம். பிரளயசமுத்திரத்திற் பள்ளிகொண்டிருந்த திருமாலினது நாபியில் மலர்ந்த தாமரையினின்று பிரமன் தோன்றினன். நான்முகன் - நான்குதிசையையும்நோக்கிய நான்குமுகமுடையவன். துறக்கம் - இவ்வுலகசம்பந்தத்தைத் துறந்துசெல்லுமிட மென்று பொருள்படுங் காரணக்குறி. அமரர், தாநவர், ஸித்தர், வாயுகோபம், மஹோதரர், நாயகன், நாபி - வடசொற்கள். மா, தவம், விஞ்சை - மஹா, தபஸ், வித்யா என்ற வடசொற்களின் விகாரம். மகோதரம் - பெருவயிறு: மகா + உதரம்; வடமொழிப்புணர்ச்சி, குணசந்தி; 'அ ஆ முன் உ ஊ வரின் இரண்டுங்கெட ஓர் ஓகாரந் தோன்றும்.' ஆய

என்ற பெயரெச்சத்தில், ய் - இறந்தகாலவிடைநிலை. விஞ்சயர் என்பது - விஞ்சையர் என்பதன் போலி; "அ ஐ முதலிடை யொக்குஞ் ச ஞயமுன்" என்பது, விதி. 'விஞ்சையர்' என்று பாடங்கொள்ளுதல் நேர். நாபி, உந்தி, கொப்பூழ் - ஒருபொருளன. (௧௯)

[அவர்கள் பிரமனிடம் முறையிடுதல்.]

20.—(இ - ள்.) ஆதி வேதியனே - எல்லாப் பொருள்களுக்கும் தலைவனாய் வேதம்வல்லவனான பிரமனே! கேட்டி - (நாங்கள்சொல்வதைக்) கேட்டருள்வாயாக; அமரர் கோன் குலிசத்தாலே-தேவர்களுக்கு அரசனான இந்திரனுடைய வச்சிராயுதத்தினாலே, காதலன் ஆய மைந்தன் - தனது அன்புள்ளமகன், காலன் வாய் வீழ - யமனுடைய வாயில் விழ [இறக்க], கண்டு - அது கண்டு, வாத ராயன் கோவிப்ப - காற்றுக்கு அரசனான வாயுதேவன் கோபங்கொண்டு தம்பித்தலால், வயிறுகள் பெரு சால் என்ன பூதமது என்ன வீங்கி-பெரிய சால்போலவும் பூதங்களின்வயிறு போலவும் தங்கள் வயிறு வீங்கப்பெற்று, புவனத்து உள்ளோர் - உலகங்களில் உள்ளவரெல்லோரும், புரண்டனர் - நிலைகலங்கிவிழுந்தார்கள்; (எ - று.)

ஆதிவேதியன்-படைப்புத்தொழிற்கடவுளும் இந்திரன்முதலிய தேவர்கட்கெல்லாந் தலைவனுமான பிரமன். கேட்டி - ஏவலொருமை; இ-விகுதி, ட் - எழுத்துப்பேறு. வாதராஜன், பூதம் - வடசொற்கள். பூதமது—அது - பகுதிப்பொருள்விகுதி: முதல்வேற்றுமைச்சொல்லுரு பென்பாரும் உளர். காலன் - பிராணிகளின் ஆயுட்காலத்தை வரையறுக்குங் கடவுள். புவனத்துள்ளோர் வயிறுவீங்கிப் புரண்டனர்-சினை வினை முதல்வினைகொண்டுமுடிந்தது; [நன் - வினை-௨௧.] புரண்டனர், புரள்+ட்+அன்+அர் என்று பிரியும்; பகுதியீற்று ளகரம் ணகரமானது - சந்திவிகாரம். 'ஆதிநாயகனே' என்பது, பாடம். (௨௦)

[அதுகேட்ட பிரமன் தேவர்களுடன் வாயுவினிடம் வருதல்.]

21.—(இ - ள்.) என்று அவர் இயம்ப - என்று அந்தத் தேவர்கள் முதலானவர்கள் சொல்ல, கேட்ட - அதுகேட்ட, இரணியகருப்பன் -பிரமன்,— இன்று சென்று நோய் தீர்ப்பன் என்னும் சிந்தையன் -'இப்பொழுதே (நான்)போய் உலகத் துன்பத்தை நீக்குவேன்' என்னும் எண்ணமுள்ளவனாய்,—தேவர் சூழ-தேவர்கள் (தன்னைச்) சூழ்ந்துவர,—வல் திறல் மாண்ட சேயை - வலியபலம் ஒழிந்த தன்மகனை, மடியிலே வைத்து - தன் மடியிலே வைத்துக்கொண்டு,நோயால் கன்றிய மனத்தன் ஆய-துன்பத்தால் தவித்த மனத்தையுடையவனாயிருந்த, காற்றினுக்கு அரசை - வாயுவை, கண்டான் - பார்த்தான்; (எ - று.)

இன்றுசென்றுநோய்தீர்ப்ப னென்பதற்கு - நான் இப்பொழுதே சென்று வாதராஜனது மனத்துயரத்தையொழிப்பே னென்று பொருள்கொள்ளுதலும் சாலும்; மேல், 'வாயுதந்தபாலனைத் தன்மலர்க்கையால் தடவினன் தயாவின் மிக்கான்,' 'நீடியமலரின்மேலோன் நெடுங்கையானீவலோடும், ...வீடியமைந்தன் சீவன் பெற்றிட...,...தாதைகுளிர்ந்தனன்'என வருதல் காண்க. சூழக் கண்டான் என இயையும். இன்று என்றவிடத்து, 'இன்னே' என்றும் பாடம்; இப்பொழுதே என்று பொருள். ஹிரண்யகர்ப்பன்- வடசொல்; அதற்கு - பொன்னிறமான அண்டத்தின் கருப்பத்தில் தோன்றியவன் என்று பொருள். நோய் - நொ என்னும் பகுதியின் அடியாப் பிறந்த தொழிற்பெயர். சிந்தையன்-குறிப்புமுற்றுவினையெச்சம். மாண்ட— மாள் - பகுதி. (௨௧)

[வாயுவினால் வணங்கப்பட்ட பிரமன் அவன்மகனைத் தடவுதல்.]

22.—பாடலின்தலைப்பில் 'பரிசத்தலால்' என்ற சொல்லை, 'பரிசித்தலால்' என்று திருத்திக்கொள்க.

(இ - ள்.) இந்திரன் முதல் ஆய் உள்ள இமையவர் சூழ வந்த அந்தணன் - இந்திரன் முதலாக உள்ள தேவர்கள் தன்னைச்சூழ வந்த பிரமன்,— தன்னை நோக்கி - தன்னைப்பார்த்து, அகத்து எழு துன்பத்தோடு வந்து அடி பணிந்தோன் தன்னை - மனத்தில் மிகுந்த துன்பத்துடனே வந்து தன் பாதங்களில்விழுந்து நமஸ்கரித்தவனை அந்தவாயுவை, மலர் கையால் எடுத்து-தாமரைமலர்போன்ற தனது கைகளா லெடுத்து, வாயு தந்த பாலனை- அந்தவாயு பெற்ற பிள்ளையை, தயாவில் மிக்கான் தன் கையால் தடவினன்- அருளில்மிக்கவனாய் [மிக்க அருளோடு]தனது கையால் தடவினான்; (எ-று.)

பிரமன் தானிருந்த இடந்தேடி வந்ததை நோக்கிய வாயுதேவன் அவனது பாதங்களில் வணங்க,அப்பிரமதேவன் அவ்வாயுதேவனை எழுந்திருக்குமாறு தனது கைகளால் எடுத்துவிட்டு, பிறகு அவனது புதல்வனான சிறுவனை உயிர்பெற்றெழுந்திருக்கவேண்டுமென்ற திருவுள்ளத்தால் தனது கையால் தடவின னென்பதாம்.

ஆய் = ஆக: எச்சத்திரிபு. இமையவர்- கண் இமையாதவர் ; இப்பொருளில், எதிர்மறை ஆகாரம் புணர்ந்துகெட்ட தெனவேண்டும்; அல்லது, இமையில் விசேஷமுடையவர் ; அதாவது - மூடாத இமையையுடையவர் என்பதாம்; அன்றி, இமயமலையில் வாழ்பவ ரென்றுமாம். அந்தணர்குலத்துக்கு முதல்வனாதலால், பிரமன் 'அந்தணன்' எனப்பட்டான். அம் தண் அன்- அழகியகுளிர்ச்சியை [அதாவது - அருளை] யுடையவன் ; அன்றி, அந்த அணவு அன்-வேதாந்தத்தையே பொருளென்று மேற்கொண்டு பார்ப்பவன்; இது - காரணவிடுகுறி. எல்லாமலர்களுள்ளும் தாமரை சிறத்தலால், அடைமொழி கொடாமல், மலர்எனப்பட்டது ; "பூவெனப்படுவது பொறிவாழ் பூவே" என்பது காண்க ;[பொறி - இலக்குமி.] கைக்குத் தாமரை யுவமை- செம்மை மென்மை அழகுகளுக்கு. பாலன், தயா வடசொற்கள். தயா என்பது - ஆவீறு ஐயாகத் திரியாது நின்றது. தயாவின் மிக்கான் - முற்றெச்சம் ; இதனைப் பெயராகக்கொண்டு அந்தணனென்பதற்குமுன் கூட்டினும் அமையும். (உஉ)

[உடனே மகன் உயிர்த்துஎழ, வாயு மகிழ்தல்.]

23.—(இ-ள்.)நீடிய மலரின் மேலோன்-(திருமாலினது நாபியினின்று) நீண்டெழுந்த தாமரைமலரின்மேல் தோன்றியவனான பிரமன், நெடு கையால் நீவலோடும்-மகிமையுள்ள தன்கையால் தடவியவுடனே,—வாடி மண் மடிந்த பைங் கூழ் மழை விழ தளிர்க்கும் ஆ போல்-வாட்டமுற்றுத் தரையிலே சாய்ந்த பசுமையான பயிர்மேல் மழைவிழப்பெற்றதனால் தளிர்க்குந் தன்மைபோல, வீடிய மைந்தன் சீவன் பெற்றிட - இறந்துகிடந்த அந்த மகன் உயிர்பெற்று எழ,—உணர்வின் மிக்கான் தாதை - அறிவிற்சிறந்த தந்தையான வாயு, துயரின் வெந்து கோடிய நெஞ்சு குளிர்ந்தனன் - துன்பத்தால் தவித்துமாறுபாடுகொண்டிருந்த தன்மனம் குளிரப்பெற்றான்;(எ-று.)

நீவலோடும் என்றது- பிற்பொருளோடு விரைவையுங் குறிக்கும். நீவல்-தொழிற்பெயர் ; நீவு - பகுதி. பைங்கூழ் - பசுமையாகிய பயிர். கூழ் என்ற உணவின்பெயர் -அதற்குக் காரணமான பயிரைக் குறித்தலால் காரியவாகுபெயராம். ஆ - ஆறு என்பதன் விகாரம். வீடிய—வீடு - பகுதி ; வீடுதல் - உயிர்விடுதல். ஜீவன், தாத என்ற வடசொற்கள், சீவன் தாதை என விகாரப்பட்டன, தாதை நெஞ்சு குளிர்ந்தனன் என்ற முடிபுக்கு விதி - "உயர்திணை தொடர்ந்த பொருள் முதல் ஆறும், அதனொடுசார்த்தின் அத்திணை முடிபின" என்பது. துயரின், இன் - ஐந்தனுருபு, ஏது. (உங)

[பின்பு வாயு எங்கும்உலாவ, தேவர்கள் அம்மகனுக்கு வரமளிக்கத் தொடங்குதல்.]

24.—தேவர் மாருதிக்கு அநுமனாமமளித்து வாழ்த்தினதாகத் தலைப்பில்வதிப்பித்திருப்பது பொருந்தாமையை உய்த்துணர்க.

(இ - ள்.) திண் திறல் மைந்தன் - மிக்க வலிமையையுடைய தனது மகன், சீவன் பெற்றிட - உயிர்பெற்றவுடனே, தேர்ந்த வாயு - மனக்கலக்கம் நீங்கித் தெளிவடைந்த வாயு, பண்டு போல் உலகம் எங்கும் தான் பாய்ந்து சரிய-முன்போலவே உலகமுழுவதும் தான்பரந்து சஞ்சரிக்க,பார்த்து-(அங்ஙனஞ் சஞ்சரிக்கத்தொடங்கிய அவ்வாயுவை) நோக்கி,புண்டரீகத்தின் மேலோன் புரந்தரன் ஆகி ஆனோர் அண்டர்கள் எவரும் - தாமரைமலரின் மேல்தோன்றியவனான பிரமனும் இந்திரனும் முதலான தேவர்களெல்லோரும், நோக்கி - ஆலோசித்து, அவற்கு இதம் அறையல் உற்றார் - அந்த வாயுவுக்கு இனிமையானவார்த்தைகளைக் கூறத்தொடங்கினார்கள்; (எ-று.)—அவற்றை, அடுத்த எழுகவிகளிற் காண்க.

பிரமன் தேவர்களை நோக்கி 'வாயுவின் உகப்பிற்காகவும், இனி ஆக வேண்டிய பெரியகாரியங்களுக்காகவும் இந்த வானரசிசுவுக்கு வரங்கொடுங்கள்' என்றுசொல்ல, அவர்கள் வரமளிப்பாராயின ரென்று முதனூலால் விளங்கும். அதற்குஏற்ப, இச்செய்யுளின் பின் இரண்டடிகள் "புண்டரீகத்தின்மேலோன் புரந்தரனாதியானோ, ரண்டரை யடங்கநோக்கி யவர்க்கித மறையலுற்றான்" என்று காணப்படுவதோடு, இச்செய்யுளின்பின் "இந்த மூவுலகையெல்லா மிடர்கெடுத் திமையோ ரானோர், சிந்தையிற்றுயரமெல்லாந் தீர்க்கு மித்திறலின்மிக்க, மைந்தனுக் கும்மாலாய வரங்க ணீர் வழங்குமென்ன, வெந்திறல் விண்ணோர்வேந்த னினையன விளம்பலுற்றான்" என்ற ஒருசெய்யுள் எட்டுப்பிரதிகளில் காணப்படுகிறது.

அவற்கு இதம் அறையலுற்றார் என்பதற்கு - அந்தவாயுகுமாரனுக்கு நன்மையானவரங்களைச் சொல்லத்தொடங்கினார்கள் என்றும் பதவுரை கூறலாம். இரண்டாமடியில் 'பாய்ந்ததான் மருத்தைப்பார்த்து' என்று பாடம். திண் திறல் - ஒருபொருட்பன்மொழி. பண்டு - பழமைகுறிக்கும் இடைச்சொல். புண்டரீகம், புரந்தரன், ஆதி, அண்டர், ஹிதம் - வடசொற்கள். புரந்தரன்—புரம் - (பகைவர்களுடைய) பட்டணங்களை, தரன்-அழிப்பவன். (உச)

[இந்திரன் அளித்த வரம்.]

25.—(இ - ள்.) சீர் பெற்று ஒளிர் பூண் - அழகுபெற்று விளங்குகின்ற ஆபரணங்களையுடைய, அஞ்சனை தன் - அஞ்சனாதேவியினது, சிறுவன் தன்னை - மகனை, முகம் நோக்கி - முகத்தைப்பார்த்து, (இந்திரன்), 'கூர் பற்றிய என் குலிசத்தால் - கூர்மைபொருந்திய எனது வச்சிராயுதத்தினால், கூறு படு (உன் உடம்பு) பின்னப்பட்ட, புண் - புண்ணினது, வடு- தழும்பு, தீர்க - நீங்கிவிடக்கடவது; நின் அநு அற்றிடலால் - உனது கன்னம் (என் வச்சிரத்தால்) சிதைபட்டதனால், (நீ), அநுமன் எனும் பேர் பெற்று - அநுமான் என்னும் பெயரைப் பெற்று, உலகம் உள் அளவும் பெயரா புகழ் பெறுதி-லோகம்உள்ளவரையிலும் அழியாத கீர்த்தியைப்பெறுவாய்: நீ பெற்றது ஆர் பெற்றார் - இங்ஙனம் நீபெற்றபெருமையை வேறுஎவர் பெற்றார்? [எவரும் இல்லை யென்றபடி], ' என்றான் - என்றுசொன்னான்; (எ - று.)—சந்தர்ப்பத்திற்கு ஏற்க, இதற்கு - இந்திரன் என்ற எழுவாய் தோன்றும்.

'பாகசாதனன்'என்வச்சிரத்தால் அடிபட்டு ஹநு [கவுள்] முறிந்தபடியால் இவனுக்கு ஹநுமா னென்று பெயர்வழங்கக்கடவது; இந்தவச்சிரத்தால் மரணம் இல்லாதிருக்கக்கடவது' என்று வரங்கொடுத்து ஒருபொற்றாமரை மாலையும் அளித்தனன்' என்பது, உத்தரராமாயணவசனம்.

'நீ பெற்றது ஆர்பெற்றார்' என்றது - அவனுக்கு உற்சாகத்தை விளைத்தற்குக் கூறியது.ஆதாரமாகிய உலகம் அழிந்தாலன்றிப் புகழ் அழியாதாதலின், 'உலகமுள்ளளவும் பெயராப் புகழ்' எனப்பட்டது. பூணப்படுவது - பூண்; செயப்படுபொருள்விகுதிபுணர்ந்துகெட்ட பெயர். சிறுவன் - சிறிய

வன்; பண்படியாப்பிறந்த பெயர். பெற்றது - வினையாலணையும்பெயர். ஆர் என்ற வினா - எதிர்மறைகுறித்தது. சிறுவன் தன்னை முகம் நோக்கி— இரண்டு செயப்படுபொருள் வந்த வினை; சிறுவனுடைய என்று கொண்டால், உருபுமயக்கமாம். முகம் - வடசொல். இந்திரனுக்குஉரிய ஆயுதமாகிய வச்சிரம் நூறுகூர்நுனியுள்ள தாதலால், 'கூர்பற்றிய என்குலிசம்' எனப்பட்டது. (உரு)

[சூரியன் அளித்த வரம்.]

26.—(இ - ள்.) பொல்லா இருளை கடிந்து ஓட்டு - பொலிவற்றதான இருளைப் பகைத்தொழிக்கிற, புவன தீபன் - உலகத்துக்கு ஒருவிளக்குப்போன்றவனும், நலம் மிக்கான் - நற்குணத்திற் சிறந்தவனுமான சூரியன், புகல்வான் - சொல்லுவான்:—(எங்ஙனமெனின்—), 'என் - என்னுடைய, வில் ஆர் கரத்தில் - பிரகாசம்பொருந்திய (ஆயிரம்) கிரணங்களுள், சத கூற்றில் ஒரு கூறு - நூற்றில் ஒருபங்கு, உனக்கு மேவிடுக - உனக்குப் பொருந்துவதாக; எல்லா விஞ்சைகளும் தரிக்க - எல்லாவகைவித்தைகளையும் அறிந்து கொள்ளுதற்கு, இசைந்த சத்தி உண்டாக - ஏற்ற திறமை உண்டாகக்கடவது; நல்லாய் - நற்குணமுடையவனே! தருகின்றேன் - (யான் இவ்வரம்) கொடுக்கிறேன்; நீ—, கொள் - (யான் கொடுக்கும் இவ்வரத்தைப்) பெற்றுக்கொள்', என்று நவின்றான் - என்று சொன்னான்; (எ - று.)

'ஆதித்தபகவான் 'என் தேசில் இவனுக்கு நூற்றிலொருகலை தந்தேன்; அன்றியும், இவன் சாஸ்திரங்களைக் கற்கும்பருவம் உற்றபோது இவனோடொத்தவன் யாருமில்லையென்னுமாறு சகலசாஸ்திரஞானமுங் கற்பிப்பேன்' என்றருளினான்' என்பது, உத்தரராமாயணவசனம்.

பொல்லாமை யென்னும் எதிர்மறைப் பண்புப்பெயர், ஈறுபோய், பொல்லா என நின்றது. பொன்என்பது பொல்என ஈறுவிகாரப்பட்டு எதிர்மறைஆகாரம் புணர்ந்த தென்னலாம். 'கடிதோட்டு' என்ற பாடத்துக்கு - விரைவாகஓட்டுகிற என்று பொருள். புவனதீபன் - "வையந்தகளியா வார்கடலே நெய்யாக, வெய்யகதிரோன்விளக்காக" என்றார் பொய்கையாழ்வாரும். 'தசகூற்றிலொருகூறு' என்ற பாடத்துக்கு - பத்திலொருபங்கு என்க. சத கூற்றில் ஒருகூறு-பத்துக்கிரணம் தசகூற்றில் ஒருகூறு - நூறுகிரணம். 'சதகூற்றில்' என்ற பாடமே முதனூலுக்கு ஏற்றது. மேவிடுக—இடு-துணிவுப்பொருள் காட்டும். நல்லாய்-நல்லான் என்பதன் ஈறுதிரிந்தவிளி. நவின்றான்—நவில்-பகுதி. நலம் 'அம்'விகுதிபெற்றபண்புப்பெயர். புவனதீபன், கரம், முக்தி - வடசொற்கள். சதகூறு - நிலைமொழி வடசொல்லாதலின், அதன்முன் வருமொழி முதல்வலி இயல்பாயிற்று; "இடையுரிவடசொலின் இயம்பிய கொளாதவும்" என்ற புறனடையைக் காண்க. கொள் நீ - நீகற்றுக்கொள், நான்கற்பித்துக்கொடுப்பேன் என்றும் உரைக்கலாம். 'கேணீ' என்றும் பாடம்; யான்சொல்வதை நீ கேட்பாய் என்றுபொருள். (உசு)

[வருணனும் யமனும் அளித்த வரங்கள்.]

27.—(இ - ள்.) 'இரண பூமியிடை நேர்ந்தால் - போர்க்களத்திலே(நீ) எதிரிட்டால், (அப்பொழுது), என் பாசத்தால் ஆர்த்தக்கால் - எனக்கு உரிய பாசமென்னும் ஆயுதத்தால் (உன்னைக்) கட்டினால், உனக்கு மரணம் இல்லை - (அதனால்) உனக்குச் சாவு உண்டாகாது தவிரக்கடவது,' என்று—, வருணராசன் வரம் கொடுப்ப - (மேற்குத்திக்குக்கும் நீருக்கும்) தலைவனான வருணன் வரமளிக்க,—தரணியோரை விதி வழியே தண்டிப்போன் - பூலோகத்திலுள்ள சனங்களை (அவரவர் செய்த)பாவத்திற்கு ஏற்பத் தண்டனை செய்பவனான யமன், 'என் தண்டத்தால்- எனது தண்டாயு

தத்தினால், முரணில் மிகு மாருதி ஆவி முடியாது ஒழிய - வலிமையில்மிக்க வாயுகுமாரனது உயிர் அழியாதிருக்கக்கடவது' (என்று), வரம் அளித்தான் - வரங்கொடுத்தருளினான்; (எ - று.)

'வருணதேவன் 'என்பாசத்தினாலும் தண்ணீரினாலும் இவற்கு இறுதி வாராதிருக்க' எனவும், யமதருமராசன் 'எனது காலதண்டத்தாற் சாவின்மையும், நோயின்மையும், சண்டையில் இளைப்பின்மையும் இவற்குத் தந்தேன்' எனவும் வரங்களைத் தந்தனர்' என்பது, உத்தரராமாயணவசனம்.

முடியா தொழிய, ஒழி - துணிவுப்பொருள் காட்டும். ஒழிய - அகரவீற்று வியங்கோள்முற்று; ஓங்க, எழுந்தருள என்பன போல. இதன்பின் 'என்று' என வருவிக்க. 'தன தண்டத்தால்' என்று பாடமிருப்பின், 'ஒழிய' என்பதை வினையெச்சமாகக்கொண்டு உரைக்கலாம். 'முடியாதொழிகவென மொழிந்தான்' என்று எட்டுப்பிரதிகளிற் காணப்படுகிற பாடம் பொருத்தமுடையது. போரைக் குறிக்கிற 'ரணம்' என்ற வடசொல், இரணம் என ரகரத்திற்குமுன் இகரம்பெற்றது; "ரவ்விற்கு அம்முதலாம் முக்குறிலும்." (கடனைக்குறிக்கையில் 'ருணம்' என்பதும், புண்ணைக்குறிக்கையில் 'வ்ரணம்' என்பதும் வடசொற்களாம்: இந்த வேறுபாடு, மாணாக்கர் அவசியம் அறியத்தக்கது.) பாசம் - கயிற்றுவடிவமான ஆயுதம்; இங்கு, வருணபாசம். தண்டம் - கதாயுதம்; இங்கு, காலதண்டம்: இது, பிராணிகளைத் தவறாது அழிப்பது. ஆர்த்தக்கால் - எதிர்காலவினையெச்சம்; ஆர் - பகுதி; கால் - காலங்காட்டும் எச்சவிகுதி, த் அ சாரியைகள், மற்றவை - சந்தி. ரணபூமி, பாசம், மரணம், வருணராஜன், வரம், விதி, தண்டம் - வடசொற்கள். இடை - ஏழனுருபு. (உஎ)

[குபேரனும் சிவபிரானும் அளித்த வரங்கள்.]

இதுவும், அடுத்த கவியும் - குளகம்.

23.—(இ - ள்.) காற்றின் சிறுவன் முகம் நோக்கி - வாயுகுமாரனுடைய முகத்தைப் பார்த்து, என் கதையால் நீ கூற்றின் குழல் உறாய் என்று - 'எனக்கு உரிய கதாயுதத்தினால் நீ யமலோகத்தை அடையமாட்டாய்' என்று, குபேரன் கருணையால் கூற - குபேரன் அருளோடு வரமளிக்க,— கூற்று உதைத்த ஏறின் பாகன் - யமனை உதைத்தவனும் விருஷபத்தை வாகனமாகச் செலுத்துபவனுமான சிவபிரான், 'என் கரம் மூ இலையினாலும் - எனது கையிலுள்ள மூன்று இலைகள்போன்ற தலைகளையுடைய சூலாயுதத்தினாலும், என்றாலும் —, ஆற்றல் மிகு மாருதி ஆவி அகலாது ஒழிக - வலிமைமிக்க வாயுகுமாரனுடைய உயிர் நீங்காதிருக்கக்கடவது', என - என்று, அருள் - வரங்கொடுக்க,—(எ-று.)—'தாதா உரைக்கும்' என்று அடுத்த கவியோடு தொடரும்.

'ஏகாக்ஷிபிங்களன் 'என்கதாயுதத்தால் இவன் முடியாதிருக்கக்கடவன்' எனவும், சாம்பமூர்த்தியும் 'என்னாலும் என் ஆயுதங்களாலும் இப்பாலகனுக்கு யாதோர் ஊறும் இல்லையாகுக' எனவும் அனுக்கிரகித்தனர்' என்பது, உத்தரராமாயணவசனம். கருணையாற் கூற வென இயையும். கதா என்ற வடசொல் ஆவீறு ஐயாயிற்று. கூற்றின் குழல் உறாய் - இறவாதிருக்கக்கடவாய். குழல் - இடம். குபேரன்—கு - குற்சிதமான, பேரன் - உறுப்பையுடையவன்; ஒரு கண் ஒளிமழுங்கியவன். பிரத்தியட்சமான சிவபிரானது வாமபாகத்தில் வீற்றிருந்த பார்வதி தேவியை உற்று நோக்கியதனால் இவ்வாறு நேர்ந்தது; இதனால், இவனுக்கு 'ஏகாக்ஷிபிங்களன்' எனவும் ஒருபெயருண்டு. ஏறு - பசுவின் ஆண்பாற்பெயர். பாகன் - நடத்துபவன். மூவிலை - மூன்றாகிய இலைகளையுடையது; பண்புத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை; முத்தலைவேல்.

**கூற்றுதைத்த கதை** :—ஊழ்வினையாற் பதினாறுபிராயம்பெற்ற மிருகண்டுமுனிகுமாரனாகிய மார்க்கண்டேயனென்னும் முனிவனை, பதினாறு பிராயம்முடிந்தவளவிலே ஒருநாள் சிவபூஜைசெய்துகொண்டிருக்கையில் கூற்றுவன் வந்து காலபாசத்தாற் கட்டியிழுக்க, முனிகுமாரன் சிவபிரானைச் சரணமடைய, அப்பெருமான் யமனைக் காலாலுதைத்துத்தள்ளி முனிகுமாரனுக்கு என்றும்பதினாறாகத் தீர்க்காயுள் கொடுத்தருளினன் என்பதாம். இச்சரித்திரத்தால், அனுபவித்தே தீரவேண்டும் பெருவலியதாகிய ஊழ்வினையையும் தன் அடியார்க்குக் கடக்கச்செய்கிற சிவபிரானது பேராற்றல் புலப்படும். (உஅ)

[பிரமனும் விசுவகர்மாவும் வரமளித்தல்.]

29.—(இ - ள்.) தாதா - பிரமன், உரைக்கும் - கூறுவான்;—(எவ்வாறெனின்,—) (இக்குமாரன்), என் பிரம தண்டால்தானும் - எனது பிரமதண்டமென்னும் படைக்கலத்தினாலும், சாவு இன்றி - மரணமில்லாமல், மேதாவியும் ஆய் - அறிவுடையவனுமாய், ஒரு நாளும் விளியா நாளும் உறுக - ஒருநாளும் அழியாத ஆயுளையும் அடையக்கடவன் [சிரஞ்சீவியாகக்கடவன்], என - என்று வரம் அளிக்க,—வானோர் தச்சன் - தேவர்களுக்குஉரிய தச்சனான விசுவகர்மா, 'தீது ஆயிரம் செய் அரக்கும் இவன் வாதா மகன் - (அரக்கர்களாலாகும்) தீமைகள் பலவற்றின் வேரை அறுக்குமவனான இந்த வாயுகுமாரன், செரு களத்தில் - போர்க்களத்தில், தேவர் படையால் சாவு ஒழிக - (யான் செய்தவையான) தேவர்களுடைய ஆயுதங்களால் மரணம் தவிர்க்கடவன்', என - என்று, வரம் கொடுத்தான்—; (எ - று.)

'பரமேட்டியும் 'இவன் எந்த அஸ்திரத்தினாலும் எந்தச்சாபத்தினாலும் மரணமுறாதவனாய்த் தீர்க்காயுசு உள்ளவனும் பேரியல்பான மனவுள்ளவனுமாகக்கடவன்' என வரம்பிரசாதித்தனர். விசுவகர்மா 'யுத்தத்தில் யான் கற்பித்த படைக்கலங்களுள் எதனாலும் இவன் ஊறுபடாதிருக்கக்கடவன்' எனக் கூறினன்' என்பது, உத்தரராமாயணவசனம்.

தாதா, ப்ரஹ்மதண்டம், மேதாவீ - வடசொற்கள். 'என்'என்றவிடத்து 'இவன்' என்றும், 'இவன்' என்றும் எதிரிற் பாடம். பிரமதண்டம் - பிரமனுக்கு உரியதொரு மந்திரபலமுள்ள கோல். உம்மைகள் நான்கனுள், முதலது - உயர்வுசிறப்பு; மூன்றாவது - முற்றுப்பொருளது; மற்றவையிரண்டும் - இறந்ததுதழுவிய எச்சப்பொருளன. 'ஆயிரம்' என்றது, இங்கே மிகுதியென்னும் பொருளது. படை - பகைவரைப் படுத்தற்குக் கருவியானது; படு - பகுதி; படுத்தல் - அழித்தல்: ஐ - கருவிப் பொருள் விகுதி. களம் - இடம். வாதமகன் என்பது, எதுகைநோக்கி 'வாதாமகன்' என விகாரப்பட்டது. தச்சன் - தக்ஷன் என்ற வடசொல்லின் சிதைவு. தாதா என்பது—எல்லாவற்றையுந் தரிப்பவனென்று காரணப்பொருள்படும். மேதா - அறிவு; அதனை யுடையவன் - மேதாவீ. தேவசிற்பியான விசுவகர்மன், தான் அவர்கட்கு அநேகம் ஆயுதங்களைச் செய்து கொடுத்தவனாதலால், அவற்றால் மரணமில்லாதிருக்கும்படி வரங்கொடுத்தான். (உகூ)

மற்றும்பலர் வரமளித்தபின் பிரமன் ஒன்றுசொல்லத் தொடங்குதலைத் தெரிவிக்கும் பாடல் ஒன்று விடப்பட்டது.

[பிறகு பிரமன் வாயுவைநோக்கிக் கூறிய வார்த்தை.]

30.—இந்தச்செய்யுளின் தலைப்பில் மூலபுத்தகத்திற் பதிப்பித்திருப்பது அடுத்த பாடலின்முன் இருக்கவேண்டும்.

(இ - ள்.) 'வன்னி சகாய-நெருப்புஎரிதற்குத் துணையாகின்றவனே!—நின் மைந்தன் - உனது புத்திரன், வையத்தோர்க்கும் வானோர்க்கும் இன்னல் செய்யும் இராவணன்தன் - பூலோகத்திலுள்ளவர்களுக்கும் தேவர்

களுக்குந் துன்பங்களைச் செய்கிற இராவணனுடைய, இலங்கை நகரில் - லங்காபுரியிலே, எரி ஊட்டி - தீப்பற்றவைத்து, மன்னன் இராமன் மனம் உவப்ப - (எல்லாவுயிர்கட்குந்) தலைவனான இராமபிரானது திருவுள்ளம் மகிழும்படி, வயவாள் அரக்கர் குலம் அறுத்து - வலிமையையும் வாளாயுதத்தையுமுடைய இராக்கதர்களுடைய கூட்டத்தை அழித்து, பின்னை - பின்பு, அவன்தன் பேர் அருளால் - அவ்விராமபிரானுடைய பெருங்கருணையினால், பிரமபதமும் பெறுக - (மறுமையில்) பிரமனாகும் நிலைமையையும் பெறக்கடவன்,' என்றான் - என்று (மீண்டும் பிரமன்) கூறினான்; (எ - று.)

'பின்பு பிரமாவானவர் வாயுவைப்பார்த்து 'உன்மகன் மகாபலபராக்கிரமசாலியாயும், மகாவித்துவானாயும், காமரூபியாயுமாகி ஸ்ரீராமசந்திரசுவாமிக்குப்பிரியமாயும் இராவணநாசத்திற்கு ஏதுவாயுமுள்ள மகாகாரியங்களைச் செய்து விசேஷகீர்த்திமானாவான்' என்றுசொல்லித் தேவர்குழாத்தோடு தம்முலகிற்கு எழுந்தருளினார்' என்பது, உத்தரராமாயணவசனம்.

வஹ்நிஸஹாயன் என்ற வடமொழி, வன்னிசகாயன் என விகாரப்பட்டது. ராவணன் என்ற வடமொழிப்பெயர் - கூச்சலிடுபவனென்றும், கூச்சலிடச்செய்பவனென்றும் பொருள்படும்; சிவபிரானது கைலாசமலையைப் பெயர்க்கத்தொடங்கி அதன்கீழ்த் தன்கைகள் அகப்பட்டு நசுக்குண்டபோது பேரிரைச்சலிட்டதனாலும், தனது கொடியசெய்கைகளால் உலகத்தைக் கதறச்செய்ததனாலும், இவனுக்கு இப்பெயர்: இனி, விச்ரவஸின் குமாரனென்று பொருள்படும் வடமொழித் தத்திதாந்தநாமமென்பர் வ்யாகரண நூல்வல்லார். லங்கா என்ற வடசொல், இலங்கையென விகாரப்பட்டது; கடல்சூழ்ந்த தீவு. எரிஊட்டி - நெருப்பு உண்ணச்செய்து. ஊட்டி என்பதில், ஊட்டு - பகுதி: அது, உண்ணை என்பதன் பிறவினை; உண் என்ற பகுதி முதல்நீண்டது: டு - பிறவினைவிகுதி, ணகரம் டகரமானது - சந்தி. மன் - பெருமை; அதனையுடையவன், மன்னன். பின்னை, ஐ - சாரியைப். ப்ரஹ்மபதம் - வடசொல்; பிரமபட்டம். பெறுகென்றான் - வியங்கோளீறு தொகுத்தல். 'நகரை எரியூட்டி' என்றும், 'பதமும் பெறுமென்றான்' என்றும் பாடம். (௩௦)

[இப்படி வரம்பெற்ற அநுமான் கர்வங்கொண்டு முனிவர்களுக்குத் துன்பஞ்செய்தல்.]

இதுவும், அடுத்தகவியும் - குளகம்.

31.—'சீரை சுருக்கு' என வலியியல்பாகப் பாடங்கொள்ளுதல் தகுதி; ஐகாரவீற்றுப்பெயர் உம்மைத்தொகையில் வலிமிகாது.

(இ - ள்.) மலரோன் முதல் ஆய இமையோர் - தாமரைமலரில் தோன்றியவனாகிய பிரமன் முதலான தேவர்கள், என்று கொடுத்த - இவ்வாறு கொடுத்த, வரம் - வரங்களினாலாகிய, செருக்கால் - கர்வத்தினால், ஒன்று வலியோன் - பொருந்திய வலிமையையுடையவனான அனுமான், இங்கு நன்று தீது என்று உணரா - இவ்வுலகத்தில் நல்லது இன்னதென்றும் தீயது இன்னதென்றும் ஆராய்ந்து அறியாமல், நல் மா முனிவர் உறைவிடத்து சென்று - சிறந்த மகாருஷிகள் வசிக்கின்ற இடங்களிற் போய், தயிர் பால் நெய் குடித்து - (அவர்கள் ஓமத்தின்பொருட்டு வைத்திருந்த) தயிரையும் பாலையும் நெய்யையும் குடித்து, (அவர்களுடைய), சீரை - மரவுரியையும், சுருக்கு சுருவம் - ஸ்ருக் ஸ்ருவம் என்ற ஓமக்கருவிகளையும், எலாம் - ஆகிய எல்லாவற்றையும், கொண்டு எழுவும் - எடுத்துக்கொண்டு சென்றவளவிலே, — அவர்கள் - அம்முனிவர்கள், ஊழி தீயின் உடன்று - பிரளயகாலத்துநெருப்புப்போலக் கோபங்கொண்டு, (எ - று.)—'எனவுரைத்தார்' என்று அடுத்த கவியோடு தொடரும்.

அனுமான் இங்ஙனந் தீங்குசெய்தது, தனதுகுரங்குசாதித்தன்மை யாலென்க; பாலியசேஷ்டையுமாம். நன்று, தீது - பண்படியாப் பிறந்த ஒன்றன்பாற் குறிப்பு வினையாலணையும்பெயர்கள். தயிர் பால் நெய், சிரை சுருக்குச் சுருவம் என்ற தொடர்கள் - அஃறிணை யும்மைத்தொகை யாதலால், பன்மைவிகுதிபெறவில்லை. ஸ்ருக், ஸ்ருவம் என்ற வடசொற் கள் - சுருக்கு, சுருவம் என விகாரப்பட்டன; இவை, ஓமத்தில் உப யோகப்படுகிற நெய்த்துடுப்புக்களின் வகைகள். சீரம் என்ற வடசொல், சிரையெனத் திரிந்தது; பூர்ஜமென்னும் மரத்தினின்று உரித்தெடுக்கப்படும் பட்டையினாலாகிய தோர் ஆடை. உணரா = உணராமல்; ஈறுகெட்ட எதிர் மறைவினையெச்சம். ஊழித்தீ-பிரளயகாலத்தில் கடலினின்று ஒருபெருந்தீ எழுந்து உலகங்களை எரித்து அழிக்குமென்பது, புராணக்கொள்கை. இன் - ஐந்தனுருபு, ஒப்புப்பொருள். உடன்று - இறந்தகால வினையெச்சம்; உடல் - வினைப்பகுதி. 'மலரோன் முதலாய' என்றவிடத்து 'மலரோனேயியபின்' என்றும், 'இங்குணரா' என்றவிடத்து 'உணராது' என்றும், 'எழலும்' என்ற விடத்து 'எக' என்றும் பாடபேதம் உண்டு. (௩௧)

[முனிவர்கள் அநுமானுக்குச் சாபங்கொடுத்தல்.]

32.—(இ - ள்.) 'பொன்மை நிறத்த அயன் - பொன்னிறத்தை (த் தன் னிடத்தே) கொண்ட பிரமன் கொடுத்த, வரத்தால் - வரத்தினால், புவனம் மூன்றும் பொடிபடுத்தி-மூன்று உலகங்களையும் பொடியாக்கவல்லவனாய்,— தன்மை பிரமதண்டினால் சாதிப்பு அரியோன் அவன் - (அவனுக்கு உரிய தான) பிரமதண்டத்தினாலும் வெல்லப்படுதற்கு அரியவனாய், பொல்லா கன்மத்தினை எம்மிடை செய்யும் - தீச்செயல்களை எம்மிடத்துச் செய்கின்ற, காற்றின் தனையன் - வாயுகுமாரன், செருக்கு அழிவுற்று - மனம் ஒடுங்கி, உன்மத்தனன் ஆய் - பித்தம்பிடித்தவன்போன்று, தன் வலி தான் உணரா தொழிக - தனது வலிமையைத் தான் அறியாதொழிவானாக', என உரைத் தார் - என்று சாபமொழிகூறினார்கள்; (எ - று.)

தன்வலிமையைத் தான் அறியானாயின் உற்சாகமின்றி ஒடுங்கியிருப்பா னாதலால், ஊக்கங்கொண்டு நமக்குத் தீங்குசெய்யமாட்டா னென்று இங் ஙனம் சாபமிட்டனர். வேறுகொடியசாபம் ஏதேனும் இடின் இவன் தந்தை யான வாயுதேவன் முன்போலக்கோபித்தானலிவா னென்ற அச்சத்தாலும், அரக்கரையழித்தலாகிய தங்கள் காரியம் இனிதுநிறைவேறுமென்ற கருத் தினாலும், இங்ஙனம் அனுமானுக்குத் தீங்குதராமலும் தங்களுக்கும் அவ னால் தீங்கு நேராமலு மிருக்கும்படி தந்திரமாகச் சாபமிட்டனர். இவன் வலிய அரக்கர்களை அழிக்குஞ்செயலில் இராமனுக்கு உதவிபுரிதற்பொரு ட்டு 'எவரேனும் புகழ்ந்துநினைப்பூட்டினால் இவனுக்கு உள்ள வலிமை தோ ன்றக்கடவது' என்று வரத்தையும் உடனே அளித்தார்க ளென்று முதனூ லால் தெரிகிறது. 'இப்படி மகாவரங்களைப்பெற்றதனால் இவ்வனுமான் சற் றுச்செருக்குற்று மகாரிஷிகளுடைய ஆச்சிரமங்களிற் புகுந்து யாகபாத்தி ரங்களையுடைத்தல் முதலான பல துன்பம் இழைத்துவந்தான். அத்தவசி கள் இத்தீமைகளைக் கேசரிக்குக் கூற, அவனும் வாயுவும் அஞ்சனையும் புத்தி சொல்லியுங் கேளாமே பின்பும் அங்ஙனஞ் செய்துகொண்டிருந்ததனால், அம்முனிவர் 'இவனுக்குத் தன் பலம் தெரியாமற்போய் நெடும்போது புக ழ்ந்து மூட்டினால் தோன்றக்கடவது' எனச் சாபமிட்டனர்' என்பது, உத் தரராமாயணவசனம்.

பொன்மை - பொன்னின்தன்மை; மை - தன்மைப்பொருளுணர்த் தும் விகுதி. 'பொன்மைவைத்த' என்றும் பாடம். அயன் - அஜன் என்ற வடசொல்லின் திரிபு; திருமாலினிடத்துத் தோன்றியவ னென்று பொருள்;

அ - திருமால். அரிபோனவன், அவன் - பகுதிப்பொருள்விகுதி. கர்மம், தநயன், உந்மத்தன் - வடசொற்கள். தனயன் - இடைப்போலி. உன்மத்தன் என்பதன்மேல், அன் - விகுதிமேல்விகுதி. ஆய - உவமவுருபு. 'பொடிபடுத் துந்தன்மைப் பிரமதண்டதனால்' என்றும், 'உன்மத்தன்போல்' என்றும் பிரதிபேதம். (௩௨)

[அதுமுதல் அநுமான் அடங்கியிருந்தல்.]

இதுமுதல் மூன்றுகவிகள் - ஒருதொடர்.

33.—(இ - ள்.) அநுமான்—, சாபம் உணர்ந்து - (கீழ்க்கூறிய முனிவர்) சாபத்தை யறிந்து, கருத்து ஒழிந்து - மனமொடுங்கி, சாந்தன் ஆகி - அடக்க முடையவனாய், வெம் கோபம் ஒழிந்து - கொடியகோபம் இல்லாமல், மாதவர்க்கு கூசி - பெருந்தவமுடைய முனிவர்களுக்கு அஞ்சி, குறி கொண்டு ஒழுகும் நாள் - அவர்கள்குறிப்பையறிந்து (அதற்கேற்பப்) பயபக்திவிசுவாசங்களோடு நடக்குங்காலத்தில்,—உலகுக்கு தீபம் அனையான் திறல் வாரணத்தோன் - உலகத்துக்குத் தீபம்போல அலங்காரமாக இருப்பவனும் வலிமையுள்ள (ஐராவத) யானையையுடையவனுமாகிய இந்திரனும், அரி - சூரியனும் என்கிற இருவர்கட்கும், இதயம்தாபன் இருத்தவிரசதன் ஆம் தனி போர் வீரன்தன் - மனத்தில் தாபமுடையவனான ருக்ஷராஜஸ் என்னும் ஒப்பற்ற போரில்வல்ல வானரவீரனுக்கும் பிறந்த, மைந்தர் - பிள்ளைகளாகிய, (எ - று)—'வாலி சுக்கிரீவர்' என அடுத்தகவியோடு தொடரும்.

'பின்பு இம்மர்க்கடசிறுவன் ஒடுங்கினவனாய் யாதொருதுன்பமுஞ் செய்யாமல் அவ்வாசிரமங்களிலேயே சஞ்சரித்துக்கொண்டு தவசிகளை அனுக்கிரகத்திற்குப் பாத்திரமாயிருந்தான்' என்பது, உத்தரராமாயண வசனம்.

'இங்கு வருபவர் யாவரும் பெண்வடிவமடைக' என்று சாபங்கொடுத்து உமாதேவி ஓர் உத்தியானவனத்தில் தோழியர்பலருடனே விளையாடிக்கொண்டிருக்கையில், ருக்ஷராஜஸ் என்ற வானரராசன் அங்குச் சென்றதனால், பெண்வடிவமடைந்தான்; அப்பொழுது அந்தப்பெண்குரங்கினுடைய வாலினழகைக் கண்டு காதல்கொண்ட இந்திரனுக்கு அப்பெண்குரங்கினிடம் பிறந்தவன் வாலியென்றும், அவ்வாறே அதன்கழுத்தினழகைக் கண்டு காமுற்ற சூரியனுக்கு அதனிடத்தில் தோன்றியவன் சுக்கிரீவனென்றும் வரலாறு உணர்க.

சாபம், சாந்தன், கோபம், தீபம், வாரணம். தாபம் - வடசொற்கள். ஹரி, ஹ்ருதயம், ருக்ஷராஜஸ் என்ற வடசொற்கள் - அரி, இதயம், இருத்தவிரசதன் என்று விகாரப்பட்டன. சாபம்-வெகுண்டுகூறும் மொழி. "செல்லாவிடத்துச் சினந் தீது செல்லிடத்தும், இல்லதனிற் றீய பிற" ஆதலால், 'வெங்கோபம்' எனப்பட்டது. அரியென்பது - சூரியனென்ற பொருளில், இருளையழிப்பவ னென்று காரணப்பொருள்படும். ஆண்வடிவம் ஒழிந்து பெண்வடிவஞ்சேர்ந்தவிஷயத்தில் அவன்கொண்ட மனவருத்தத்தைக் கூறுவார், 'இதயத்தாபன்' என்றார். போர் - பொருதல்; பொரு என்னும் முதனிலை திரிந்த தொழிற்பெயர். அரியென்று இந்திரனுக்கும் பெயருள்ளதனால், 'உலகுக்குத் தீபமனையான்' என்றதைச் சூரியனாகவும், 'திறல்வாரணத்தோன் அரி' என்றதை இந்திரனாகவுங் கொண்டால், அடுத்தகவியில் 'வாலிசுக்கிரீவன்' என்பதனோடு நோக்க எதிர்நிரனிறைப்பொருள்கோளாம். 'தருக்கொழிந்து' என்றும் பாடம். (௩௩)

[வாலிக்குத் தோற்றுச் சுக்கிரீவன் மதங்கவனஞ் சார்தல்.]

34.—'மின்னார் மருங்குற் றிருவென்ன' என்று மூலபுத்தகத்தைத் திருத்திப்படிக்க.

(இ - ள்.) துன்னார் காலன் ஆம் - பகைவர்கட்கு யமன்போன்றவனாகிய, வாலி - வாலியும், சுக்கிரீபன் - சுக்கிரீவனும், தோன்றிய பின் - பிறந்த பின்பு,—இருவரும் - அந்த இரண்டுபேரும், மின் ஆர் மருங்குல் திரு என்ன விளங்கும் உருமையவட்கு ஆக - மின்னலைப்போன்ற இடையையுடைய இலக்குமிபோல விளங்குகிற ருமையென்பவள்பொருட்டாக, இன்னார் ஆகி - (ஒருவர்க்கொருவர்) பகைவர்களாய், போர் எதிர்ப்ப - எதிர்த்துப் போர்செய்ய,—இளையான் - (அவர்களில்) இளையவனான சுக்கிரீவன், இளைத்து ஓடி - (வாலியின்முன்) மெலிந்து தோற்றோடி, தன்னால் செய்யும் செயல் அற்று - (அவனுக்குமாறாகத்) தன்னாற்செய்யத்தக்கதொரு செயலுமில்லாமல், தளர்ந்து - மனந்தளர்ந்து, மதங்க வனம் சார்ந்தான் - மதங்கமுனிவர் தங்குமிடமான காட்டை யடைந்தான்; (எ - று.)

ருக்ஷராஜஸ் என்னும் வானரராஜன் இறந்தபின் அவனது மூத்தமகனான வாலி பட்டாபிஷேகஞ்செய்யப்பெற்றுச் சுக்கிரீவனை இளவரசனாகக்கொண்டு கிஷ்கிந்தையை ஆளுகையில், மாயாவியென்னும் அசுரனொருவன் வந்து வலியப் போருக்கு அழைக்க, வாலி தம்பியுடன் சென்று அவனை எதிர்த்துப் பொருகையில், அவன் அஞ்சி ஒருபிலத்தினுள்ளே செல்ல, வாலி சுக்கிரீவனைப் பிலவாயிலிற் காவல்வைத்துவிட்டு உள்ளேசென்று அவனைத் தொடர்ந்து போர்செய்கையில், பல மாதங்கள் கழிந்தபின், இரத்தவெள்ளம் வெளிப்பட்டதுகண்டு, சுக்கிரீவன் அவ்வசுரனால் வாலி கொல்லப்பட்டானென்று மாறாகக்கருதி அவ்வசுரன் வெளிவாராதபடி அப்பிலவாயிலைப் பெருங்கல்லால் மூடிவிட்டு வருத்தத்தோடு நகரஞ்சேர்ந்து அமைச்சர்கள் வேண்டுகோளின்படி தான் அரசுபெற்று வாழ, அங்கு அசுரனைக்கொன்ற வாலி, மீண்டுவந்து, பிலவழியை அடைத்த கல்லைக் காலால்உதைத்துத் தள்ளிவிட்டுப் பட்டணஞ்சேர்ந்து செய்தியறிந்து, அரசாட்சிவிருப்பத்தாலும் தனது மனைவியான தாரையைக் கவர்ந்துகொள்ளவேண்டுமென்ற விருப்பத்தாலும் சுக்கிரீவன் இவ்வாறுசெய்தானென்று எண்ணி அவன்மேல் மிகவுங்கோபங்கொண்டு, அவன் வந்து தன்காலில் விழுந்து எவ்வளவுவேண்டியுங் கேளாமல் இராச்சியத்தையும் அவன் மனைவியான ருமையையுங் கவர்ந்துகொண்டு அவனை அடித்துத்துரத்தித்தொடர்ந்துசென்று பலவிடங்களிலும் பொருது தாக்க, அவன் தோற்றோடிச்சென்று ரிச்யமூகபருவதத்தில் மதங்கமுனிவர் ஆச்சிரமங்கொண்டு வீற்றிருக்கிற வனத்தைச் சேர்ந்தனனென்பதாம். சுக்கிரீவன் மதங்கவனத்தைச்சார்ந்துவாழ்க் காரணம், அடுத்தசெய்யுளிற் கூறப்படும்.

துன்னார் - சேராதவர்: எனவே, பகைவராவர்; எதிர்மறை வினையாலணையும்பெயர். துன்னார்காலன் - எதிர்ந்தார்வலிமையிற் பாதி தன்வலிமையிற் சேரும்படி வரம்பெற்றதனால் அவ்வெதிரிகளை யமன்போலத் தவறாது அழிப்பவன். ஸுக்ரீவன், ருமா என்ற வடசொற்கள் - சுக்கிரீபன், உருமை என விகாரப்பட்டன. ஸுக்ரீவனென்ற பெயர்க்கு - அழகிய கழுத்தையுடையவனென்று பொருள்; கழுத்தினின்று பிறந்தவனென்று காரணப்பொருளுரைப்பர் ஒருசாரார். 'வாலிசுக்கிரீபா' என்ற பாடத்துக்கு - உயர்திணை உம்மைத்தொகை பன்மைவிகுதி பெற்றதென்க. 'வாலிசுக்கிரீவன்' என்றது, பெயர்ச்செவ்வெண்ணும். இடைக்கு மின்னல் உவமை - நுண்ணிதாய் விளங்குதற்கு. மின்னுமது, மின். ஆர் - உவமவுருபு. உருமைக்குத் திருமகள் உவமம் - சிறந்த அழகிற்கு. 'உருமையவட்காக' என்பதில், அவள் என்பது - பகுதிப்பொருள்விகுதி. ஆகவென்பது - நான்காம் வேற்றுமைச் சொல்லுருபு. இன்னார் - இன்னாமை யென்னும் எதிர்மறைப்பண்பினடியாப் பிறந்த பெயர்; இனியரல்லாதவர்: இனிமையென்னும் பண்பு, ஈறுபோய் இடையிகரமுங் கெட்டு எதிர்மறைஆகாரம் பெற்றதென்னலாம்.

இளையான் இளைத்து என்பது - முரண்விளைந்தழிவணி: அதாவது - மேல்நோக்கில் மாறுபாடாகத் தோன்றினும் உள்நோக்கில் மாறுபாடில்லாதிருக்கக் கூறுதல்; வடநூலார் விரோதாபாஸாலங்காரம் என்பர். இது-செய்யுளிலக்கணத்தில் முரண்தொடை யெனப்படும். இங்கு,இளையான் இளைத்து என்பன - ஒன்றோடொன்று சொல்லால் முரண்படினும், இளையான் என்பது - இளையவனென்றும், இளைத்து என்பது - மெலிந்து என்றும் பொருள் பட்டுக் கருத்தால் முரண்படாமை காண்க; இனி, முன்பு யாருக்கும் இளையாதவன் இப்பொழுது இளைத்து என்றுங் கொள்ளலாம். இளையான் என்பது- இளையவனென்ற பொருளில், இளமை யென்னும் பண்பின் அடியாப் பிறந்த உடன்பாட்டுக் குறிப்புவினையாலணையும்பெயரும்; இளையாதவனென்ற பொருளில், இளை என்னும் வினைப்பகுதியடியாப் பிறந்த எதிர்மறைவினையாலணையும்பெயருமாம். மதங்கவநம் என்ற வடமொழித்தொடர், ஆறனுருபுத்தொகை. (௩௪)

[அநுமான் சுக்கிரீவனுடன் அடங்கியிருத்தல்.]

35.—(இ - ள்.) அந்த முனிவன் சாபத்துக்கு அஞ்சி - அந்த மதங்கமுனிவனுடைய சாபத்துக்குப் பயந்து, வாலி—, அவனத்து வந்து புகுதாது ஒழிதலால் - அந்தவனத்தில் வந்து சேராதுவிடுதலால், வாழ்நாள் பெறும் - (அங்குச்சேர்ந்து) உயிர்வாழ்க்கையைப் பெறுகிற, சுக்கிரீவனொடும் - சுக்கிரீவனுடனே, அநுமான்—, சிந்தை கலந்த சகி ஆக சேர்ந்து - மனங்கலந்த நண்பனாகச் சேர்ந்து, அந்தணாளர் சாபத்தால் தன்னை உணராதே - (முன்சொன்ன)முனிவர்களுடைய சாபத்தால் தன்வலியைத் தான் அறியாமலே, அடங்கி அங்கு இருந்தான் - அடக்கமுடையவனாய் அங்குத் தங்கியிருந்தான்; (எ - று.)

'இப்படியிருக்கையில் ருக்ஷராஜசு என்கிற வாநரராசன் இறந்தவுடனே தேவேந்திராம்சமான வாலி யென்கிற அவன் குமாரனுக்குக் கிஷ்கிந்தையில் பட்டாபிஷேகம் நடந்தது. சூரியாம்சமான அவன் தம்பி சுக்கிரீவன் இளவரசாயிருந்தான். அந்தச்சுக்கிரீவனோடு இவ்வநுமானுக்கு மாறுதலில்லாத்தோழமை யுண்டாயிருந்தது. வாலிசுக்கிரீவர்களுக்குப் பகைநேர்ந்தவிதம் உமக்குத் தெரியுமே. பகையுண்டாகித் தன்தோழனை அவனண்ணன் அலைத்து வருத்தியதை நேரேகண்டிருந்தும் இவ்வாஞ்சநேயன் சாபத்தினால் தன் பலத்தை மறந்திருந்ததனாலேதான் தானுங் கூடவே சுற்றிக்கொண்டிருந்தான்' என்பது, உத்தரராமாயணவசனம்.

முன்னொருகாலத்தில் எருமைக்கடாவடிவங்கொண்டவனும் மாயாவியினது உடன்பிறந்தவனுமான துந்துபியென்னுங்கொழுத்தஅசுரன் வாலியை யெதிர்க்க, அவன் உக்கிரமாகப் போர்செய்து துந்துபியைக் கொன்று அவனுடம்பை அப்பால் எடுத்தெறிய, அவ்வுடம்பு மதங்கனென்னும் முனிவரது ஆச்சிரமத்தில் விழுந்து இரத்தப்பெருக்கால் அவ்வாச்சிரமத்தை அபரிசுத்தமாக்க, அதுகண்டு கோபங்கொண்ட அம்முனிவர் 'இது செய்தவன் இங்கு வருவானாயின் இறந்திடுக' என்றும், 'அவனைச் சேர்ந்தவர் இங்கு வரின் கல்லாய்விடுக' என்றும் சபிக்க, அதற்கு அஞ்சிவாலியும் அவனைச்சேர்ந்தவரும் அங்குச்சேராதொழிதலால், வாலிக்கு விரோதியான சுக்கிரீவனுக்கும் அவனைச்சேர்ந்தவர்க்கும் அந்த மதங்காச்சிரமம் அஞ்சியொளித்து உயிர்வாழ்தற்கு இடமாயிற்று.

ஸகி - வடசொல். அம் தண் ஆளர் - அழகிய குளிர்ச்சியை [அருளை] யுடையவர்; அந்தணர்க்குக் காரணவிகுதி. (௩௫)

[அநுமான் சூரியனிடம் கல்விகற்றல்.]

36.— 'மீதுசெலும் வெங்கதிரவன்றனொடயிந்திரவியா கரணமும்' என்று பதிப்பித்திருப்பின் நலம்.

(இ - ள்.) உயர்ந்த புகழோய் - சிறந்த கீர்த்தியையுடையவனே! ஓதம்-கடல்சூழ்ந்த, நிலம் வீதி மிசை - பூலோகத்திற்குமேலுள்ள ஆகாய வீதியிலே,—எழு பரி பூண் - ஏழுகுதிரைகள் பூட்டப்பட்டதும், அருணன் ஊர விசை - அருணன் செலுத்த விசைந்துசெல்லுவதும் ஆகிய, தேர்மீது - தேரின்மேல், செலும் - செல்லுகின்ற, வெம் கதிரவன்தனொடு - வெவ்விய ஒளியையுடையவனான சூரியனிடத்து,—இ மாருதி - இந்த அனுமான்,—வேதம் ஒரு நாலுடன் - நான்கு வேதங்களுடனே, விளங்கிய சடங்கமும் - விளங்குகிற அவற்றின் அங்கமான ஆறுசாஸ்திரங்களையும், விரிந்த கலையும் - (மற்றும்பலவாய்) விரிந்த சாஸ்திரங்களையும், அயிந்திர வியாகரணமும் - ஐந்திர வியாகரணத்தையும், ஒரு நாளினில் ஓதி உணர்ந்தனன் - ஒருநாளிற் கற்றுஅறிந்துகொண்டான்; (எ - று.)

'இவன் அருக்கன்மாட்டுச் சென்று எல்லாவியாகரணங்களையும், அவற்றின் விருத்தி பாடியம் முதலாய உரைகளையும் ஓதியதுமன்றி, மற்றும்உள்ள பலகலைகளையும் ஓதியுணர்ந்து புவிக்கு ஒரு பிரகஸ்பதி யென்னலாயினான்' என்பது, உத்தரராமாயணவசனம்.

வேதமொருநாலு - இருக்கு, யஜுஸ், ஸாமம், அதர்வணம். சடங்கம் - சிட்சை, வியாகரணம், சந்தஸ், நிருக்தம், சோதிடம், கல்பம். 'விரிந்த கலை', என்றது - தருமசாஸ்திரம், அருத்தசாஸ்திரம் முதலியவற்றை. காயத்ரீ உஷ்ணிக், அநுஷ்டுப், பிருகதீ, பங்க்தி, த்ரிஷ்டுப், ஜகதீ என்ற ஏழு சந்தசுகளும் சூரியனது தேர்க்கு ஏழுகுதிரைகளாக இருக்கின்றனவென்பர், ஒருசாரார். மற்றொருசாரார், சூரியனதுதேர்க்குக் குதிரை ஒன்றே, அதற்கு இந்த ஏழுபெயர்கள் என்பர். மற்றுஞ்சிலர், ஏழு [ஸப்த] என்னும் பெயரைக் கொண்ட குதிரை ஒன்றே யென்பர். வேறொருதிறத்தார், ஏழுகுதிரைகள்: அவற்றில் ஒன்று ஏழென்னும் பெயர்கொண்டதென்பர். இவையெல்லாம் 'ஏழுபரி' என்ற தொடர்க்குப் பொருளாகலாம். அருணன் - சூரியனது தேர்ப்பாகன்; காசியபமுனிவர்க்கு விநதையினிடம் பிறந்த குமாரன்; கருடனது தமையன்; இடைக்குக் கீழ்ப்பட்ட உறுப்புக்கள் இல்லாதவன். வெங்கதிரவன் - உஷ்ணகிரணன். ஐந்திர வியாகரணம் - இந்திரனாற் செய்யப்பட்டதொரு வடமொழி இலக்கணநூல்; இது, அகத்தியம் தொல்காப்பியம் முதலிய தமிழிலக்கணநூல்களுக்கு முதனூலாம்; ஆனதுபற்றி, சிறப்புத்தோன்றத் தனியே எடுத்துக் கூறப்பட்டது. (இது, இந்நூலாசிரியரது பாஷாபிமானத்தின் காரிய மென்னலாம்.)

வேதம் - வடசொல்: (நன்மைதீமைகளை விதிவிலக்குக்களால்) அறிவிப்பதென்று காரணப்பொருள்படும்; வித - அறிவித்தல். ஷடங்கம் - வடசொற்றொடர்; ஷட் + அங்கம்; ஷட் - ஆறு. கலா, வீதீ என்ற வடசொற்கள் ஆவீறு ஐயும், ஈயீறு இகரமும் ஆயின. 'வெங்கதிரவன்றனொடு' என்றவிடத்தில், 'ஒடு' என்னும்மூன்றனுருபு ஏழனுருபின்பொருளில் வந்ததனால், உருபுமயக்கம்: இவ்வாறே வில்லிபுத்தூரார் பாரதத்தில் "பலகலை விதங்களும் வீடுமனுடன் கற்றார்" என்றும், "கண்டு தானென்றமரோடு கற்பதற்குன்னினனே" என்றும் வருவன காண்க. அயிந்திரம் முதறபோலி; ஐந்த்ரம் - தத்திதாந்த வடமொழி. வ்யாகரணம் - வடசொல். (௩௬)

[இதுமுதல் மூன்றுசெய்யுள்கள் - அநுமானுடைய சிறப்புக்களை விளக்கும்.]

37.—'மிகுதயாவுடைமையால்' என்று மூலத்தைத் திருத்துக.

(இ - ள்.) தண் அளியினால் - குளிர்ச்சியான அன்பையுடைமையினாலும், மிகு தயா உடைமையால் - மிகுந்த கருணையை யுடையனாயிருத்தலினாலும், வரு தருக்கு அறுதலால் - (கல்வி வலிமை முதலியவற்றால்) உண்டாகிற செருக்கு இல்லாதிருத்தலினாலும், எண்ணு கருமங்கள் இவை யாவும் - (முற்கூறியபடி) நினைத்த காரியங்களெல்லாவற்றையும், இடையூறு அற இயற்றும் - தடையில்லாதபடி செய்துமுடிக்கின்ற, இயல்பால் - தன்மையி

ஞலும், **நண்ணலரை** - பகைவர்களை, **விண்ணவர்கள் ஆயினும்** - (அவர்கள் வல்லமையிற் சிறந்த) தேவர்களே யாஞலும், **நடுக்குறும்** - அஞ்சிநடுங்கச் செய்கின்ற,மிடுக்கு உடைமையால்-வலிமையையுடைமையிஞலும், **மண் உலகில்** - பூலோகத்திலும், **விண் உலகில்** - தேவலோகத்திலும், **மாருதியை ஒக்குமவர்** - அநுமானைப்போல்பவர், **யாரும் இலை** - எவரும் இல்லை ; (எ - று.)—ஆல் - தேற்றம்.

அளியாவது - உறவுமுறைமை சிநேகம் முதலிய சம்பந்த முள்ளவர்களிடத்தில் உண்டாகிற அன்பு என்றும், தயையாவது - யாதொருசம்பந்தமுமில்லாமலே இயல்பாக எல்லாவுயிர்களிடத்தும் செல்வதாகிய கருணை யென்றும் வேறுபாடு காண்க. தண் அளி - பண்புத்தொகை. மிகுதயா, வருதருக்கு, எண்ணுகருமம் - வினைத்தொகைகள். தயா - வடசொல் திரியாதுநின்றது. கருமம் - கர்ம மென்ற வடசொலலின் விகாரம். யா - விஞவடியாப் பிறந்த பலவின்பாற்பெயர் ; இதில், 'வை' விகுதி புணர்ந்துகெட்டது; கெடாவிடின், யாவையென நிற்கும்; உம் - முற்றும்பொருளது. இடையூறு - ஒருகாரியஞ் செய்யும்பொழுது இடையிலே நேர்வதாகிய விக்கினம்; இடையுறு என்னும் முதனிலை திரிந்த தொழிற்பெயர். நண்ணலர் - சேராதவர்; எதிர்மறைவினையாலணையும்பெயர். நடுக்குறும் - நடுங்கு என்ற பகுதி மெலி வலியாய்ப் பிறவினைகாட்டிற்று; உறு - துணைவினை. இலை - விகாரம். 'கருமங்களிவை' என்பதில், இவை யென்பது - பகுதிப்பொருள் விகுதியாய் நின்றது. (௩எ)

38.—(இ - ள்.) **சிறந்த புகழான் நிறைந்த**-உயர்ந்த கீர்த்தியிஞல் நிரம்பிய, **குணம்** - நற்குணங்களையுடைய, **மாருதி** - அநுமான், **நின் திரு அடி தொழுது நின்ற பொழுதே** - (ஆதியில் ரிசியமூககிரிச்சாரலில் உன்னிடம் வந்து) உனது சீர்பாதங்களை வணங்கிநின்ற அப்பொழுதே,—**புவி** - உலகத்தில், **அறம்** - தருமங்கள், **தலையெடுத்த** - தாழ்வின்றித் தலைநிமிர்ந்து வளர்வன வாயின; **வானவர்களானவர்கள்** - தேவர்கள், **ஆடினார்கள்** - (ஆனந்தத்தால்) கூத்தாடிஞர்கள்; **தீ மறம்** - கொடிய அதருமம், **தலை இறக்கியது** - தாழ்வுற்றது; **வாலி முதலானவர்கள்** - வாலிமுதலியோர்களுடைய, **வாமம் நயனம்** - இடக்கண்ணும், **சிறந்த திரள் (வாமம்) தோள்** - (வலிமையிற்) சிறந்த திரண்ட இடத் தோளும், **(வாமம்) புருவம்** - இடப் புருவமும், **மார்பு இடை** - மார்பின் இடப் பக்கமும், **துடித்தன**—;(எ - று.)

ஆடவர்க்கு இடந்துடித்தல், அபசகுனம். அநுமான் இராமனிடம்வந்து அப்பெருமாஞுக்கு அடிமைபூண்டது, துஷ்டநிக்கிரக சிஷ்டபரிபாலநங்களுக்கு மூலகாரண மாகுதலால், அந்தமேன்மையை இங்ஙனங்கூறி விளக்கிஞர். 'அறம் தலையெடுத்த' எனப் பன்மையாகவும், 'மறம் தலையிறக்கியது' என ஒருமையாகவுங் கூறியதஞல்,தருமத்துக்கு உண்டான வளர்ச்சியையும், அதருமத்துக்கு உண்டான ஒடுக்கத்தையும் நன்குவிளக்கியபடி. அறம்-(இன்னவைசெய்யததக்கவை என நூல்களால்) வரையறுக்கப்பட்டவை; மறம் - (இன்னவைசெய்யத்தகாதவை என நூல்களால்) மறுக்கப்பட்டவை: அறு, மறு - பகுதி; அம் - செயப்படுபொருள்விகுதி. இவை, பால்பகாஅஃறிணைப் பெயர் களாதலால், உரியபடி பன்மைவினைமுற்றையும், ஒருமைவினைமுற்றையுங் கொண்டன. தலையெடுத்த - அன்சாரியை பெருத பலவின்பால் முற்று. புவி, வாமநயநம். குணம் - வடசொற்கள். வானவர்களானவர்கள் என்பதில், ஆனவர்கள் என்பது - முதல்வேற்றுமைச் சொல்லுருபு. இறக்கியது - இறங்கியது என்பதன் பிறவினை. 'வாமம்' என்பதை, தோள், புருவம் என்பவற்றேடுங் கூட்டுக. நினை = நின்னை ; தொகுத்தல் விகாரம். நினை = நினது;உருபுமயக்கம். திருவடித்தொழுது-இரண்டாம் வேற்றுமைத் தொகையில் வலிமிகாட்டியது, செய்யுளோசைப்பொருட்டு. (௩அ)

39.—'உனக்கினி' என்று மூலத்தைத்திருத் திப்படிக்க.

(இ - ள்.) அமல - குற்றமற்றவனே! உத்தம - மிகவும் மேலான வனே! தனக்கு உவமை அற்றவனை - தனக்குஒப்பில்லாதவனும், வெற்றி மிகு மாருதிதனை - சயம்மிகுந்த வாயுகுமாரனும், தடை இலா - தடையில் லாத, சினத்தொடு - கோபத்துடனே, மனம் திறல் - மனத்தின்வலிமை யாகிய ஊக்கத்தையுடைய, அரக்கர்கள் - இராக்கதர்கள், செரு புரி-போர் செய்த, களத்து - யுத்தகளத்தில், நீ நினைத்தது - நீ நினைத்த காரியத்தை, ஒரு கணத்தினில் முடித்து - ஒரு க்ஷணப்பொழுதிலே செய்துமுடித்து, நினை தொழுது நிற்பவனை - (அருகில்வந்து) உன்னை வணங்கிநிற்பவனும், உனை பிரிவு இல் உன்னை விட்டுப்பிரியாத, வித்தகனை - வல்லமைசாலியுமா கிய அநுமானைக்குறித்து, யான் உனக்கு இனி உரைப்பது எதில் - நான் உனக்கு இன்னும்சொல்லவேண்டுவது எவ்விஷயத்தில்? [எதிலுமில்லை யென்றபடி]; (எ - று.)

செய்தற்கு அரிய பல செயல்களை அநுமான் செய்துமுடித்த பெருமை உனக்கே தெரியு மாதலால், நான் இன்னுஞ் சொல்லவேண்டுவது என்ன வென்று கதையை முடித்தார்.

அற்றவனை, மாருதிதனை, நிற்பவனை, வித்தகனை என்பவை-ஒருபொரு ளின்மேல்வந்த பலபெயர்கள்; "ஒருபொருட்பலபெயர் பிரிவில வரையார்" என்பது காண்க. விசேஷணம் விசேஷ்யம் என்ற இரண்டிடங்களிலும் வே ற்றுமையுருபை விரித்தல், வடமொழிநடை. தனக்கு ஒப்புஇல்லாதவனெ னவே, தன்னினும் உயர்வு இல்லாதவனென்பது தானே விளங்கும். மன த்திறல் - மனோபலம்; தைரியம். நினைத்தது என்ற ஒன்றன்பால் வினையா லணையும்பெயர் - சாதியொருமையாய், பகைவரையழித்தல், சீதையைமீட் டல், சஞ்சீவிமலையைக்கொணர்தல் முதலிய அரியசெயல்கள் பலவற்றை யும் தொகுத்து உணர்த்தும். எது இல் எனப்பிரித்து, எதுவுமில்லை யென் றும் உரைக்கலாம்.

உபமா, மநஸ், க்ஷணம் என்ற வடசொற்கள் - உவமை, மனம், கணம் என விகாரப்பட்டன. அமலன், உத்தமன் - தற்சம வடசொற்கள். ந + மலம் = அமலம்; வடமொழிச்சந்தி. வெற்றி - தொழிற்பெயர்; வெல்-பகுதி, றி - விகுதி. தடை - தொழிற்பெயர்; தடு - பகுதி, ஐ - விகுதி. (௩௯)

[அதுகேட்டு இராமன் மகிழ்ந்து அநுமானைக் கொண்டாடுதல்.]

இதுவும், அடுத்தகவியும் - குளகம்.

40.—(இ - ள்.) வாடை தரு சேய் - வாயுபெற்ற பிள்ளையான அநு மானுடைய, பிறவியும் - உற்பத்திவரலாற்றையும், செயல்களும் - (பிறந்த பொழுதேதொடங்கி அவன்செய்த) செய்கைகளையும், பெரு வரங்களும் - (அவனுக்குக் கிடைத்த) பெரிய வரங்கள் பலவற்றையும். வினை இரிந்து ஓடு மா தவர் சபிப்ப - பாவங்கள் அஞ்சி நிலைகெட்டுஓடும்படியான பெருந்தவ முள்ள முனிவர்கள் சபித்ததனால், விடை தன்னை உணராத வகையும் - (அவன்) தன்வலிமையைத் தான் அறியாத விதத்தையும், நீடு தவம் மா முனி உரைத்திட - நீண்ட [நெடுங்காலஞ்செய்த] தவத்தையுடைய அகத்தியமகா முனிவர் சொல்ல, (அதுகேட்டு), நிருத ஈசர் மடிய கோடு வில் இராகவன் - இராக்கதத்தலைவர்கள் அழியும்படி வளைந்த (கோதண்டமென்னும்) வில்லை யுடைய இராமபிரான், வியந்து - ஆச்சரியமடைந்து, மகிழ்ந்து - சந்தோ ஷித்து, அவனும் மாருதி குணம் புகழ்தலும் - அப்பெருமான்தானும் அநு மானுடைய குணங்களைக் கொண்டாடிக்கூறியவளவிலே.—(எ - று.)—'கே ட்டு' என அடுத்தகவியோடு தொடரும்.

வாடை யென்பது - வடக்கினின்று வருங் காற்றையாவது, வடக்கிற் செல்வதாகிய தென்றற்காற்றையாவது சிறப்பாகக் குறியாமல், இங்கே, பொதுப்பட, வாயுதேவனென்ற மாத்திரமாய் நின்றது. பிறவி - பிறப்பு;

'வி' விகுதிபெற்ற தொழிற்பெயர். "விளக்குப்புக இருள் மாய்ந்தாங்கு ஒருவன், தவத்தின் முன் னில்லாதாம் பாவம்" என்றபடி தவம் வளரவளரத் தீவினை யொழிதலால், 'இரிந்தோடுவினை மாதவர்' என்றார். விடைதன்னை - தனது விடையை; விடை - பலம்: நிருதேசர் = நைருதேசர் என்ற வடசொல் திரிந்தது; நைருத + ஈசர்: குணசந்தி. நிருருதி யென்னும் திக்பாலகனது மரபினர். ராகவன் - ரகு வென்னும் அரசனது குலத்திற் பிறந்தவன்; வடமொழித்தத்திதாந்தநாமம். சூரியகுலத்தில் இரகுவென்னும் அரசன் வெற்றி ஒழுக்கம் தானம் முதலியவற்றிற் சிறத்தலால். இராமனை அவன்மரபின்பெயராற் கூறிச் சிறப்பித்தார். (௪௦)

[அதுகேட்டபின் முனிவர்கள் குறிப்பாக இராமனிடம் விடைவேண்டுதல்.]

41.—(இ - ள்.) மா முனிவர் - (அகத்தியர்முதலிய) சிறந்த முனிவர்களெல்லோரும், தேடு தனம் ஆகுவர் என தெளிய - (பலநாளாகத்) தேடிய செல்வத்தைப் பெற்றார்போல (மனம்) கலக்கமின்றி மகிழும்படி, சொற்கள் அவை கேட்டு - (இராமபிரான் அநுமானைப்புகழ்ந்துசொன்ன) அச்சொற்களைக்கேட்டு, (அதன்பின்), ஓடுமது கண்டு - நெடுநேரங்கழிவதை அறிந்து, சினம் மாறு அரசனுக்கு - கோபந்தவிர்ந்த இராமபிரானுக்கு, இவை - இவ்வார்த்தைகளை, உணர்வால் உரைப்ப - அறிவோடு கூறுவார்கள்: (எங்ஙனமெனின்),—'நீடு வரவு - நீண்டவருகை (ஆயிற்று) [நாங்கள்வந்து வெகுநேரங்கழிந்திட்டது]; 'எங்கள் நியமங்கள் - நாங்கள் காலந்தவறாமற் செய்யவேண்டியநித்தியகருமங்கள், உள ஆக நடக்கவேணும்: (என்றாலும்), எங்கள் மனம் நினை பிரிதலில் கூடுகிலது - எங்களுடையமனம் உன்னைப்பிரிதலிற்பொருந்துகிறதில்லை', என்றலும் - என்றுகூறியவளவிலே,—அகண்டபதி - எல்லாவற்றுக்குந் தலைவனான இராமபிரான், இவை கூறும் - இவ்வார்த்தைகளைச் சொல்வான்; (எ - று)—அவற்றை, மேற் காணலாம்.

இராமபிரானையும் அப்பெருமானுடைய திருவாய்மலரினின்றுவெளிப்படும் மதுரவசனங்களையும் முனிவர்கள் மிகவும் அருமையாகக் கொண்டு பாராட்டுந் தன்மை, முதலடியில் விளக்கப்பட்டது. 'தெளியும்' என்றபாடத்துக்கு - வெகுநாளாகத் தான்தேடிய செல்வம்போல்வ ரென்று (இராமபிரானாற்) பாராட்டப்படுகிற மகாமுனிவர்களென்று பொருளாம். இங்ஙனம் பேசிமுடித்தபொழுது மாலைச்சந்தியாகாலம் சமீபித்ததை நோக்கி முனிவர் விடை வேண்டுவாராயின ரென்பது தோன்ற, 'ஓடுமதுகண்டு' என்றார். கண்டு உரைப்ப என இயையும். முன்பு இந்தமுனிவர்களுக்கு வாக்குத்தத்தஞ்செய்தபடி துஷ்டநிக்கிரகஞ்செய்து முடித்த மகிழ்ச்சியை யுடையானென்பார், 'சினமாறரசன்' என்றார். இனி, ஓடுமதுகண்டு சினம் ஆறு அரசனுக்கு என்று எடுத்து, அதற்கு - பகைவர்கள் போரிற் புறங்கொடுத்து ஓடுவதைக் கண்டு கோபந்தணியுந்தன்மையனான இராமபிரானுக்கு என்று உரைப்பினும் அமையும்; இப்பொருளுக்கு ஏற்ப, 'சேரலர்கள்கெட்டோடுமது கண்டு' என்று சிலஏட்டுப்பிரதிகளிற் பாடங் காணப்படுகிறது; சேரலர்கள் - பகைவர்கள், கெட்டு - தோற்று என்க. உரைப்ப - பலர்பால்முற்று; ப - காலங்காட்டும் விகுதி. காலந்தவறாது நித்தியகருமங்களைச் செய்யவேண்டுமென்னுங் கருத்தோடு கூறினரென்பார் 'உணர்வாலுரைப்ப' என்றார்.

'ஆல்' உருப-ஒடு உருபின் தன்மையதாய், அடைமொழிப்பொருளில் வந்தது. நீடுவரவு எங்கள் என்றெடுத்து - நெடும்பொழுதாகவந்துள்ள எங்களுக்கு என்றும் உரைக்கலாம். நினைப்பிரிதலில் கூடுகிலது எங்கள்மனம் - உன்னைப்பிரிய எங்களுக்கு மனமில்லை. தநம், நியமம், அகண்டபதி - வடசொற்கள். ந + கண்டம் = அகண்டம். கண்டம் - பகுப்பு: அது அல்லாதது - அகண்டம். கூடுகிலது, கூடு - பகுதி, கு - சாரியை, இல் - எதிர்மறை யிடைநிலை, அ - சாரியை, து - ஒன்றன்பால் விகுதி. 'நியமங்களுளவாகினும்' என்னும் பாடம். (௪௧)

# நளவெண்பா.

நளனது வெண்பா என்று விரியும்; ஆறாம்வேற்றுமைத்தொகை. நளனது விஷயமான வெண்பா என்று கருத்து. (விஷயமாகவுடைமை, ஆறாம் வேற்றுமைப்பொருளாகிய சம்பந்தம்.) நளனைப்பற்றிய வெண்பா என்று விரித்தால் இரண்டாம்வேற்றுமை யுருபும்பயனு முடன் றொக்கதொகையாம். இங்கு 'நளன்' என்றது - இலக்கணையாய், அவனது சரித்திரத்தின்மேல் நிற்கும். வெண்பா - நால்வகைப் பாக்களுள் ஒன்று; இது - இங்கே, அதனாலாகிய நூலுக்குக் கருவியாகுபெயர். நளன்+வெண்பா = நளவெண்பா; நிலைமொழியுயர்திணைப்பெயரின் ஈறு கெட்டது: "சிலவிகாரமா முயர்திணை" [நன் - உயிரீறு - கூ.] என்பது, விதி.

இந்நூல் - புறத்திரட்டிலும், இலக்கணக்கொத்துரையிலும் 'நளன் கதை' என வழங்கப்பட்டுள்ளது.

இந்நூல் - சுயம்வரகாண்டம், கலிதொடர்காண்டம், கலிநீங்குகாண்டம் என்ற மூன்று காண்டமாகப் பகுக்கப்பட்டுள்ளது. முதனூல் வழிநூல் சார்புநூல் என்ற மூன்றுவகை நூல்களுள், இது, வழிநூல்.

நளன் - ஆறுசக்ரவர்த்திகளுள் ஒருவன்; (மற்றையோர்-அரிச்சந்திரன், கார்த்தவீரியார்ச்சுனன், புருகுற்சன், புரூரவன், முசுகுந்தன் என இவர்; இவ்வறுவரும், மற்றொருவனுக்குக் கீழ்ப்படியாமல் பூமிமுழுதும்ஆண்டவர். இவன், *முதலெழுவள்ளல்களில் ஒருவனுமாவன்: (மற்றையோர் - குமுணன், சகரன், சகாரன், செம்பியன், துந்துமாரி, நிருதி எனப்படுவர்; இவ்வெழுவரும், வரையாதுகொடுப்பவர்.) இவனை நினைத்தமாத்திரத்தில், எவர்க்கும் எல்லாக்காரியமும் நிறைவேறும்; சகுந்தலைமகனான பரதனும், கார்த்தவீரியார்ச்சுனனும், இப்படிப்பட்ட சிறப்புடையவர்; இதனை, "நின்னை மெய்ப்பரதனை நிகரில் பார்த்தனை, முன்னினும் நினைத்தவை யனைத்து முற்றுமால்" என (நைடதத்தில்) நளனை இந்திரன் கூறியதனால் அறிக. (இராமசரித்திரத்தில் நளனென்று ஒருவன் உண்டு; அவன், வானரன்.)

வடமொழிமகாபாரதத்தில் ஆரணியபருவத்தில் ஐம்பத்திரண்டாம் அத்தியாயம் முதல் இருபத்தெட்டு அத்தியாயங்களில் நளசரித்திரம் விரிவாகக் கூறப்பட்டுள்ளது. அது - 'நளோபாக்கியாந பர்வம்' எனப் பெயர்பெறும். அதுவே நளவெண்பாவுக்கு முதனூலாம். இதனை நளவெண்பாவின் சுயம்வரகாண்டத்தின் முதற்பதினொருபாடல்களைக்கொண்டு அறியலாம். பஞ்சபாண்டவர் வனவாசஞ்செய்யத் தொடங்குகையில், அருச்சுனன் சிவபிரானைக்குறித்துத் தவஞ்செய்வதற்குக் கைலாசகிரிக்குச் செல்ல, அப்பொழுது மற்றைநால்வரும் திரௌபதியோடு வருந்தியிருக்கையில், வேதவியாச மகாமுனிவர் அங்கு எழுந்தருள, அவர்க்குத் தருமபுத்திரர் முறைப்படி வந்தனைவழிபாடுகள் செய்து, 'உலகத்திலே சூதாடி அரசிழந்து வனமடைந்து எங்களைப்போல வருந்தினவர் வேறு எவராயினும் உண்டோ?' என்று சங்கடத்தோடு சொல்ல, அச்சமயத்தில் வியாசர் நளசரித்திரத்தை எடுத்துக்கூறி அவர்களைச் சமாதானப்படுத்தினார் என நூல்வரலாறு காண்க. பிருஹதச்வரென்னும் முனிவர் தருமபுத்திரனுக்கு இவ்வரலாற்றைக் கூறியதாக வியாசபாரதத்தில் இருக்கவும், இந்நூலில் வியாசமுனிவர் கூறினதாகச் சொன்னது, "முன்னோர் நூலின் முடிபொருங் கொத்துப், பின்னோன் வேண்டும் விகற்பங் கூறி, அழியா மரபினது வழிநூ லாகும்" [நன் - பாயிரம் - எ] என்ற வழிநூலிலக்கணவிதிப்படி இந்நூலாசிரியரால் பிறநூல்மேற்கோள்கொண்டு அமைக்கப்பட்டதாதல் வேண்டுமென அறிக.

"நீவிரே யல்லிர் முன்னாள் நிலமுழு தாண்ட நேமி, நாவிரி கீர்த்தி யானன் நளனெனு நாமவேந்தன், காவிரி யென்னத் தப்பாக்கருணையான் சூதில் தோற்றுத், தீவிரிகானஞ்சென்ற காதை நும் செவிப்படாதோ," "தோத்திரமான தெய்வச் சுருதிகள் யாவு நான்காக். கோத்தவன் பின்னும் சொல்வான்" என வில்லிபுத்தூரார் பாரதத்திலும், நளசரித்திரத்தை வியாசர் பாண்டவர்கட்கு எடுத்துச்சொன்னதாகக் கூறியவாறு காண்க. முதல்நூலுக்கும் வழிநூலுக்கும் மாறுபடுகிற இடங்கட்கெல்லாம் இப்படிப்பட்ட சமாதானமே கண்டுகொள்க. இதுவரையிற் சொன்னதனால், நளவெண்பா பாரதத்தின் வழிநூலென்றும், இதிற்கூறிய நளசரித்திரம் முதற்கதை யன்று, பாண்டவ சரித்திரத்தின் கிளைக்கதை யென்றும் அறிக. [முதற்கதை - ஆக்கியானம். கிளைக்கதை - உபாக்கியானம்.]

அதிவீரராமபாண்டியன் பாடிய நைடதமென்னும் தமிழ்ப் பெருங்காவியமும் நளசரித்திரத்தையே கூறுவதாயினும், அது பாரதத்தின் வழிநூலன்றென்றும், வடமொழியில் ஸ்ரீஹர்ஷகவி செய்த நைஷதகாவியத்தின் மொழிபெயர்ப்பாமென்றும் இதனோடு வேறுபாடு காண்க: அதற்கும் இதற்கும் இன்னுஞ்சில வேறுபாடுகள்:—அது, விருத்தங்களால் அமைந்தது; இது வெண்பாவாலாகியது. அது, படலமென்னும் உறுப்பு உடையது; இது, காண்டமென்னும் பகுப்புக்கொண்டது. ஏறக்குறைய கஉ00 - பாடல்களையுடையது, அது; ச00 - பாடலையுடையது, இது. அதில் நளசரித்திரம் முதற்கதையாகக் கூறப்பட்டுள்ளது; இதில் கிளைக்கதையாக வருகிறது. கதைப்போக்கிலும் வருணனைவகைகளிலும் பலவேறுபாடுகள் உண்டு. இவ்விரண்டு நூல்களுள், நைடதம் பிந்தினது. நைடதக்கலித்துறை யென்றும் தமிழில் ஒரு நூல் உண்டு; அது பிரசித்தமானதன்று.

இந்நூற்பயன்:—நளசரித்திரத்தைக் கேட்டவர்களைக் கலியுகத்திலும் கலிபுருஷன் சேரமாட்டானென்பது. நளவெண்பாவில் "என்காலத்துன் சரிதை கேட்டாரை யானடையேன், பின்கா லயில்வேலாய் மெய்யென்று - நன்காவி, மட்டிறைக்குஞ் சோலை வளநாடன் முன்னின்று, கட்டுரைத்துப் போனான் கலி" என்றதனாலும், நைடதத்தில் "இன்றுதொட்டுன்பேர், வழுத்தினாரையும் மருவலன் மன்ன வென்றேகத" என்றதனாலும் விளங்கும். 'கார்க்கோடகநாகம், தமயந்தி, நளன் இராசருஷியான இருதுபர்ணன் இவர்களது பெயரைச் சொல்லுதல், கலியையொழித்தற்குக் காரணமாம்' என்று வியாசபாரதத்திலுங் கூறப்பட்டுள்ளது.

பல வைதிக லௌகிக கருமங்களும், தூதலக்ஷணமும், மந்திரிகளியல்பும், சத்தியத்தின் சிறப்பும், கற்பின் மகிமையும், ஊழ்வினையின் உறுதியும், பொருளின்பங்களின் நிலையில்லாமையும், செல்வமிகுந்தபொழுதும் துன்பம் நேர்ந்தபொழுதும் அறிவுடையோர் மனம்வருந்தா ரென்பதும் சூதாட்டத்தின் தீங்கும், மற்றும் பல நீதிகளும் இந்நளசரித்திரத்தால் அறியப்படும்.

இந்நூல் - இதிகாசத்தைத் தழுவியெழுந்த மகாகாவியமாம். இதிகாசமாவது - உபதேச பரம்பரையில் வந்த பழைய சரித்திரமொன்றைப் பிரதானமாக எடுத்துப் பலகிளைக்கதைகளோடு புணர்த்து விரித்துக்கூறும் நூலாம்.

## முதலாவது

## சுயம்வர காண்டம்.

தமயந்தியினது சுயம்வரத்தின் செய்தியைக் கூறும் பாகம்: சுயம்வரம் - ஸ்வயம்வரம் என்ற வடசொல்லின் விகாரம். சுயம்வரமாவது - பல அரசர்கள் கூடிய சபையிற் சென்று ஒருபெண் தானே தன்விருப்பத்தின்படி அவர்களில் ஒருவனைத் தனக்குக் கணவனாக ஏற்படுத்திக்கொள்ளுதல். ஸ்வயம் - தான், வரம் - வரித்தல். இச்சொல் - சயம்வர மென்றும், சயமர மென்றும் விகாரப்பட்டும் வழங்கும்.

## முன்கதைத் தொடர்ச்சி.

கிருதயுகத்தில இந்தப் பரதகண்டத்திலே *நிஷததேசத்தில் மாவிந்த நகரத்தில் சந்திரகுலத்திலே வீரசேனனென்னும் அரசனது குமாரனாய்த் தோன்றிய நளசக்கரவர்த்தியும், †விதர்ப்பதேசத்தில் குண்டினபுரத்தில் சூரியகுலத்திலே பிறந்த வீமராசனது பெண்ணான தமயந்தியும் ஒரு தேவலோகத்து அன்னப்பறவையினாலும் மற்றும்பலராலும் ஒருவர் ஒருவருடைய கட்டழகு நற்குணம் நற்செய்கை முதலிய சிறப்புக்களை யறிந்து ஒருவர் மீது ஒருவர் அன்புகொண்டிருந்தனர். அப்பொழுது, வீமராசன் தன்மகளுக்குச் சுயம்வரம் ஏறபடுத்தினான் என்பது.

[வீமராசன் சுயம்வரத்திற்கு நாள்குறித்து வெளியிடல்]

1.—(இ - ள்.) பைங் கமுகின் - பசுமையான பாக்குமரங்களின், கூந்தல்மேல்-மடல்களின்மேல், கங்கை கொழுந்து - ஆகாசகங்காநதியின் நீர்த்திவலை, ஓடும் - வீசப்பெற்ற, நல் நாடன் - சிறந்தவிதர்ப்பநாட்டையுடையவனான வீமன்,—வேந்தர்மேல் (வெளிநாட்டு) அரசர்களிடத்துக்கு, தூது-தூதர்களை, ஓட - விரைவாகச்செல்லும்படி, விட்டு - அனுப்பி,—'மங்கை சுயம்வரம் நாள் ஏழு என்று-தமயந்தியின் சுயம்வரத்திற்குக் குறித்த தினம் (இன்றைக்கு) ஏழாவது நாள் என்று சொல்லி, வார் முரசம் எங்கும் அறைக - பெரிய பேரிகைவாத்தியத்தை (இந்நாட்டில்) எங்கும் அடித்துத்தெரிவிப்பீர்களாக,' என்று இயம்பினான் - என்று (அதற்கு உரிய வள்ளுவர்களை நோக்கிச்) சொன்னான்; (எ - று.)

'மங்கைசுயம்வரநாள் ஏழென்று' என்பதை, 'வேந்தர்மேல் தூதோடவிட்டு' என்பதனோடுங் கூட்டுக. வெளிநாட்டரசர்களுக்குத் தூதர்மூலமாகச் செய்தி தெரிவித்து, உள்நாட்டுச்சனங்களுக்கு முரசறைந்து செய்தி தெரிவிக்கக்கட்டளையிட்டன னென்பதாம்.

'பைங்கமுகின் கூந்தன்மேற் கங்கைக்கொழுந்தோடும்' என்றது, அந்நாட்டுக் கமுகமரங்களின் மிக்கவுயர்ச்சியை வருணித்துத்தாய் நிலவளத்தை விளக்கும். இப்பொழுது வழங்குகின்ற நாட்டெல்லையை ஆராயுமிடத்து, விதர்ப்பநாட்டையடுத்துக் கங்காநதி பாய்வதில்லையென்று தெரிதலால், இங்குக் கங்கை ஆகாசகங்கையென்றே கொண்டு அதற்கேறபப் பொருள் கொள்ளவேண்டுவதாகின்றது. இனி, பூலோகத்துக்கங்கையென்றே கொள்வதானால், முற்காலத்தில் விதர்ப்பநாட்டெல்லை கங்காநதி வரையிலும் பரந்திருந்த தென வேண்டும். அன்றி, விதர்ப்பநாட்டையடுத்து ஓடுகின்ற பெண்கங்கையென வழங்கும் நதியே இங்கு 'கங்கைக்கொழுந்து' என்ற பெயராற் குறிக்கப்பட்ட தென்று கொள்ளுதலு மொன்று. அன்றியும், பெரியதும் சிறந்ததுமான தீர்த்தத்தையெல்லாம பொதுப்பட 'கங்கை' என்ற பெயரால் வழங்குதலு முண்டு.

மங்கை - மங்கைப்பருவமுடையவள்; அப்பருவத்துக்கு வயதெல்லை - பன்னிரண்டுமுதற் பதின்மூன்றுவரையில். எழ்என்ற எண்ணுப்பெயர்-இலக்கணையால், ஏழாவது என்ற பொருளைத் தந்தது. முரஜம் - வடசொல். அறையென்று - அறைகவென்று; அகரம் - தொகுத்தல். கமுகு - க்ரமுகம் என்ற வடசொல்லின் சிதைவு. கொழுந்து - இங்கு, உவமையாகுபெயராய், அலைகளினின்று தெறிக்குந் தண்ணீரைக் குறித்தது. 'ஓடும்' என்னும் செய்யுமென்வாய்பாட்டுப் பெயரெச்சம் - 'நாடன்' என்பதன் முதனிலையான 'நாடு' என்னும் இடப்பெயரைக் கொண்டுமுடியும். தூது - உயர்திணைப் பொருள் தரும் அஃறிணைச்சொல். (க)

* Khandesh. † Berar.

விதர்ப்பராஜன் ஏவிய தூதர்கள் அவ்வத்தேசங்களிற்சென்று, ஆங்காங்குள்ள அரசர்கட்குத் தமயந்தியின் சுயம்வரதினத்தைத் தெரிவித்ததுபோலவே மாவிந்தநகரத்திலும் நளனுக்குத் தமயந்தியின் சுயம்வரசெய்தியைத் தெரிவித்துச்செல்ல, நளன் மிக்க காதலோடு விரைவில் தேரைக்கொணருமாறு கட்டளையிட்டதனால் சாரதி அவ்வாறே தேரைச் சித்தஞ்செய்து கொணர்ந்தனன்.

[நளன் பாகனைநோக்கி விரைவாகத்தேர்செலுத்துமாறு கட்டளையிடுதல்.]

2.—(இ - ள்.) வேந்து - நளமகாராஜன், (தனது தேர்ப்பாகனைநோக்கி),—'கெட்ட - இல்லாமற்போன [மிகவும்நுண்ணிய], சிறு மருங்குல் - சிறிய இடையையுடைய, கீழ் மகளிர் - நான்காவது வருணத்திற் பிறந்த பெண்கள், நீள் வரம்பில் இட்ட - நீண்ட (கழனிகளின்) வரப்பின்மேல (களைபிடுங்கிப்) போட்ட, பசுங் குவளை - பசுமையான நீலோற்பலமலர்கள், ஏர் அடித்த கட்டி - உழவுமாடுகளைக்கொண்டு உழுகையில் பெயர்ந்த மண்கட்டிகள், கரைய - கரைந்துவிடும்படி, தேன் ஊறும் - தேனைப்பெருக்குகின்ற, கடல் நாடன் - சமுத்திரம்போலப் பரந்த விதர்ப்பநாட்டிற்குத் தலைவனான வீமராஜனுடைய, ஊர்க்கு - குண்டினபுரத்திற்கு, விரைய - விரைவாக, தேர் - இரதத்தை. ஊர் - செலுத்துக', என்றான் - என்று கூறினான்; (எ - று.)

தனது கட்டளைப்படியே தேரைச் சித்தஞ்செய்து கொணர்ந்த தேர்ப்பாகனை நோக்கி, நளன், தமயந்தியினிடத்துள்ள காதலின் மிகுதியால், தேரை விரைவாகச் செலுத்தவேண்டுமென்று கட்டளையிட்டனனென்பதாம். இடை மிகவும் நுண்ணியதாகவுள்ள தென்பார் 'கெட்டசிறுமருங்குல்' என்றார்: கெடுதல் - ஆங்கு, இன்மையென்னும் பொருளில் வந்தது. மகளிர்க்கு இடை நுண்ணியதாக இருத்தல், உத்தமவிலக்கணம். களைபிடுங்குபவர் நான்குவருணத்தாருள் இறுதிவருணத்தவரான சூத்திரஸ்திரீகள் என்பார் 'கீழ்மகளிர்' என்றார்: இவர்களை 'கடைசியர்' என வழங்குதலுங் காண்க. இவர் மருதநிலத்தில் வாழ்பவர். கடைசியர் களைபிடுங்கிய கருங்குவளையினின்றும் பெருகிய தேன் ஏர்மாடுகள் உழுகையில் நிலத்தினின்று எழுந்த மண்கட்டிகளைக் கரைக்குமாறு மிக்குள்ளது என, வீறுகோளணிதொனிக்குமாறு விதர்ப்பதேசத்தின் சீர்வள நிலவளங்களை விளக்கியவாறு: பசுமை, கருமை, நீலம் என்ற நிறங்களை அபேதமாகக்கூறுதல் கவிமரபு ஆதலால், நீலோற்பலத்தைப் பசுங்குவளை யென்றார்: பசுமையான புறவிதழையுடைய குவளை யெனினுமாம். கடல்நாடன் என்பதற்கு - கடற்கரையைச்சார்ந்த நாட்டையுடையவ னென்று பொருள்கூறுதற்கும் இடமுண்டு.

மகளிர் - பலர்பாற்பெயர்; பெண்பன்மை. நீள்வரம்பு - வினைத்தொகை. அடித்த என்னும் காரணப்பொருட்டில் வந்த செய்தஎன்னும்வாய்பாட்டுப்பெயரெச்சம், 'கட்டி' என்னுங் காரியப்பொருளைக் கொண்டது. கட்டி - பால்பகாவஃறிணைப்பெயர். ஊறும் - ஊற்றும்; பிறவினைப்பொருளில் வந்த தன்வினை. விரைய - செயவென்னும் வாய்பாட்டு வினையெச்சம். வேந்து - உயர்திணைப்பொருள்தரும் அஃறிணைச்சொல். (௨)

நளமகாராஜன் தேரின்மீது ஏறிக்கொண்டு குண்டினபுரத்தை நோக்கி நடக்கலாயினன். அப்போது தேவரிஷியாகிய நாரதமுனிவர் தேவலோகத்திற் சென்று தேவேந்திரனை யணுகி, 'வீரசுவர்க்கத்திற்குப் பூலோகத்தினின்று அரசரெவரும் வருவதில்லையே; இதற்குக்காரணம் என்னவோ?' என்று ஐயங்கொண்ட அவ்விந்திரனை நோக்கி, தமயந்தியின் அழகைப்பற்றி விவரித்துக்கூறி, அவளதுசுயம்வரத்தையே மன்னரசரெல்லா

ரும் கருதியிருக்கின்றனரென்று செய்தி தெரிவிக்க, வானுலகத்தவரான இந்திரன் வருணன் அக்கினி யமன் என்ற நான்கு தேவர்களும் அத்தமயந்தியை மணஞ்செய்துகொள்ள விரும்பியவர்களாய்ப் பூலோகத்தைநோக்கி வரலாயினர்.

[இந்திரன் முதலிய நான்குதேவர்கள் இடைவழியேவரும் நளனைக்காணுதல்.]

3.—(இ - ள்.) பெரு வானில் - பெருமைபெற்ற சுவர்க்கலோகத்தில் வாழ்கிற, தேவர்- (இந்திரன் வருணன் அக்கி யமன் என்ற) நான்கு தேவர்கள்,—பைந் தெரியல் - பசுமையான மாலையையும், வேல்-வேலாயுதத்தையுமுடைய, வேந்தன் - வீமராஜனது, பாவைபால் - மகளாகிய தமயந்தியினிடத்து, போயின - சென்ற, தன் சிந்தை கெடுத்ததனை - இழந்ததாகிய தனது நெஞ்சை, தேடுவான் - தேடும்பொருட்டு, வருவான்போல் - வருபவன்போல, முந்தி - விரைந்து அல்லது முற்பட்டு, தேர்மேல் - தேரின் மீது ஏறிக்கொண்டு, வருவானை - வருகின்ற நளனை, பெரிது கண்டார் - பெரிதாகக் கண்டார்கள்; (எ - று.)

நாரதமுனிவர் சொல்லினாற் பெருங்காதல்கொண்டு, தமயந்தியின் மணமாலையைப் பெறவேண்டி அவளது சுயம்வரத்துக்காகப் பூலோகத்தை நோக்கிவருகின்ற இந்திரன் முதலிய தேவர்கள், தமயந்தியின் சுயம்வரத்திற்காக விரைந்துசெல்கின்ற நளனை இடைவழியிற் கண்டார்களென்பதாம். நளன் தமயந்தியின்மீது உள்ள மிக்க ஆசையால் விரைந்து செல்வதை, தன்னைவிட்டுத் தமயந்தியினிடஞ்சென்ற மனத்தைத் தேடுதற்பொருட்டு விரைந்துசெல்வதாகக் காரணங்கற்பித்துக் கூறினார்; ஏதுத்தற்குறிப்பேற்றவணி. கவி கற்பித்துக்கூறியதாகத் தோற்றுவதால், இது உவமையணியன்று: மேலும், உபமான உபமேயப்பொருள்கள் தனிதனி ஏற்படாதிருத்தலுங் காண்க. போல் - தற்குறிப்பேற்ற வுருபு. ஒருவர் ஒருபொருளைப் போக்கடித்து விட்டால், அப்பொருள் பிறர்கைப்படுமுன் அதனைக் கண்டுபிடித்தற்காக முந்திச்செல்லுதல், இயல்பு. நளனைக்கண்டமாத்திரத்தில் பெரும்பாலும் தமது எண்ணம் முற்றுமென்று நினைத்தனரென்பார், 'பெரிது கண்டார்' என்றார்.

தெரியல் - விளங்குவது என மாலைக்குக் காரணக்குறி. இதுவேந்தனுக்கு அடைமொழி; வேலுக்கு அடைமொழியுமாம். பசுமை + தெரியல் = பைந்தெரியல்; பண்புப்பெயர் ஈறுபோய் அடியகரம் ஐயாகி, இடை நின்ற உயிர்மெய்யும் கெட்டு இனமெலி மிக்கது. வேல் என்பது - தேவசேனாதிபதியாகிய சுப்பிரமணியக்கடவுள் முதலியவர்க்கு உரியதாதலால், அதனை யெடுத்துக் கூறினார்; இது - மற்றைப் போர்க்கருவிகட்கும் உபலட்சணம். பாவை - பிரதிமை: உவமையாகுபெயராய், பிரதிமை போன்ற பெண்ணென்ற பொருளைத் தந்தது. சிந்தை கெடுத்ததனை - கெடுத்ததாகிய சிந்தையை யென உருபு பிரித்துக் கூட்டுக. தேடுவான் - 'வான்' ஈற்று எதிர்காலவினையெச்சம். வருவானை - இரண்டனுருபு ஏற்ற ஆண்பால் வினையாலணையும்பெயர். பெரிது - குறிப்புமுற்றெச்சவினையுரி. (௩.)

[இந்திரன் நளனைப்பார்த்து 'எங்கட்கு உன்னால் ஒருகாரியம் ஆகவேண்டும்' என்ன, நளனும் அதற்கு இணங்குதல்.]

4.—(இ - ள்.) விண்ணவர் கோன் - தேவராசனான இந்திரன், காவல் குடை வேந்தை - (உலகத்திற்குப்) பாதுகாவலாகிய குடையையுடைய நளமகாராசனை, கண்ணுற்று - பார்த்து, ஏவல் தொழிலுக்கு இசை என்றான்-

'(நாங்கள்) ஏவுவதொரு காரியத்தைச் செய்தற்கு (நீ) உடன்படுவாய்' என்று பொதுப்படக் கூறினான்; மன்னவனும் - நளமகாராசனும், அதனை இன்னது என மனத்தினால் ஓராது - அத்தொழிலை இன்னதென்று மனத்தினால் ஆராய்ந்து பாராமலே, ஏவற்கு இசைந்து - அவர்கள் ஏவுந்தொழிலைத் தான் செய்ய உடன்பட்டு, நேர்ந்தான் - அங்ஙனஞ்செய்வதாக வாக்குத்தத்தஞ் செய்தான்; (எ - று.)—மற்று - அசை.

நளனுடைய செல்வச்சிறப்பையும், நற்குணநற்செய்கைச்சிறப்பு முதலியவற்றையும் முன்னமே கேட்டு அறிந்துள்ள தேவர்கள், இப்பொழுது அவனுடைய ஒப்புயர்வற்ற சௌந்தரியத்தைப் பிரத்தியக்ஷமாகக் கண்டதனால், 'சுயம்வரத்தில் தமயந்தி இவனையன்றி மற்றொருவனை விரும்பாள்' என்று கருதியவராய், இவனையே நாம் அவளிடம் நமக்காகத் தூதுசெல்லும்படி அனுப்புவோமாயின் இவனுக்கு அவளிடத்து உள்ள ஆசையும் அவளுக்கு இவனிடத்து உண்டாகும் ஆசையும் இல்லையாதலோடு அத்தமயந்தி 'இப்படிப்பட்ட சிறப்புடையவனைப் பணிகொண்டு தூதாக ஏவுமவர் இன்னும் எவ்வளவு சிறப்புடையவரோ!' என்னுங் கருத்தால் தங்களை மதித்து விரும்பக்கூடுமென்று ஆலோசித்து அவனைத் தூதனாக்கி அனுப்ப நிச்சயித்தவுடனே, அவர்களில் தலைவனான இந்திரன், தந்திரசாலியாதலால், 'முதலிற் செய்தியை இன்னதென்று குறிப்பிட்டால் நளன் இசையானாகையால், தந்திரமாக இசைவிக்கவேண்டும்' என்று தொடங்கி, இவ்வாறு பொதுப்பட 'ஏவற்றொழிலுக்கு இசை' என்றான். அதுகேட்டவுடன் நளன் 'இவ்வளவு பெரியான் நம்மை ஒன்றுவேண்டும்போது நாம் இசையாதிருப்பது என்னை?' என்று கருதி அதற்கு உடன்பட்டனனென்பதாம்.

அரசாட்சியைக் குடையென்றும், கோலென்றும், சக்கரமென்றுங் கூறுதல், மரபு. குடையென்பது, அநீதியாலாகிய வெம்மை தனது நாட்டுக் குடிகளுக்கு நேராதவாறு அரசன் தனது தண்ணளியால் குளிர்ச்சிபயத்தலாமென்க. கண்ணுற்று, கண் உறு என்பன சேர்ந்து ஒருசொல்தன்மைப்பட்ட கண்ணுறு - பகுதி; கண் உறுதல் - கண்பொருந்துதல்: எனவே, பார்த்தலாயிற்று. விண்ணவர். விண்ணுலகத்தில் வாழ்பவர்: தேவர். கோன், ன் - சாரியை. ஏவற்றொழில் - இருபெயரொட்டு. மன்னவனும், உம்மை - இறந்தது தழுவியது. (௪)

[இந்திரன் நளனைநோக்கி 'தமயந்தியினிடம் எங்கட்காகத் தூதுசெல்லவேண்டும்' என்றல்.]

5.—(இ - ள்.) 'செம் கண் மதம் யானை - சிவந்தகண்களையுடைய மதயானை போன்ற, தேர் வேந்தே - இரதாதிபதியான அரசனே! தேன் மாலை - தேன்சொரிகின்ற சுயம்வரமாலையை, எங்களிலே சூட்ட - எங்களுக்குள் ஒருவர்க்குச் சூட்டும்படி, இயல் வீமன் மங்கைபால் தூது ஆக - அழகுள்ள வீமராஜன் புத்திரியினிடம் நீ தூது செல்வாயாக', என்றான் - என்றுசொன்னான்; (அதற்குக்கட்டுப்பட்டவனாய்), அ கோ - அந்த நளமகாராசன், அ தோகையை - அந்தத் தமயந்தியை, தன் ஆகத்தால் - தன் மனத்தினால், கோது ஆக - கோதுபோல (க் கருதி), வென்றான் - (தன் மனத்தை அவள்கவராவொட்டாதபடி) சயித்தான்; (எ - று.)

நளன், சத்தியசந்தனாதலால், இந்திரனுக்கு வாக்குக் கொடுத்தது தப்பாமல் தூதுசெல்லவேண்டி, அதற்கு ஏற்ப, தமயந்தியினிடம் முன்பு தான் வைத்திருந்த ஆசையை ஒழித்தனனென்பதாம்.

தோகையைத் தன்னகத்தாற் கோதாக வென்றான் - நளன் தமயந்தியைத் தனக்கு உபயோகமில்லாத பொருளாகக் கருதினனென்க. மதயானைக்கு, கோபத்தாற் கண்சிவந்திருத்தல், இயல்பு. தேன் + மாலை = தேமாலை: "தேன்மொழி மெய்வரின்" என்னுஞ் சூத்திரவிதி. இயல் - நற்குண நற்செய்கையுமாம். 'தூதாக' என்றதில், 'ஆக' என்றது - வியங்கோள் வினைமுற்று; ஆ - பகுதி, க - விகுதி. 'கோதாக' என்பதில், ஆக என்பது - வினையெச்சம்: ஆ - பகுதி, கு - சாரியை, அ - விகுதி. தோகை - மயிலினது வாலின்பெயர்: இது-சினையாகுபெயராய் மயிலையும், அது பின்பு உவமையாகுபெயராய் மயில்போன் றசாயலையுடைய பெண்ணையுங் குறித்ததனால், இருமடியாகுபெயர். 'கோதையை' என்றும் பாடம் கோது சாரமில்லாத பொருள். (ரு)

[அப்போது பிறர்காணாதபடி மறைந்துசெல்லுமாறு நளனுக்கு இந்திரன் வரமளித்தல்.]

6.—(இ - ள்.) வார் வெம் சிலை ஒழிய - நீண்ட கொடிய வில்லைக்கொண்டல்லாமல், வச்சிரத்தால் - வச்சிராயுதத்தைக்கொண்டு, மால் வரையை - பெரிய மலைகளை, போர் வெம் சிறகு அறுத்த - (உலகத்தைப்) போர்க்குந் தன்மையுள்ள [மிகப்பரந்த] கொடியஇறகுகளை வெட்டித்தள்ளிய, பொன் தோளான் - அழகிய தோள்களையுடையவனான இந்திரன்,—கார் வண்டின் - கறுத்த வண்டுகளின், பாண் - பாடல், நாறும் - தோன்றப்பெற்ற, தாரானை - மாலையையுடையவனான நளனை, பார்த்து—,—'யாரும் உனை காணார் - (பிறர்) எவரும் உன்னைக் காணமாட்டார்: போய் அவளை காண் - (நீ) சென்று அத்தமயந்தியைப் பார்,' என்றான் - என்று சொன்னான்; (எ - று.)—மற்று - அசை: வினைமாற்றுமாம்.

அப்போது தேவேந்திரன் நளனை நோக்கி, 'கன்னிகாமாடத்தில் காவல் நிரம்பியிருக்குமே; அதனை எவ்வாறு கடப்பதென்று கவலவேண்டா; எவரும் உன்னைக்காணாதவாறு உனக்கு இப்போது வரந்தந்திருக்கின்றேன்; நீ தமயந்தியைக் கண்டு எங்களுக்கு மணமாலை சூட்டுமாறு செய்திசொல்லச் செல்லலாம் என்று, வரந்தந்தனுப்பினனென்தாம்

பலர்க்கும் பொதுப்படப் போர்க்குஉரிய கருவியாகிற விற்போலன்றி, வச்சிரம் சிறப்பாய் இந்திரனுக்கே ஆயுதமாகுந் தன்மை தோன்ற, 'வார் வெஞ்சிலையொழிய வச்சிரத்தால்' என்றார். போர் - வினைத்தொகை. பொற்றோள் - பொன்னாபரணமணிந்த தோளுமாம்; அப்பொருளில், பொன் - கருவியாகுபெயர். வண்டின் பாண் நாறும் தார் - வண்டுகள் மொய்த்து இசைபாடுதற்கு இடமான மாலை. நாறுதல் - தோன்றுதலென்னும் பொருளதாதலை, 'நாற்று' என்பதிலுங் காண்க.

முன்னாளில் மலைகள் சிறகுள்ளனவாயிருந்து பறந்து சனங்களின் மேல் விழுந்து அழித்துக்கொண்டிருந்ததனால் இந்திரன் அவற்றின் சிறகை யரிந்தா னென்பது, புராணகதை. (சு)

தேவேந்திரனால் தமயந்தியினிடம் தூதனுப்பப்பட்ட நளன், விதர்ப்ப தேசத்தில் குண்டினபுரியைச் சார்ந்து, தமயந்தியிருக்கின்ற கன்னிமாடத்திற் புகுந்தனன்.

[அப்போது நளனுந் தமயந்தியும் ஒருவரையொருவர் பார்த்தல்.]

7.—(இ - ள்.) ஆங்கு - அவ்விடத்தில் [தமயந்தியின் கன்னிமாடத்தில்], மது நோக்கும் தாரானும் - தேன்வெளிவரப்பார்க்கின்ற மலர்மாலையை

யணிந்த நளனும், வாள் நுதலும் - பிரகாசமான நெற்றியையுடைய தமயந்தியும், தம்மில் - தமக்குள்ளே, பொது நோக்கு - பொதுவான பார்வையினால், எதிர் நோக்கும் போது - எதிர்க்கு எதிராகப் பார்த்தகாலத்தில்,—தேன் குவளை தன்னிலே - தேனையுடைய கருங்குவளைமலரிலே, செந் தாமரை மலரா - செந்நிறமான தாமரைப்புஷ்பம் மலர்ந்திருக்க,— பூ குவளை - அழகிய கருங்குவளைமலர், தாமரைக்கே-தாமரைமலரில், பூத்தது - மலர்ந்தது போலாயிற்று; (எ - று.)

நளன் தேவேந்திரனது வேண்டுகோளின்படியே தமயந்தியினிடம் தூதாகச் சென்று சேர, அப்போது நளன் தமயந்தியைப் பார்க்க, தமயந்தியும் நளனைப்பார்த்தன னென்பதாம். மைதீட்டிக் கருமைநிறம் மிக்கிருக்கப் பெற்ற தமயந்தியின் கண்ணொளியைக் கருங்குவளையாகவும், செவ்வரிபரந்த நளனதுகண்களைத் தாமரைமலராகவுங் கூறினார்: இச்செய்யுளில், 'எதிர் நோக்கும்போது' என்று உபமேயந்தோன்றக்கூறி, அவ்வுபமேயத்தில் கருங்குவளையில் தாமரைமலர் பூத்த தன்மையும்,தாமரைமலரில் கருங்குவளைமலரும்பூத்த தன்மையும்அமைந்துள்ளன வெனக்கூறியது-காட்சியணியின்பாற்படும்: உபமேயத்தில் உபமானத்தைக்காணுதல், இவ்வணியி னிலக்கணம். பொதுநோக்கு - காதலின்றி இயல்பாகக் காண்கின்ற முதல்நோக்கு. இந்நோக்கின் மூலமாகவே காதல் தோன்றுமென்க. இனி, பொது நோக்கு என்பதற்கு - காதல்கொண்டிருந்தும் கொள்ளாததுபோன்ற பார்வை யென்று உரைப்பாருமுளர்: இவ்வாறாகிய நோக்கம் மகளிர்க்கு உரியதாதலை "யானோக்குங்காலை நிலநோக்கும் நோக்காக்கால், தானோக்கி மெல்ல நகும்" என்ற திருக்குறளால் அறியலாம். இதனாற் காட்சி கூறப்பட்டது.

தேன் + குவளை: தேங்குவளை; தேனென்னும்மொழி வலிவர ஈறுபோய் இனமெலி மிக்கது; [நன் - மெய் - க.] குவளை, தாமரை - சாதியொருமை. தாமரைக்கு=தாமரையில்; உருபுமயக்கம். வாள் - உரிச்சொல். "வாளொளியாகும்" என்பது தொல்காப்பியத்து உரியியற் சூத்திரம். நுதல் என்ற சினைப்பெயர் - நுதலையுடையவளைக் காட்டுதலால், சினையாகுபெயராம்: வாணுதல் என்ற தொடரை அன்மொழித்தொகையெனல் தகாது; "ஐந்தொகை மொழிமேல் பிறதொகல் அன்மொழி" என்பது விதியாதலாலும், இது உரிச்சொற்றொடராதலாலு மென்க. வாளாயுதம்போன்ற நுதல் எனின், உவமைத்தொகைப்புறத்துப்பிறந்த அன்மொழித்தொகையாம். (எ)

[தமயந்தி நளனைப்பார்த்து, 'நீ யார்?' என்றல்.]

8.—(இ - ள்.) ஊசல் குழைமீது - ஊஞ்சலாடுவதுபோல அசைகிற குழையென்னுங்காதணியின்மீது உலாவுகிற, வெள்ளம் - கடல்போலப் பரந்த கண்களினின்று வான் நீர்-பிரகாசமான நீரை, சோர விட்டு - பெருக்கி, (தமயந்தி நளனைநோக்கி),—"காவல் கடந்து - (அந்தப்புரக்காவலாளர்களுடைய) காவலைத் தாண்டி, எங்கள் கன்னிமாடம் புகுந்தாய் - எங்களுடைய கன்னியாமாடத்தினுள்ளே வந்தவனை நீ, விஞ்சைக்கு இறைவனோ - மாயவித்தைகட்கும் தலைவனான வித்யாதரனோ? தேவனோ - தேவலோகத்தானோ? யாவனோ - யாரோ? உள்ள ஆ சொல் - உள்ளபடி சொல்,' என்றாள்-என்று வினவினாள்; (எ - று.)

இங்குக் கண்ணீர் சொரியவிட்டமை, அவனுடைய மிக்க அழகைக் கண்டதனா லாகிய ஆனந்தத்தினா லென்க;அன்றி, இப்படிப்பட்ட அழகிய புருஷன் தன்கணவனாயிலனே என்ற கவலையினாற்கொண்ட சோகத்தினாலாகியதுமாம்: அல்லது, ஆடவர்வரத்தகாத கன்னிமாடத்தில் திடீரென்று

ஒருபுருஷனைக் கண்டதனால் யாதாகுமோ என்று மிக்கஅச்சங்கொண்டமைபற்றிக் கண்ணீர்பெருகிய தென்றுங் கொள்ளலாம். இதனால், ஐயம் கூறப்பட்டது.

எங்கள் என்ற உளப்பாட்டுத் தன்மைப்பன்மை - தனதுதோழியர்களைத் தன்னுடன் கூட்டிக் கூறியது. கன்னிமாடம் - அந்தப்புரத்தில் கலியாணமாகாத பெண்கள் வசிக்கும் இடம். புகுந்தாய்+யாவனோ என்றது, சந்தியில், புகுந்தாயாவனோ என்று ஆகும்; 'தனிக்குறிலைச்சாராத யகரம் வருமொழிமுதல் யகரம் வரக் கெடும்': இதற்கு விதி - "யரழமுன்னர்" என்ற சூத்திரத்தில் 'மேல்' என்றதனால் அமையும். யாவனோ, ஓ - அசை; மற்றை இரண்டு ஒகாரங்களும்-ஐயப்பொருளன. வித்தியாதரர்களும் தேவர்களும் மாயையிலும் மந்திரபலத்திலும் தேர்ந்தவராதலால், 'விஞ்சைக்கிறைவனோ தேவனோ' என்று சங்கித்தாள். விஞ்சை - வித்யா என்ற வடசொல்லின் சிதைவு. தேவன் - வடசொல். ஆ - ஆறு என்பதன் விகாரம். கண்கள் பெரியவையாயிருத்தல் உத்தமவிலக்கணமாதல் பற்றி, அவை நீண்டுள்ளன என்ற பொருளில் குழைமீதுசெல்கின்றன வென்றும், அவை பரந்துள்ளன என்ற பொருளிற் கடல்போன்றனவென்றும் அதிசயப்படுத்தி வருணித்துக்கூறுதல், கவிமரபு. வெள்ளம் - கண்ணுக்கு உவமையாகுபெயர். வாள்-வாள்போன்ற கண் எனக் கொண்டு, நீர்வெள்ளம் என்று இயைத்தலுமாம். புகுந்தாய் - முன்னிலையொருமை இறந்தகால வினையாலணையும்பெயர்: புகுந்தவனே என்று விளியாகக் கொள்ளுதலுமொன்று. சோரவிட்டென்றுளன இயையும். (அ)

[நளன் தமயந்தியைநோக்கி 'இந்திரனுக்கு நீ சுயம்வர மாலை சூட்டு' என்றல்.]

9.—(இ - ள்.) தொடையில் தேன் - தன்மாலையிலுள்ள மலர்களின் தேனை, தும்பிக்கே ஊட்டுவான் - (அதனை நாடிவருகின்ற) வண்டுகளுக்கே உண்பிப்பவனான நளன்,—எல்லாம் உரைத்து - (தான் இன்னானென்பதும் தான் வந்த காரணமும் ஆகிய) எல்லாவற்றையுஞ் சொல்லி (பின்பு தமயந்தியை நோக்கி), 'என் உரையை யாது' என்று இகழாது-என்பேச்சை யாதோவென்று அலட்சியஞ் செய்யாமல், இமையவர் வாழ் பொன் உலகம் காக்கும் புரவலனை - தேவர்கள் வசிக்கின்ற பொன்மயமான சுவர்க்கலோகத்தைப் பாதுகாக்கின்ற அரசனான இந்திரனுக்கு, மெல் மாலை சூட்டுவாய் - மென்மையான சுயம்வரமாலையை இடுவாய்,' என்றான்-என்றுசொன்னான்; (எ-று.)

இந்திரன் தேவர்கட்கு அரசனாதலால், அவனைப்பற்றி நளன் முதலில் தூது பேசினான்; இதனால், பிறரைப்பற்றிப் பேசியதும் பெறப்படும்.

உரைத்து என்றான் என்றும், இகழாது சூட்டுவாய் என்றும் இயையும். தனக்குத் தமயந்தி சுயம்வரமாலைசூட்ட அதுகாரணமாக அவளின்பத்தைத் தான்பெறுதல் தனக்கே உரியதாயிருக்க, அதனை விரும்பிவந்த இந்திராதிதேவர்கள் பெறும்படி தூதுபேசுகின்ற நளனது பரோபகார சீலத்தை நன்கு விளக்குதற்கு, 'தொடையிற் றேன் தும்பிக்கே யூட்டுவான்' என்றார். இமையவர் - இமையில் விசேஷமுடையவர்; அதாவது - (மூடாத) இமையையுடையவர். புரவலன் - காத்தலில் வல்லவன் : புரத்தல் - காத்தல். புரவலனை என்பதில், இரண்டனுருபு நான்கனுருபின் பொருளில் வந்ததனால், உருபுமயக்கம் : [நன் - பெயர் - கூ0.] (கூ)

அப்போது தமயந்தி நளனைநோக்கி 'நான் உன்னையே மணஞ்செய்வேன்' என்று கூறினாள்.

[தமயந்தி நளனைநோக்கி 'சுயம்வரத்துக்கு நீ அவசியம் வரவேண்டும்' என்றல்.]

10.—(இ - ள்.) போது - செந்தாமரைமலர்போன்ற, அரி கண் - செவ்வரிபரந்த கண்களையுடைய, மாதராள் - அழகியவளான தமயந்தி, (நளனை நோக்கி), 'சோதி - ஒளியையுடைய, செழுந் தாளம் - செழுமையான முத்துக்களினாலாகிய, வெள் குடையாய் - வெள்ளைக்குடையையுடையவனே! பொன் மாலை சூட்ட ஆதரித்தார் தம்மோடு - அழகிய சுயம்வரமாலையைச் சூட்டப்பெறுதற்கு ஆசைப்பட்டவர்களான அரசர்களுடனே, அவை அகத்தே - சுயம்வர சபையிலே, தேவர்களும் நீயும் எழுந்தருள்க - (நீ குறித்த) தேவர்களோடு நீயும் எழுந்தருள்வாயாக,' என்றாள் எடுத்து - என்று எடுத்துச்சொன்னாள்; (எ - று.)—தான் - அசை.

இந்திரன்முதலிய தேவர்களுக்கு மாலைசூட்டு என்றுசொன்ன நளன், தான் சுயம்வரத்துக்கு வந்தால் தனக்கே இவள் மணமாலை சூட்டுவளென்பதை இவள்பேச்சினால் நிச்சயமாக அறிந்தவனாய், தேவர்க்கு மாலைசூட்டுவிக்கவேண்டுமென்னுங் கருத்துப்பற்றி ஒருகால் சுயம்வரசபைக்கே வாராது விடுவானோ என்ற சங்கையினால், 'எல்லா அரசர்களோடும் தேவர்களோடும் நீயும் எழுந்தருள்க' என்று தனியே எடுத்துக்கூறினாள்.

போது - (கருங்குவளை) மலருமாம். அரி - ரேகை. மாதர் - விரும்பப்படுவதாகிய கட்டழகு; அதனையுடையவள் - மாதராள். ஆதரித்தார் - ஆதரமென்னும் வடமொழிப்பெயரினடியாகப் பிறந்த இறந்தகால வினையாலணையும் பெயர். தாளம் - வடசொல். வியங்கோள் வினைமுற்று, ஐம்பால் மூவிடத்துக்கும் பொதுவாதலால், 'தேவர்களும் நீயும் எழுந்தருள்க' என்ற முடிபு, இலக்கணத்துக்கு ஒத்ததேயாம். (௧௦)

[தான்தூதுசென்று மீண்ட விவரத்தை, நளன் தேவர்கட்குக்கூறல்]

11.—(இ - ள்.) விண்ணவர்தம் ஏவலுடன் - தேவர்களுடைய கட்டளையினால், வீமன் திருமகள்பால் சென்று - வீமராசனுடைய அழகிய மகளினிடத்து(த் தூது) சென்ற, புகழ் நளனும் - கீர்த்திபெற்ற நளமகாராஜன்,—மீண்டு சென்று - திரும்பிவந்து,—தேவர் மனம் மகிழ தான் மொழிந்த மெல் மொழியும் - அந்தத்தேவர்களுடைய மனம் மகிழும்படி தான் (அவளுடன்) சொன்ன மென்மையான வார்த்தையையும், நன்கு உரைத்த பெண் அணங்கின் வல் மொழியும் - (அதற்குமாறாக) நன்றாகக்கூறிய சிறந்த அந்தப் பெண்ணினது கடுமையான வார்த்தையையும், உரைத்தான் - சொன்னான்; (எ - று.)

தமயந்தியினிடத்தினின்று மீண்ட நளன், தான் தேவர்கட்குமணமாலை சூட்டும்படி தன்னாலியன்றவகையிலும் மன்றாடிச் சொல்லியதையும், தமயந்தி அம்மொழியை மறுத்துச் சொல்லியதையும் உள்ளது உள்ளபடியே ஒரு சிறிதும் மறையாது கூறினனென்பதாம்.

நளனும், உம் - அசை; கதைத்தொடர்ச்சிபற்றி வந்த இறந்தது தழுவிய எச்சவும்மையாகவுங் கொள்ளலாம். நன்கு உரைத்த - சந்தேகத்துக்கு இடமில்லாமல் துணிவாகச் சொன்ன என்றபடி. பெண்அணங்கு - பெண் தெய்வம்; இலக்குமியுமாம். வன்மொழி - தேவர்கட்கு வருத்தத்தை விளைக்கும் உறுதியான மொழி. மென்மொழி - உடன்படுத்தவேண்டி இனிமையாகக்கூறிய மொழி. நன்கு-பண்புப்பெயர் : நல் - பகுதி, கு - விகுதி. (௧௧)

[அந்தந்தேவர்கள் நளனுக்கு வரமளித்தல்.]

12.—(இ - ள்.) 'அங்கி - நெருப்பையும், அமுதம் நீர் - அமிருதம்போல் இனிய தண்ணீரையும், அம் பூ - அழகிய மலர்களையும், அணி ஆடை - அழகிய வஸ்திரத்தையும், எங்கு நீ வேண்டினை - எவ்விடத்தில் நீ பெறவிரும்புவாயோ, அ இடத்தே - அந்த இடத்திலே, சங்கை அற- சந்தேகமில்லாமல் [தவறாமல்], பெற்றாய் - பெறுவாய்', என- என்று,—வருணன்-வருணனும், ஆகண்டலன் - இந்திரனும், தருமன் - யமனும், மற்றோனும் - மற்றொருவனாகிய அக்கினியும், வரம் ஈந்தார் - வரங்களைக் கொடுத்தார்கள்; (எ - று.) —மற்று - அசை.

நால்வர் நான்கு பொருள்களைப் பெறும்படி வரமளித்தார்களென்று பொதுப்படக் கூறியிருந்தாலும் வேண்டிய விடத்து நெருப்பைப் பெறும்படி அக்கினியும், நீரைப் பெறும்படி வருணனும், பூவைப் பெறும்படி இந்திரனும், ஆடையைப் பெறும்படி யமனும் வரமளித்தனரெனப் பகுத்து அறிந்துகொள்க. இவர்கள் வரங்கொடுத்த விஷயம் வடமொழிமகாபாரதத்தில் வேறுவகையாகக் கூறப்பட்டிருப்பினும் இந்நூலாசிரியர் வழிநூலிலக்கணவிதிப்படி பிறநூல்மேற்கோள்கொண்டு இங்ஙனம் வேறுவகையாக அமைத்தனர் போலும். 'அமுதம்நீர்' என்பதற்கு - அமிருதம்போல் இனிய உணவையும் நீரையும் என்றும், அம் பூ என்பதற்கு - அழகிய பூமியை என்றும் பொருள் கொள்ளலுமாம்.

வேண்டுமவை என்ற பொருளில் 'வேண்டினை' என்று வந்தது - இயல்பு பற்றி எதிர்காலம் இறந்தகாலமாகச் சொல்லப்பட்ட காலவழுவமைதி; பெறுவாய் என்ற பொருளில், 'பெற்றாய்' என்றது - நிச்சயத்தினால் எதிர்காலம் இறந்தகாலமாயிற்று: [நன் - பொது - ௩௩.] ஆகண்டலன் என்ற வடசொல் - (பகைவர்களை) நன்றாகக் கண்டிப்பவனென்று காரணப்பொருள்படும். தருமத்தினின்று தவறியவர்களுக்குத் தக்க தண்டனைசெய்து தருமத்தைக் காத்தலால், யமனுக்குத் தருமனென்று பெயர். மற்றோனும், உம்- இறந்ததுதழுவிய எச்சப்பொருளது. அக்நி, அம்ருதம், ஶங்கா, தர்மன் என்ற வடசொற்கள் - முறையே அங்கி, அமுதம், சங்கை, தருமன் என விகாரப்பட்டன. வருணன், வரம் - வடசொற்கள். (கஉ)

[தேவர்களுடன் இந்திரன் சுயம்வரமண்டபஞ் சேர்தல்.]

13.—(இ - ள்.) தார் வேந்தன் - மாலையைத்தரித்தவனான நளமகாராசன்,—அங்கு - அவ்வாறு, அவர்கள் - அத்தேவர்கள், வேண்டும் வரம் கொடுக்க - தாம் வேண்டிய வரங்களைக் கொடுக்க, பெற்று - பெற்றுக்கொண்டு,—மேல் - பின்பு,—மங்கை வயம் மருவுகின்ற - தமயந்திவசத்தில் ஆசையோடுபொருந்துகின்ற, மனம் - மனத்தையுடைய, காவலர்க்கு - அரசர்களுக்கு ஏற்படுத்திய, சயமரம் கண்டது - சுயம்வரஸ்தானமாக அமைக்கப்பட்டதாகிய, ஓர் சார்பு - ஓரிடத்தை, அவர்கள்தங்களொடும் - அத்தேவர்களுடனே, சார்ந்தனன் - சேர்ந்தான்; (எ - று.)—தான் - அசை.

தேவர்கள் வரங்கொடுக்க அதனைப் பெற்றுக்கொண்டு, பின்பு நளன் சுயம்வரகாலத்தில் மன்னவர்கள் தங்கியிருத்தற்காக அமைக்கப்பெற்றசுயம்வரமண்டபத்தில் இந்திரன்முதலிய தேவர்களோடும் போயிருந்தனனென்பதாம்.

மேல் சார்ந்தனன் என இயையும். மேல் மங்கையெனக் கூட்டி, மேலான மங்கை யென்று பொருள் கொள்ளினுமாம். வயம் - வசமென்ற வடசொல்லின் விகாரம். காவலர் - காத்தலில் வல்லவர். (கங)

[தமயந்தி சுயம்வரமண்டபஞ் சேர்தல்.]

14.—'செய்யதாள்' என்றும், 'பொய்கைவாய்' என்றும் திருத்திப் படிக்க.

(இ - ள்.) மின் நிறத்து - மின்னல்போல விளங்குகின்ற நிறத்தையும், செய்ய தாள் - சிவந்த கால்களையும், வெள்ளை சிறை - வெண்மையான சிறகுகளையுமுடைய, அன்னம் - ஓர் அரசஅன்னப்பறவை, செம் கமலம் பொய்கைவாய் - செந்தாமரைத்தடாகத்தில், போவதே - போவதையே, போன்று - ஒத்து,—பொன்னின் மடப் பாவை - பொன்னினாலாகிய இளமைபொருந்திய பதுமைபோன்ற தமயந்தி, மன்னர் விழி தாமரை பூத்த மண்டபத்தே - அரசர்களுடைய கண்களாகிய செந்தாமரைமலர்கள் பூத்திருக்கின்ற சுயம்வரமண்டபத்திலே, போய் புக்காள் - போய்ச் சேர்ந்தாள்; (எ - று.)

உவமையணி. 'மன்னர்விழித்தாமரை பூத்த மண்டபம்' என்றதனால், எப்போது தமயந்தி வருவாளோ என்னும் பேராதரத்தோடு விழித்தகண் இமையாமல் வேந்தர் பார்த்துக்கொண்டிருக்கின்றன ரென்பது, பெறப்படும். கண்களுக்குத் தாமரைமலர் உவமை - செம்மை மென்மை அழகுகளுக்கு. அன்னப்பறவை, தமயந்திக்கு நடையில் உவமம். பாவை - உவமையாகுபெயர். செய்யதாள் வெள்ளைச்சிறை அன்னம்-ராஜஹம்ஸம் எனப்படும். செய்யதாள் வெள்ளைச்சிறை - முரண்தொடை; 'சொல்லினும் பொருளினும் முரணுதல் முரணே.' வெள்ளை - பண்புப்பெயர்; ஐ - விகுதி. தாமரை - தாமரஸ மென்ற வடசொல்லின் விகாரம். மண்டபம் - வடசொல். பொய்கைவாய், வாய் - ஏழனுருபு. (கச)

[ஒருதோழி தமயந்திக்கு அரசர்களைக் குறிப்பிட்டுக் காட்டுதல்.]

15.— (இ - ள்.) இயல் அணங்கு - நற்குணமுள்ள தெய்வப்பெண்போன்ற ஒருதோழி,—தேர் வேந்தர்தம்மை - ரதாதிபதிகளான அவ்வரசர்களை, தெரிந்து - (இன்னாரின்னாரென்று தான்) அறிந்து,—மன்னர் - அந்த அந்த அரசர்களுடைய, குலமும் - வம்சத்தையும், பெயரும் - பெயரையும், வளம் நாடும் - வளப்பமுடைய நாட்டையும், இன்ன பரிசு என்று - இப்படிப்பட்ட தன்மையுள்ளன வென்றுசொல்லி,—தார் வேந்தன் பெற்ற தனிகொடிக்கு - வெற்றிமாலையை யணிந்த வீமராசன் பெற்ற ஒப்பற்ற பூங்கொடிபோன்ற தமயந்திக்கு, முன் நின்று காட்டினாள் - முன்னேநின்று சுட்டிக் காண்பிப்பவளானாள்; (எ - று.)

மன்னவர்யாவரும் சுயம்வரமண்டபத்தில் வந்துசேர்ந்தனராக, வந்த அரசர்களை இன்னாரின்னாரென்று அறியவல்ல தமயந்தியின்சேடி யொருத்தி, தமயந்தியை அம்மண்டபத்தில் அழைத்துச்சென்று ஒவ்வோரரசனையும் இன்னாரின்னாரென்று அவளுக்குக் காட்டினளென்பதாம். கொடி - உவமையாகுபெயர். அவரவர்களின் தன்மைகளையெல்லாம் அறிந்துகூறுதற்கு ஏற்றசிறந்த அறிவையுடையவளென்றற்கு, 'இயலணங்கு' என்றார். இனி, இதற்கு - கல்விக்குஉரிய தெய்வமான சரசுவதி யென்று பொருள் கூறுவாரும் உளர்; அது, அடுத்த செய்யுளில் "காவலரைத் தன்சேடி காட்ட" என வருவதனோடு பொருந்தாமை யறிக. இன்ன இகரச்சுட்டடியாகப்பிறந்த குறிப்புப்பெயரெச்சம்; ன் - சந்தி. முன் - இடமுன். (கரு)

[நளன்வடிவங்கொண்டு வந்திருந்த நான்குதேவர்களைக் கண்டு தமயந்தி சஞ்சலப்படுதல்.]

16.—(இ - ள்.) காவலரை - சுயம்வரத்துக்கு வந்திருந்த பூலோகத்து அரசர்களையெல்லாம், தன் சேடி - தன்னுடைய தோழி, காட்ட - காண்பி

த்துவர,—பூ வரைந்த மாசு இலா பூ குழலாள் - மலர்சூடிய குற்றமில்லாத அழகிய கூந்தலையுடையவளான தமயந்தி, கண்டு - பார்த்துக்கொண்டே வந்து,—மற்று - பின்பு,—நளன் உரு ஆய் சென்று இருந்தார் ஈர் இருவர் தேவர் அவரை காணு நின்று - நளனதுவடிவத்தைக்கொண்டு (அச்சபையில்) வந்திருந்த அத்தேவர்கள் நால்வரைக் கண்டு திகைத்து நின்று, உளம் ஊசல் ஆடு உற்றாள் - ஊஞ்சலாடுவதுபோல மனம் சஞ்சலமாகும் நிலைமையை யடைந்தாள்; (எ - று.)

நளனைத் தூதனுப்பிப்பார்த்தும் தமயந்தி தங்களைவிரும்பாமல் நளனையே விரும்புவதை யறிந்த தேவர்கள், வஞ்சித்தாவது அவளைத் தாம் பெற வேண்டு மென்னுங் கருத்தால், நளன்வடிவுகொண்டு சுயம்வரமண்டபத்திற் சென்று வீற்றிருந்தனர்: அங்ஙன மிருந்த நால்வரும் உண்மையான நளனும் ஆகிய ஐவரை ஒரு தன்மையாகக் கண்ட தமயந்தி, இவர்களில் உண்மையான நளன் இன்னனென்று அறியமாட்டாதவளாய் மனங்கலங்கின்றனளென்பதாம்.

சேடி - வடசொல். உரு - ரூபமென்ற வடசொல்லின் விகாரம். மற்று என்னும் இடைச்சொல - இங்கே, பின் என்னும் பொருளது. காணு-உடன்பாட்டு இறந்தகாலவினையெச்சம். (கசு)

[கவிக்கூற்று: யாவரும் தமயந்தியின்விவாகத்திற்கு வந்தன ரென்றல்.]

17.—(இ - ள்.) வானவரும்- (இந்திரன்முதலிய) தேவர்களும், பொன் தேர் நளன் உரு ஆய் போந்து-அழகிய இரதாதிபதியான நளனது வடிவத்தைக்கொண்டு, வந்துஇருந்தார் - (தமயந்தியின் சுயம்வரமாலையைப் பெறுவதற்காகச் சுயம்வரமண்டபத்தில்) வந்திருந்தார்கள்; (என்றால்),—பூணுக்கு- ஆபரணங்கட்கு, அழகு அளிக்கும்-அழகைத்தருகின்ற, பொன் தொடியை- பொன்னாலாகிய தொடியென்னும் வளையலையணிந்த தமயந்தியை, கண்டக்கால் - மனத்தினால் எண்ணுவார்களாயின்,—நீள் நிலத்து - பரந்த பூமண்டலத்திலுள்ள, நெஞ்சு உடைய நல் வேந்தர் -மனவுறுதியுள்ள சிறந்த அரசர்களுள், நாண் உக்கு வாராதார் - வெட்கங்கெட்டு (சுயம்வரமாலையைப்பெற வேணுமென்று விரும்பி) வாராத அரசர், எவர் - யாவர் இருக்கின்றனர்? [எல்லாரும் வந்தனர்.] (எ - று.)

இந்திரன்முதலிய தேவர்களும் தமயந்தியின் சுயம்வரமாலையைப் பெற வேண்டுமென்றவிருப்பினால்,'பிறவியினால்நம்மிலும் இழிந்தவனான' நளனது உருவத்தைக் கொள்ளுகின்றோமே' என்ற வெட்கமுமில்லாமல் நளன்வடிவத்தைக்கொண்டு வந்தார்களென்றால், பூலோகத்து அரசர்களில் வெட்கங்கெட்டுத் தமயந்தியின்சுயம்வரத்துக்கு வாராதவர்கள் ஒருவருமில்லை யென்பது தானேபெறப்படு மென்பதாம். இச்செய்யுளில் கைமுதிகந்யாயமென்னுந் தண்டாபூபிகாந்யாயந் தோன்றக் கூறியது,தொடர்நிலைச்செய்யுட்பொருட்பேறணி.(தண்டாபூபிகாந்யாயமாவது-ஓரெலிதடியைவிழுங்கியதுபெறப்படுதலால் அத்தடியிற் கட்டியிருந்த பணியாரமும் விழுங்கியது பெறப்படுதல் போல்வது.) இதனை, வடநூலார்காவ்யார்த்தாபத்யலங்கார மென்பர். வருதற்குக் காரணம்,நாணுக்கமையன்று; வந்தஅரசர்கள்யாவரும் தமயந்தியினமீதுஉள்ள மிக்ககாதலால்,தாம்வரும்போது நாணமுடையவர் செய்யத்தகாதகாரியத்தையும் செய்யலாயின,'ரென்பதே நல்வேந்தர் நாணுக்குஎவர் வாராதார்' என்பதன் கருத்து. இதனால், தமயந்தியின் ஒப்புயர்வற்ற மிக்க அழகு தொனிக்கும்.

தமயந்தி ஆபரணத்தைப்பூண்பதால் அப்பூணுக்கு அழகேயன்றி, ஆபரணத்தினால் தமயந்திக்குச் சிறிதும் அழகுண்டாவதில்லையென்பது, 'பூணுக் கழகளிக்கும் பொற்றொடி' என்பதன் கருத்து; "ஆபரணஸ்ய ஆபரணம்" என்றார் காளிதாஸரும். தமயந்தி தனக்குச் சுமையாக அணிகளையணிவது, மங்களத்தின் பொருட்டென்க. பொற்றொடி - வேற்றுமைத்தொகையன்மொழி. மேல் 'வாராதார்' என வருதலால், கண்டக்கால் என்பதற்கு - நினைத்தாலென்று பொருளுரைக்கப்பட்டது; இச்சொல்-காலீற்று எதிர்கால வினையெச்சம். இனி, தமயந்தியைக் கண்ணுறப்பார்த்தால் நாணங்கெட்டு, நெஞ்சுஉடைய-மனமழியும்படி,—வாராதவர் யாவர் என்று உரைப்பினுமாம்; தமயந்தியைக் கண்ட வேந்தர்யாவரும் நாணங்கெட்டு மனம்முறிந்துபோவரென்க. மற்று- அசை. தேர்வீரர்களில் அதிரதர் மகாரதர் சமரதர் அர்த்தரதர் என நால்வகைவீரருளர்: அவர்களுள் நளன் அதிரதவீரனென்க. இனி, பொற்றேர்நளன் என்பதற்கு - அழகியதேரையோட்டுதலில் வல்ல நளன் எனினுமாம்; (நளன் ருதுபர்ணமகாராஜனுக்குத் தேர்ச்சாரதியாகப் பின்பு அமைதல் காண்க.) போந்து-"என்றுகொண்டு" என்றவிடத்தில் 'கொண்டு' என்பதுபோல அசையாய் வந்தது. (கள)

[தமயந்தி நளனையறிதற்பொருட்டுக் கடவுளை வேண்டுதல்.]

18.—(இ - ள்.) (தமயந்தி), சூழ் விதியின் மன்னவனை - (உயிரை) விடாது சூழ்கின்ற விதிக்குத் தலைவனான கடவுளை, தன் மனத்தே வைத்து தனது மனத்திலே கொண்டு தியானித்து,—'யான்—,மின்னும் தார் வீமன் தன் மெய் மரபில் - பிரகாசிக்கின்ற மாலையைத் தரித்த வீமராசனுடைய சுத்தமான குலத்திற் பிறந்த, செம்மை சேர் கன்னி ஆகில் - நல்லொழுக்கம் பொருந்திய கன்னிகையாயிருப்பேனானால், அன்னம் தான் சொன்னவனை கடி மாலை சூட்ட அருள் - அன்னப்பறவை முன்புசொன்ன நளமகாராசனை (இன்னானென்று அறிந்து அவனுக்கே நான்) மணமாலை சூட்டும்படி அருள்செய்வாய்,' என்றாள் - என்று பிரார்த்தித்தாள்; (எ - று.)

நான் வீமராஜனது குலத்திலே பிறந்திருப்பேனாயின், அக்குலத்தின் தூய்மைக்குப் பழுதுநேராதவாறு அன்னப்பறவை முன்பு சொல்லிப்போன நளனுக்கே நான் சுயம்வரமாலையைச் சூட்டுமாறு அருள்புரியவேண்டுமென்று தமயந்தி தெய்வத்தை வேண்டினளென்க. ஒரு ஆடவனை மணஞ் செய்துகொள்வதாக முதலில் மனத்தில் நினைத்துவிட்டுப் பிறகு வேறொருத்தனை மணத்தலும் மகளிரது கற்பிற்கு இழுக்காமென்க.

மெய் × மரபு என்பது, சந்தியில் மெய்ம்மரபு எனப்புணரும்;' "குறில் வழியத்தனியைந் தொதுமுன் மெலிமிகலுமாம்" என்பது, விதி. நல்வினை தீவினைப் பயன்கள் அவை செய்தஉயிரைச் சென்று அடைதல் தவறாதாதலால், 'சூழ்' என்ற அடைமொழி கொடுக்கப்பட்டது. விதியின்மன்னவன் - அப்பயனை அளிக்கின்ற தெய்வம். செம்மை - நல்லொழுக்கத்துக்குப் பண்பாகுபெயர். கடி என்ற உரிச்சொல் - இங்கே, கலியாண மென்ற பொருளில் வந்தது. சொன்னவனை என்பதில், இரண்டனுருபு நான்கனுருபின் பொருளில் வந்தது, உருபுமயக்கம். விதி, மாலஸ் - வடசொற்கள். (கஅ)

[தெய்வத்தின் கருணையால் தமயந்தி சிலகுறிகளைக்கொண்டு நளனை இன்னானென்று அறிதல்.]

19.—(இ - ள்.) நறு-வாசனையுள்ள, தாமரை - (செந்) தாமரைமலரை, விரும்பும் - விரும்பி அதில்வீற்றிருக்கின்ற, நல் நுதலே - அழகிய நெற்றி

புடையவளான இலக்குமியையே, அன்னாள் - ஒத்தவளான தமயந்தி,— ஆங்கு - அப்பொழுது,—கண் இமைத்தலால் - கண்கள் இமைகொட்டுதலா லும், அடிகள் காசினியில் தோய்தலால் - பாதங்கள் பூமியிற் படிதலாலும், வண்ணம் மலர் மாலை வாடுதலால் - அழகிய பூமாலை வாடுதலாலும், எண்ணி - ஆலோசித்து, நளன் தன்னை அறிந்தாள் - நளனை (இன்னானென்று) அறிந்து கொண்டாள்; (எ - று.)

கண் இமைத்தலும், கால் நிலத்திற்படிதலும், தரித்த மலர் மாலை வாடுதலும் தேவர்கட்கு இல்லாமையால், அவர்களைப் பிரித்து, அவற்றையுடைய வனை நளனென்று உண்மையுணர்ந்தன ளென்பதாம். கடவுளைப்பிரார்த்தி த்தவுடனே மனிதர்க்கும் தேவர்க்குமுள்ள வேறுபாடு தமயந்திக்குத் தன்ன டைவில் தோன்றிற்றென்க.

காசினி - காசயபீ என்ற வடசொல்லின் சிதைவு; பூமி: கசியபமுனி வர்க்குப் பரசுராமனால் ஒருகாலத்தில் தானஞ்செய்யப்பட்டது பற்றிய பெயர். நன்னுதல் - பண்புத்தொகை யன்மொழி. எ - உயர்வு சிறப்பு. (கக)

[தமயந்தி நளனுக்கு மணமாலை சூட்டுதல்.]

20.—'தம்மனத்தே சூட' என்று மூலத்தைத்திருத்துக. 'தன்மனத்தே' என்ற பாடம் 'அரசர்' என்ற பன்மையோடு மாறுபடுதலால், வழுவாம்.

(இ - ள்.) விண் அரசர் எல்லாரும் - மேலுலகத்து அரசர்களான (இந் திரன் முதலிய) தேவர்கள் யாவரும், வெள்கி - வெட்கப்பட்டு, மனம் களிக்க - மனம்வருந்தவும்,—கண் அகல் ஞாலம் - இடமகன்ற இப்பூமியி லுள்ள சனங்கள், களி கூர - மகிழ்ச்சி மிகவும்,—மண் அரசர் - பூலோகத்து அரசர்கள், தம் மனத்தே - தங்கள் மனத்திலே, மன் மாலை சூட - நிலை பெற்ற மயக்கத்தைக் கொள்ளவும்,—பொன் - இலக்குமிபோன்றவளான தமயந்தி, வயம் வேந்தை - வெற்றியையுடைய நளமகாராசனுக்கு, பொன் மாலை சூட்டினாள் - அழகிய மணமாலையைத் தோளில்இட்டாள்; (எ - று.)

'மண்ணரசர் மன்மாலை தம்மனத்தே சூட' என்றது - நளன் தன்தோ ளில் ஒருமாலைசூடியபொழுது மற்றையரசர்களும் தங்கள் அவயவமொன் றில் ஒரு மாலை சூடினார்கள் என்ற ஒருவகைப்பரிகாசந் தோன்றக் கவி சா துரியமாகக் கூறியது. மால் - மயக்கம்; ஐ - சாரியை. அரசர் மனமயக்கங் கொள்ளுதற்குக் காரணம், அவமானம். சக்கரவர்த்தியாயுள்ள நளனுக்கு உரிய மனைவி வாய்த்தமை கண்டு நிலவுலகத்தார்யாவரும் களிகூர்ந்தன ரென்க. ஞாலம் - இடவாகுபெயர்.

'வன்மாலை தம்மனத்தே சூட' என்று பாடம். கூர என்ற வினையெச் சத்தில், கூர் என்ற உரிச்சொல் - பகுதி. வேந்தை - உருபுமயக்கம். பொன் - உவமையாகுபெயர். (உo)

[நளன் தமயந்தியோடு சுயம்வர மண்டபத்தினின்று புறப்படுதல்.]

21.—' மழவிடைபோல்' என்று மூலத்தைத் திருத்துக.

(இ - ள்.) நல் மாலை - சிறந்த ஒழுக்கமுள்ள, வேலான் - வேலாயுதத் தையுடையவனான நளன்,—மல்லல் மறுகில் - வளப்பம்பொருந்திய வீதியில், மட நாகு - இளமையுள்ள பசு, உடன் ஆக - தன்னுடன் வர, செல்லும் - போகின்ற, மழ விடை போல் - இளமையுள்ள ருஷபம்போல, செம்மாந்து - களிப்படைந்து,—மெல் இயலாள் - மென்மைக்குணமுள்ள தமயந்தியினது,

பொன் மாலை - அழகிய மாலையை, பெற்ற - சூடிய, தோளோடும் - தோளு டனே, புறப்பட்டான் - வெளிச்செல்பவனாயினன்; (எ - று.)

காளையெருது பசுவுடனே இறுமாந்து தெருவிற்செல்லுதல்போல, தமயந்தியின் மணமாலையைப்பெற்று அதனால் தோன்றிய களிப்புடனே மற்றவர்கள் முன்னிலையில் மிக்க தலையெடுப்போடு நளன் புறப்பட்டன னென்பதாம்.

"மல்லல் வளனே" என்பது, தொல்காப்பியம். மழ - இளமைகுறிக் கும் உரிச்சொல். விடை=வ்ருஷம். செம்மாந்து, செம்மா - பகுதி: இதனடி யாக, செம்மாப்ப செம்மாப்பின் என மற்றைவினையெச்சங்கள் பிறக்கும். தோளோடு, 'ஓடு', உருபு - உடைமொழிப்பொருளது. (உக)

[தேவர்கள் மீண்டுசெல்லும்வழியிற் கலிபுருஷனைக் காணுதல்.]

22.—(இ - ள்.) வேலை பெறா அமுதம் - திருப்பாற்கடலிற் பெறமுடி யாததோர் அமிருதம் போன்றவளான, வீமன் திரு மடந்தை - வீமராச னது அழகிய மகளாகிய தமயந்தியினது, மாலை-மணமாலையை, பெறாது - தாம் பெறாமல், அகலும் - (தம்உலகத்தை நோக்கிச்) செல்லுகின்ற, வான் நாடர் - தேவர்கள்,—வேலை பொரும் - கரையை மோதுகின்ற, கலி நீர் - ஒலிக்கின்ற கடலின் நீரினாற் சூழப்பட்ட, ஞாலத்தை - பூமியிலுள்ளோரை, புல் நெறியில் ஆக்கும் - இழிவான வழியிற் செலுத்துகின்றவனான, இருங் கலியை-பெரிய கலிபுருஷனை, எதிர் கண்டார்-எதிரிற் கண்டார்கள்; (எ-று.)

தமயந்தியின் சுயம்வர மாலையைப் பெறாத வருத்தத்தோடு மீண்டு தம்முலகத்திற்குச் செல்லுகின்ற தேவர்கள் இடைவழியிற் கலிபுருஷனைக் கண்டார்களென்பதாம்.

வேலைபெறா வமுதம்-திருப்பாற்கடல் கடைந்தகாலத்து அதனினின்று தோன்றிய தேவாமிருதத்தினும் மேலானவ ளென்றபடி; அமுதம்போ லினிய இலக்குமி எனினுமாம். வேலை - வேலா என்ற வடசொல் திரிந் தது. ஞாலம் - இடவாகுபெயர். கலிக்குப் பெருமை, இழிவில்; பிறகுறிப்பு வகையால். தாழ்வுமாம்: அன்றி, இருங் கலி - கருநிறமுடைய கலிபுருஷ னென்றுமாம். கலி - கலியுகத்துக்குத் தலைவன், பாவத்துக்கு உரிய தெய் வம்: ஒழுக்கந்தவறுபவரை வருத்துபவன்; இவனைச் சனியினது அம்ச மென்பர். (உஉ)

[கலி தான் தமயந்தியின் சுயம்வரத்துக்குச் செல்லுதலைக் கூறுதல்.]

23.—(இ - ள்.) ஈங்கு வரவு என் என்று-'நீ இங்குவருவது என்ன காரணத்தால்?' என்று, இமையவர் தம் கோன் வினவ-தேவராசனான இந்திரன் வினவ,—தீங்கு தரு கலியும் - தீமையை விளைக்கின்றவனான கலிபுருஷ னும்,—'நீங்கள் விருப்பு ஆன வீமன் திருமடந்தையோடும் இருப்பான்-நீங் கள்விரும்பிய தமயந்தியை நான் மணஞ்செய்துகொண்டு அவளுடன்வாழ்தற் காக, யான் வருகின்றேன் - நான் வருகிறேன்', (என்று), செப்பினான் - சொன்னான்; (எ - று.)

நீங்கள் தமயந்தியை மணஞ்செய்ய விரும்பிச் சுயம்வரத்துக்குவந்தது போல, நானும் வருகின்றே னென்றான்.

இமையவர்தம், தம் - சாரியை. கலியும், உம்-இறந்ததுதழுவிய எச்சம். செப்பு - தெலுங்கினின்று வழங்கிய திசைசசொல். விருப்பு - விரும்புஎன்ற

முதனிலை திரிந்த தொழிற்பெயர். மடந்தையோடும், உம் - அசை. இருப்பான் -வினையெச்சம்; பான்-விகுதி; இதவே, எதிர்காலங் காட்டும். 'என்று' என்பது வருவிக்கப்பட்டது. நீங்கு-'கு'விகுதிபெற்ற பண்புப்பெயர். தருகலி- வினைத்தொகை. ஆன என்ற பெயரெச்சத்தில், 'இன்' என்ற இறந்தகாலவிடைநிலை முதல்தொக்கது 'இமையவர்தம்' என்பதே பாடம். (உ௩)

[தமயந்தி சுயம்வரத்தில் நளனுக்கு மாலைசூட்டியதாக இந்திரன் கலிபுருஷனுக்குக் கூறுதல்.]

24.—(இ - ள்.) (இவ்வாறுசொன்ன அக்கலியை நோக்கி), வெள்ளை தனி யானை வேந்து - ஒப்பற்ற (ஐராவதமென்னும்) வெள்ளையானையையுடையவனான இந்திரன்,—'மன்னவரில்-அரசர்களுள், வை வேல் நளனே-கூரிய வேலாயுதத்தையுடைய நளமகாராசனே, மதி வதனம் கன்னி - சந்திரன்போன்ற முகமுள்ள தமயந்தியினது, மணம் மாலை - சுயம்வரமாலையை, கைக்கொண்டான் - பெற்றான்: (ஆதலால்), உன்னுடைய—, உள்ளம் கருத்தை - மனத்தின் எண்ணத்தை, ஒழித்து - விட்டு, ஏகுதி - போ,' என்றான் - என்றுசொன்னான்; (எ - று.)

தமயந்தியின் சுயம்வரம் முற்றுப்பெற்று அதில் தேவர்கட்கும் இடையாமல் நளனே மாலைபெற்றானாதலால், இனி, நீ செல்வதிற் பயனில்லையென்று தேவேந்திரன் கூறினனென்பதாம்.

வை - கூர்மையைக் குறிக்கையில், உரிச்சொல். நளனே, ஏ-பிரிநிலை. வதநம் - வடசொல். ஏகுதி - ஏவலொருமைமுற்று; இ - விகுதி, த் - எழுத்துப்பேறு. (உ௪)

['நளனையும் தமயந்தியையும் வருத்துவேன்'என்று கலிபுருஷன் கூறுதல்.]

25.—(இ - ள்.) (அதுகேட்டுக் கலிபுருஷன்), கொதித்து - மனஸ்தாபமடைந்து, 'விண் அரசர் நிற்க-தேவலோகத்து அரசர்கள் வந்திருக்க,(அவர்களையும் பொருள்செய்யாமல்), வெறி தேன் மணம் மாலை - வாசனையையும் தேனையுமுடைய விவாகத்துக்கு உரிய மாலையை, மண் அரசற்கு ஈந்த-பூலோகத்துஅரசரில் ஒருவனுக்குச் சூட்டிய, மட மாதின் - மடமையுடைய தமயந்தியினது, எண்ணம் - இஷ்டத்தை, கெடுக்கின்றேன் - கெடுத்துவிடுகிறேன்; மற்று - மேலும், அவள் தன் கேள்வனுக்கும் - அவளுடைய கணவனுக்கும், கீழ்மை கொடுக்கின்றேன் - தாழ்வுவரும்படி செய்கிறேன்,' என்றான் - என்றுசொன்னான்; (எ - று.)—மற்று - வினைமாற்று.

தேவர்களையும் லக்ஷ்யஞ்செய்யாமல் தமயந்தி பூலோகத்தில் ஒரு மனிதனுக்கு மணமாலை சூட்டியதனால், அவள் விருப்பத்தின்படி அவனோடு இன்புற்றுவாழ முடியாதபடி அவளைச்செய்து 'இவளை என் மணந்தோம்' என்று பரிதவிக்கும்படி அம்மன்னவனுக்கும் கீழ்மையுண்டாகுமாறு செய்கின்றேனென்றனனென்க.

இங்கு 'மடமாது' என்றது, உயர்வுதாழ்வு அறியாதவளென்று இகழ்ந்தபடி. எண்ணம் - தொழிற்பெயர்; அம் - விகுதி. இங்கு, எண்ணம் - நளனுடன் கூடி வாழ்தல். கேள்வன் - கேண்மையையுடையவன்; கேண்மை - நண்பு: க்ஷேமங்கேட்குந் தன்மை; வ் - பெயரிடைநிலை. கெடுப்பேன், கொடுப்பேன் என்ற பொருள்களில், கெடுக்கின்றேன் கொடுக்கின்றேன என்றது, விரைவுபற்றிவந்த காலவழுவமைதி. அவள்தன், தன்-சாரியை. (உ௫)

[நளன் தமயந்தி இவர்களுடைய குணாதிசயங்களை இந்திரன் கலிக்குக்கூறிச் செல்லுதல்.]

26.—(இ - ள்.) அடும்-(பகைவரைக்) கொல்லுகின்ற, கொற்றம் - வெற்றியையுடைய, வச்சிரத்தான் - வச்சிராயுதத்தையுடையவனான இந்திரன்,— அவன் - அந்நளனுடைய, வாய்மையும் - சத்தியத்தையும், செம் கோல் வளனும் - நீதிதவறாத அரசாட்சியின் சிறப்பையும், மனத்தின்கண் தூய்மையும் - மனத்திலுள்ள பரிசுத்தியையும், தோள் வலியும் - புஜபலத்தையும், பூ மா - தாமரைப்பூவில் வசிக்கிற திருமகள்போன்ற தமயந்தியினது,நெடுங் கற்பும் - சிறந்த பதிவிரதாதருமத்தையும், ஆங்கு - அப்பொழுது, அவற்கு - அந்தக்கலிபுருஷனுக்கு, நின்று உரைத்து - (சிறிதுபொழுது) நின்று (விவரமாகச்) சொல்லி, (பின்பு), போனான் - (தனது உலகத்துக்குச்) சென்றான்; (எ - று.)—'மற்று' இரண்டும் - அசை.

உன்பிறக்கெல்லாம் அசத்தியம்முதலிய துர்க்குணமுடையோரிடத்துச் செல்லுமே யன்றிச் சத்தியம்முதலிய சற்குணங்களையேயுடைய அவர்களிடத்திற் செல்லாதென்று சொன்னானென்பது, கருத்து.

வளன் - வளம் என்பதன் போலி; "மகரவிறுதி" என்ற சூத்திரங் காண்க. மனத்தின்கண், இன் - சாரியை; கண் - ஏழனுருபு. மா - இலக்குமிக்குப் பெயராம்போது, வடசொல். கற்பு-கணவனையே தெய்வமாகக்கொண்டு அதற்குஏற்பஒழுகும் ஒழுக்கம். (உ௬)

[கலிபுருஷன் நளனையும் தமயந்தியையும் பிரிப்பேனென்றல்.]

27.—'செருக்கதிர்வேல்' என்று மூலத்தைத் திருத்துக.

(இ - ள்.) உடனே பிறந்த - (பிறக்கும்பொழுது) கூடவே தோன்றிய, விடம் - விஷத்தையுடைய, நாகம் - சர்ப்பத்தை, அன்னான் - போன்றவனாகிய கலி,—,—வெகுண்டு - கோபித்து,—'செரு - போர்செய்யவல்ல, கதிர் - ஒளியையுடைய, வேல் - வேலாயுதம்போன்ற, கண்ணியுடன் - கண்களையுடையவளான தமயந்தியோடு, தேர் வேந்தன் - ரதாதிபதியான நளமகாராஜன், கூட இருக்க - ஒன்றாக வாழ்ந்திருக்க, தரியேன்-மனம்பொறேன்; இவரை - இவர்களை, பிரிக்க - பிரிப்பதற்கு, உடன் ஆக - (என்னுடன்) கூட நீயும் (உதவியாக) இருக்கவேண்டும்', என்றான் - என்று (தேவேந்திரனை நோக்கிக்) கூறினான்; (எ - று.)

நளதமயந்தியரின் நற்குணங்களை இந்திரன் சொல்லக்கேட்ட கலிபுருஷன், பொறாமையால் மனங்கொதித்து, இப்படிப்பட்ட தம்பதிகளைச் சேர்ந்து வாழவொட்டாமற் செய்கின்றேன்; நீ அதற்கு உதவிபுரியவேண்டுமென்று தேவேந்திரனை நோக்கிக் கூறினானென்பதாம்.

உடனேபிறந்த விடநாக மன்னான் - பிறவியிலேயே கொடுமைவாய்ந்தவனென்றபடி. கூரியதாய் ஆடவர்நெஞ்சிற் பாய்ந்து அவரை வேதனைக்குஉள்ளாக்குவதனால், மகளிர்கண்ணுக்கு வேலாயுதம் உவமையாம். கண்ணி, இ - பெண்பாற்பெயர்விகுதி. நாகம் - (சந்தன) மரத்தில் வாழ்வது: மலையில் வாழ்வதுமாம். வெகுண்டு, வெகுள் - பகுதி. (உ௭)

[சூரியோதய வருணனை.]

28.—(இ - ள்.) வெம் கதிரோன் தானும் - வெப்பமான கிரணங்களையுடையவனாகிய சூரியனும்,—விதர்ப்பன் திருமடந்தை-விதர்ப்பதேசத்துக்கு

அரசனுன வீமராசனது சிறந்தமகளாகிய தமயந்தியினது, மங்கலம் நாள்-கலியாணம்நடக்கின்ற தினத்தை, காண - பார்த்தற்கு, வருவான்போல் - வருபவன்போல,—செங் குமுதம் வாய் அடங்க - செந்நிறமான ஆம்பல் மலர் குவியவும்,—மன்னற்கும் - நளமகாராஜனுக்கும், வஞ்சிக்கும் - நீர்வஞ்சிக்கொடிபோன்ற தமயந்திக்கும், நல் நெஞ்சில் - (எப்போதும்) நல்வழியிலேயே செல்லும் நெஞ்சிலே, தீ - விரகதாபமானது, அடங்க - அடங்கவும்,தேர் ஏறினன்-தேரின்மீது ஏறிப் புறப்பட்டான் [உதயமானுன்];(எ-று.)

சூரியன் உதயமாகும்போது, ஆம்பல் வாய்குவிதல், இயல்பு. நளனும் தமயந்தியும் இன்னும் பாணிக்கிரகணம் நடவாததால் எப்போது பொழுது விடியுமோவென்று சிந்தித்தவண்ணம்இராமுழுதும் பிரிவுத்துயரால் வருந்தியிருக்கையில், பாணிக்கிரகணதினம் வந்திட்டதனுல் பிரிவுத்துயராகிய தீ சூரியோதயத்தினுல் அடங்குவதாயிற்றென்க. மனக்களை வெதுப்புவதனுல், பிரிவுத்துயரைத் தீயாக உருவகஞ் செய்தனர். சூரியன் இயற்கையாக உதிப்பதற்குத் தமயந்தியின் திருமணத்திருவிழாத்தினத்தைக்காண உதித்ததாகக் காரணங்கற்பித்துக் கூறியதனுல், இச்செய்யுள் - ஏதுத்தற்குறிப்பேற்றவணி.

திருமடந்தை-இலக்குமிபோன்ற மடந்தை யெனினுமாம். வஞ்சி - ஒருவகைநீர்க்கொடி : மெல்லியதாய் ஒல்கி ஒசிந்து பணிந்த நிற்குந் தன்மையில், தமயந்திக்கு, இது உவமையாம். (உஅ)

[தமயந்தி மணவணி அணிதல்.]

29.—(இ - ள்.) (வண்ணமகளிர்),—'இள முறுவலே - (இந்தத்தமயந்தியினது) புன்சிரிப்புத்தானே, இன் உயிர்க்கு-(ஆடவரது) இனிமையான உயிரைக் கொள்வதற்கு, நேர் - ஏற்றதாகும்,' என்கின்ற -என்றுசொல்லுதற்கு ஏற்கின்ற, பொன - இலக்குமிபோன்ற தமயந்தியினது, அழகை—, புதைப்பார்போல் - மறைப்பவர்போல,—துடி சேர் இடையாளை - உடுக்கையையொத்த இடையையுடைய தமயந்திக்கு, மெல் மலரை - மெல்லிய புஷ்பங்களை, சூட்டினுர்-(மயிர்முடியில்)தரித்தார்; சூட்டி - அவ்வாறு (மலர்களைத்) தரிப்பித்து, மின் இமைக்கும் பூண்-ஒளிவீசுகின்ற ஆபரணங்களையும், பூட்டினுர் - அணிந்தார்; (எ - று.)

'வண்ணமகளிர்' என்ற எற்ற எழுவாய் வருவித்துஉரைக்கப்பட்டது. (அலங்காரஞ்செய்கின்ற மகளிரை வண்ணமகளி ரென்பர்.) 'தமயந்தியின் உறுப்பினின்று தோன்றுகின்ற இளமுறுவலே ஆடவருயிரைக்கொள்ளை கொள்ளவல்ல தென்ருல்,அவ்வுறுப்புக்கள்தாமேஆடவரதுகண்ணுக்குநேர் படின், ஆடவர் என்னபாடுபடுவரோ' என்ற கருத்தினுல், வண்ணமகளிர் தமயந்தியின் உறுப்புக்கள்முழுவதும் ஆடவரதுகண்ணிற் படாதிருக்கவேண்டி அவற்றை மலர்களாலும் அணிகலங்களாலும் அணிந்து மறைத்தனரென்பதாம். "யாரே அழகுக்கு அழகுசெய்வார்" என்றபடி இயற்கையிலே அழகுமிக்குள்ள தமயந்திக்கு வேறுஅணிகலமொன்றும் வேண்டா வென்க. மங்களத்தின்பொருட்டு வண்ணமகளிர்பூச்சூடிஅணிகலங்களையணிந்ததை, தமயந்தியினுறுப்பழகை மறைத்தற்காக அவ்வாறுசெய்தாரென வேறுகாரணங் கற்பித்துக்கூறியது - ஏதுத்தற்குறிப்பேற்றவணி. இதனுல், தமயந்தியின் பேரழகு தொனிக்கும். "அமிழ்மைத்துணைகள் கண்ணுக்கணியென வமைக்குமாபோல், உலுமிழ்சுடர்க்கலன்கள் நங்கையுருவினை மறைப்பதோரார், அமிழ்தினைச்சுவைசெய்தென்ன வழகினுக்கழகு செய்தார்,இமிழ்திரைப்பரவைஞாலமேழைமையுடைத்துமாதோ" என்ருர் கம்பரும்.

இளமுறுவல்என்பதை அன்மொழித்தொகையாகக்கொண்டு, புன்சிரிப்பையுடைய தமயந்தியொருத்தியே ஆடவர்யாவருயிரையும் கொள்ளைகொள்ளுதற்கு ஏற்றவள் எனப் பொருள்கூறுவாருமுளர். முறுவலே, ஏ - இழிவுசிறப்பு. பொன் - உவமையாகுபெயர். போல - தற்குறிப்பேற்றத்தின் உருபாகிய இடைச்சொல். மலரும் சூட்டினர், உம்மை எதிரதுதழுவியது. பூணும் பூட்டினர் என்ற இறந்ததுதழுவியஎச்சவும்மை விகாரத்தால் தொக்கது.()

[தமயந்திக்கும் நளனுக்கும் கலியாணம்.]

30.—'மற்றேவரொவ்வார்' என்று மூலத்தைத் திருத்துக.

(இ - ள்.) கணி மொழிந்த நாளில் - சோதிடசாஸ்திரி சொன்ன சுபதினத்தில், அணி மொழிக்கும்-அழகிய சொல்லையுடையவளான தமயந்திக்கும், அண்ணலவற்கும் - பெருமையையுடையவனான நளமகாராசனுக்கும், கடிமணமும் செய்தார் - (வீமன்முதலியோர்) சிறந்த கலியாணத்தைச் செய்தார்கள்; (பின்பு), மற்று எவர் ஒவ்வார் - (தங்களுக்குத் தாங்களே ஒப்பாவதல்லது)வேறுஎவரும் ஒப்புமையாகமாட்டாத சிறப்பையுடைய அவ்விருவரும்,—பணி மொழியார் குற்றேவல் செய்ய-வணக்கமான சொற்களையுடைய பரிசாரிகைப்பெண்கள் சிறியஏவல்தொழில்களைச் செய்ய, மகிழ்ந்து-மகிழ்ச்சிகொண்டு, கொழும் பொன் அறை புக்கார் - (தங்கட்குத் தங்குமிடமாக அமைக்கப்பட்ட) உயர்ந்தபொன்னினாலாகிய அறையை அடைந்தார்கள்.

கணி - கணிப்பவன்; கணித்தல் - கிரகசஞ்சாரத்தைக்கொண்டு காலத்தைக் கணக்கிடுதல். சுயம்வரஞ்செய்ததன்றி மணமுஞ்செய்தார் என, உம்-இறந்ததுதழுவியஎச்சமாம். அணிமொழி - பண்புத்தொகையன்மொழி. குறுமை + ஏவல்: குற்றேவல் : பண்புப்பெயர் ஈறுபோய்த் தன் ஒற்று இரட்டிற்று. அறை - வரையறுக்கப்பட்ட இடம். எவர்-'எ' என்னும் வினாவடியாப் பிறந்த பலர்பாற்பெயர்; அதன் ஈற்றில் உம்மைதொக்கது. அண்ணல-பெருந்தன்மை. (௩0)

# இரங்கேச வெண்பா.

இது - ஒவ்வொரு செய்யுளின் பின்னிரண்டடிகளிலும் ஒரு திருக்குறளையும், முன்னிரண்டடிகளில் அத்திருக்குறளின் நீதிக்குத் திருஷ்டாந்தமாக ஒவ்வொரு சரித்திரத்தையும், இரண்டாமடியில் மூன்றாஞ்சீராக 'இரங்கேசா' என்று திருவரங்கநாதனது பெயர் முன்னிலையையும் அமைத்துப் பாடப்பட்டதொரு நூல். இந்நூற்பாடலின் தொகை - திருக்குறளின் அதிகாரம் ஒவ்வொன்றிலிருந்தும் ஒவ்வொருபாடல்வீதம் எடுத்துக்கொண்டிருத்தலால், நூற்றுமுப்பத்துமூன்றாம்; இவற்றைத்தவிர இந்நூலின் முதலிற் பாயிரச்செய்யுள்கள் மூன்று உள்ளன. குறட்பாவின் நீதியைச் சரித்திர திருஷ்டாந்தங்கொண்டு விளக்குதல், இந்நூலின் கருத்து. ஆகவே, இது - நீதிநூலிற் சேர்ந்ததாம். (சோமேசர் முதுமொழி வெண்பா, சிவசிவ வெண்பா முதலாக இவ்வழியாற் பிறர்பாடிய நூல்களும் உண்டு.)

'இரங்கேச வெண்பா' என்ற நூற்பெயர் - இரங்கேசனது வெண்பாவென்று விரியும்; ஆறாம்வேற்றுமைத் தொகை. இரங்கேசனது திருநாமத்தின் சம்பந்தத்தையுடைய வெண்பாவென்பது, பொருள். இரங்கேசன் என்ற பெயர் - ரங்க ஈசன் என்று பிரிந்து, திருவரங்கத்துக்குத் தலைவனென்று பொருள்படும்; குணசந்திபெற்ற வடமொழித்தொடர். ரங்கமென்பது - திருமாலின் திவ்வியதேசங்கள் நூற்றெட்டனுள் தலைமைபூண்டதும், சோழநாட்டுத் திருப்பதிகள் நாற்பதில் முக்கியமானதும், கோயிலென்னும் மறுபெயருடையதும், 'பூலோகவைகுண்டம்' எனப்படும் மாட்சிமையுடையதுமாகிய தலம். ரங்கமென்ற விமானத்தின்பெயர் - திருப்பதிக்கு ஆனது, தானியாகுபெயர். திருமகளார்க்குத் திருநிருத்தஞ்செய்யுமிடமாக இருத்தலாலும், ஸ்ரீவைஷ்ணவர்களுடைய திருவுக்கு [மேன்மைக்கு] க்கூத்துப்பயிலிடமா யிருத்தலாலும், யாற்றிடைக்குறையாதலாலும், திருவரங்கமென்னும் பெயர் வந்ததெனினுமாம். இத்தலம் - சோழநாட்டில் உபயகாவேரியின் மத்தியிலுள்ளது. ரங்க என்னும் வடசொல் "ரவ்விற் கம்முதலாம் முக்குறிலும்" என்னும் விதிப்படி ரகரவொற்று இகரத்தைமுதலிற்பெற்று, மொழிக்குமுன் வந்தது. இரங்கேசன் + வெண்பா = இரங்கேச வெண்பா: "சிலவிகாரமா முயர்திணை." வெண்பா - வெண்பாக்களினாலாகிய நூலுக்குக் கருவியாகுபெயர். இரங்கேசனை விளித்துத் (திருக்குறள்களை யமைத்துப்பாடிய) வெண்பாக்களினாலாகிய நூலென்பது, சேர்ந்தபொருள். இந்நூலுக்கு 'மால் நீதி சூடாமணி' என்றும் ஒருபெயருண்டு; இதனை, "சொற்ற வதிகாரந்தோறு மொருகுறளி, லுற்றபொருளுக் குதாரணமா - முற்றுகதை, யால் நீலவண்ண ரடிபரவலா லிந்நூல், மால்நீதி சூடாமணி" என்னும் இந்நூற்சிறப்புப்பாயிரங்கொண்டு உணர்க. 'நீதிசூடாமணி' என்று வழங்குவாருமுளர்.

இந்நூற் செய்யுள்தோறும் திருமாலினது திருநாமத்தை ஆடூஉமுன்னிலையாகக் கூறியது - அக்கடவுளை இப்பிரபந்தத்துக்குத் தலைவனென்று காட்டுதற்பொருட்டு. மனிதர்க்கு அறிவுணர்த்தும் நீதிநூல்களிலுமுட்பட இறைவன்பெயரை யமைக்கிற இது, ஒருவகைக் கவிமரபு; திருவேங்கடசதகம், அறப்பளீசுரசதகம், கோவிந்த சதகம், தண்டலையார் சதகம், குமரேச சதகம் முதலியவற்றிலும் இங்ஙனம் கடவுள்முன்னிலை காண்க. சிலசெய்யுள்களில் அடைமொழிகள் அப்பெயர்க்கு அங்கமாக வந்தன.

இந்நூலின் அவையடக்கச் செய்யுளில், "பிறைசைவரு சாந்தப்பெயரவன்சொல் வெண்பா" என வருதலினால், இந்நூலைச்செய்தவர் பிறைசையென்னும் ஊரிற் பிறந்த சாந்தக்கவிராயரென்பது மாத்திரம் விளங்கும்.

(பிறையாறு என்பது பிறைசை யென மருஉவாயிற் றென்பர்.) இவர் மதம் - வைஷ்ணவமென்பது, காப்புச்செய்யுளில் திருமாலைத் துதித்துள்ளதனாலும், 'இரங்கேசா' என்று இந்நூற் செய்யுள் தோறும் திருமாலின் திருநாமத்தை இடையில் அமைத்துள்ளதனாலும் நன்கு விளங்குகின்றது. இவர் காலம், நூற்றிருபது வருஷங்கட்கு முந்தி யிருக்கலா மென்கின்றனர். இந்நூலாசிரியரது மற்றைச் சரித்திரவிவரம் விளங்கவில்லை.

இந்நூற்கு உரை யொன்று காணப்படுகிறது; அதைச் செய்தவர் இன்னாரென்று விளங்கவில்லை. சிலசரித்திரங்களின் விவரம் அதன் உதவியினாலே விளங்குகின்றது.

## ச - ஆம் அதிகாரம்.—அறன்வலி யுறுத்தல்.

அஃதாவது - முனிவர்களால் உணர்த்தப்பட்ட அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நான்குபுருஷார்த்தங்களுள், த்ரிவர்க்க மெனப்படுகிற அறம் பொருள் இன்பம் ஆகிய மூன்றில், அறம், மற்றைப் பொருளும் இன்பமும் போலன்றி இம்மை மறுமை வீடு என்னும் மூன்றிடத்தும் நற்பயன்விளைத்தலால், அப்பொருளின்பங்களினும் வலிமையுடைய தென்று கூறுதல். தருமத்தினது வலிமையை உறுத்திச்சொல்லுதல் என்பது, சொற்பொருள். இத்தொடர்மொழியிலுள்ள இரண்டுதொடர்களுள், முன்னது - ஆறாம்வேற்றுமைத்தொகையும், பின்னது - இரண்டாம் வேற்றுமைத் தொகையுமாம். அறத்தை வற்புறுத்திக் கூறுத லென்று கொண்டால், முந்தியதும் இரண்டாம் வேற்றுமைத்தொகையாம். அறன் - அறம் என்பதன் ஈற்றுப்போலி: [நன் - எழுத்து - கஉஎ.] (நூல்களினால், வரையறுக்கப்பட்டமைபற்றி) அறமென்று பெயர்: அறு - பகுதி, அம் - செயப்படுபொருள்விகுதி. (இதன் எதிர்மொழி - மறம்: அதருமம். (நூல்களால்) மறுக்கப்பட்டது என்பது அதன் காரணப் பொருள்.) உறுத்தல் - 'அல்' விகுதி பெற்ற தொழிற்பெயர்.

1.—(இ - ள்.) இரங்கேசா - ஸ்ரீரங்கநாதனே!— (இராமபிரான் தருமமார்க்கத்தில் தவறாது நடந்ததனால்), கானம் குரங்கு - காட்டில் திரிகின்ற(விலங்குகளாகிய) குரங்குகளின் உதவியைப்பெற்று, எழலால் - (தான் இராவணாதியரைவென்று) பெருமைப்படுதலாலும்,—(துரியோதனன்பலவகைஅக்கிரமகாரியங்களைச் செய்ததனால்), கங்கை சுதன் முதலோர் - கங்காநதியின்புத்திரனாகிய வீடுமன் முதலியோரது உதவியைப் பெற்றும், ஈனம் படலால் - (பாரதயுத்தத்தில் எல்லாவற்றையும்இழந்து) இழிவடைதலாலும், — (ஒருவனுக்கு), ஆன - பொருந்திய, அறத்தின் ஊங்கு - தருமஞ்செய்வதைக்காட்டிலும் மேற்பட்ட, ஆக்கமும் - செல்வத்தைத்தருவதும், இல்லை—; அதனை - அந்தத்தருமத்தை, மறத்தலின் ஊங்கு - (மயக்கத்தால்) மறத்தலைக்காட்டிலும் மேற்பட்ட, கேடு - தீமையைத்தருவதும், இல்லை—; (எ - று.)—இது, இவ்வதிகாரத்தின் இரண்டாவது குறள்.

இராமபிரான் தான் பிதிருவாக்கியபரிபாலனமாகிய தருமத்தை மேற்கொண்டு காட்டிற்குச்சென்று, அங்குச் சுக்கிரீவன்முதலிய வானரர்களுடைய நட்பைப்பெற்று, தன்மனைவியாகிய சீதாபிராட்டியைக் கவர்ந்துசென்ற இராவணனைப் பந்துமித்திரரோடு நிர்மூலமாக நாசஞ்செய்து வென்று புகழ்பெற்றமையும்;— துரியோதனன் தனது தாயாதிகளாகிய பாண்டவர்களது மேன்மையைக் கண்டு பொறாமைகொண்டு சூதுமார்க்கமாக அவர்களது இராச்சியத்தைக் கவர்ந்தும், அவர்களது பத்தினியாகிய திரௌபதியைத் தீண்டக்கூடாத காலத்தில் சபைநடுவே இழுத்துவரச்செய்து துகிலுரிந்து மானபங்கஞ்செய்தும், பாண்டவர்கள் வனவாச அஜ்ஞாதவாசங்கள்கழித்துவந்தபிறகும் முன்பு நடந்த ஏற்பாட்டின்படி அவர்களதுநாட்டைக் கொடாது வாக்குப்பிறழ்ந்தும்,

மூத்தோர்கள் சொல்லிய நன்மொழிகளைக் கேளாது உபேட்சித்தும் இவ்வாறு பலவகை அக்கிரமங்கள் செய்துவந்ததனால், வீடுமர்முதலிய பெருஞ்சூரர்கள் தனக்குத்துணையாகஇருந்தும் பாரதயுத்தத்தில் வெற்றிபெறாமல் குருநாடு முழுவதையும் பகைவர்கைக்கொள்ளத் தோல்வியுற்றுத் தன்னுயிரையுமிழந்து பூமியில் அபகீர்த்தியடைந்தமையும் பிரசித்தம். தருமத்தினால் மேன்மை யடைதற்கு - தருமவழியில் நடந்த இராமனது சரித்திரமும், அதருமத்தினால் கேடுஅடைதற்கு - அதருமவழியில் நடந்த துரியோதனனது சரித்திரமும் உதாரணமா மென்க. தருமவழியில் நடப்பவர்க்குச் சாதனங்கள் குறைவா யிருப்பினும் முழுப்பயன் கைகூடு மென்பதும், அதருமவழியில் நடப்ப வர்க்குச் சாதனங்கள் குறைவற்றிருப்பினும் பயன்கைகூடா தென்பதும் பெறப்படும். "யாந்திர்யாயப்ரவ்ருத்தஸ்ய திர்யஞ்சோபிஸஹாயதாம் - அபந் தாநந்துகச்சந்தம் ஸோதரோபிவிமுஞ்சதி" [நியாயவழியில்நடப்பவர்க்கு விலங் குகளும் உதவிபுரியும்; அநியாயவழியில் நடப்பானையோ உடன்பிறந்தாரும் கைவிடுவர்] என்னும் வடநூன்மேற்கோள் இங்குக் கருதத்தக்கது.

இனி, முன்னிரண்டடிகட்கு - காட்டில்திரியும் குரங்குகள் நியாயவழி யில் நடக்கின்ற இராமபிரானுக்குத் துணைசெய்தலால் மேன்மைப்பட்டன; மகாபராக்கிரமசாலிகளாகிய வீடுமன் முதலியோர் அநியாயவழியில் நடக் கின்ற துரியோதனனுக்குத் துணைசெய்ததனால் புகழின்றி யொழிந்தார்க ளென்று பொருள்பட உரைத்தலும் ஏற்கும். குரங்கென்றது - அநுமனைக் காட்டுமென்று கொள்வாரு முளர்: "வாதமாமகன் மர்க்கடம் விலங்கு மற் றோர்சாதி யென்றொழிந்திலை யுகந்து, காதலாதரங்கடலினும்பெருகச் செய் தகவினுக் கில்லை கைம்மாறென்று, கோதில்வாய்மையினாயொடு முடனே யுண்பனானென்ற வொண்பொருள்" என்ற திருமங்கைமன்னன்பாசுரம் இங்கு நினைக்கத்தக்கது. வீடுமன்முதலோர் என்றதனால் - துரியோதனனது பக்கத்தைச் சார்ந்திருந்த துரோணன் கிருபன் அசுவத்தாமன் முதலிய வீர ரைக் கொள்க. 'கானக்குரங்கெழலால்' என்பது - 'அறத்தினூங் காக்கமு மில்லை' என்பதையும், 'கங்கைசுதன்முதலோர் ஈனப்படலால்' என்பது - 'அதனைமறத்தலினூங்கில்லைகேடு' என்பதையும் தழுவியதனால், முறைநிரனி றைப்பொருள்கோளாம்.

கானம்=காநநம்: ஈனம்=ஹீநம்: கங்கைசுதன்=கங்காஸுதன்: வட சொற்களின் சிதைவுகள். குரங்கு - சாதியொருமை. குரங்கினால் எழலால்என விரியும். அறத்தின், இன்-ஐந்தனுருபு, எல்லைப்பொருளது. ஊங்கு - இடைச் சொல்;உங்கு என்பதன் நீட்டலெனலாம். அளபெடைகள் - இன்னிசைப் பொருளன. ஆக்கம், கேடு என்பன - அவற்றின்காரணத்திற்கு இலக்கணை கள். "பொருளல்லவரைப் பொருளாகச்செய்யும், பொருளல்ல தில்லை பொ ருள்" என்றபடி உலகத்துஉயிர்களை ஒருபொருளாக ஆக்குவதுபற்றி, செல் வத்திற்கு 'ஆக்கம்' என்று பெயர். ஆக்கு - பிறவினைப்பகுதி, அம் - வினை முதற்பொருள்விகுதி. இல்லை - ஐம்பால்மூவிடத்துக்கும் பொதுவான எதிர் மறைக்குறிப்புமுற்று. கேடு - முதனிலைதிரிந்த தொழிற்பெயர்.

வீடுமனை 'கங்கைசுதன்' என்றதன் விவரம்:—பீஷ்மன் - குரு குலத்திலே சந்தனுமகாராஜனுக்கு மூத்தமனைவியாகிய கங்காதேவியினிடம் பிறந்தவன். திருதராட்டிரன் பாண்டு இவர்கட்குத் தந்தையான விசித்திர வீரியனுக்குத் தமையனாதலால், இவன் கௌரவபாண்டவர்கட்குப் பெரிய பாட்டனாவன். இவன் அஷ்டவசுக்களுள் பிரபாசனென்னும் வசுவினது பிறப்பும், இவன்தந்தையான சந்தனு வருணதேவனுடைய அம்சமு மாவர். அவ்வரலாறு:—முன் ஒருகாலத்தில் தேவர்கள்யாவரும் கூடிய பிரமதேவ னது சபையிற் சென்று கங்காநதியின் பெண்தெய்வம் வணங்கியபொழுது,

அங்குவந்திருந்த வருணன், அவளழகை உற்றுநோக்கிக் காதல்கொண்டான்; கங்கையும், அவன்மீது காதல்கொண்டு எதிர்நோக்கினாள்; அதனையறிந்த நான்முகக்கடவுள், வருணனைப் பூமியில் மானுடப்பிறப்பெடுக்கவும், கங்கையை மானுடமகளாய் அவனைச் சிலநாள் மணந்திருக்கவுஞ் சபித்திட்டான்; அங்ஙனமே வருணன் குருகுலத்திற் சந்தனுவாய்ப் பிறந்தான்: கங்கையும் ஓர் மனிதமகளாகி 'யான் எந்தத் தீச்செயல் செயினும் மறுக்கலாகாது' என்னும் நிபந்தனையோடு அவனை மணஞ்செய்துகொண்டாள். இது நிற்க: பிரபாசனென்னும் வசு, தன்மனைவியின் சொல்லைக் கேட்டு, வசிட்டமுனிவனிடமுள்ள காமதேனுவைக் கொள்ளைகொள்ள எண்ணினான்; மற்றையேழு வசுக்களும் அவனுக்கு உதவிசெய்யவே, எண்மரும் இரவிற்சென்று பசுவைக் கவர்ந்தனர்; அதனையுணர்ந்த வசிட்டமகாமுனிவன் அஷ்டவசுக்களையும் மானுடசன்மமெடுக்கவும், அவர்களுள் மனைவிசொற்கேட்ட பிரதானனான பிரபாசனைப் பூமியிற் பலநாள்வாழ்ந்து பெண்ணின்பமற்றிருக்கவும் சாபங்கொடுத்தான்: எட்டுவசுக்களும் சந்தனுவுக்குக் கங்கையின்வயிற்றிற் பிறந்தனர். முதலிற்பிறந்த ஏழுகுழந்தைகளையும், பிறந்த அப்பொழுதே தாய் கங்காநதியில் எடுத்தெறிந்துவிட்டாள்; எட்டாயதாபிள்ளை பிறந்தவுடனே தந்தை 'அக்குழந்தையைக் கொல்லலாகாது' என்று மறுக்க, கங்கை கணவனைவிட்டு நீங்கினாள். அவ்வெட்டாவது மகனே வீடுமன் என அறிக. (௧)

## ௯ - ஆம் அதிகாரம்.—விருந்தோம்பல்.

அஃதாவது - பரிசயமுள்ளவராய்க் குறித்துவந்தவரும் பரிசயமின்மையாற் குறியாதுவந்தவருமாகிய இருவகைவிருந்தினரையும் உணவுமுதலியன அளித்துப் பாதுகாத்தல். விருந்து என்பது - புதுமை; அது, இங்கே, பண்பாகுபெயராய், புதியராய்வந்தார்மேல் நின்றது. விருந்தோம்பல் - இரண்டாம்வேற்றுமைத்தொகை. ஓம்பல் - 'அல்' விகுதிபெற்ற தொழிற்பெயர்.

2.—(இ - ள்.) இரங்கேசா—!—தேசு - புகழையுடைய, பெரு - பெருமைபெற்ற, மாறன் - இளையான்குடிமாறநாயனார், தெளித்த - (வயலில்)விதைத்த, முளை - நெல்முளைகளைக்கொணர்ந்து, அமுது இட்டு - (அதனை அரிசியாக்கிச் சமைத்து விருந்தினராய்வந்த சிவபிராமணர்க்கு) அமுதுபடைத்து, ஈசனுடன் - பரமசிவனுடனே, போந்தான் - நற்கதிபெற்றான்; (ஆதலால்), பேசுங்கால்-சொல்லுமிடத்து,—செல் விருந்து - (தன்னிடத்து) வந்த விருந்தை, ஓம்பி - (உணவு முதலியவற்றால்) உபசரித்து, வரு விருந்து - பின்னுமவரக்கடவ விருந்தை, பார்த்து - எதிர்பார்த்துக்கொண்டு, இருப்பான் - (தான் அவரோடுஉண்ண) இருப்பவன், (மறுபிறப்பில் தேவனாய்ப் பிறந்து), வானத்தவர்க்கு - வானுலகத்தவரான தேவர்கட்கு, நல் விருந்து - நல்ல விருந்தினனாவன்; (எ - று.)—இது, இவ்வதிகாரத்தின் ஆறாவது குறள்.

தம்வீட்டுக்கு வரும் விருந்தினரைத் தவறாதுஉபசரித்தவரான இளையான்குடிமாறனார் தமது விருந்தோம்புங் குணத்தால் சிவபிரானருளைப்பெற்று நற்கதியடைந்த இந்த உதாரணத்தால், விருந்தினரையுபசரிப்பவன் மறுமையில் தேவர்களாலும் கொண்டாடப்படுவானென்பது பெறப்படுமென்பதாம். 'இளையான்குடிமாறநாயனார் ஈசனுடன் போந்தார்' என்ற சிறப்புப்பொருளை 'விருந்தோம்புபவன் வானத்தவர்க்கு நல்விருந்து' என்ற பொதுப்பொருள் கொண்டு விளக்கியதனால், இது - வேற்றுப்பொருள்வைப்பணியின்பாற்படும்; இதனை வடநூலார் அர்த்தாந்தரந்யாஸாலங்கார மென்பர்.

தேசு - உலகத்து மிக்குத்தோன்றுதலுடைமை; தேஜஸ் என்னும் வடமொழியின் திரிபு. 'தேசுபெருமாறன்' என்ற பாடம், புகழ்பெற்ற மாறன் என்று பொருள்பட்டுச் சிறக்கும். அமுது - அம்ருதம் என்ற வடசொல்

லின் சிதைவு; அமுதம்போ லினிய உணவுக்கு, இலக்கணை. ஈசன் - எல்லாச் செல்வமுமுடையவன். 'உடன்' என்னும் உருபு 'ஆல்' என்ற உருபின் பொருளது. போந்தான் - புகுந்தான் என்பதன் மரூஉ: 'போ' என்பதே பகுதி யெனினுமாம். செல்விருந்து, வருவிருந்து என்பன - முறையே, இறந்தகாலமும் எதிர்காலமும் கரந்தும் வினைத்தொகைகள். நல்விருந்து - பெறுதற்குஅரிய விருந்து.

முன்னிரண்டடிகளிற் குறித்த வரலாறு:—இளையான்குடியென்ற ஊரில் வேளாளவருணத்திலே பிறந்த மாறனாரென்பவர் பெருஞ்செல்வத்தராய்ச் சிவனடியார்களிடத்துப் பேரன்புகொண்டு அவர்களைத் தமதுகிருகத்தில் வரம்பற்றுச் சகல உபசாரங்களுடனும் சிறந்த உணவுகளை அவர்கட்குத் திருவமுதுசெய்வித்தலாகிய மாகேசுவரபூசையைத் தவறாதுசெய்துவருங் காலத்தில், சிவபிரான் அவர்க்கு வறுமையை உண்டாக்க, செல்வஞ்சுருங்கவும் அவர் தமது சொத்துக்களை விற்றும் மிகுதியாகக் கடன்வாங்கியும் முன் போலவே தாஞ்செய்யுந் திருப்பணியை விடாதுசெய்துவந்தார். இல்லறத் திற்கு ஏற்ற நற்குண நற்செய்கைகளிற் சிறந்தவரான அவரதுமனைவியாரும் அதற்கு ஏற்பவே நடந்துவந்தனர். இங்ஙனமிருக்கையில், மழைக்காலத்தில் ஒருநாள் எவ்வகையாலும் பொருள்சிறிதுங்கிடையாமையாற் பகல்முழுவதும் போசனமின்றி மிகப்பசித்திருக்கையில், சிவபிரான் சைவவேடங்கொண்டு இரவில் எழுந்தருள, மாறனார் அவர்க்கு ஆசனமளித்து, அவரை உண்பித் தற்கு யாதொன்றுமில்லாமை பற்றி மனைவியாரோடு ஆலோசித்து அவள் சொல்லியபடி, அன்றைப்பகலில் வயலில் விதைக்கப்பட்டு ஈரத்தால் முன்னமே முளைகொண்டிருக்கின்ற நெற்களை வாரிக் கொணர்ந்துவந்து கொடுக்க, அத்தேவியார் மகிழ்ச்சியோடு அந்தநெல்முளையை வாங்கிக்கொண்டு 'விறகு இல்லையே' என்று சொல்லவும், மாறனார் பழுதுபட்டிருக்கிற தமது கிருகத்தின் மேற்கூரையிலுள்ள வரிச்சுக்களை அறுத்துவிழுத்த, வாழ்க்கைத் துணைவி நெல்முளையை ஈரம்போய்ப் பதமாம்படி வறுத்துப் பின்பு அரிசி யாக்கிச் சமையல்செய்யத் தொடங்கி 'இனிக் கறிக்கு யாதுசெய்வோம்?' என்ன, உடனே மாறனார் புறங்கடைத்தோட்டத்துக்குச் சென்று குழியினின் றும் மேற்படாத சிறுபயிர்களைக் கையினாலே தடவிப் பிடுங்கிக் கொண்டு வந்து கொடுக்க, துணைவி அவற்றைக்கொண்டு தமதுதிறமையால் வெவ்வேறு கறியமுதுகள் செய்து முடிக்க, மாறனார், நித்திரைசெய்பவர்போலக் காட்டிய அவ்விருந்தினரருகிற் சென்று அவரை அமுதுசெய்தற்கு அழைக்க, அவர் சோதிவடிவமாய்த்தோன்றிப் பரமசிவனும் பார்வதியுமாக இடபாரூடராய்த் தரிசனந்தந்து அந்த இளையான்குடிமாறநாயனார்க்கும் அவர்மனைவியார்க்கும் சிவபதம் அருளினரென்பதாம். இவர், சைவசமயத்து அறுபத்துமூன்று நாயன்மார்களில் ஒருவர். (உ)

## ௧௦ - ஆம் அதிகாரம்.—இனியவைகூறல்.

அஃதாவது - மனத்திலுள்ள மகிழ்ச்சியைத் தெரிவிப்பனவான இனிய சொற்களைச் சொல்லுதல். "இன்சொல்ஆல் ஈரமளைஇ ... " — 

வென்று - (பகைவரைச்) சயித்து, மா நிலம் ஆள - பெரிய நிலவுலகத்தை அரசாட்சிசெய்யுமாறு, இன் சொல்லால் - (தானகூறிவந்த) இனிய சொற்களினால், பெற்றான்—; (ஆதலால்), பயன் ஈன்று - (தனதுபொருளாற் பிறர்க்கு) நன்மையைக் கொடுத்து, பண்பின் தலைப்பிரியா - இனிமைக்குணத்தினின்று நீங்காத [இனிமையோடுகூடிய], சொல் - சொல்லானது,—(ஒருவனுக்கு), முன் சொல் - (நூல்களில்) முன்னாக [சிறப்பித்து] ச்சொல்லப்படுகிற, நயன் - நீதியை, ஈன்று - (இம்மையிலே) உண்டாக்கி, நன்றி - தருமத்தை, பயக்கும் - (மறுமையிற்) கொடுக்கும்; (எ - று.)—இது, இவ்வதிகாரத்தின் ஏழாவது குறள்.

இம்மையில் அநீதியையும் மறுமையில் பாவத்தையுந் தரக்கூடிய வன்சொற் சொல்லுதலைத் தவிர்த்துப் பொருட்சிறப்பையுடைய இன்சொல்லையே கூறினால், அது இம்மையில் நன்மையையும் மறுமையில் புண்ணியத்தையும் விளைக்கு மென்பதற்கு, தருமபுத்திரனது செய்தியைத் திருஷ்டாந்தமாகக் கூறினார். தருமபுத்திரன் எப்போதும் ஒருநிகராக யாவரிடத்தும் இன்சொல்லே கூறிவந்ததனால், அதன்பயனாக, தான் நாடிழந்து சிறுமையுற்றகாலத்திலும் ஸ்ரீக்ருஷ்ணபகவான் விராடன் துருபதன் முதலியோர் பலர் உதவிபுரிய இம்மையில் தான் போர்வென்று அரசுபெற்று ஆண்டதோடு மறுமையிலும் சுவர்க்கமடைந்ததும்;—இதற்கு மாறாக, துரியோதனன் கடுஞ்சொற் சொல்லிவந்ததனால், அதன்பயனாக, விதுரன் முதலிய அந்தரங்கமானவர்களும் பகைமையாய்விடப் போரில் தோற்று உடல் பொருளாவிகளையும் இழந்து பழிக்கு ஆளாயினமையும் இங்குக் கருதத்தக்கன. இச்செய்யுளில், இன்சொற் கூறுவோர்க்கு இம்மை மறுமை யென்னும் இரண்டிடங்களிலும் நற்பயன் கைகூடுமென்று கூறியவாறாயிற்று.

தருமத்தினின்று தவறினவர்கட்குத் தக்க தண்டனை செய்து தருமத்தைக் காத்தலால், யமனுக்குத் தருமனென்று பெயர்: 'தந்தையே மைந்தனாகிறான்' என்னும் நூல்வழக்குப்பற்றி, தருமபுத்திரனை 'தருமன்' என்றது: இனி, 'தருமபுத்திரன்' என்றதொடரின் 'நாமைகதேசே நாமக்ரஹணம்' எனினும் இழுக்காது. பாண்டுமகாராஜனுக்கு மனைவியுடன் சேரக்கூடாதென்று சாபம்நேரிட்டதனால் அவன் அநுமதிப்படி அவனது மூத்தமனைவியாகிய குந்தி தனக்கு இளமையில் துருவாசமுனிவர் உபதேசித்திருந்த மந்திரத்தின் மகிமையால் வந்த யமதருமராஜனால் யுதிஷ்டிரனென்னும் மறுபெயரையுடைய இந்தத்தருமனைப் பெற்றாள்.

வன்சமர் - வலியாரோடு செய்யும் சமர்; சமர் - ஸமரமென்ற வடசொல்லின் சிதைவு. நட்பு - பண்பாகுபெயரால், நண்பரைக் குறித்தது. வென்று, வெல் - பகுதி. ஆளப்பெற்றான் என இயையும். இனிமை + சொல் = இன்சொல்: பண்புப்பெயர் ஈறுபோய் இடை இகரமுங் கெட்டது. பெற்றான் - 'பெறு' என்னும் முதனிலை தன்னொற்றிரட்டி, இறந்தகாலங்காட்டிற்று. நயன் - நீதி; அதாவது - உலகத்தாரோடு ஒத்துவாழுந்தன்மை: 'நயம்' என்பதன் இறுதிப்போலி. நன்றி-பண்புப்பெயர்: ஆகுபெயராய் அறமென்றபொருளைத் தந்தது. தலைப்பிரியா, தலை - தமிழுபசர்க்கம். (எ)

## கக - ஆம் அதிகாரம்.— செய்ந்நன்றியறிதல்.

அதாவது - தனக்குப் பிறர்செய்த நன்மையை மறவாமல் மனத்திற் கொண்டிருத்தல். இது, வடமொழியில் 'க்ருதஜ்ஞதா' எனப்படும். இன்சொற் கூறி இல்லறம் வழுவாது நடத்துவார்க்குக் கொடியகுற்றமாவது செய்ந்நன்றி மறத்தலாதலால் அக்குற்றத்தைக் குறிக்கொண்டு ஒழிக்கவேண்டுமென்றற்கு, இது இனியவைகூறலின் பின் வைக்கப்பட்டது. செய்ந்நன்றி - இறந்தகால

வினைத்தொகை. நன்றி - பண்புப்பெயர்; நல் - பகுதி, றி - விகுதி, லகரம் னகரமானது - சந்திவிகாரம்.

4.— 'ஈடழித்தானன்றேவிரங்கேசா' என்று திருத்திப் படிக்க.

(இ - ள்.) இரங்கேசா—!—சிறை கருடன் - இறகுகளையுடையவனான கருடன், நாடி-தேடிவந்து, நாகம் கொடு கணையை - (இந்திரசித்து இலக்குமணன் மீதுபிரயோகித்த) கொடிய நாகாஸ்திரத்தை, ஈடு அழித்தான் அன்றே - வலிமையழியச்செய்தானல்லவோ? நாடுங்கால் - ஆராய்ந்துபார்க்குமிடத்து,— செய்யாமல்- (தனக்கு முன் ஓர்உதவி) செய்யாமலிருக்க, செய்த - (ஒருவன்பிறனுக்குச்) செய்த, உதவிக்கு - உபகாரத்திற்கு, வையகமும் - மண்ணுலகமும், வானகமும் - விண்ணுலகமும், (கைம்மாறாகக் கொடுத்தாலும்), ஆற்றல் - ஒத்தல், அரிது - அருமையாகும்; (எ-று.)— இது, இவ்வதிகாரத்தின் முதற்குறள்.

ஒருகாரணம் பற்றிச் செய்யப்படுகின்ற பிரதியுபகாரங்கள் ஒருகாரணமுமில்லாமற் செய்யப்பட்ட முதலுபகாரத்திற்கு ஈடாகாவென்பது, திருக்குறளின் கருத்து: ராமலக்ஷ்மணர் முன்னேருதவியுஞ் செய்யாதிருக்க, கருடன், தானாக வலியவந்து இந்திரசித்து பிரயோகித்த நாகாஸ்திரத்தை அவர்கட்கு நீக்கி உயிருதவிபுரிந்ததனால், அவனுக்கு அவர்களால் எற்றகைம்மாறு ஒன்றுஞ் செய்ய இயலாமல் இராமபிரான் முகமன் கூறி விடுத்தமையை, " அய்ய நீ யாரை எங்கள் அருந்தவப்பயத்தினன்வந், தெய்தினை யுயிரும்வாழ்வு மீந்தனையெம்மனோரற், கையுறை கோடற்கொத்த காட்சியையல்லை மீட்சி, செய்திறமிலையா லென்றான் தேவர்க்குந்தெரிக்கிலாதான்" என்ற கம்பராமாயணத்து நாகபாசப்படலச் செய்யுளாலறிக. மேலும், " ஆரிய னவனை நோக்கி யாருயிருதவி, யாதுங் காரியமில்லான் போனான் கருணையோர் கடன்மை யீதாற், பெரியலாளர்செய்கை யூதியம்பிடித்து மென்னார், மாரியைநோக்கிக் கைம்மாறு இயற்றுமோ வைய மென்றான்" என்று இராமபிரான் கருடனது செய்கையைப் பாராட்டிக்கூறுவதும் கருதத்தக்கது.

'ஸுபர்ணன்' என்ற பெயருண்டாகுமாறு இறகில் அழகையும் வேகத்தையும் உடையவனாதலால், 'சிறைக் கருடன்' என்றார். கருடனைக் கண்டமாத்திரத்தில் நாகங்கள் வலியொடுங்கி இறத்தல் இயல்பு. கருடன் - வடசொல்; இவன் திருமாலுக்கு வாகனமாயிருப்பவன்; (எப்பொழுதும் திருமாலினுடனிருந்து அப்பெருமானுக்கு அடிமை செய்தலால், இவனுக்குப் 'பெரியதிருவடி' என்றும், இராமாவதாரத்தில்மாத்திரம் அவ்வாறே உடனிருந்து உதவுதலால் அநுமானுக்கு, 'சிறியதிருவடி' என்றும் வைஷ்ணவ சம்பிரதாயத்தில் திருநாமம். நாகக்கொடுங்கணை - நாகாஸ்திரம். இராமலக்ஷ்மணர்களையும் வருத்தியதனால், 'கொடுங்கணை' என்றார். நாகம் - நகத்தில் வாழ்வது எனப் பொருள்படுங் காரணப் பெயர். நகம் - மரமும் மலையும். அன்றே - தேற்றம். அன்றே + இரங்கேசா = அன்றே விரங்கேசா: "இனையுயிர்வழி வவ்வும்" என்பது, நன்னூல். செய்யாமல் - எதிர்மறைத் தெரிநிலைவினையெச்சம். உதவி - தொழிற்பெயர்; இ - விகுதி. வையகம் - (பொருள்களை) வைக்கும் இடம் எனப் பூமிக்குக் காரணப்பெயர். அரிது - அருமையென்னும் பண்பினடியாப்பிறந்த ஒன்றன்பாற் குறிப்புமுற்று.

கருடன் நாகக்கணையை யழித்த வரலாறு:—பிதுர்வாக்ய பரிபாலனஞ் செய்யுமாறு இராமபிரான் தம்பியோடும் மனைவியோடும் தண்டகாரணியஞ் சென்று வசிக்கையில் சீதாபிராட்டியை இராவணன் வஞ்சனையாற் கவர்ந்து சென்று இலங்கையில் அசோகவனிகையிலே சிறைவைத்திட, இராமபிரான் சுக்கிரீவனுடன் நண்புபூண்டு, சீதாபிராட்டியின் செய்தியை யுணர்ந்து வானர சேனையுடனே கடல்கடந்து சென்று இலங்கையை முற்றுகைசெய்தபொழுது, வானரர்க்கும் அரக்கர்க்கும் தொந்தயுத்தம் நிகழ்கையில் சூரியன் அஸ்தம

க்க, அப்பொழுது அவ்விருதிறத்தார்க்கும் கொடிய இராப்போர் நிகழ, அதில் இந்திரசித்து அங்கதனால் தனது தேர் முதலியவற்றையிழந்து தோற்று மாயையினால் ஆகாயத்தே மறைந்து நின்று ராமலக்ஷ்மணர்மீது நாகாஸ்திரத்தைப் பிரயோகிக்க, அவர்கள் உடனே மூர்ச்சித்துக் கீழேவிழுந்தார்களாக, அது கண்டு சுக்கிரீவன் முதலிய யாவரும் கலங்குகையில், நாகபாசத்தாற் கட்டுப்பட்டிருப்பினும் இராமபிரான் யிக்கதைரியமும் தேகபலமு முடையவனாதலின் கண்விழித்தவனாய்ப் பக்கத்தில் வீழ்ந்துள்ள இலக்குமணனது நிலைமையைக் கண்டு பலபடி சோகிக்க, அச்சமயத்திற் கருடபகவான் அங்குத் தோன்றவே இராமலட்சுமணர்களைக் கட்டியிருந்த நாகங்கள் சின்னபின்னப்பட்டொழிய, அப்பால் அந்தக்கருடன் ராமலக்ஷ்மணர்களைக் கண்டு மகிழ்ந்து தனதுகைகளினால் தழுவியமாத்திரத்தில் அம்புகளாலுண்டான விரணங்களெல்லாம் நீங்கி முன்னையினும் அவர்கட்குத் தேககாந்தி பலம் முதலியவை இருமடங்காக, அப்பொழுது இராமபிரான் அக்கருடனிடத்து அன்புபாராட்டி முகமன்கூறி விடையீந்தனனென்பதாம். (ச)

## ௧௨ - ஆம் அதிகாரம்.—நடுவுநிலைமை.

அஃதாவது - பகைவர் அயலார் நண்பர் என்னும் மூவகையோரிடத்தும் தருமத்தில் தவறாமல் சமமாகநிற்குந் தன்மை: பட்சபாதமில்லாமை யென்றபடி. தனக்கு நன்றியைச்செய்தவரிடத்து அன்புபாராட்டவேண்டுவது கடமையாயினும், அவரிடத்தும் பட்சபாதமாக ஒழுகுதல் கூடாது என்பதை விளக்குதற்பொருட்டு, இது, செய்ந்நன்றியறிதலின்பின் வைக்கப்பட்டதென்க. நடுவு, உ - சாரியை. நிலைமை - பண்புப்பெயர்.

5.—'வேதவிதி' என்று திருத்திப் படிக்க.

(இ - ள்.) இரங்கேசா—!—(தருமபுத்திரன் தனது தம்பியாகிய வீமசேனனை நோக்கி), வேத விதி - வேதமுறைப்படி தவறாது நடக்கிற, வீமா - வீமசேனனே! விலங்கிற்கு - புருஷமிருகத்திற்கு, உடல் பாதி - (உனது) உடம்பிற் பாதிபாகத்தை, ஈதல் - கொடுத்திடுதல், வழக்கு - நியாயமாம்', என்றான் - என்று தீர்ப்புக்கூறினான்; (இது தக்கதேயாம்); ஓதும் கால் - சொல்லுமிடத்து, நன்றே தரினும் - (தீங்கில்லாமல்) நன்மையையே பயந்ததாயினும், நடுவு இகந்து ஆம் ஆக்கத்தை - நடுவுநிலைமையொழிதலால் உண்டாகின்ற செல்வத்தை, அன்றே - அப்பொழுதே, ஒழியவிடல் - (தன்னை விட்டு) நீங்கும்படி விட்டுவிடுக; (எ - று.)—இது, இவ்வதிகாரத்தின் மூன்றாவது குறள்.

நடுவுநிலைமையை விட்டதனால் வருஞ் செல்வமானது நன்மைதருவதேயில்லை; அப்பொழுது நன்மைதருவதுபோலத் தோன்றினும் பின்பு அநுபவத்தில் தீமையே தரும்; ஆதலால், விரும்பலாகாது என்பது - திருக்குறளின் கருத்து. தருமபுத்திரன் நியாயத்திற்குவிரோதமாகத் தம்பியென்று பட்சபாதங்கொண்டு புருஷமிருகத்திற்கு உரியதல்லவென்று தீர்ப்புச்செய்தால் தம்பிபிழைத்தலாகிய அநுகூலம் நேர்வதுபோலத் தோன்றினாலும், வாய்மைதவறிய பெரும்பாவம் தோன்றிக் கடவுளின்கருணைக்கு இலக்காகவொட்டாமல் விலக்கிப் பெருந்தீங்கை விளைக்கு மாதலின், அதற்குஅஞ்சி நடுவுநிலைமைதவறாது ஒழுகினனென்க. முன்னிரண்டடிகளிற்கூறிய சிறப்புப்பொருள் பின்னிரண்டடிகளிற்கூறும் பொதுப்பொருளைச் சாதித்துநிற்றலால், வேற்றுப்பொருள்வைப்பணியாம்.

வேதம் - (விதிவிலக்குக்களால் நன்மைதீமைகளை) அறிவிப்பதெனப் பொருள்படும். வேதவிதி - வடசொற்றொடர். வீமன் = பீமன்: பீமசேனன் என்ற பெயர் நாமைகதேசநாமக்ரஹணத்தால், வீமனென்று வந்தது:

இனி, பகைவர்க்குப் பயங்கரனானவனென்ற காரணம்பற்றி, பீமனென்றே இவனுக்குப் பெயருண்டென்று கொள்ளுதலும் ஒன்று. விலங்கு - குறுக்காக உடல்அமையப்பெற்றதெனக் காரணப்பொருள்படும்; 'திர்யக்' என்ற வடமொழிப்பெயரும் இப்பொருளதே. பாதி - பகுதி யென்பதன் மரூஉ. நன்றேதரினும் என்ற உம்மை - நன்மையைத்தராமையைத் தெரிவித்ததனால், எதிர்மறைப்பொருளாம்: உயர்வுசிறப்புமாம். காரணப்பொருளதாகிய 'இகக்க' என்னுஞ் செயவெனெச்சம், 'இகந்து' என இறந்தகாலவினையெச்சமாகத் திரிந்தது: தன்கருத்தாவின் வினையைக் கொண்டுமுடிதற்கு ஏற்ற 'இகந்து' என்னுஞ் செய்தெனெச்சம் 'ஆம்' என்னும் வேறுகருத்தாவின் வினையைக் கொண்டுமுடிந்ததனால் அதனை வேறுகருத்தாவின் வினையையுங் கொண்டு முடிதற்கு ஏற்ற செயவெனெச்சத்தின் திரிபாகக் கொள்ளவேண்டியதாயிற்று; [நன் - வினை - உரு, உஎ.] ஆம் - 'ஆகும்' என்னும் செய்யுமெனச்சத்து ஈற்றுஉயிர்மெய் சென்றது; [நன் - வினை - உஉ.] 'ஒழிய' என்னும் செயவெனெச்சம் - காரியப்பொருளதாதலால், எதிர்காலம். விடல் - 'அல்' விகுதிபெற்றுவந்த உடன்பாட்டுவியங்கோள்.

இச்செய்யுளிற் குறித்த வரலாறு வருமாறு:—புருஷமிருகமென்பது - முகத்தில் மனிதவடிவமும், உடம்பில் மிருகவடிவமுங் கொண்டதொரு விலங்கு; இது, தான் உலாவும் இடங்களையெல்லாம் தன்மேற் பட்ட காற்று வீசியமாத்திரத்தாற் பரிசுத்தமாக்குந் தெய்வத்தன்மை வாய்ந்தது; தன்முன்னிலையில் எதிர்ப்பட்டவரைக் கொல்லாதுவிடாது. தருமபுத்திரர் அசுவமேத யாகஞ் செய்கின்றபொழுது லக்ஷக்கணக்கான பிராமணர்கள் போஜனஞ்செய்கிற இடங்களையெல்லாம் உடனுக்குடனே பரிசுத்தமாக்கவேண்டிப் புருஷமிருகத்தை அழைத்துவரும்பொருட்டுக் கண்ணபிரான்கட்டளைப்படி புறப்பட்ட வீமசேனன், வடதிசையிலே நெடுந்தூரஞ்சென்று இமயமலையில் கதலிவனத்தில் அநுமானைக்கண்டு செய்திகூறி 'புருஷமிருகத்தை அத்திநாபுரிக்கு நான் அழைத்துச்செல்லும் உபாயம் கூறியருளவேண்டும்' என்று வேண்டினன். அதற்கு அவ்வநுமான் 'அது உன்னைக் கண்டவளவிலே கொல்லுதற்கு ஓடிவரும்; நீ அதன்முன்னே ஓடிச்செல்லவேண்டும்; அது உன்னைத் துரத்திக்கொண்டே வரும்: அப்பொழுது நீ அதன்கைக்கு அகப்படாது முற்பட்டுக் குறித்த இடஞ் சேர்வையாயின் உயிர்தப்புவாய். அங்ஙனம் ஓடத்திறமில்லாது அதன்கைப்படுவையாயின், அது உன்னைக் கொல்லுதல் தவறாது; நீ ஓடித்தப்பமுடியாதபடி எங்கெங்கு அது உன்னை நெருங்குகின்றதோ, அங்கங்கு இந்த என் மயிர் ஒவ்வொன்றைக் கீழே எறிவையாயின், அங்கு ஒரு சிவலிங்கம் உண்டாகும்; அதனை, சிவலிங்கத்தைக் கண்டால் பூசிக்குந் தன்வழக்கப்படி அம்மிருகம் பூசித்துவருதற்குள் நீ நெடுந்தூரஞ் செல்லலாம்' என்று சொல்லி, தனது மயிர்களுள் எழு கொடுக்க, அவற்றைப் பெற்றவீமன் நிர்மாநுஷமான வனத்திற் சென்று அதனைக்கண்டு அதன்முன்னே நின்றவளவில், புருஷமிருகம் துரத்திக்கொண்டுவர, வெகுவேகமாய்ஓடி அநுமான் சொன்னபடியெல்லாம் செய்து முன் வந்து அத்திநாபுரி சேர்ந்து யாகசாலையின் உள்ளே ஒருகால் வைத்து நுழையுமளவில், வெளியே நின்ற காலைப் புருஷமிருகம் பிடித்துக்கொள்ள, வீமன் 'உரிய இடத்திற் சேர்ந்துவிட்டபின்பு என்னை நீ பிடித்தல் தகுதியன்று' என்று வாதிக்கவே, அவ்விலங்கு 'உனது ஒருகால் வெளியே நின்றதனால், நான் பிடித்தல் தகுதியே: எனக்கு நீ உரியவனாகின்றாய்' என்று எதிர்வாதங் கூறியதனால், இருவரும் மாறுபட்டுத் தம் தம்வழக்கைத் தருமபுத்திரரிடத்தில் எடுத்துச்சொல்ல, தருமநெறிதவறாதஅத் தருமராசர் சிறிதும் நீதிநெறிதப்பாமல் 'வீமனுடலிற் பாதி அம்மிருகத்துக்கு உரியதே' என்று வரையறுத்துக்கூறினர். தமதுதம்பி யென்ற காரணத்தால்,

வீமனிடத்துச் சிறிதேனும் பக்ஷபாதமாகக் கூறாத அந்தத்தருமபுத்திரருடைய நடுவுநிலைமையைக் கண்ட அத்தெய்வவிலங்கு அதற்கு மிகவுஞ்சந்தோஷித்து அதற்குஈடாக வீமனுடம்பின் பகுதியை விட்டிட்டது என்பதாம். (ரு)

## கஙு - ஆம் அதிகாரம்.—அடக்கமுடைமை.

அஃதாவது - மனோ வாக் காய மென்னும் திரிகரணங்களும் தீநெறிக் கட்செல்லாது அடங்குதலுடையனாதல். அடக்கம் - தொழிற்பெயர்; அடங்கு-பகுதி. உடைமை - பண்புப்பெயர். அடக்கமுடைமை நடுவுநிலைமையை யுடையவனுக்கே உரியதொரு குண மாதலால், அடக்கமுடைமையென்னும் அதிகாரம் நடுவுநிலைமையென்னும் அதிகாரத்தின்பின் வைக்கப்பட்டதென்க.

6.—(இ - ள்.) இரங்கேசா—!—ஆன்ற சபையில் - பெரியோர்கள்கூடி யிருக்கின்ற சபையில், அடங்கா சிசுபாலன் - அடங்குதலில்லாத சிசுபால னென்பவன், என்று - (கண்ணபிரானை) எதிர்த்து, இறந்தான் அன்றோ - உயிரிழந்தானல்லவோ; உயிர்க்கு - மனிதருயிர்கட்கு, அதனின் ஊங்கு - அந்தஅடக்கத்தினும் மேம்பட்ட, ஆக்கம் - செல்வமானது, இல்லை—; (ஆதலால்), சான்றோர்கள் - அறிவால்நிரம்பிய பெரியோர்கள், அடக்கத்தை—, பொருள் ஆ - உறுதிப்பொருளாகக் கொண்டு, காக்க - (தம்மிடத்தில் அழியாதபடி) பாதுகாக்கக்கடவர்; (எ - று.)—இது, இவ்வதிகாரத்தின் இரண்டாவது குறள்.

அடக்கமென்பது மிகச்சிறந்தசெல்வ மாதலால், அதனை உறுதிப்பொருளாக எண்ணிப் பாதுகாக்கவேண்டியது, அறிவுடையார் கடமை; அதனைப் பாதுகாவாவிடின், பெருந்தீங்கு விளையும்; இவ்விஷயத்தில் சிசுபாலன் பெரியோர்கூடியசபையில் தான் அடங்கியிராமல் கண்ணபிரானை யெதிர்த்ததனால் உயிரிழந்த வரலாறு உதாரணமா மென்க.

செல்வம்போல இம்மை மறுமை யென்னும் இரண்டிடத்தும் நன்மை தருதல்பற்றி, அடக்கத்தை 'ஆக்கம்' என்றார். அடக்கத்தாலுண்டாகும் நன்மையை யறிந்து அதனால் தான் அடங்கிச் சுவர்க்கமாகிய நல்லபயனைப் பெறுவதற்கு உரியது மனிதருயிரே யாதலால், இங்கு, உயிரென்பதற்கு - மனிதருயிரெனப் பொருள்கொள்ளப்பட்டது. சபைக்குப் பெருமையாவது - அறிவொழுக்கங்களாற் சிறந்த பெரியோர்கள் நிரம்பியிருத்தல்.

ஆன்ற - சான்ற என்பதன் மரூஉ. சபை - ஸபா என்ற வடசொல்லின் சிதைவு. என்று - 'எல்' என்னும் பகுதியினடியாப்பிறந்த இறந்தகாலவினையெச்சம். உயிர்என்பது - சாதியொருமை: அதாவது-ஒருசொல்தானே பன்மைப்பொருளை யுணர்த்துவது: இதனை வடநூலார் 'ஜாத்யேகவசநம்' என்பர்.

சிசுபாலன் - வசுதேவனது உடன்பிறந்தவளும் அதனாற் கண்ணனுக்கு அத்தையும் சேதிதேசத்தரசனான தமகோஷனுக்குப் பத்தினியுமாகிய சுருதசிரவையென்பவளுடைய மகன். திருமாலின் துவாரபாலகராகிய ஜயவிஜயர்கள், ஒரு சமயத்தில் விஷ்ணுலோகத்தினுட் செல்லவந்த ஸநகாதியோகிகளைத் தடுத்தமைபற்றி அவர்கள் வெகுண்டுகூறிய சாபமொழியால் மூன்று பிறப்புத் திருமாலுக்குப் பகைவராய்ப் பூமியிற் சனித்து அத்திருமாலின் கையா லிறப்பவராகி, முதலில் இரணிய இரணியாக்ஷராகவும் அதன்பின் இராவண கும்பகர்ணராகவும் அப்பால் சிசுபால தந்தவக்கிரராகவுந் தோன்றின ரென அறிக. இச்சிசுபாலன், பிறந்தபொழுது, நான்குகைகளையும் மூன்றுகண்களையு முடையனா யிருந்தான்; அப்பொழுது அனைவரும் இது என்னென்று வியக்கும்போது, ஆகாயவாணி 'யார் இவனைத் தொடுகையில் இவனது கைகளிரண்டும் மூன்றாம்விழியும் மறையுமோ, அவனால் இவனுக்கு மரணம்' என்று கூறிற்று; அவ்வாறே பலரும் தொடுகையில் கைகளும் கண்

னும் மறைபடாதிருந்து கண்ணபிரான் தோட்டவளவிலே மறைபட்டன; அதனால் 'இவனைக்கொல்பவன் கண்ணனே' என்று அறிந்த இவன் தாய் 'யாதுசெய்யினும் என்மகனைக் கொல்லலாகாது' என்று கண்ணனைவேண்ட, அந்த அத்தையின் நன்மொழிக்கு ஒருசார் இணங்கிய கண்ணன் 'இவன் எனக்கு நூறுபிழைசெய்யுமளவும் இவன் பிழையை நான் பொறுப்பேன்' என்று கூறியருளினன்: பின்பு, சிசுபாலன், தனக்குக் கண்ணன் சத்துரு வென்பதை இளமையிலேயே அறிந்து அதனாலும் முந்தியசன்மங்களின்தொடர்ச்சியாலும் வளர்ந்த மிக்கபகைமையைப் பாராட்டி, எப்பொழுதும் அப்பெருமானுடைய திவ்வியகுணங்களையும் திவ்வியச்செயல்களையும் பலவாறு நிந்திப்பதே தொழிலாக இருந்தான்; அப்பொழுதெல்லாம், கண்ணன் அவன் தாய்க்குத் தான் தந்த வரத்தின்படி இவன் குற்றத்தைப் பொறுத்தருளினன். இவனுக்கு மணஞ்செய்துகொடுப்பதென்று நிச்சயிக்கப்பட்டிருந்த ருக்மிணியைக் கண்ணன் வலியக்கவர்ந்து மணஞ்செய்துகொண்டது முதல் இவன் கண்ணனிடத்து மிக்கவைரங்கொண்டனன்; பின்பு இந்திரப்பிரத்தநகரத்தில் நடந்த ராஜசூயயாகத்தில் தருமபுத்திரனாற் கண்ணபிரானுக்கு முதற்பூஜைசெய்யப்பட்டதைக் கண்டு சிசுபாலன் மிக்க பொறாமையும் கோபமுங் கொண்டு அச்சபையிற் கண்ணனை ஆயிரக்கணக்காக வைததனால், அப்பெருமான் எதிர்மொழிஞ்சொல்லாது சக்கராயுதத்தைப்பிரயோகிக்க, அது இவன் தலையைத் துணித்தவளவிலே, இவனுடலினின்று ஒரு ஜ்யோதிஸ் எழுந்து கண்ணபிரானது திருவடியை யடைந்த தென்பது, இங்கு அறியவேண்டிய கதை. ("பூபாலரவையத்து முற்பூசைபெறுவார் புறங்கானில்வாழ், கோபாலரோ வென்றுருத்தங்கதிர்த்துக் கொதித்தோதினன்" என்று தொடங்கி, சிசுபாலன் அளவிறந்த வசைச்சொற்களைப் பிதற்றியமையைப் பதின்மூன்று செய்யுள்களால் விவரித்த வில்லிபுத்தூரார், அதற்கு எதிராகக் கண்ணபிரான் யாதொரு தூஷணைச்சொல்லையுஞ் சொல்லாமையை "திண்ணியநெஞ்சினனை சிசுபாலன் தன்னெஞ்சில் தீங்குதோன்ற, எண்ணிய மன்பேரவையினியம்பிய புன்சொற்களெல்லாம் எண்ணியெண்ணிப், புண்ணியர்வந்தினிதிறைஞ்சும்பூங்கழலோன் வேறொன்றும்புகலானாகிப், பண்ணிய தன்புரவி நெடும்பருமணித்தேர்மேற்கொண்டான் பரிதிபோல்வான்" என்று எடுத்துக்காட்டியமை காண்க. "என்று பற்பல வெவ்வுரையிகற்சிசுபாலன், நின்றுரைதனன் நெடியவன்பேசலனிருந்தான்" என்றார் ஸ்ரீபாகவதத்தும்.)

## கச - ஆம் அதிகாரம்.—ஒழுக்கமுடைமை.

அஃதாவது - பிராமணர் முதலிய சாதியார் தம்தமக்கு விதிக்கப்பட்ட பிரமசரியம் முதலிய நிலைகளினின்று அந்தந்தவருணத்திற்கும் ஆச்சிரமத்திற்கும் உரியவையென்று நூல்களிற் கூறிய தருமங்களில் தவறாமல நடத்தலையுடையவராதல். ஒழுக்கம் - தொழிற்பெயர்; ஒழுகு - பகுதி, அம் - விகுதி, ககரவொற்று - விரித்தல்விகாரம். இது, தருமத்தின வகை மூன்றனுள் முதலாவது (மற்றவை - வழக்கும், தண்டமுமாம்.) ஒழுக்கத்தை வடநூலார் 'ஆசாரம்' என்பர். இது - சிறப்புப்பற்றி, இங்கு நல்லொழுக்கத்தின்மேல்நின்றது. "அறிவின்மை யின்மையு ளின்மை" என்ற திருக்குறளில், பரிமேலழகர் 'அறிவென்பது - ஈண்டு, தலைமைபற்றி, நல்லறிவின் மேல் நின்றது' என்றது காண்க.

7.—(இ-ள்.) எடு அவிழ் தார் சூடும் - இதழ்கள் விரியப்பெற்ற மலர் மாலையை யணிந்த, இரங்கேசா—!—வேடர் வான்மீகர் - (முன்னம்)வேடசாதியிற்சேர்ந்தவரென்று நினைக்கப்பட்ட வான்மீகிமுனிவர், பின்பு - (ஞானோபதேசம் பெற்ற) பிறகு, வேதியரின் மேல் ஆனார் - அந்தணர்களினும் சிறந்த

வராய்விட்டார்; நாடில் - ஆராயுமிடத்து,—(எல்லார்க்கும்), ஒழுக்கம் உடைமை - (தம்தமது வருணாச்சிரமங்கட்கு ஏற்ற) ஒழுக்கத்தையுடைத்தாயிருத்தல், குடிமை - உயர்ந்த குலமுடைமையாகும்; இழுக்கம் - (அவ்வொழுக்கத்தில்) தவறுதல், இழிந்த பிறப்பு ஆய்விடும் - தாழ்ந்தகுலமாய்விடும்; (எ-று.)—இது, இவ்வதிகாரத்தின் மூன்றாவது குறள்.

உயர்ந்தசாதியினரும் நல்லொழுக்கமில்லாராயின் தாழ்வடைவரென்பதும், இழிந்தசாதியினரும் உயர்ந்த ஒழுக்கமுடையாராயின் உயர்வடைவரென்பதும் இதில் ஒருங்கு கூறப்பட்டன. உடம்போடு ஒழியுஞ் சாதியுயர்ச்சியினும் உயிரோடு செல்லும் ஒழுக்கவுயர்ச்சி சிறப்புடையதென்பதாம். ஒழுக்கமில்லாதாரது சாதியுயர்ச்சியால் பயனின்மையும், ஒழுக்கமுடையாரது இழிபிறப்பால் குறைவின்மையும் இதில் விளங்கின. ஒழுக்கமுண்டானபோது உண்டாகுங் குணத்தைக்காட்டிலும், ஒழுக்கமில்லாதபோது உண்டாகுங் குற்றம் அதிகமானது; ஒழுக்கமிருந்தால் சாதி மேலாம்; ஒழுக்கங்கெட்டாற் சாதி கீழாம் எனக் காண்க. முதலில் வான்மீகிமுனிவர் பிராமணவருணத்தவராயிருந்தும் மிகவும் இழிதொழில் செய்துவந்தபோது வேடனென்றே அவமதிக்கப்பட்டுப் பின்பு தவஞ்செய்து நல்லொழுக்கத்தாற் சிறப்புப்பெற்றபோது சிறந்த முனிவராகக் கருதப்பட்டமை காண்க.

காட்டில் அலைந்துதிரியும் மிருகபட்சிகளைப் பிடித்து வருத்துந் தொழிலுக்கு 'வேடு' என்று பெயர்; அத்தொழிலையுடையவன் வேடன். வேதியரின், இன்-ஐந்தனுருபு, எல்லை. குலனுடைமையும் தாழ்ந்தவருணமுமாகிய பிரயோசனங்கள் காலதாமதமில்லாமல் உடனே யுண்டாவதனால், குடிமைக்கும் இழிந்த பிறப்பிற்குங் காரணமாகிய ஒழுக்கமுடைமையும் இழுக்கமுமாகிய தொழில்களே தாமே குடிமையும் இழிந்தபிறப்புமாகச் சொல்லப்பட்டன; உபசாரவழக்குகள். ஏடு - பூவினிதழ்கள். இழுக்கம் - தொழிற்பெயர்; இழுக்கு - பகுதி. முதலடி - முற்றுமோனை.

வான்மீகர் = வால்மீக: வடமொழித் தத்திதாந்த நாமம். இப்பெயர், புற்றினின்று பிறந்தவரென்று பொருள்படும்; வல்மீகம் - புற்று. இவர் முதலில் பிருகுவம்சத்தவரான ருக்ஷருக்குப் புத்திரராய்த் தோன்றி, தக்கபருவம்வந்த பின்பு ஒருகுறப்பெண்ணைக் காமுற்று அவளைக்கூடி மக்களைப்பெற்று மகிழ்ந்து அக்குடும்ப ஸம்ரக்ஷணத்தின்பொருட்டு வழிபறித்து ஜீவனஞ்செய்துவருகையில், இவர் அவ்வழியேசென்ற ஸப்தரிஷிகளின் பொருள்களையெல்லாம் அடித்துக்கவர்ந்து ஓரிடத்தில் வைக்க, அவர்கள் 'இப்பொருள்களை இங்கேயே வைத்துப்போய் உன்பெண்டுபிள்ளைகளைக் கண்டு நான் உங்களைப் பாதுகாத்தற்காகச் செய்யும் பாவத்திற் பங்கு உங்களுக்கு உண்டா?' என்று கேட்டுவா: பின்பு, இப்பொருள்களை எடுத்துக்கொண்டுபோகலாம்' என்று சொல்ல, இவரும் போய் அங்ஙனமே கேட்க, அவர்கள் 'ஓம்கா! இத்தனை பைத்தியம்!! பாவத்திலும் பங்குக்கு வருவாருண்டோ?' என்ன, அதுகேட்ட இவர் திடுக்கிட்டுச் சென்று அவ்விருடியரைச் சரணம்புகவே, அவர்கள் கருணைகூர்ந்து தமது திவ்வியஞானத்தினால் இவரது ஜந்மகர்மங்களையுணர்ந்து ராமமந்திரத்தைத் தலைகீழாக 'மரா' என்று இவருக்கு உபதேசித்துச் செல்ல, இவரும் வெகுகாலஞ் சலியாமல் தூணேபோல நின்று தவஞ்செய்ய இவர்மேற் புற்று மூடிக்கொண்டது; அது ஒருகாலத்தில் மழைபெய்து கரைய, அதனினின்று இவர் வெளிப்பட்டமைபற்றி வான்மீகியெனப் பெயர்பெற்றனர். (இவரை வருணகுமாரனென்பதும் இதுபற்றியே.) இவர் பின்பு பிரமதேவனது அநுக்கிரகத்தாலும் நாரதமுனிவனது உபதேசத்தாலும் ஆதிகாவியமாகிய ராமாயணத்தைச் செய்து பெரும்புகழ் பெற்ற வரலாறு பிரசித்தம். (எ)

## கசு - ஆம் அதிகாரம்.—பொறையுடைமை.

அஃதாவது - காரணம்பற்றியாவது அறியாமையாலாவது ஒருவன் தமக்குக் குற்றஞ்செய்தபோது தாமும் அதனை அவனிடத்துச் செய்யாது பொறுத்தலை யுடையவராதல். பொறை - 'பொறு' என்னும் பகுதியினடியாப் பிறந்த 'ஐ' விகுதிபெற்ற தொழிற்பெயர்.

8.—'மரந்தறித்த' என்றும், 'எந்தைபிரான்' என்றும் மூலத்தைத் திருத்துக.

(இ - ள்.) இரங்கேசா—!—முந்து - வீட்டின்வாயிலி லிருக்கின்ற, மரம் - ஒரு மாமரத்தை, தறித்த - வெட்டிய, மூர்க்கன் - ஒருதுஷ்டனுடைய, சொல் - (அவன் 'உனக்குமுழுாளன் நான்' என்று தனது தாயைநோக்கிக் கூறிய) வார்த்தையை, கேட்டும் - கேட்டபின்பும், அவன் - அந்த (மாமரத்திற்கு உரிய) சேரமாண்டாரும், எந்தை பிரான் - 'எனது தந்தையாகிய பிரபுவாவன் (இவன்)', என்றான் - என்றுகூறினன்; (ஆதலால்), கொந்தி - (ஆயுதங்களினால்) கொத்தி, அகழ்வாரை - (தன்னைத்) தோண்டுகின்றவர்களை, தாங்கும் - வீழாமற் சுமக்கின்ற, நிலம் போல - பூமியைப் போல, தம்மை இகழ்வார் - தமமை அவமதிப்பவரை, பொறுத்தல் - (தாமும் எதிரே அவமதியாது அவரைப்) பொறுத்திருத்தல், தலை - மேலான தருமமாம்; (எ - று.)— இது - இவ்வதிகாரத்தின் முதற்குறள்.

தன்னைத் தோண்டுகிறவனுக்கும் பூமியானது நிற்பதற்கு இடங்கொடுப்பதுபோல, தன்னை யிகழ்ந்தாலும் ஒருவன் அவ்விகழ்வாரையும் பொறுக்கின்ற சாந்தகுணம் குணங்களெல்லாவற்றினுஞ் சிறந்ததென்பது, திருக்குறளின் கருத்து; இவ்வாறு பொறுமைபெற்றிருந்தமைக்கு, தமதுமாமரத்தை வெட்டி அதனோடுநில்லாமல் கடுமையாகவும்பேசியவனைப் பொறுத்த சேரமாண்டாரது வரலாறு ஏற்ற உதாரணமாம்.

மூர்க்கன் - மரத்தை வெட்டிய தீக்குணமுடையோன். 'அவன்' என்றது, சேரமாண்டாரை: நெஞ்சறிசுட்டு. இகழுதல் - குற்றமானவற்றைச் செய்தலும் சொல்லுதலும். 'அகழ்வாரைத் தாங்கும் நிலம்போல' என்ற உவமையால், தம்மைக்கொலைசெய்வதையொத்த குற்றங்களைச் செய்பவர்களையும் பொறுத்துப் பாதுகாத்தல் வேண்டுமென அறிக. எல்லாவற்றையும் பொறுத்தலில் பூமி மிகச்சிறந்ததாதலை, 'ஸர்வம்ஸஹா' என்னும் அதன்வடமொழிப்பெயராலும் உணர்க. "க்ஷமயாப்ருதிவீஸம:" என ஸ்ரீ வால்மீகி பகவான் அருளிச்செய்திருத்தலுங் காண்க. திருக்குறளில் வந்த உவமையணி, இச்செய்யுளிலுள்ள வேறுபடுபொருள்வைப்பணிக்கு அங்கமாய் வந்தது.

"மலை நிலம் பூவே துலாக்கோல் வென்றின்ன, குலைவிலுணர்வுடையோர்," "நிலத்தினியல்பே நினைக்குங்கால், பொறையுடைமையொடு செய்பாங்கமைந்தபின், விளைதல்வண்மையும் போய்ச்சார்ந்தோரை, யிடுதலுமெடுத்தலு மின்னண மாக, இயையக்கூடிய வியல்புணர்ந்தோரே," "தெரிவரும் பெருமையுந் திண்மையும் பொறையும், பருவமுயற்சி யளவிற்பயத்தலும், மருவியநன்னில மாணபாகுமே" என்பவையும் உணரத்தக்கவை. 'பொறுத்தாரொன்று இகழ்வாரில்லை; அதனைத் தலைமையாகக்கொள்வார் உலகத்தார்' என்பது, இத்திருக்குறளின் மணக்குடியருரைவாக்கியம்.

அகழ்வார், இகழ்வார் - வினையாலணையும்பெயர்கள். நிலம் - சலியாமல் நிற்பதெனக் காரணக்குறி. 'இகழ்வார்ப்பொறுத்தல்' என்றதில், உயர்திணையிடத்து ஐயுருபு தொகாதவிடத்து இரட்டிற்று; "இயல்பின் விகாரம்." தலை - தலைமையான அறத்திற்குப் பண்பாகுபெயர்.

ஒருகாலத்திற் சேரமாண்டாரென்ற ஒருவர் மிக்கபொறுமையுடைமையாற் பிரசித்தராயிருக்கையில், சோழராஜாவின்சபையில் சிலர் அச்சேரமாண்டாருடைய பொறுமையைப்பற்றி வியந்து கூற, அதனைப் பொறாத ஒருவன் எழுந்து, 'நான் அச்சேரமாண்டார்க்குக் கோபமூட்டுகின்றேன்' என்று பிரதிஜ்ஞைசெய்து போய், சேரமாண்டாரதுவீட்டுவாயிலிலே நெடுநாளாக வளர்ந்துநிற்பதொரு மாமரத்தை வெட்ட, அதனைக்கண்ட சேரமாண்டாரதுதாய் 'மரத்தை வெட்டுகிறவன் யார்?' என்ன, அதற்கு அவன் 'உனக்கு *மூழாளன்' என்ன, அதனைத் தாய்மூலமாகக் கேட்டறிந்த சேரமாண்டார் மரத்திற்கு உரியவன் அவனே யென்று கருதிக் கோபங்கொள்ளாமல் மரம்வெட்டுகிறவனைக் கௌரவிக்க, அதனைக்கண்ட மரம்வெட்டி சேரமாண்டாரது பொறுமைக்கு வியந்து அவரதுதாளில் விழுந்து அபராதக்ஷாமணஞ்செய்துகொண்டு செல்ல, அதனைக்கண்ட சோழராஜனது மனிதர் அரசனுக்குத் தெரிவிக்க, அச்சபையில் யாவரும் சேரமாண்டாரது பொறுமையை அதிசயித்துக்கொண்டாடினாரென்பதாம். (அ)

## கஎ - ஆம் அதிகாரம்.—அழுக்காறுமை.

அஃதாவது - அயலார்க்கு உண்டாகும் நன்மைகளைக் கண்டு மனம் பொறாதிருத்தல. 'அழுக்காறு' என்பது - ஒருசொல். இதனை, அழுக்கு ஆறு என இரண்டுசொல்லாகக் கொள்ளாமல் 'அழுக்கறு' என்னும் முதனிலை திரிந்த தொழிற் பெயராகவாயினும், பண்புப்பெயராகவாயினும் கொள்ள வேண்டும். (அழுக்கு அறு என்னும் இரண்டுசொற்கள் சேர்ந்து ஒருசொல் தன்மைப்பட்டு, எதிர்மறையிலக்கணையால், குற்றத்தை நீக்கு என்னும் பொருளைத் தராமல் 'குற்றத்தையுடையவனாகு' எனப் பொருள் பட்டுப் பொறாமையைக் குறித்த தென்பர்.) அழுக்கறாமை யென்றிருப்பது, நலம்.

9.—(இ-ள்.) இரங்கேசா—!—வெள்ளி - (அசுரகுருவாகிய) சுக்கிராசாரியன், கொடுத்தல் - (மகாபலிசக்கரவர்த்தி வாமனனாகிவந்த விஷ்ணுமூர்த்திக்குத்) தாரைவார்த்துக்கொடுத்ததை, விலக்கி - ('கொடுக்கவேண்டா' என்று) தடுத்து, விழி தோற்று-(அதன்பயனாகத் தனது) ஒற்றைக்கண்ணை யிழந்து, உலகில் - நிலவுலகத்தில், எள்ளல்-இகழ்ச்சியை, உற்றான் அன்றே - அடைந்தானல்லவோ? ஒன்னார் வழுக்கியும் - பகைவர்களை ஒழிந்தும் [பகைவரில்லாமலிருந்தாலும்], (அழுக்காறு உடையவராதல்), கேடு ஈன்பது - கெடுதியைத் தருவதொரு துர்க்குணமாகும்; (ஆதலால்), உள்ளத்து - (தமது) மனத்தில், அழுக்காறு உடையார்க்கு - அந்தப்பொறாமையை யுடையவர்க்கு, அது சாலும்-(பகைவர் வேண்டா, கேடுதருதற்கு) அவ்வழுக்காறுஒன்றே போதும்; (எ-று.)—இது, இவ்வதிகாரத்தின் ஐந்தாவது குறள்.

பொறாமைகுணமென்பது ஒருவனிடத்து உண்டாயின், அவனுக்கு அத்தீக்குணம் பகைவரால் நேரக்கூடிய தீமையினும் மிக்கதீமையைவிளைக்கு மெனபது திருக்குறளின் கருத்து. இதற்கு - வாமனனாகிவந்த ஸ்ரீ மகாவிஷ்ணுவுக்கு மகாபலிசக்கரவர்த்தி மூவடி மண் தாரைவார்த்துக்கொடுக்க, அதனைப்பொறாததனால் விலக்கத்தொடங்கிய சுக்கிராசாரியன் தனது ஒற்றைக் கண்ணை யிழந்த வரலாறறை உதாரணமாகக் கூறினரென்க. (ஒற்றைக்கண் கெட்டவர்களை 'சுக்கிராசாரியன' என உலகத்தில் ஏளனஞ்செய்வது பற்றி, 'உலகில் எள்ளலுற்றான்' என்றார்போலும்.) வெள்ளி - வெண்மை நிறமுடையவன் எனக் காரணப்பெயர். விலக்கி - விலங்கி அல்லது விலகி என்பதன்

* இந்தக்கதைத், இந்நூலுக்குஉள்ள பழையவுரையாலன்றி வேறுவகையால் விளங்கவில்லை. இக்கதையில், மரம்வெட்டி, கணவன் என்ற பொருளில், 'மூழாளன்' என்று கூறியதாகத் தோன்றுகின்றது.

பிறவினை. தோற்று, தோல் - பகுதி. ஒன்னார் - ஒன்றார் என்பதன் மரூஉ; எதிர்மறை வினையாலணையும் பெயர்; சேராதவரென்று பொருள்; எனவே, பகைவராயிற்று. வழுக்கியும், உம்மை - உயர்வு சிறப்பு. 'கேடு' - கெடு என்னும் முதனிலை திரிந்த தொழிற் பெயர். ஈன்பது - 'ஈன்' என்ற முதனிலையின் எதிர்கால வினையாலணையும் பெயர்; தொழிற் பெயராக்கி, ஈன்பதற்கு அதுசாலும் எனினுமாம்.

**வெள்ளி விழிதோற்ற கதை:**—திருமால் வாமனவடிவங்கொண்டு மாவலியினிடஞ் சென்று மூவடிமண் வேண்டியபோது அவ்வசுரன் அங்ஙனமே கொடுக்கிறேனென்று வாக்குத்தத்தஞ் செய்கையில் அருகுநின்ற அசுரகுருவாகிய சுக்கிராசாரியன் 'உன்னை வஞ்சனையால் அழிக்கும்பொருட்டுத் திருமால் தானே இங்ஙனம் வந்துள்ளானாதலின், அவனுக்குக் கொடாதே' என்று சொல்லி ஈவதை விலக்க, அதுகேளாமல் மகாபலி 'என்னிடம் ஒன்றையிரப்பவன் புருஷோத்தமனாயின், அவனுக்கு நான் அதனைக்கொடுத்துப் புகழ்பெறாது விடுவேனோ?' என்று கூறித் தாரைவார்த்துத் தத்தஞ்செய்யும்பொழுது அவ்வசுரராஜனிடத்து மிக்க அன்பையுடைய சுக்கிரன் சிறுவடிவங்கொண்டு அம்மாவலியின் கைக்குண்டிகையின் துவாரத்திலே சென்று அடைத்து நீர் விழவொட்டாது செய்ய, அப்பொழுது வாமனன் அங்ஙனம் அடைத்துக்கொண்ட பொருளை அகற்றுவான்போலத் தனது திருக்கையிற் பவித்திரமாகத்தரித்திருந்த தருப்பைப்புல்லின் நுனியால் அந்தச் சலபாத்திரத்தின் துவாரத்தைக் குடையவே, அதுபட்டுச் சுக்கிரனது கண்ணொன்று சிதைந்ததென்பதாம். "மிக்கபெரும்புகழ்மாவலிவேள்வியில், சக்கிதன்று என்று தானம்விலக்கிய, சுக்கிரன் கண்ணைத் துரும்பாற் கிளறிய, சக்கரக்கையன்" என்றார் பெரியாரும். (கூ)

## கஅ - ஆம் அதிகாரம்.—வெஃகாமை.

அஃதாவது - பிறர்க்குஉரிய பொருளை விரும்பிக் கவரக் கருதாதிருத்தல். பிறருடையபொருளைக் கண்டபோது பொறாமைகொள்ளுதலேயன்றி, அதனைத் தான் கவரக்கருதுதலும் குற்றமென்றற்கு, இஃது, அழுக்காறாமையின்பின் வைக்கப்பட்டது. வெஃகாமை - எதிர்மறைத்தொழிற்பெயர். வெஃகு - பகுதி. வெஃகுதல் - ஆசைப்பெருக்கம்.

10.—(இ - ள்.) இரங்கேசா—!—நடு இன்றி - (அயலார்க்குஉரியபொருள்களைக் கைக்கொள்ளுதல் நமக்குத்தருமமன்று என்னும்) நடுவுநிலைமையில்லாமல், நல் பொருள் - (அவரது) நல்லபொருளை, வெஃகின் - (ஒருவன்) விரும்புவானாயின், (அவ்வாறு விரும்புதல்), குடி பொன்றி - அவனது குடியைக் கெடச்செய்து, குற்றமும் - பலவகைக் குற்றங்களையும், ஆங்கே-விரும்பிய அப்பொழுதே, தரும் - (அவனுக்குக்) கொடுக்கும்; (இவ்வாறிருக்கவும், இராவணன்),—முன்னோனை - தன் தமையனாகிய குபேரனை, போரில் - யுத்தத்திலே, முடுக்கி - விரைந்துபொருது வலியடக்கி, விமானத்தை - (அவனது புஷ்பகமென்னும் பெயர்பெற்ற) விமானத்தை, கைக்கொண்டான் - வலியக் கைப்பற்றிக்கொண்டான்; என்னோ-இது என்ன அநியாயமோ? அன்னோ-ஐயோ! (எ - று.)—இது, இவ்வதிகாரத்தின் முதற்குறள்.

அயலாரதுபொருளைக் கவரவேண்டுமென்று விரும்பினால், அந்நினைப்புக்கொண்ட மாத்திரத்தில் அவ்விருப்பமும் அவனதுவம்சத்தைக் கெடுத்துப் பலவகைத்துன்பங்களையுங் கொடுக்கும் என்பது, திருக்குறளின் கருத்து. இவ்வாறு நீதிமொழியிருக்கவும், இராவணன், 'தந்தையோடொப்பான் தமையன்' என்றபடி தந்தைபோலப் பாராட்டவேண்டிய தன் தமையனாகிய குபேரனது சிறப்பைக் கண்டு பொறாது, அதனோடுமில்லாமல் அவனோடு எதிர்த்துப்

போருஞ்செய்து வென்று அவனது புஷ்பகவிமானம் முதலியவற்றையும் அநியாயமாகக் கவர்ந்தானன்றோ! அவ்வாறு தமையனது பொருளைக் கண்டு பொறாது கவர்ந்த குற்றத்தின் பயனை அவ்விராவணன் வமிசத்தோடு நாச மாகித் தீராப்பழியையும் பூண்டனனென்பதாம். இங்கு, பிறர்பொருளைக் கண்டு கவரவிரும்பினாலும் குடிபொன்றிக் குற்றம்பலவும் நேர்வதாயிருக்க, தனது அண்ணன் பொருளையே கண்டு பொறாது கவரவுங்கவர்ந்த இராவண னுக்கு எவ்வளவுதீங்குதான் நேரவேண்டுமோ என்று கைமுதிகந்யாயந்தோன் றக் கூறியதனால், இச்செய்யுளில் தொடர்நிலைச்செய்யுட்பொருட்பேறணி தொனிக்குமெனலாம். நடு - பட்சபாதமாக [ஒருபாற்கோடாமல்] நடுவாக நிற்கும் நிலை. நன்பொருள் - தருமவழியாற்சம்பாதிக்கப்பட்டதாய், குடியை வளரச்செய்து பலநன்மையும்பயக்கும் இயல்புள்ளதான பொருள்.

முன்னோன் - முன்பிறந்தவன்; தமையன். (எதிர்மொழி - பின்னோன்.) போர் - முதனிலைதிரிந்த தொழிற்பெயர். முடுக்குதல் - விரைந்து பொருதல். கைக்கொண்டான், கை - தமிழுபசர்க்கம். என்றே - இரக்கக்குறிப்பிடைச் சொல். பொன்றி - பொன்றுவித்து: பிறவினைப்பொருளில்வந்த தன்வினை; வடநூலார் இதனை 'அந்தர்ப்பாவிதணிச்' என்பர். இங்கே, 'பொன்றுவித்து' என்பது பிறவினைப்பொருளுணர்த்தும் விவ்விகுதி தொக்கு, பொன்றியென் நின்றது, என்றார் தொல்காப்பியச்சூத்திரவிருத்திகாரர். குற்றமும், உம்மை- இறந்ததுதழுவியது.

பிரமபுத்திரரான புலஸ்தியருடைய குமாரராகிய விசிரவஸு என்பவர்க் குப் பாரத்வாஜமுனிபுத்திரியினிடம் தோன்றிய புதல்வன், பெருந்தவஞ் செய்து பிரமனருளால் இந்திரன் யமன் வருணன் என்பவரோடு சமனான லோகபாலகனும் வடதிசையையாள்பவனும் செல்வத்துக்குத்தலைவனுமாகிக் குபேரனென்று பிரசித்திபெற்றான். அவனுக்குப் புஷ்பகமென்ற விமானம் பிரமனிடத்திலிருந்து வரமாகக் கிடைத்தது. இவ்விமானம் தன்மேலேறியவர் நினைத்தவிடத்தில் அவர்நினைத்தபடி செல்லவல்லது; எத்தனைபேர் ஒருங்கு ஏறினாலும் அத்தனைபேர்க்கும் தான் வளர்ந்து இடங்கொடுப்பது. குபேரன் தனது தந்தையின் அநுமதிப்படி இலங்காபுரியிற்குடிபுகுந்து வசித்திருந்தான். பின் ஒருகாலத்தில், சுமாலியென்னும் இராக்கதன், புஷ்பகமேறி மிக்கவிப வத்தோடு ஆகாயமார்க்கமாய்த் தந்தையினிடஞ் செல்லுகிற குபேரனது சிறப் பைத் தன்மகளான கேகசிக்குக் காட்டி 'இப்படிப்பட்டவனைப் பெற்ற விசிர வமுனிவரை நீயுஞ் சேர்ந்து நன்மக்களைப் பெறுவாய்' என்று தூண்ட, அங்ங னமே அவள் மாலைப்பொழுதில் அம்முனிவரிடஞ் சென்று தன்கருத்தைக் குறிப்பித்துப் பிரார்த்திக்க, அவர் அவளை அங்கீகரித்து, 'நீ அசுரவேளையில் வந்ததனால், கொடியபிள்ளைகள் உன்னிடம் உண்டாவர்' என்று அருளிச் செய்ய, அதுகேட்ட அவள் மீண்டும் வெகுவாகவேண்ட, அவர் 'கடைசியி லுதிப்பவன் நன்மகனாவான்' என்று அநுக்கிரகித்தனர். அவ்வாறே அவளிடம் இராவணன் கும்பகர்ணன் சூர்ப்பணகை விபீஷணன் என்பவர் முறையே தோன்றினர். இவர்கள் வளர்ந்துவருகையில், ஒருநாள் குபேரன் விபவப் பெருக்கந்தோன்ற விமானமேறிப் பிதாவைத்தரிசித்தற்கு வரக் கண்டு, கேகசி இராவணனைநோக்கி 'மகனே! நின் அண்ணனது பெருமை எங்ஙனம் இருக் கின்றது! பார்; நீயும் அங்ஙனமாக முயலவேண்டும்' என்று தூண்ட, அவன், உடனே 'என்ன அண்ணனுக்கும் மிக்கவனாக முயல்வேன்' என்றுசொல்லிப் பெருந்தவஞ்செய்து பிரமனருளாற் பலவரங்களைப்பெற்று இயற்கைத்தேக பலத்தோடு கூடிய வரபலத்தால் மிகக்கொழுத்திருக்கையில், மாதாமகனான சுமாலி வந்து 'ஆதியில் அரக்கரதாயிருந்த இலங்கையைக் குபேரனிடத்திலி ருந்து நீ கைப்பற்றவேண்டும்' என்று போதிக்க, உடனே, இராவணன் தூத

னுப்பிச் சமாதானத்தால் இலங்கையை வசப்படுத்திக்கொண்டு அதில் அரசாண்டுவாழலானான்; குபேரனே தந்தையின் அநுமதிப்படி இலங்கையை விட்டுக் கைலாயத்திற்சென்று அளகாபுரியில் வசித்தான். பின்பு, இராவணன் தேவர்களையும் முனிவர்களையும் மிகுதியாகவருத்துதலை யறிந்த குபேரன் தம்பியென்னும்அன்பினால் ஒருதூதன்மூலமாக 'இங்ஙனஞ்செய்வது தகுதியன்று' என்று தெரிவிக்க, அதுகேட்டவளவிலே, இராவணன் பெருங்கோபங்கொண்டு சேனையோடு சென்று அவனை யெதிர்த்துப் பொருது வென்று அவனுடைய புஷ்பகவிமானத்தைக் கவர்ந்துகொண்டு செல்லலுற்று, பலகொடுந்தொழில்களைப் புரிந்து முடிவில் இராமபிரானால் வம்சநாசமாயினனென்பது, இச்செய்யுளிற் குறித்த வரலாறு. (கo)

## கக - ஆம் அதிகாரம்.—புறங்கூறாமை.

அதாவது - ஒருவரில்லாத இடத்தில் அவரைக் குறித்து இகழ்ந்து உரையாமை. புறத்திற் கூறாமையென ஏழாம்வேற்றுமைத் தொகை; கூறாமை - எதிர்மறைத்தொழிற்பெயர். மொழிக்குற்றம் மனக்குற்றத்தின் மூலமாகத் தோன்றுதலால், இது அழுக்காறாமை வெஃகாமை என்ற அதிகாரங்களின் பின் வைக்கப்பட்டது.

11.—'வெட்காப்பகச்சொல்லி' என்று சந்தியில் வலிமிக்கே வரும்; ஈறு கெட்ட எதிர்மறைப்பெயரெச்சத்தின் முன்னும் ஈறுகெட்ட எதிர்மறை வினையெச்சத்தின் முன்னும் வலிமிகும்' என்பது, விதி.

(இ - ள்.) இரங்கேசா—!—இ குவலயத்தில் - இந்தநிலவுலகத்தில், நக சொல்லி - கூடிமகிழுமாறு (இனியசொற்களைச்) சொல்லி, நட்பு ஆடல் - சிநேகம்பாராட்டுதலை, தேற்றாதவர் - (தமக்கு நல்லதென்று) அறியாதவர்கள்,—தக்க துரியோதனன்பால் - (தனக்குத்) தகுந்த துரியோதனனிடத்தில், சார்ந்த - வந்துசேர்ந்த, சகுனியை போல்—, வெட்கா - (தமதுகொடுந்தொழிலைக் கண்டு உலகத்தவர் பரிகசிப்பார்களே! என்று) வெட்கங்கொள்ளாமல், பக சொல்லி - விட்டுநீங்கும்படி புறங்கூறி, கேளிர் பிரிப்பர் - பந்துக்களையும் பிரியச்செய்வார்கள்; (எ - று.)—இது - இவ்வதிகாரத்தின் ஏழாவது குறள்.

கூடிமகிழும்படி இனியவார்த்தைகளைச் சொல்லிச் சிநேகஞ்செய்ய அறியாதவர்கள் புறங்கூறி உறவினரைப் பிரிப்பரென்னுங் குறட்பாவின் நீதிக்குச் சகுனியின் செய்தி எடுத்துக்காட்டப்பட்டது. துரியோதனன் என்ற பெயர் - பகைவர்க்குக் கொடியபோரையுடையவனென்று பொருள்படும்; யோதநம் - யுத்தம். சகுனி - காந்தாரதேசத்து அரசன்; சுபலனென்னும் அரசனது புத்திரன்; திருதராட்டிரனது மனைவியாகிய காந்தாரியின் உடன் பிறந்தவன்; ஆதலால், துரியோதனாதியர்க்கு மாமனுவன். சூதாடுதலில் மிசவல்லவன். இவன் ஆதிமுதல் துரியோதனாதியர்க்கு நண்பாயிருந்து அவர்களைப் பாண்டவரோடு சமாதானமாக இருக்கவொட்டாமல் சூதுமார்க்கத்தால் பாண்டவர்களின் இராச்சியத்தைக் கவர்ந்து, இருதிறத்தார்க்கும் பகையை மிகுவித்து, அத்துரியோதனாதியரது உடல்பொருளாவிகளை இழக்குமாறு செய்தமை, மகாபாரதத்திற் பிரசித்தம். "மூர்க்கரை மூர்க்கர் முகப்பர்"என்றபடி சகுனிக்கு ஏற்ற துர்ப்புத்தியையுடையவனென்பார் 'தக்கதுரியோதனன்'என்று துரியோதனனுக்கு அடைமொழி கொடுத்துக் கூறினார்.

துரியோதனன்பால், பால் - ஏழனுருபு. போல் - உவமவுருபிடைச்சொல். குவலயம் = பூமண்டலம்: வடமொழித்தொடர். வெட்கா - 'வெள்கு' என்பதனடியாப் பிறந்த ஈறுகெட்டஎதிர்மறைவினையெச்சம். பக, நக என்ற செயவெனெச்சங்கள் - காரியப்பொருளன வாதலால், எதிர்காலம்; இவற்றில்,

பகு, நகு - பகுதிகள். (இவற்றினின்று தொழிற்பெயர்கள் - பகை நகை என்றுபிறக்கும்.) கேளிர் - கேண்மையென்னும் பண்பினடியாப் பிறந்த பெயர்: இர் - பலர்பால்விகுதி: இதன் இறுதியில் உயர்வுசிறப்பு உம்மை விகாரத்தால் தொக்கது. கேளிர்ப்பிரிப்பர்: இரண்டாம்வேற்றுமைத்தொகை; "இயல்பின் விகாரம்." கேளிரையும் பிரிப்பர் என்ற கருத்தால், 'அயலாரோடு' என்று வருவித்து உரைப்பர், பரிமேலழகர். தேற்றுதவர் - இங்கே, தன்வினையாய், தேறுதவர் என்னும் பொருளில் வந்தது. நட்பு - தொழிற்பெயர்; நள் - பகுதி, பு - விகுதி, ளகரம் டகரமானது - சந்தி. ஆடல் - ஆளுதல் எனக்கொண்டால்—ஆள் - பகுதி, தல் - விகுதியும், ஆடுதல்எனக்கொண்டால்—ஆடு - பகுதி, அல் - விகுதியுமாம். ஆடல்+தேற்றுதவர்=ஆடறேற்றுதவர்; தனிக்குறிலைச்சேராத லகரம் வருமொழிமுதலில்வந்த தகரம் றகரமாத்திரிந்தவிடத்துக் கெட்டது; [நன் - மெய்-உகூ.] (கக)

## ௨0 - ஆம் அதிகாரம்.—பயனிலசொல்லாமை.

பயனிலசொல்லாமை யென்று மூலபுத்தகத்தைத் திருத்துக. இவ்வாறே திருக்குறளிற் காணப்படுகின்றது.

அஃதாவது - தமக்கும் பிறர்க்கும் அறம் பொருள் இன்பம் ஆகிய பயன்களுள் ஒன்றையுந் தாராத சொற்களைச் சொல்லாமை. வாக்கில்தோன்றுகின்ற குற்றங்களாகிய பொய் குறளை கடுஞ்சொல் பயனில்சொல் என்ற நான்கனுள், பொய்யானது துறவறத்தாராலல்லாமல் இல்லறத்தாரால் முழுவதும்விலக்கப்படாமையால், அந்தப் பொய்யை யொழித்து, இல்வாழ்வாரால் விலக்கப்படவேண்டிய மற்றைக் குற்றம் மூன்றனுள் கடுஞ்சொல்லை 'இனியவைகூறல்' என்ற அதிகாரத்தாலும், குறளை [கோட்சொல்லுதல்] யை 'புறங்கூறாமை' என்ற அதிகாரத்தாலும் விலக்கி, எஞ்சிநின்ற பயனில்சொல்லை இவ்வதிகாரத்தால் விலக்குகின்றதனால், புறங்கூறாமையின் பின் இஃது வைக்கப்பட்டது. பயனில்லாத சொற்களைச் சொல்லுங்காலத்தில் பயனுடையசொற்களைச் சொல்லுதலும் பயனுடையதொழில்களை இயற்றுதலுஞ் செய்தால், மிக்க புகழ்புண்ணியங்களை யடையலாமாதலால், அதற்கு விலக்கான பயனில சொல்லுதல் குற்றமாயிற்றென்க. பயன் - பயம் என்பதன் ஈற்றுப்போலி. இல - எதிர்மறைப் பலவின்பாற்பெயர்.

12.—(இ - ள்.) இரங்கேசா—!— வேந்தை - அரிச்சந்திரமகாராஜனைப் பற்றி, வதிட்டன் - வசிட்டமுனிவர், வியத்தல் - (தேவேந்திரசபையிற்) கொண்டாடிக்கூறியதை, பழுது என்ற - தவறென்று மறுத்துக்கூறிய, முனி - விசுவாமித்திரமுனிவர், எந்து தவம் - (தாம்) மிகுதியாகச்செய்த தவத்தை, தோற்றான் - (தாம்கூறிய சபதத்தின்படியே) இழந்தார்; (இது தக்கதேயாம்); ஆய்ந்தக்கால் - ஆராய்ந்து சொல்லுமிடத்து, நீர்மை உடையார் - இனியகுணமுடைய பெரியோர், பயன் இல - பயனில்லாதனவாகிய சொற்களை, சொலின் - சொல்லுவராயின், (அவர்களுடைய), சீர்மை - புகழும், சிறப்பொடு - (அதனால் வரும்) கௌரவமும், நீங்கும்-(உடனே) ஒழியும்; (எ - று.) —இது, இவ்வதிகாரத்தின் ஐந்தாவது குறள்.

பெருந்தன்மையை யுடையவரும் பயனில்லாத சொற்களைச் சொல்லுவராயின், தமது புகழையும் கௌரவத்தையும் இழப்பரென்ற திருக்குறளின் நீதிக்கு, தேவசபையில் அரிச்சந்திரனைப்பற்றி வீணாக இகழ்ந்துகூறிய விசுவாமித்திரர் தமது பெருந்தவத்திற் பாதியிழந்த வரலாற்றை உதாரணமாகக் கூறினர். முன்னிரண்டடிகளிற் கூறிய சிறப்புப்பொருளைப் பின்னிரண்டடிகளிற் கூறிய பொதுப்பொருள் சமர்த்தித்து நிற்றலால், இச்செய்யுள் - வேற்றுப்பொருள்வைப்பணியாம். இங்கு 'நீர்மையுடையார்' என்றது விசுவாமித்

திரரையும், 'பயனில சொல்லுதல்' என்றது அரிச்சந்திரனை வியத்தல் பழுது என்றதையும் சுட்டு மெனக. 'சொலின்' என்ற எதிர்காலத்தால், நீர்மையுடையார் அவ்வாறு பயனிலசொல்லுதல் அருமை யென்பது, விளங்கும்.

வேந்து - உயர்திணைப்பொருள் தரும் அஃறிணைச்சொல். வதிட்டன் = வஸிஷ்டன்: பஞ்சேந்திரியங்களையும் வசப்படுத்தியவனென்று பொருள்படும். இவர் பிரமகுமாரராகிய பிரமவிருடி; சூரியகுலத்து அரசர்கட்குக் குலகுருவும் புரோகிதரும் வைதிகமந்திரியுமா யுள்ளவர்: மகாபதிவிரதையான அருந்ததியின் கணவர்: திரிகாலஞானி. முனி = முநி: மநநசீலர். வந்து தவம் - வினைத்தொகை. தவம் - தபஸ் என்ற வடசொல்லின் திரிபு. ஆய்ந்தக்கால் - காலீற்று எதிர்கால வினையெச்சம். இசைனை, ஆராய்ந்த காலத்தில் எனப் பெயரெச்சத்தொடராகக் கொள்ளலாகாது; வலி இரட்டித்து வந்ததனால்: பெயரெச்சத்தொடரில் 'ஆய்ந்தகால்' என நிற்கும். சொலின் = சொல்லின்: தொகுத்தல்.

தேவலோகத்தில் இந்திரன் ஒருநாள் தனது மகாசபையிலே வந்துள்ள முனிவர்களை நோக்கி, 'பூலோகத்து அரசர்களுட் சத்தியம் முதலியவற்றிற் சிறந்தவன் யாவன்?' என்று வினவ, 'அரிச்சந்திரன்' என்று வசிட்டமாமுனிவர் எடுத்துக்கூற, அம்முனிவர்பக்கல் பழம்பகைமையையுடைய விசுவாமித்திரமுனிவர் அதனை மறுத்து 'அரிச்சந்திரன் யிகத்தீயவன்'என்று வீணேபழித்துக்கூறினர். இதுகாரணமாக இம்முனிவரிருவரும் மிகப்பகைத்து 'அரிச்சந்திரன் சத்தியம் முதலியவற்றில் தவறினால், நான் தவத்தையிழந்து தலையோட்டிற் கள்ளை யேந்திக்கொண்டு தெற்கே செல்வேன்' என்று வசிஷ்டரும், 'அவன் தவறாதிருந்தால் என் தவத்திற் பாதி கொடுப்பேன்' என்று விசுவாமித்திரரும் இந்திரனெதிரிற் சபதஞ்செய்து கொண்டார்கள். பிறகு, விசுவாமித்திரர் அரிச்சந்திரனைச் சத்தியம் தவறுமாறு தகாத பலமுயற்சிகளைச் செய்தும் அவையாவும் பயன்பெறுதொழிய, முடிவில் விசுவாமித்திரர் தாம் சபதஞ் செய்தபடியே தமது தவத்திற் பாதியை யிழந்து அவமானமடைந்தன ரென்பது, இங்கு அறியவேண்டிய கதை. (கஉ)

## உஉ - ஆம் அதிகாரம்.—ஒப்புரவறிதல்.

அஃதாவது -உலகத்திலுள்ள ஜநங்களினது நடத்தையை அறிந்து செய்தல். உலகநடை வேதநடைபோலத் தருமசாஸ்திரங்களிற் கூறப்படாமல் தாமே உய்த்துணர்ந்து செய்யுந் தன்மையுடைய தாதலால், 'ஒப்புரவுசெய்தல்' என்னுமல் 'ஒப்புரவறிதல்' என்றார். ஒப்புரவு என்பதனை, ஒப்பு உரவு எனப் பிரிக்க: உலகத்தாரோடு ஒத்துச்செய்யுஞ் சிறந்த தொழில் லென்றபடி.

13.—(இ - ள்.) இரங்கேசா—!—'ஒப்புரவினால் உலகநடையை யறிந்து செய்தலினால், ஒருவன் - ஒருவனுக்கு, கேடு முந்த வரும்-தீங்கு முற்பட உண்டாகும்,' எனின் - என்றாலும்,—அஃது - அக்கேடு, விற்றுக்கோள் தக்கது உடைத்து - (தன்னை) விலையாகக் கொடுத்தாயினும் வாங்குந் தகுதியையுடையதாகும்; [ஒப்புரவறியாமையினாற் கேடுவிளையுமானால் அது தகுதியன்றேயாம் என்றபடி]; (எனெனில்),—இந்திரன் - தேவேந்திரபதவியைப் பெற்ற நகுஷமகாராஜன், அந்தணர் மேன்மை அறியாமல் - (தான் ஏறிய பல்லக்கைச் சுமந்து வந்த) முனிவர்களது பெருமையை யறியாமல், சர்ப்பஎன்று- ('விரைந்துசெல்' என்னும் பொருளுள்ள) 'ஸர்ப்ப' என்ற பதத்தைச் சொல்லி, பாம்பு ஆனான் - (அதுகேட்டுக் கோபங்கொண்ட அகத்தியமுனிவரது சாபத்தால் இந்திரபதவியை யிழந்து) சர்ப்பமாய்விட்டான்; (எ - று.) —இது, இவ்வதிகாரத்தின் பத்தாவது குறள்.

உலகத்தாரோடு ஒத்து நடந்தால் எக்காலத்திலும் கேடு விளையாது; ஒருகால் கேடு நேருமாயினும் அது புகழுக்கே ஏதுவாமாதலால், விரும்பியேற்றுக்

கொள்ளத்தகு மென்பது, திருக்குறளின் பொருள். ஒருவன் தன்னை விலையாகக்கொடுத்து வாங்கக்கூடிய பொருள் ஒன்றுமில்லையாயிருக்கவும், ஒப்புரவையறிந்து நடத்தலினாற் கேடுவிளையுமாயின் அது பெரும்புகழ்க்குக் காரணமாதலின், அவ்வாறு விளையுங் கேடு ஏற்றுக்கொள்ளத்தக்க தென்பார் 'அஃது ஒருவன் விற்றுக்கோட்டக்கதுடைத்து' என்றார். இதனால், இவ்வகையாக நேரிடுங்கேடு கேடன்று என்று கூறப்பட்டது. "கெடுவாக வையாது உலகம் நடுவாக, நன்றிக்கண் தங்கியான் தாழ்வு" என்பதுங் காண்க. இத்திருக்குறளினால் ஒப்புரவறிதலினால் கெடுதிவாராதென்பதும், அதனாற் கெடுதிவருமென்று கூறுகின்றவர் உலகத்திலேயே இலரென்பதும் பெறப்படும். ஆகவே, ஒப்புரவறியாமையால் ஒருவனுக்குக் கேடுவிளையுமாயின் அது பெரும்பழிக்குக் காரணமாய்த் தீமைபயக்கு மாதலால், அது வெறுக்கத்தகும். இதற்குஉதாரணமாக, நஹுஷனென்னும் ஓரரசன் முனிவர்களது பெருமையை யறிந்து அவர்களிடத்து நடந்துகொள்ளவேண்டும் முறைப்படி நடவாமல் இறுதியில் தான் அரிதிற் பெற்ற தேவேந்திரபதவியையு மிழந்து ஸர்ப்பமுமான செய்தியைத் திருஷ்டாந்தமாக இங்குக் காட்டினா ரென்க.

"அந்தணரென்போ ரறவோர் மற்றெவ்வுயிர்க்குஞ், செந்தண்மைபூண்டொழுகலான்" என்ப வாதலால், அந்தணரென்பது, இங்கு, முனிவர்மேல் நின்றது. சர்ப்ப - ஸர்ப்ப என்ற வடசொல்லின் திரிபு. விற்று என்பதற்கு - 'தன்னை' எனச் செயப்படுபொருள் வருவித்துக் கூறியது, தன்னைக்காட்டிலுஞ் சிறந்ததொருபொருளில்லாமையா லாகும்; இதனால், பிறவற்றை விற்றல் கூறாமலே பெறப்படும். விற்று, வில் - பகுதி. கோள் - கொள் என்ற முதனிலை திரிந்த தொழிற்பெயர். கோட்டக்கது - கொள்ளுதற்குத்தக்கது என நான்காமுருபு விரிக்க; இனி, கொள்ளத்தக்கது என்பது, செயவெனெச்சம் ஈறுகெட்டு முதல்நீண்டு நின்ற தெனக் கொள்ளலுமாம். தக்கது-இறந்தகாலத் தொழிற்பெயர். உடைத்து - உடைமையென்னும் பண்பினடியாப் பிறந்த இறந்தகாலமுற்று.

தேவேந்திரன் விருத்திராசுரனைக் கொன்றது காரணமாகப் பிரமகத்தியாற் பீடிக்கப்பட்டு இராச்சியத்தையும் இழந்து திரிகையில் மூவுலகங்களும் அரசனில்லாமையால் தடுமாற்ற மடைய, அப்போது தேவர்கள்முதலியோர் ஆராய்ந்து, சந்திரகுலத்துத் தோன்றிய நகுஷனென்பவனே இந்திரபதவிக்கு ஏற்றவனென்று அறுதியிட்டு, அவனுக்குத் தமது தேஜஸினால் முன்னிலும் மிக்கவல்லமையுண்டாக்கி இந்திரனாக்க, முறைப்படியே மூவுலகங்களையும் அரசாண்டுவந்த அவன் ஒருகால் தேவேந்திரனதுமனைவியாகிய இந்திராணியைக் கண்டு காதல்கொண்டு அவளிடத்துத் தனதுகருத்தைத் தெரிவிக்க, அவ்விந்திராணி ஆராய்ந்து 'மற்றைத்தேவர்களைப்போலவல்லாமல் நீ முனிவர்கள் தாங்குஞ் சிவிகைமீது ஏறி என்மனைக்கு வருவாயாயின், உன்கருத்திற்கு இசைவேன் யான்' என்ன, காதலின்மிகுதியால் அதற்கு இணங்கிய நகுஷன் ஸப்தருஷிகள்தாங்கப் பல்லக்கின்மீது ஏறி இந்திராணியின்வீட்டைநோக்கிச் செல்லுகையில், அவ்விந்திராணியின்மீதுஉள்ள ஆசைமேலீட்டினால் 'சர்ப்ப சர்ப்ப [ஓடு ஓடு]' என்று ருஷிகளைநோக்கிச் சொல்ல, அதுகேட்டுச் சினங்கொண்ட அகஸ்தியர் 'ஸர்ப்போபவ [சர்ப்பமாகக்கடவாய்]' என்று சபிக்க, உடனே நகுஷன் தனது வடிவத்தையிழந்து பாம்பாயினா னென்பது, இச்செய்யுளிற் குறித்த வரலாறு. திருக்குறளில் பெரியாரைப்பிழைத்தால் தீங்குவிளையுமென்ற கருத்தை விளக்குதற்கு, "ஏந்தியகொள்கையார் சீறி னிடைமுரிந்து, வேந்தனும் வேந்துகெடும்" என்று திருவள்ளுவநாயனார் இச்சரித்திரத்தை எடுத்துக்காட்டியுள்ளார். (கங)

## உரு - ஆம் அதிகாரம்.—ஈகை.

அஃதாவது - தரித்திரராய் வந்து யாசித்தவர்க்கு இல்லையென்றுசொல்லா மற் கொடுத்தல். இது, மறுமையைநோக்கிய தாதலின், இம்மையைநோக்கிய ஒப்புரவறிதலின்பின் வைக்கப்பட்டது. ஈகை, ஈ - பகுதி, கை - தொழிற்பெயர்விகுதி. "ஈ தா கொடு வெனு மூன்றும் முறையே, இழிந்தோ னுப்போன் மிக்கோ னிரப்புரை" என்றதனால், ஈதல் - தன்னினும்இழிந்த பொருளில்லாதவனுக்கு அவனினும்உயர்ந்த பொருளுடையோன் ஒன்றைத் தானஞ்செய்தலா மென்று அறிக.

14.—(இ - ள்.) இரங்கேசா — !—மங்கி சாதலின் - (ஒருவனுக்கு) வலியொடுங்கி மரணமடைதல்போல, இன்னாதது - துன்பந்தருவது, இல்லை - வேறொன்று இல்லை; அதுஉம் - அத்தன்மையதாகிய மரணமும், ஈதல் இயையாக்கடை - (வறியவர்க்கு ஒன்றைக்) கொடுத்தற்கு முடியாதபொழுது, இனிது - இனியதாம்; (ஆதலால்),—கன்னன் - கர்ணன், அங்கியும் - கவசத்தையும், குண்டலமும் - குண்டலமென்னுங் காதணியையும், ஆகண்டலற்கு - (தன்னிடம்வந்து யாசித்த) இந்திரனுக்கு, இங்கிதம் ஆ - அவனது எண்ணத்தின்படியே, அளித்தான் - கொடுத்தான்; (எ - று.)—இது, இவ் வதிகாரத்தின் பத்தாவது குறள்.

பிறர்க்கு உதவிசெய்யாமல் உயிர்வைத்திருப்பதைக் காட்டிலும், உடலாகிய சுமை நீங்குதல்பற்றி இறத்தலே மேலென்பது, திருக்குறளின் கருத்து: இவ்வாறு நீதியேற்பட்டிருத்தலால், ஈகையின் சிறப்பை யுணர்ந்த கர்ணன், தனதுஉயிரோடொத்த கவசகுண்டலங்களைத் தன்னிடம் வந்துயாசித்தமாத்திரத்தில் தேவேந்திரனுக்கு அவன்விருப்பத்தின்படியே தந்து புகழ்பெற்றனனென்பதாம். பிறர்க்குஉதவாத உலோபிகளுடைய உடம்பு பூமிக்குப்பாரமாகுதலை, "ஈட்டமிவறி யிசைவேண்டா வாடவர், தோற்றம் நிலக்குப்பொறை" என்ற திருக்குறளாலும் அறியலாம்.

அங்கி - அங்கத்தில்தரிப்பது; உடற்சட்டை: வடமொழித்தத்திதாந்த நாமம். ஆகண்டலன் - போரிற் பகைவர்களை நன்குஅழிப்பவன் எனக் காரணப்பொருள்படும் வடசொல். இங்கிதம் - மனக்குறிப்பு: வடசொல். ஆ - ஆக என்பதன் விகாரம். இங்கு இதம் ஆ எனப்பிரித்து - இவ்வுலகத்திற் புகழாகியநன்மை தோன்றும்படி என உரைப்பாரு முளர். சாதலின், இன் - ஐந்தனுருபு, ஒப்பு: இதற்கு - எல்லைப்பொருளாக, சாதலைக்காட்டிலும் எனப் பொருள்கொள்வது இவ்விடத்திற்குச் சிறவாது; அங்ஙனங் கொண்டால், சாதல்போலத் துன்பந்தருவது வேறொன்று உண்டென்று விபரீதார்த்தத்தை விளைத்தல் காண்க. 'இனிததும்' என்பது செய்யுளோசை குறையாவிடத்துக் குறில் நெடிலாகி அளபெடுத்ததனால், இன்னிசையளபெடை; 'அதுவும்' என்பது, விகாரப்பட்டு 'அதுஉம்' என அளபெடுத்ததெனக் கொண்டால், சொல்லிசையளபெடை யென்னலாம். இயையாக்கடை - எதிர்மறை யெதிர்காலவினையெச்சம்; ஆ - எதிர்மறையிடைநிலை, கடை - காலங்காட்டும் எச்சவிகுதி: இனி, இதனை - தொடர்மொழியாகக் கொண்டு, இயையாதவிடத்து என, ஈறுகெட்டஎதிர்மறைப் பெயரெச்சத் தொடராக்குதலும் ஒன்று. இன்னாதது - இன்னாமை யென்னும் எதிர்மறைப் பண்பினடியாகப் பிறந்த ஒன்றன்பாற் குறிப்புவினையாலணையும்பெயர். இனிமையென்ற உடன்பாட்டுப்பண்பு, மைவிகுதியும் இடையிகரமும் கெட்டு 'இன்' என நின்று, எதிர்மறைஆகாரத்தோடு கூடிய தென்றலும் ஒன்று

கன்னன் - கர்ணன் என்ற வடசொல்லின் சிதைவு. பாண்டவர்களின் தாயான குந்திதேவி கன்னிகையாயிருக்கும்பொழுது, தனக்குத் துருவாச

முனிவர் உபதேசித்த மந்திரத்தைப் பரீட்சித்தறியும்பொருட்டுச் சூரியனை நினைத்து அம்மந்திரத்தை உச்சரிக்க, உடனே அத்தேவன் வந்து அவளுக்கு அநுக்கிரகித்ததனால், அவளிடம் பிறந்த புத்திரன் கர்ணன். இவனைப் பிறந்த பொழுதே, குந்தி மானத்திற்குஅஞ்சி மிதக்கும்மரப்பெட்டியொன்றில் வைத்துப் பூட்டிக் கங்கையாற்றில் விட்டிட, அதனைத் திருதராட்டிரனது தேர்ப்பாகனாகிய அதிரதனென்பவன் கண்டெடுத்துத் திறந்துபார்த்துக்கொண்டு போய்த் தன்மனைவியாகிய ராதையும் தானுமாக வசுசேனனென்று பெயரிட்டு வளர்த்தான். இவனுக்குக் கர்ணனென்ற பெயர் ஆகாயவாணியிட்டது; அப்பெயர் கர்ணகுண்டலங்களோடு பிறந்ததுபற்றியது; காதின்வழியே பிறந்ததனால் வந்த பெய ரென்றுங் கூறுவர். கர்ணம் - காது. இவன்-இடையெழுவள்ளல்களில் ஒருவன். "அக்குரன் சந்திமானே டந்திமான் சிசுபாலன்னே, வக்கிரன் கன்னன் சந்தன் இடைவள்ளல் வகுத்தவாறே," "அந்திமான் சிசுபாலன் அக்குரன் வக்கிரன், சந்திமான் கன்னன் சந்தன் இடைவள்ளல்" என்னும் நிகண்டுகளிற் காண்க. (வேண்டாதிருக்கையில் வலியத்தாமே வரையாது கொடுப்பவர் - முதல்வள்ளல்களெனவும், வேண்டக்கொடுப்பவர் - இடைவள்ளல்களெனவும், புகழக்கொடுப்பவர் - கடைவள்ளல்களெனவுங் கூறப்படுவர்.) இவன் - பிராமணவேடம் பூண்டு பரசுராமனையடுத்து அவனிடம் வில்வித்தைகற்று வல்லவனாய்ப் பின்பு துரியோதனனுக்குப் பிராணசிநேகிதனாகி அவனருளால் அங்கதேசத்துக்கு அரசனாயினன். "மண்டலத்தின்மன்னரெல்லாம் வந்துமலைந்தாலும், குண்டலமுண்டாகக் கொலப்படான்," "கவசங் கனககுண்டல மென்றிரண்டு புனையிற் கற்பாந்த, திவசம் பொரினுங் கன்னனுயிர் செகுப்பார் மண்ணிற் சிலருண்டோ" என்பவற்றால், இவனது கவசகுண்டலங்களின் சிறப்பை யறிக. இவற்றிற்கு இத்தன்மை சூரியனதுவரத்தினால் அமைந்தது. பாண்டவர்கள் வனவாசஅஜ்ஞாதவாசங்களை முடித்தபிறகு இராச்சியத்தை மீண்டு தாம் பெறுமாறு ஸ்ரீகிருஷ்ணபகவானைத் தூதுவிட, அப்பிரான் போய்த் துரியோதனனைக்கேட்டும் அவன் மறுக்கவே, மேல்நடக்கவேண்டிய பாரதயுத்தத்தைக்குறித்த சன்னாகங்களைச் செய்யவேண்டி, ஸ்ரீகிருஷ்ணன் விதுரன் மாளிகைசேர்ந்து தேவேந்திரனை வரவழைத்து 'நீ உன்மகனாகிய அருச்சுனனைக் காக்கும்பொருட்டு அவனுக்குப்பகைவனாகிய கர்ணனிடம் ஒருயாசகபிராமணனாய்ச் சென்று அவனுக்குப் பிராணாதாரமாகவுள்ள கவசகுண்டலங்களை வாங்கிக்கொண்டுவா' என்று போதிக்க, அவனும் அவ்வாறே சென்று கர்ணனைக் கண்டு 'யாவர்க்கும் வரையாதுகொடுக்கிற நீ எனக்கு இப்பொழுது யான்வேண்டும்பொருளைத் தவறாமற்கொடுக்கவேண்டும்' என்று தந்திரமாகச் சொல்ல, அதற்கு அவன் உடன்பட, கிழப்பிராமணனாகிய இந்திரன் 'எனக்கு நம்பிக்கையுண்டாகும்பொருட்டுப் பிரதிஜ்ஞைசெய்து தரவேண்டும்' என்ன, கர்ணன் அதற்கும்உடன்பட்டுச் சிலசபதங்கள் செய்யவே, அதன்பின் இந்திரன், 'உனதுஉயிர்நிலையாகிய கவசகுண்டலங்களை எனக்குத்தரவேண்டும்' என்று யாசிக்க, உடனே அவன் ஆகாயவாணி மறுக்கவுங் கேளாமல் அவற்றைக்கொடுத்திட, தேவராஜன் அவற்றைப் பெற்றுக்கொண்டுவந்து கண்ணனிடஞ் செய்திகூறிச் சென்றனனென்பது, இச்செய்யுளிற் குறித்த வரலாறு.

## உச - ஆம் அதிகாரம்.—புகழ்.

அஃதாவது - கீழ்ச்சொல்லப்பட்டவாறு இல்லறவொழுக்கத்தில் தவறாது நடந்தவர்கட்கு இம்மைப்பயனாய் இவ்வுலகில் நிகழ்ந்து எப்பொழுதும் அழியாது நிற்குங் கீர்த்தி. 'புகழாவது - தாம்இறந்துழியும் தாம்நிகழ்த்தியவாறு உலகம் உயர்த்துக்கூற நிலைபெறுவது' என்பர் சிவஞானமுனிவர்.

15.—'தோன்றுகவஃதிலார்' என்று திருத்திப் படிக்க.

(இ - ள்.) எம்மை ஆள்கொண்ட -எம்மை அடிமையாகக்கொண்டு பாது காக்கின்ற, இரங்கேசா—!—செம்மை ஆய் - செவ்வையாக, தோன்றின் - (மக்களாய்ப்) பிறந்தால், புகழொடு- புகழுக்குக்காரணமான நற்குணங்களோடு, தோன்றுக - பிறக்கக்கடவர்; அஃது இலார் - அந்தநற்குணமில்லாதவர்கள், தோன்றலின் - (மக்களாய்ப்) பிறத்தலினும், தோன்றாமை - விலங்காய்ப்பிறத் தலே, நன்று - நல்லது; (இக்குறட்பாவிற்குவுறப் புகழோடுபிறந்ததனால்), மும்மை உலகும்- (சுவர்க்கம் மத்தியம் பாதாளம் என்ற) மூன்றுலகத்தாரும், முசுகுந்தனை - முசுகுந்த சக்கரவர்த்தியை, துதிக்கும் - துதிப்பார்கள்; (எ - று.)—இது, இவ்வதிகாரத்தின் ஆறாவது குறள்.

கீர்த்திபெறாத மனிதப்பிறப்பினும், இகழ்வாரில்லாமையால் விலங்கு முதலிய பிறப்பே நல்லது என்பது திருக்குறளின் கருத்து. இக்குறளின் படியே மிக்கபுகழோடு தோன்றிய முசுகுந்தனது வரலாறு இங்குக் கூறப் பட்டது.

மும்மையென்பது, இங்கு "தெரிமாண்டமிழ் மும்மைத் தென்னம் பொருப்பன்" என்றவிடத்துப்போல மூன்று என்னும் பொருளில் வந்தது. உலகு - உலகத்திலுள்ளார்க்கு, இடவாகுபெயர். உம்மை - இனைத்தென்றறி பொருளில் வந்த முற்றும்மை. துதிக்கும் - செய்யுமென்முற்று, பலவின் பாலுக்கு வந்தது. புகழ் - இங்கே, புகழுக்குக் காரணமான நற்குணத் தைக் குறித்ததனாற் காரியவாகுபெயர். 'அஃதிலார்' எனப் பலர்பாலாற்கூறி னமையால், 'தோன்றின்' என்றவிடத்து 'மக்களாய்' என்று வருவித்து உரைக்கப்பட்டது. மக்களாய்ப் பிறவாமை யென்றதனால், விலங்காய்ப்பிறத்த லெனக் கொள்க. 'பிறக்கின் புகழுண்டாகப் பிறக்க; அஃதிலார் பிறக்கு மதிற் பிறவாமை நன்று என்றவாறு. இது- புகழ்பட வாழவேண்டுமென்றது' என்பது, இக்குறளின் மணக்குடியருரை. தோன்றாமை - எதிர்மறைத்தொ ழிற்பெயர்.

முசுகுந்தன் - ஆறு சக்கரவர்த்திகளுள் ஒருவன். இக்ஷ்வாகுவமிசத்தில் தோன்றிய இந்த முசுகுந்தனென்பவன் தன்வல்லமையால் உலகமுழுவதையும் தன்கீழ்ப்படுத்தி எவரும் எதிரின்றி அரசாண்டுவருகையில், தேவர்கட்கும் அசுரர்கட்கும் பெரும்போர் நிகழ, அப்போரில் வலியிழந்த தேவர்கள் தமது மன்னவனாகிய இந்திரனோடும் வந்து தமது பகையை யொழித்து வானுலகத் தை மீட்டுத் தருமாறு முசுகுந்தனிடத்துக் குறையிரப்ப, அவரதுவேண்டுகோ ட்குஇணங்கிய அந்த முசுகுந்தசக்கரவர்த்தி வானுலகத்திற் சென்று அசுரர்க ளுடன் பலகாலம் பொருது பகைவென்று சுப்பிரமணியக்கடவுள் தேவசேனா பதியாகி வருமளவும் தேவர்கட்கு யாதொருபகையும் நேராதவாறு வானுல கத்தைக் காத்துப் பெரும்புகழ்படைத்தா னென்பது, முதலடியிற் குறித்த வரலாறு. (கசு)



# தமிழ்ச் சிறப்பு.

## திருவிளையாடற் புராணம்.

அஃதாவது, பாண்டியநாட்டில், பெயர் கேட்டமாத்திரத்தில் முத்தி கொடுக்குந் தலமாகிய திருமதுரையில் எழுந்தருளியிருக்கின்ற சோமசுந்தரக் கடவுள் செய்தருளிய அறுபத்துநான்கு திருவிளையாட்டுக்களை யுணர்த்தும் நூல். 'திரு' என்னும் பலபொருளொருசொல், வடமொழியிலே, 'ஸ்ரீ' என்பதுபோலத் தமிழிலே தேவர்கள் அடியார்கள் ஞானநூல்கள் மந்திரங்கள் புண்ணியஸ்தலங்கள் புண்ணியதீர்த்தங்கள் முதலிய மேன்மையையுடைய எப்பொருள்களுக்கும் விசேஷணபதமாகி, அவற்றிற்கு முன்னர் மகிமைப் பொருளை உணர்த்திவரும்; ஸ்ரீ அநந்தேஸ்வரர் ஸ்ரீ மாணிக்கவாசகர் ஸ்ரீவாதுளாகமம் ஸ்ரீபஞ்சாக்ஷரம் ஸ்ரீசாலிவாடிபுரம் ஸ்ரீகைரவிணி ஸ்ரீபாதம் எனவும், திருமுருகர் திருநாளைப்போவார் திருக்கோவையார் திருவைந்தெழுத்து திருநெல்வேலி திருவல்லிக்கேணி திருவடி எனவும் வழங்குமாற்றாலறிக. இதனை, ஸ்ரீ என்பதன் சிதைவென்பாருமுளர். இது, விளையாடலுக்கு அடைமொழி. புராணத்திற்கு அடைமொழியாகவுமாம். விளையாடல் - இந்திரன்பழி தீர்த்தல் முதலியன. இவையாவும் எல்லாம்வல்ல கடவுளாகிய பரமசிவனுக்கு விளையாட்டாக மிக எளிதிற் செய்யுந்தொழில்களாகையால், 'விளையாடல்' எனப்பட்டன. புராணம் - பழமை; இது - பழைய வரலாற்றின்மேல் நிற்றலின் பண்பாகுபெயரும், இவ்வரலாறு தானமாகிய நூலின்மேல் நிற்றலின் தானியாகுபெயருமாதலால், இருமடியாகுபெயர். பண்டைவரலாறுகள் - உலகத்தின் தோற்றமும், ஒடுக்கமும், மந்வந்தரமும், முனிவர் அரசர்களின் மரபும், அவர்கள் சரித்திரமுமாம்: இவையைந்துமே புராணத்தினிலக்கணங்கள்: "தோற்ற மூலக மீண்டொடுங்கல் துகடீர்மநுவந்தர முனிவ, ராற்ற லரசர் மரபவர்தஞ் சரித மென்னு மோரைந்துஞ், சாற்றும் புராணவிலக்கண மென்றறிஞருரைப்பர்" என்னுங் கூர்மபுராணச்செய்யுளாலும் அறிக. இவ்வைந்திலக்கணங்களுமுடையன - பதினெண்புராணங்களே. இப்பெருங்காப்பியம் - இவ்வைந்திலக்கணங்களும் அமையாததாயினும் அவ்விலக்கணங்களையுடைய காந்தபுராணத்துள் 'சங்கரசங்கிதை' எனப்படும் அகத்தியசங்கிதையின் கூறுதலால், புராணமென்னும் முதனூற்பெயரே அதன்வழிநூலாகிய இந்நூற்குக் காரணப்பெயராயிற்று. அன்றி, அவ்விலக்கணங்களையுடைய புராணங்களின் பெருமைபோன்ற பெருமையுடைமையால், புராணமென்பது - உவமவாகுபெயராய், இதற்குக் காரணக்குறியாயிற்றென்றுங் கொள்ளலாம்.

## நூலாசிரியர்.

இந்நூலாசிரியர் - பரஞ்சோதிமுனிவர்: இவர் - சுத்தசைவரென்றும், இற்றைக்குச் சற்றேறக்குறைய முந்நூற்றைம்பதுவருடங்கட்குமுன்னிருந்தவரென்றும், இவர்காலத்திலிருந்த புலவர் - சேதுபுராணஞ்செய்த நிரம்பவழகியதேசிகரென்றும் கூறுகின்றனர். இவர்செய்த வேறுநூல்கள் - திருமதுரைப்பதிற்றுப்பத்தந்தாதி, போற்றிக்கலிவெண்பா முதலியன. இவர்செய்துள்ள நூல்களால் இலக்கியஇலக்கணங்களிலும், பலவகைக்கலைஞானநூல்களிலும் மிகத்தேர்ச்சிபெற்றவரென நன்றாகத்தெரிகின்றது. இவ்விஷயத்தைத் தெரிவிப்பதாய், வேப்பத்தூராரைச்சார்ந்த பெரும்பற்றப்புலியூர்நம்பி பாடிய திருவிளையாடற்புராணமென்று ஒன்று உண்டு.

[இதுவும், அடுத்தசெய்யுளும் - தமிழ்நாட்டின் சிறப்பைத் தெரிவிக்கும்.]

1.—(இ - ள்.) கடு - விஷமுண்டதனால், கவின் பெறு - அழகுபெற்ற, கண்டனும் - திருக்கழுத்தையுடையவனாகிய சிவபெருமானும், தென் திசை நோக்கி அடுக்க வந்து - தெற்குத்திக்கை நோக்கிப் பொருந்தவந்து [தெற்கு முகமாகஇருந்துகொண்டு], உவந்து ஆடுவான் - ஆனந்தித்து நர்த்தனஞ்செய்வான்; (அவ்வாறு தெற்குநோக்கித் தாண்டவஞ்செய்தற்குக் காரணம் என்னவெனின்),—ஆடலின் இளைப்பு விடுக்க - கூத்தாடுதலினாலுண்டாகுஞ் சிரமம் நீங்குமாறு, ஆரம் மெல் கால் - (பொதியமலையினின்று தோன்றிச்) சந்தன மரத்தின் நறுமணத்தோடு வீசுகின்ற இளந்தென்றற்காற்று, திருமுகத்திடை வீசி - (தனது) திருமுகத்திலே வீச, மடுக்கவும் - (அதனை) உட்கொள்ளுதற்காகவும்,— தமிழ் - தமிழ்ப்பாஷையை, திரு செவி மாந்தவும் அன்றோ - தனது திருச்செவியினால் அநுபவித்தற்காகவுமன்றோ! (எ - று.)—இது - நாட்டுப் படலத்தின் ருடு - ஆவது செய்யுள்.

தான் நர்த்தனஞ்செய்யும்போது தோன்றும் இளைப்புத் தீருமாறு தன் மீது இளந்தென்றற்காற்று வீசுதற்பொருட்டாகவும், செந்தமிழ்ப்பாஷையின் இனிமையை அநுபவித்தற்காகவுமே சிவபெருமான் தென்றிசைநோக்கி ஆனந்ததாண்டவஞ்செய்கின்றன னென்பதாம்; இதனால், செந்தமிழ்நாடாகிய பாண்டியநாட்டின் சிறப்புக் கூறியவாறு. அந்நாட்டிற்குஉரிய சிறப்பாவன - தென்றற்காற்றுடைமையும், செந்தமிழ்ப்பாஷையைக் கொண்டிருத்தலுமாம்.

'ஸ்ரீகண்டன்' என்னுமாறு விஷமுண்டு அதனால் கறுத்து இனிதாகத் தோன்றுகின்ற திருக்கழுத்தை யுடைமையால், சிவபெருமானை 'கடுக்கவின் பெறுகண்டன்' என்றார். சந்தநாசலமெனப்படுகிற பொதியமலையினின்று தோன்றி மெல்லியதாகவீசுதலால், தென்றற்காற்று 'ஆரமென்கால்' எனப் பட்டது. மதுரையென்பது - பஞ்சசபைகளுளொன்றாய்ச் சிவபிரான் நடனஞ் செய்யுமிடம்: (பஞ்சசபைகளாவன - கனகசபை சிதம்பரத்திலும், ரஜத சபை மதுரையிலும், தாமிரசபை திருநெல்வேலியிலும், இரத்தினசபை திருவாலங்காட்டிலும், சித்திரசபை திருக்குற்றாலத்திலும் எனக் காண்க.) இதுவே, தமிழ்நாடாகிய பாண்டியநாட்டிற்கு ராஜதானி. சிவபெருமான் மதுரையில் தென்திசைநோக்கி ஆனந்ததாண்டவஞ்செய்கின்றன னென்க. ஆடலின் இளைப்பு விடுக்க வீசி என இயையும். விடுக்க - காரியப்பொருளில் வந்த செயவெனெச்சம்: ஆதலால், எதிர்காலம். வீசி - வீச; எச்சத்திரிபு. ஆரம் - ஹாரம் என்ற வடசொல்லின் விகாரம். மடுக்கவும் மாந்தவும், உம்மை - எண்ணுப்பொருளன.

'கடுக்கவின்பெறு கண்டன்' என்பதில் அடங்கிய கதை:—பாற்கடலினின்றுதோன்றிய ஹாலாஹலமென்ற விஷத்தைக் கண்டு தேவர்கள்யாவரும் அஞ்சி நடுங்கி யோடிச் சரணமடைய, அச்சமயத்தில் அவர்களதுவேண்டுகோட்கு இரங்கி அவ்விஷத்தையுட்கொண்டு அவர்களையெல்லாம் சிவபெருமான் பாதுகாத்தன னென்பதாம். இவ்வரலாற்றினால், செயற்கரியசெயல் செய்து உயிர்களைப் பாதுகாக்கும் விசித்திரசக்தியும் திருவருளு முடையவன் சிவபிரானென்பது விளங்கும். இச்செய்தியில், விஷத்தையுண்ணுதல் பிறர்க்கு அருமையென்பதுமாத்திர மன்று; அமிருதமேயானாலும் அதனை வாயிலாவது வயிற்றிலாவது வைத்துக்கொள்ள முடியுமேயன்றி இடையே கண்டத்தில் நிறுத்துதல் ஸர்வஶக்தனான இறைவனொருவனுக்கு அன்றிப் பிறர்க்குச் சிறிதும்இயலாது என்ற கருத்தும் அடங்கும்; "நாரணதியர் கிளர்ச்சியை நோக்கி நன்கருளிக், கோர வல்விட மிடற்றிடையமைத்தனன்

குழகன், ஆரவாயிடை வயிற்றிடையன்றி மற்றிடைக்கண், ணூரமைத்திடவல்லவ ரமிழ்தமேயானும்" என்ற காஞ்சிப்புராணம் இங்கே காணத்தக்கது. (க)

2.—(இ - ள்.) விடை உகைத்தவன் - விருஷபத்தை வாகனமாக ஏறி நடத்துபவனாகிய சிவபெருமான், மேல் நாள் - முற்காலத்தில், பாணினிக்கு - பாணினியென்னும் முனிவர்க்கு, வடமொழிக்கு இலக்கணம் உரைத்தாங்கு - ஸம்ஸ்க்ருதபாஷைக்கு இலக்கணத்தை உபதேசித்தாற்போலவே, இயல் மலயம் மா முனிக்கு - நற்குணங்களையுடைய பொதியமலையில் வாழ்கின்ற அகத்திய முனிவர்க்கு, திடம் உறுத்தி - (தமிழிலக்கணத்தை) உறுதியாக உபதேசித்து, அ மொழிக்கு எதிர் ஆக்கிய - அந்த வடமொழிக்குச் சமானமாகச் செய்த, தென் சொல் மட மகட்கு - தமிழ்ப்பாஷையாகிய இளம்பெண்ணுக்கு, அரங்கு என்பது - (மகிழ்ச்சியோடு) கூத்தாடுமிடமென்று சிறப்பித்துச் சொல்லப்படுவது, வழுதி நாடு அன்றே - பாண்டியநாடல்லவோ? (எ - று.)—இது, நாட்டுப்படலத்தின் ௩௬ - ஆவது செய்யுள்.

பரமசிவன் வடமொழியிலக்கணத்தைப் பாணினிமுனிவர்க்கும், தென்மொழியிலக்கணத்தை அகத்தியமுனிவர்க்கும் உபதேசித்து, ஆர்ஷமான [ருஷிகளாற் பரவிய] இந்த இரண்டுபாஷைகளையும் வடமொழி தென்மொழி என்று எதிர்க்கு எதிராக வழங்குமாறு செய்தருளினன். அவ்வாறு சிறப்புப் பெற்ற தமிழ்ப்பாஷை இனிதுவளருமிடம் பாண்டியநாடேயாகுமென்பதாம்.

முன்னொருகாலத்தில், இலக்கண வழுவாகப் பேசியமைபற்றிப் பதஞ்சலி முனிவரால் இகழப்பெற்ற பாணினிமுனிவர் சிவபிரானை நோக்கிக் கடுந்தவம் புரிய, சிவபிரான் பிரத்தியக்ஷமாகித் தமது கையிற்கொண்டிருந்த டமருகத்தின்மூலமாகப் பதினான்கு சூத்திரங்களை யுண்டாக்கி, அவற்றினுதவியைக்கொண்டு வியாகரணத்தைச் செய்யுமாறு அருள்புரிந்தன னென்பதும்;— பூர்வத்தில் மகாமுனிவர்கள் பலர் சேர்ந்து ஸம்ஸ்கிருதபாஷையை அபிவிருத்திசெய்பவராய்க் காசியில் வடமொழிச்சங்க மொன்று தாபித்து நடத்திவருகையில், அச்சங்கப்புலவருள் ஒருவராகிய அகத்தியனார் மற்றைப்புலவர்களோடு பலகாலுந் தருக்கஞ்செய்துகொண்டு வந்து ஒருநாள் அவர்களோடு மாறுகொண்டு, அவர்களிறுமாப்பை அடக்கும்பொருட்டுச் சிவபெருமானிடஞ்சென்று தம்கருத்தை வெளியிட்டுச் சற்றுநேரம் பேசிக்கொண்டிருக்கையில், தாம் நின்ற மண்டபமுழுவதும் திவ்வியபரிமளமொன்று வீச, அகத்தியர் பரமசிவனை நோக்கி 'சுவாமி! இவ்வாசனை ஏது?' என்று வினவ, பரமசிவன் அவரை அம்மண்டபத்தின் ஓர் மூலைக்கு அழைத்துக்கொண்டு போய்க் குவியலாய்ப் போட்டிருந்த சில ஏட்டுப்பிரதிகளைக் காட்டவே, அவற்றைக் கண்டமாத்திரத்தில் மதுரமென்று அருத்தங்கொள்ளும் 'தமிழ், தமிழ்' என்னும் இன்பமான பெயரைச் சொல்ல, உடனே பரமசிவன் இந்தப் பாஷைக்கு ஆதாரவிதிகள் இவ்வேட்டுப்பிரதிகளி லுள்ளன வென்று எடுத்துக்கொடுத்து உபதேசிக்க, தத்க்ஷணமே தக்ஷிணத்திலுள்ள பொதிய மலைக்குப் போய்த் தனிவாசஞ் செய்து அவ்விதிகளைக்கொண்டு பேரகத்தியம் சிற்றகத்தியம் என்னும் இலக்கணநூல்களை இயற்றி, அவற்றைத் தம்முதல்மாணாக்கராகிய தொல்காப்பியர் முதலிய பன்னிருவர்க்குங் கற்பித்தருளித் தமிழ்ப்பாஷையைத் தழைத்தோங்கச் செய்தன ரென்பதும்—இங்கு அறியத்தக்கன.

ஆதிகாலத்தில், ஸம்ஸ்க்ருதம் வடதிசையில் இமயமலைப் பிராந்தத்தில் கங்காதீரத்தில் காசிமுதலிய இடங்களில் விசேஷமாய் வழங்கிவந்ததனால் 'வடமொழி' என்றும்; நிலங்கடந்த நெடுமுடியண்ணலாகிய திருமாலை நோக்கி உலகம் தவஞ்செய்து வீடு பெற்ற திருமலையாகிய திருவேங்கடத்துக்குத் தெற்கில் வழங்குதலாலும், தென்னாடாகிய பாண்டியநாட்டில் அகத்தியமுனிவராலும் பாண்டியவரசர்களாலும் சங்கப்புலவர்களாலும் செழிப்பாக மிக்க

அன்புடன் வளர்க்கப்பட்டதனாலும் தமிழ் 'தென்மொழி' என்றும் பெயர் பெறும். விடை - வ்ருஷம்; இலக்கணம் - லக்ஷணம்; வடசொற் சிதைவுகள். உரைத்தாங்கு - உரைத்து ஆங்கு எனப் பிரித்து - உரைத்தால் ஆங்கு என்ற தன் எச்சத்திரிபாகவாயினும், உரைத்ததாங்கு எனப் பிரித்து - தொகுத்தல் விகாரமென்றாயினும் இலக்கணங்கூறுவர். இயல் என்பதற்கு - இயற்றமிழில் வல்ல என்று பொருளுரைத்தலும் ஒன்று; இப்பொருளில், இயலென்றது - மற்றை இசைத்தமிழ் நாடகத்தமிழ் என்ற இரண்டற்கும் உபலக்ஷணம். பொதியமலைக்கு மலயமலையென்று ஒருபெயர். திடம் - த்ருடம் என்ற வடசொல்லின் சிதைவு. பாஷையென்பது - வடமொழியிற் பெண்பாற்சொல் லாதலால், 'தென்சொல்மகள்' என்றும், மேன்மேலும் வளரும்நிலையிலிருத் தல்பற்றி, 'தென்சொல்மடமகள்' என்றும் கூறினர். (உ)

[இதுவும் அடுத்தகவியும் - தமிழின் சிறப்பைத் தெரிவிக்கும்.]

3.—(இ - ள்.) கண் நுதல் பெரு கடவுளும் - நெற்றிக்கண்ணையுடைய பரமசிவனும், கழகமோடு அமர்ந்து - புலவர்குழாத்தோடு கூடியிருந்து, பண் உற தெரிந்து ஆய்ந்த - அழகுபெற ஆராய்ந்து சீர்திருத்திய, இ பசு தமிழ் - செவிக்கினிய இந்தத்தமிழ்ப்பாஷை, ஏனை மண்ணிடை சில இலக்கணம் வரம்பு இலா மொழிபோல் - மற்றும் பூலோகத்திலேயுள்ள இலக்கண வமைதியில்லாத சிலபாஷைகள் போல, எண்ணிடை பட கிடந்தது ஆ-கணக் கிலே பொருந்த வுள்ளதாக, எண்ணவும் படுமோ - நினைக்கவுந்தகுமோ? [தகாது]; (எ - று.)—இது, நாட்டுப்படலத்தின் ருள - ஆவது செய்யுள்.

சிவபெருமான் இறையனாரென்று பெயர்பூண்டு சங்கப்புலவருள் தாமும் ஒருபுலவராயிருந்து ஆராய்ந்த பெருஞ்சிறப்பையுடைய இந்தத் தமிழ்ப்பாஷை யை இலக்கணக்கட்டுப்பாட்டிற்கு உள்ளடங்காது பேருக்குமாத்திரம்பாஷை யாய் நிலவுலகத்தில் வழங்குகிற சிலபாஷைகளைப்போலச் சாமானியமாக நினை த்தல், சிறிதுந்தகா தென்பதாம். ஈசுவரசம்பந்தம் பெற்றமையே, இப்பாஷை யின் பெருஞ்சிறப்புக்குக் காரணமா மென்க. எண்ணிடைப்படக்கிடத்தல் - பாஷையென்று கணக்கிடற்கு மாத்திரம் உரியதாதல். (ங)

4.—(இ - ள்.) தொண்டர் நாதனை-அடியார்க்குத் தலைவனாகிய சிவபெரு மானை, தூதிடை விடுத்ததும் - (பரவையாரின் ஊடலைத் தீர்த்தற்பொருட் டுச் சுந்தரமூர்த்தி நாயனார்) தூதனுப்புதற்குக் கருவியாயிருந்ததும், முதலை உண்ட பாலனை அழைத்ததும் - (இன்னும் அந்நாயனார் திருப்புக்கொளியூரில்) முதலையினால் விழுங்கப்பெற்ற சிறுவனை மீட்டுத்தருதற்குக் கருவியாயிருந்த தும், எலும்பு பெண் உரு ஆ கண்டதும்-(திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார்) எலும்பைப் (பூம்பாவை யென்னும்) பெண்ணினது ரூபமாகச் செய்வதற்குக் கருவியாயிருந்ததும், மறை கதவினை திறந்ததும் - (பின்னும் அந்நாயனார் வேதாரணியத்தில்) வேதங்களினாற் சாத்தப்பட்ட கதவுகளைத் திறத்தற்குக் கருவியாயிருந்ததும், (ஆகிய இத்தகைய அரும்பெருந் தொழில்கள் நிகழ்தற் குக் காரணமாயிருந்தது), கன்னி தண் தமிழ் சொலோ-அழிவில்லாத இனிய தமிழ்ப்பாஷையோ? (அன்றி), மறு புலம் சொற்களோ - மற்றை நிலங்க ளில் வழங்குகிற வேறுபாஷைகளோ? சாற்றீர் - சொல்லுங்கள்; (எ - று.)— இது, நாட்டுப்படலத்தின் ருஅ - ஆவது செய்யுள்.

இத்தகைய அற்புதங்களை நிகழ்த்துவதற்குத் தெய்வத்தன்மை வாய்ந்த தமிழ்ப்பாஷை யொன்றுக்குமாத்திரம் இயலுமே யன்றி, மற்றை எந்தப் பாஷைக்கும் இயலா தென்பதாம்.

'தொண்டர் நாதனைத் தூதிடைவிடுத்த தமிழ்' என்றது - தமிழ்க்கவி பாடும் புலவராகிய சுந்தரமூர்த்தி நாயனார் வேண்டுகோளின்படியே சிவபெரு

மான் இருமுறை பரவையாரிடத்துத் தூதுசென்றதனு லாகும். அந்நாயனுர் தமிழ்ப்புலவராதலால், அவர் சிவபெருமானை வேண்டியதும் அத்தமிழ்ப்பாஷை யினுலே யாதல் ஒருதலையென்க. 'முதலையுண்ட பாலனை யழைத்தது தமிழ்' என்றது—"உரைப்பாருரை யுகந்துள்க வல்லார் தங்க ளுச்சியாய், அரைக்கா டரவர் ஆதியுமந்தமுமாயினுய், புரைக்காடு சோலைப்புக்கொளியூரவிநாசியே, கரைக்கான்முதலையைப் பிள்ளைதரச்சொல்லு காலனையே" என்று பாடிய மாத்திரத்தில் முதலைவிழுங்கிய பாலன் மீண்டு வந்ததனு லாகும். தொண்டர் நாதனைத் தூதிடைவிடுத்த சரித்திரத்தையும், முதலையுண்டபாலனையழைத்த சரித்திரத்தையும் - சுந்தரமூர்த்திநாயனுர் வரலாற்றிற் காண்க.

**எலும்பு பெண்ணுருவாகக் கண்ட கதை:**— மயிலாப்பூரிலே சிவநேச ரென்ற வைசியர் தமதுமகளாகிய பூம்பாவையைச் சம்பந்தமூர்த்திநாயனுர்க்கு உரிமையாகக்கருதி வளர்த்துவருகையில், ஒருநாள் அப்பெண் பாம்புதீண்டி இறக்க, அவளை நாயனுரது உடைமையாகக் கருதியிருந்ததுபற்றி, அவளைத் தகனஞ்செய்த எலுமபை எடுத்தெறிந்துவிடாமல் நாயனுர்வருமளவுஞ் சேமஞ் செய்துவைக்கக்கருதி ஒரு குடத்தி லிட்டுக் கன்னிமாடத்திலிருத்திப் பாது காத்துவருகையில், நாயனுர் திருவொற்றியூர்க்கு எழுந்தருளிய செய்தியைச் செவியுற்று மகிழ்ச்சியோடு சிவநேசர் எதிர்கொள்ள, சம்பந்தர் அத்திருமயி லைக்குவந்து சுவாமிதரிசனஞ்செய்து பூம்பாவை செய்தியை அறிந்து, அக் குடத்தை வருவித்து "மட்டிட்டபுன்னை" என்னும் பதிகம் பாடி அவ் வெலும்பைப் பெண்ணுக்கியருளினர். பிறகு சிவநேசர் அவளை மணஞ்செய்து கொள்ளும்படி சம்பந்தரை வேண்ட, நாயனுர் 'நாம் அவளை உய்வித்ததுபற் றித் தந்தைமுறையாகுதலால் தகாது' என்று மறுத்திட்டன ரென்பதாம்.

**மறைக்கதவினைத்திறந்த வரலாறு:**—சம்பந்தர் அப்பர் என்ற இருவரும் வேதாரணியத்தையடைந்து ஆலயத்தினுட்புக்கு, வேதங்கள் அருச்சித்துச் சாத்தினநாள்முதல் திறக்கமுடியாமல் அடைக்கப்பட்டேயிருக்கின்ற திரு வாயிலுக்குமுன்வந்து அக்கதவைநீக்கமாட்டாமையால் அடியார்கள் வேருெரு பக்கத்தில் ஓர்வாயிலிட்டு அதன்வழியே செல்கின்றுர்க ளென்பதைக் கேட் டறிந்த பின்பு, அப்பழையகதவு திறக்கும்படி அப்பமூர்த்தி திருப்பதிகம் பாட, அது திறக்கப்படாமல் தாழ்க்க, அதுகண்ட அப்பர் "இரக்கமொன் றிலீர்" என்று திருக்கடைக்காப்பிலே பாடி வணங்கியவுடனே கதவு திறக் கப்பட்டது. பிறகு இருவரும் சுவாமிதரிசனஞ் செய்து வெளிவந்தபின்பு, அப்பர்வேண்டுகோளின்படியே அக்கதவு அடைக்கப்படுதற்பொருட்டுச் சம் பந்தமூர்த்தி பதிகம் பாடத்தொடங்கி முதற்பாட்டுப் பாடியமாத்திரத்தில் கதவு அடைத்தது. அன்று தொடங்கி அத்திருக்கதவு திறத்தலும் அடைத் தலுமாகிய வழக்கம் என்றும் நிகழலாயிற் றென்பதாம். (ச)

---

## காஞ்சிப்புராணம்.

காஞ்சீபுரத்திலுள்ள சிவதலங்களின் மகிமையைக் கூறுவது; இரண்டு காண்டமுடையது: இதன் முதற்காண்டம் - இரண்டாயிரத்தெழுநூற்றுநாற் பத்துமூன்று செய்யுளையும், இரண்டாங்காண்டம் - இரண்டாயிரத்துநூற்றுப் பத்துச்செய்யுளையு முடையன. முதற்காண்டத்துக்கு முதனூல் - வடமொழி ஸ்காந்தபுராணத்து ஸநத்குமாரஸம்ஹிதை: இரண்டாங்காண்டத்துக்கு முத னூல் - பிரமாண்டம் முதலிய வேறுபுராணங்கள். காஞ்சியென்ற பெயர் - பிரமனுற் பூஜிக்கப்பட்ட தலமென்று பெயர் பெறும்: காஞ்சியென்னும் மாத் தை யுடைமைபற்றிவந்த பெயருமாம்: இதற்கு மற்றும் பலவாறும் பொருள் கூறப்படும்.

## நூலாசிரியர்.

இதன் முதற்காண்டஞ் செய்தவர் சிவஞானமுனிவர். இவர், பாண்டிய நாட்டிலே பாபநாசத்தைச்சார்ந்த விக்கிரமசிங்கபுரத்திலே சைவவேளாள வருணத்திற் பிறந்தவர். இவரது தந்தையார் - ஆனந்தக்கூத்தர்; தாய் - மயிலம்மை. இச் சிவஞானமுனிவரது இயற்பெயர் - முக்களாலிங்கர். திருவாவடுதுறையாதீனத்துப் பின்வேலப்பதேசிகரது சிஷ்யர் இவர்; தென்மொழியோடு வடமொழியிலும் மிக்கதேர்ச்சிபெற்றவர்; கவிபாடுதல், உரையியற்றுதல், மொழிபெயர்த்தல், வசனநடையெழுதுதல், பிறர்கொள்கைகளைக் கண்டித்தல் இவைகளிலெல்லாம் மிகவல்லவர்; துறவறம்பூண்டவர்.

இவரது மதம் - சைவம்.

இவர்இருந்த காலம் - கஅ0—வருஷத்துக்கு முன்.

இவரது சரித்திரச்சுருக்கம்:—இவர் மிக்கஇளமையிலே ஒருநாள் பாடசாலையினின்று வீட்டுக்குத் திரும்பிவரும்போது, அவ்வீதிவழியாகத் திருவாவடுதுறைமடத்துச் சிலமுனிவர்கள் செல்ல, இச்சிறுவர் அவர்களைநோக்கி 'தேவரீர்கள் அடியேன்கிருகத்துக்கு வந்து அமுதுசெய்து போகவேண்டும்' என்று வேண்டி அவர்களை அழைத்துக்கொண்டுபோயினர். அம்முனிவர்களைக் கண்டவுடன் மயிலம்மையாரும் அவர்கட்கு அன்புடன் அமுதளித்து உபசரித்தனர். அவ்வாறு தமதுவிருப்பத்தின்படி அமுதளித்துஉபசரித்த தாயின்செயலுக்கு மகிழ்ந்து சிறுவராகிய முக்களாலிங்கர் "அருந்ததியென்னம்மை யடியவர்கட்கென்றுந், திருந்தவமுதளிக்குஞ் செல்வி—பொருந்தவே, ஆனந்தக்கூத்த ரகமகிழத் தொண்டுசெய்த, மானந் தவாத மயில்" என்னும் வெண்பாவைப் பாடினர். இவ்வாறு இளமைப்பருவத்திலேயே பேரறிவும் கல்வித்திறமுமுடையவரான இவர், தமதுதாய்தந்தையரின் அநுமதிபெற்று மேற்குறித்த முனிவர்களுடனே திருவாவடுதுறையாதீனத்துக்குச் சென்று, ஆதீனமுதற்குரவராகிய நமச்சிவாயமூர்த்திகளைத் தரிசித்து, பின்வேலப்பதேசிகரை வணங்கி அவரிடத்தே சிவதீக்ஷையும் சிவஞானமுனிவரென்னுந்தீக்ஷாநாமமும் பெற்று இலக்கியஇலக்கணங்களிலும் சைவசித்தாந்தசாஸ்திரங்களிலும் தேர்ந்து அம்மடாதீனத்துத்தம்பிரானுய் விளங்கினர்.

இவர்செய்த நூல்கள் - தொல்காப்பியப்பாயிரவிருத்தி, தொல்காப்பிய முதற்சூத்திர விருத்தி, சித்தாந்தப்பிரகாசிகை மொழிபெயர்ப்பு, தமிழ்ச் சிவஞானபோதத்துக்குத் திராவிடமகாபாஷ்யம், சிவஞானபோதச்சிற்றுரை, சிவஞானசித்தியார் ஸ்வபக்ஷத்துக்குப் பொழிப்புரை, சுலோகபஞ்சகமொழிபெயர்ப்பு, சிவதத்துவவிவேகமொழிபெயர்ப்பு, தர்க்கசங்கிரக அன்னம்பட்டீயமொழிபெயர்ப்பு, தர்க்கசங்கிரகதீபிகை மொழிபெயர்ப்பு, காஞ்சிப்புராணத்தின் முதற்காண்டம், திருவேகம்பரந்தாதி, திருமுல்லைவாயிலந்தாதி, கலசைப்பதிற்றுப்பத்தந்தாதி, இளசைப்பதிற்றுப்பத்தந்தாதி, குளத்தூர்ப்பதிற்றுப்பத்தந்தாதி, குளத்தூர் அமுதாம்பிகை பிள்ளைத்தமிழ், சோமேசர் முதுமொழிவெண்பா, கலசைச் செங்கழுநீர்விநாயகர் பிள்ளைத்தமிழ், கச்சி ஆனந்தருத்திரேசர்பதிகம், திருவேகம்பர் ஆனந்தக்களிப்பு, செப்பறைப்பதி அகிலாண்டேசுவரி பதிகம், திருத்தொண்டர் திருநாமக்கோவை, பஞ்சாக்கர தேசிகர்மாலை, மறுப்பின்மறுப்பு, 'எடுத்து' என்னுஞ் சொல்லுக்கு இட்டவைரக்குப்பாயம், சிவசமவாதவுரைமறுப்பு, கம்பராமாயண முதற்செய்யுட் சங்கோத்தரவிருத்தி, இலக்கணவிளக்கச்சூறாவளி முதலியன.

சங்கரநமச்சிவாயப்புலவர் எழுதிய நன்னூல்விருத்தியுரையைத் திருத்தியவரும் இவரே.

இவர்மாணுக்கர்கள் - காஞ்சிப்புராணத்தின் இரண்டாங்காண்டம் முத

லியன இயற்றியவராகிய கச்சியப்பமுனிவர், இலக்கணஞ் சிதம்பரநாதமுனிவர், தொட்டிக்கலைச் சுப்பிரமணியமுனிவர், இராமநாதபுரம் சோமசுந்தரம்பிள்ளை, காஞ்சீபுரம் சரவணபத்தர் முதலானவர்கள்.

[இதுவும், அடுத்தசெய்யுளும் - வடமொழியும் தென்மொழியும் ஒத்தசிறப்பின என்பதைத் தெரிவிக்கும்.]

5.—(இ - ள்.) 'கொல் ஏறு பாகர் - (பகைவரைக்) கொல்லவல்ல இடபத்தை வாகனமாகவுடைய சிவபிரான், வடமொழியை - ஸம்ஸ்க்ருதபாஷையின் இலக்கணத்தை, பாணினிக்கு - பாணிநிமுனிவர்க்கு, வகுத்தருளி - விரிவாக உபதேசித்தருளி,—அதற்கு இணை ஆ - அதற்குச் சமமாக, தொடர்பு உடைய - (அவ்வடமொழியின்) சம்பந்தத்தையுடைய, தென்மொழியை - தமிழ்ப்பாஷையின் இலக்கணத்தை, உலகம் எலாம் தொழுது ஏத்தும் குடமுனிக்கு - எல்லாவுலகத்தவரும் வணங்கித் துதிக்கும் மேன்மைவாய்ந்த அகஸ்தியமஹரிஷிக்கு, வலி உறுத்தார் - உறுதியாக உபதேசித்தார், எனில் - என்றால்,—கடல் வரைப்பின் - கடலாற்சூழப்பட்ட இந்நிலவுலகத்தில், இதன் பெருமை - இந்தத்தமிழ்ப்பாஷையின் பெருமையை, யாவரே - எவர்தாம், கணித்து அறிவார் - இவ்வளவென்று எண்ணியறிபவர்? (எ - று.)—இது—தழுவக்குழைந்தபடலம் - உசஅ.

ஆதியில் சிவபெருமான் ஸம்ஸ்க்ருதபாஷையின் லக்ஷணங்களைப் பாணிநி மஹரிஷிக்கு உபதேசித்து அவ்வடமொழியைப் பரவச்செய்ததுபோலவே, தமிழ்மொழியினிலக்கணங்களையும் அகஸ்தியமஹரிஷிக்கு உபதேசித்து இத்தமிழ்மொழியையும் பரவச்செய்தன ராதலால், இத்தமிழின்பெருமை வடமொழியைப்போலவே ஒருவராலும் அளவிட்டுச்சொல்லுதற்கு அரிதாகுமென்பதாம். ஊர்வசியைக்கண்டுகாதலித்த மித்திரன் வருணன் என்னும் இருவரது அநுக்கிரகத்தால் ஒருகுடத்திலிருந்து பிறந்தவ ராதலின், அகத்தியர் 'குடமுனி' எனப்பட்டார். "மறைமுதற் கிளந்த வாயான் மதிமுகிழ் முடித்த வேணி, யிறைவர்தம் பெயரை நாட்டி யிலக்கணஞ் செய்யப் பெற்றே, யறைகடல்வரைப்பிற் பாடையனைத்தும் வென்று ஆரியத்தோடு, உறழ்தரு தமிழ்த்தெய்வம்" என்ற சீகாளத்திபுராணம் காணத்தக்கது. (ரு)

6.—(இ - ள்.) இரு மொழிக்கும் - (வடமொழியும் தென்மொழியு மென்னும்) இரண்டுபாஷைகளுக்கும், கண் நுதலார் முதல் குரவர் - (நெருப்புக்) கண்ணைத் திருநெற்றியிலுடைய சிவபிரான்தாமே முதலாசிரியர்; இயல் வாய்ப்ப - இலக்கணம் பெற, இரு மொழியும் வழிப்படுத்தார் - இரண்டுபாஷைகளையும் ஒழுங்குபடுத்தினவர்கள், முனி வேந்தர் - இருடிச்சிரேஷ்டர்களேயாவர்; இசை பரப்பும் இரு மொழியும் - புகழைப்பரவச்செய்கிற இரண்டு பாஷைகளையும், தழீஇயினர் - ஆதரித்தவர்கள், ஆன்றவரே-பெரியோர்களே; என்றால்—,—இ இரு மொழியும் நிகர் என்னும் இதற்கு ஐயம் உளதேயோ - இந்தஇரண்டுபாஷைகளும் (ஒன்றோடொன்று) சமத்வமுடையன வென்னும் இக்கொள்கைக்கு (ஏதேனுஞ்) சந்தேக முண்டோ? [இல்லை யென்றபடி]; (எ - று.)—இது, தழுவக்குழைந்தபடலம், உசகூ.

பரமசிவன் பாணிநிமுனிவர்க்கு வடமொழியிலக்கணங்களையும், அகத்தியமுனிவர்க்குத் தென்மொழியிலக்கணங்களையும் ஆதியில் உபதேசித்தருளினர். வடமொழிக்கு முதலில் இலக்கணமருளியவர் - பாணினி; தென்மொழிக்கு - அகத்தியர். வடமொழியைத்தழுவியவர் - வரருசி பதஞ்சலி வால்மீகி வியாசர் முதலிய முனிவர்களும், போசன்முதலிய அரசர்களும், காளிதாசன் முதலிய மகாகவிகளும்; தென்மொழியைத்தழுவியவர் - தொல்காப்பியர் காக்கைபாடினியார் சிகண்டி அதங்கோட்டாசான் முதலிய முனிவர்களும், பாண்டியாதிஅரசர்களும், நக்கீராதிதெய்வப்புலவர்களும். (சு)

# மனோன்மணீயம்.

இந்த நூற்பெயருக்கு - மனோன்மணி யென்பவளது சம்பந்தமான தென்று பொருள்; மனோன்மணியினது சரித்திரத்தைச் சொல்வதொரு நூலென்று கருத்து. இது - "முதனூல் கருத்தன் அளவு மிகுதி, பொருள் செய்வித்தோன் தன்மை முதல் நிமித்தினும், இடுகுறியானும் நூற்கு எய்தும் பெயரே" என்ற வகைகளுள் பொருளாற் பெயர்பெற்றது; பொருள் - கூறப்படும் விஷயம். [இனி, மனோன்மணீயம் என்பதை மநோந்மநீயம்என்னும் வடமொழித் தத்திதாந்தநாமத்தின் திரிபாகவே கொள்ளவேண்டு மென்றும், (பகைவரது) மனத்தைக் கலக்குதல்பற்றிச் சிவபிரானுக்கு 'மநோந்மநன்' என்று (இது, மநஸ் உந்மந என்பவை புணர்ந்தது.) ஒருபெயராதலின், மநோந்மநீஎன்பது அதன்பெண்பாலாய்ப் பார்வதியைக் குறித்து, அது இங்கு அவ்வுமாதேவிபோலக் கற்பு முதலிய நற்குணங்களிற் சிறப்புடைய ஒருமகளுக்கு உவமையாகுபெயர்வகையாலோ, தெய்வப்பெயரை மனிதர்க்கிடுவது பரிசுத்திகர மென்ற காரணத்தாலோ வழங்கிய தென்றும், அல்லது (தன் அழகினால் ஆடவர்) மனத்தைக் கலக்குபவ ளென இது இவளுக்குக் காரணக் குறியுமாகலா மென்றும் அறிக. அன்றி, மநஸ் + மணி எனப் பிரித்து, (காண்பவர்) மனத்திற்கு இரத்தினம்போல அழகுசெய்து விளங்குபவ ளென்று பொருள் கொள்வோ மெனின்,—சிரஸ் + மணி = சிரோமணி என்பது போல அது வடமொழிவிதிப்படி மநோமணி எனப் புணருமேயன்றி இடையில் நகர மெய்தோன்றுதற்கு வழியில்லை யாதலின், அங்ஙனங்கொள்ள இடமில்லை யென விடுக்க. இனி, மநஸ் + உந்மணி எனப் பிரித்து, மனத்திற்குச் சிறந்த மணிபோன்றவ ளென்றலும் ஒன்று. உத் + மணி = உந்மணி; உத் - உத்கிருஷ்டம். மநஸ் + உந்மணி = மநோந்மணியென ஸகரவீறு கெட்டுக் குணசந்தி பெற்றுப் புணர்ந்து வழங்குவதை, சிரஸ் + உதயம் = சிரோதயம், பயஸ் + உததி = பயோததி, தபஸ் + உக்கிரம் = தபோக்கிரம் என வழங்குந் தொடர்கள்போலக் கொள்க; வடமொழியில் ஸகரவீற்றன சிலசொற்கள் அகரவீற்றாக வழங்குதலு முண்டு.]

இந்நூலை இயற்றியவர் - திருவனந்தபுரம் மகாராஜாகாலெஜில் போதகாசரியராயிருந்த ம-ா-ா-ஸ்ரீ ராய்பகதூர் சுந்தரம்பிள்ளை (யம்-ஏ) என்பவர். இவர், காலஞ்சென்று பதினேழுவருஷங்களாகின்றன.

# தமிழ்த்தெய்வவணக்கம்.

1.—(இ - ள்.) நீர் ஆரும் கடல் உடுத்த - நீர்நிரம்பிய கடலை ஆடையாகத் தரித்த [கடல்சூழ்ந்த], நிலம் மடந்தைக்கு - பூமிதேவிக்கு, எழில் ஒழுகும் சீர் ஆரும் வதனம் என திகழ் - அழகுமிக்க சிறப்புப்பொருந்திய முகம் போல் விளங்குகிற, பரதகண்டம் இதில் - இந்தப்பரதகண்டத்தில், தெக்கணமும் - தென்புறமும், அதில் சிறந்த திராவிடம் நல் திருநாடும் - அத்தென்தேயத்திற் சிறப்புற்ற அழகிய தமிழ்நாடும், (முறையே), தக்க சிறு பிறை நுதலும் - தகுதிபெற்ற [சிறந்த] இளம்பிறைச்சந்திரன்போன்ற நெற்றியும், தரித்த நறு திலகமுமே - (அந்நெற்றியில்) அணிந்த வாசனைவீசுகிற திலகமுமாகும்; அ திலகம் வாசனை போல் - அந்தத்திலகத்தின் பரிமளம்போல, அனைத்து உலகும் இன்பம் உற எ திசையும் புகழ் மணக்க - எல்லாவுலகத்துயிர்களும் (உணர்ந்து) இன்பமடையும்படி எல்லாத் திக்குக்களிலும் கீர்த்தி மணம் வீச, இருந்த - (அத்திராவிடநாட்டில்) அரசு வீற்றிருந்த, பெரு தமிழ் அணங்கே - சிறந்த தமிழ்த்தெய்வமே! (எ - று.)

கடல், பூமி, பரதகண்டம், தக்ஷிணம், திராவிடநாடு, புகழ், தமிழ் என்பவற்றினிடத்து—முறையே ஆடை, மகள், முகம், நெற்றி, திலகம், மணம், தெய்வம் என்ற தன்மையை யேற்றிக்கூறியதனால், உருவகவணி. நாபிமகாராசாவினது பௌத்திரனும், ருஷபமகாராசனது புத்திரனுமான பரதமகாராசனால் ஆதியில் ஆளப்பட்ட இடமாதல்பற்றி, பரதகண்டமெனப் பெயர். பரதகண்டம் இந்தியாவும், அதில் தெக்கிணம் சென்னை யிராசதானியும், அதில் சிறந்த திராவிடநாடு "குணகடல் குமரி குடகம் வேங்கடம், எனுநான் கெல்லையி னிருந்தமிழ்" என்றபடி கிழக்கில் கடலும் தெற்கில் கன்னியாகுமரியும் மேற்கில் குடகநாடும் வடக்கில் திருவேங்கடமலையும் என்னும் நானகு எல்லைக்கு உட்பட்டுச் சேரநாடு சோழநாடு பாண்டியநாடு தொண்டைநாடு நடுநாடு முதலிய பகுப்புக்களையுடைய இடமும் எனக் காண்க. சென்னை யிராசதானி, தக்ஷிண இந்தியா வென்றும் தென்னிந்தியாவென்றும் வழங்கப்படும். இனி, தக்கிணம் - விந்தியமலைக்குத் தெற்கிலுள்ள இடம்முழுவதுமென்னவுமாம்; என்றது - தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம், துளுவம் என்னும் பஞ்ச திராவிடபாஷைகள் வழங்கும் இடங்களை யாம்.

திலகம் - நெற்றிப்பொட்டு. நறுந்திலகம் என்றதனால், கஸ்தூரித்திலகமெனக்கொள்க. "நுதலடி நுசுப்பென மூவழிச் சிறுகி" என்ற கலித்தொகையடியின்படி மகளிர்க்கு நெற்றி சிறுத்திருத்தல் உத்தமவிலக்கண மாதலால், 'சிறுபிறைநுதல்' எனப்பட்டது. நெற்றிக்குப் பிறையுவமை- வடிவத்துக்கும், ஒளிக்கும், அழகுக்கும் என்க. தெக்கணம் - தக்ஷிணம் என்ற வடசொல்லின் சிதைவு. த்ரவிடமென்னும் வடமொழி தமிழ் எனச் சிதைந்தது; இனி, தமி என்னும் வினைப்பகுதியடியாப் பிறந்து வினைமுதற்பொருளுணர்த்தும்விகுதி குன்றி ழகரவொற்று எழுத்துப்பேறு பெற்றுத் தனக்கு இணையில்லாத பாஷை யெனப் பொருள் தருவதென்பாரும், இனிமையென்னும் பொருளுணர்த்தும் தமிழென்னுஞ் சொல் எல்லாப்பாஷைகளினும் இனியதாகிய இப்பாஷைக்கு ஆகுபெயராய் வழங்கிற் றென்பாரும், மற்றைப் பல பாஷைகளி லில்லாமல் தன்னிடத்தில் மாத்திரமே தனியாகவுள்ள ழகரமென்னும் எழுத்தை யுடைய தென அன்மொழித் தொகைக் காரணக்குறி யென்பாரும் உளர். அணங்கு - தெய்வமகள். பாஷையென்பது - வடமொழியிற் பெண்பாற்சொல்லாதலாலும், சரசுவதி பெண்பாலாதலாலும், தமிழ்த்தெய்வத்தைப் பெண்பாலாக் கூறினர். (க)

2.—(இ - ள்.) ஓர் எல்லை அறு - (வடிவு குணம் செயல் முதலியவற்றில்) ஒருஎல்லையற்ற, பரம் பொருள் - பரப்பிரஹ்மம், பல உயிரும் - அநேக சீவராசிகளையும், பல உலகும் - (அவற்றிற்கு ஆதாரமான) அனேகலோகங்களையும், படைத்து அளித்து துடைக்கினும் - சிருஷ்டித்தல் பாதுகாத்தல் அழித்தல் என்னுந் தொழில்களைச் செய்தாலும், முன் இருந்த படி இருப்பதுபோல் - (தன்வடிவம் மூப்படையாமல்) முன்பு இருந்த நிலைப்படியே இருத்தல்போல, கன்னடமும் களி தெலுங்கும் கவின் மலையாளமும் துளுவும் - கன்னடம் களித்தற்குக்காரணமான தெலுங்கு அழகிய மலையாளம் துளுவம் என்ற பாஷைகள், உன் உதரத்து உதித்து எழுந்து ஒன்று பல ஆயிடினும் - உனது திருவயிற்றினின்று உண்டாகி வளர்ந்து அவையொவ்வொன்றும் பலவகையாகச் செழித்தாலும், ஆரியம்போல் உலகவழக்கு அழிந்து ஒழிந்து சிதையா - ஸம்ஸ்கிருதபாஷை உலகத்தவரால் வழங்கப்படுதலின்றி இறந்துபோனதுபோலக் கெட்டிடாத, உன் சீர் இளமை திறம் - உனது சிறந்த இளமையின்பெருமையை, வியந்து - அதிசயித்து, செயல் மறந்து - செய்கையொழிந்து, வாழ்த்துதும் - வாழ்த்துவோம்; (எ - று.)—ஏ - ஈற்றசை.

ஓர்எல்லையறு - முதலிடைகடையில்லாத வெனினுமாம். பரம்பொருள் - எல்லாப்பொருள்களினுஞ் சிறந்ததாகிய பொருள். செவிக்கு இனிமைதந்து மனத்தை மகிழ்விக்கிற சங்கீதத்துக்குச் சிறந்ததென்று, தெலுங்குக்கு 'களி' என்ற அடைமொழி கொடுத்தார்போலும் தெலுங்கு - த்ரிலிங்கமென்னும் வடசொல்லின் சிதைவு; ஸ்ரீகாளஹஸ்தி, பீமேசவரம், ஸ்ரீசைலம் என்னும் மூன்று சிவலிங்கஸ்தானங்களை எல்லையாகவுடைய தேசத்துப் பாஷையாதல் பற்றி, 'திரிலிங்கம்' என்று பெயர். மலையாளத்துக்கு 'கவின்' என்ற அடைமொழி கொடுத்ததனால், கவியினது தேசாபிமானம் விளங்கும்; இந் நூலாசிரியர் மலையாளத்தில் வாழ்ந்தவராதலை, இப்பாட்டில் சரிதகத்தில் "கொடுமலையாளக்குடியிருப்புடையேன்" என்றதனாலும் அறிக. கன்னடம் முதலாகக் காட்டப்பட்ட பாஷைகளுக்கெல்லாம் தமிழே தாய்ப்பாஷை யென்பது, பலபாஷைகளைத் தெள்ளிதினுணர்ந்தோரது துணிபு. ஒன்று பல வாதல் - பழங்கன்னடம், புதுக்கன்னடம்; அச்சதெலுங்கு, மிசிரதெலுங்கு முதலாகக் காண்க. ஆர்யம் என்னும் வடசொல், சிறந்ததெனப் பொருள் படும்; வடமொழிக்குக் காரணக்குறி; விந்தியமலைக்கும் இமயமலைக்கும் இடையிலுள்ள புண்ணியபூமியாகிய ஆரியாவர்த்தத்தில் வாழ்ந்த ஆரியர்க ளுக்கு உரியதாயிருந்த பாஷையென்றுங் கொள்க. ஆரியபாஷைக்கு உலக வழக்கழிந்தொழிதல் - இப்பொழுது எந்தத்தேசத்துக்குஞ் சொந்தப் பாஷை யாக வழங்காமை; (Dead Language.) இதனால், சகலபாஷைகளுக்கும் ஆதிபாஷை யென்று சிலராற் சிறப்பித்துக்கூறப்படும் வடமொழியின் குறை பாட்டை எடுத்துக்காட்டினார். இப்படி பலபாஷைகளாகிய பலமக்களைப் பெற்றுவளரச்செய்தும் மாறாத தமிழ்த்தெய்வத்தின் இளமையை, "மும்மை யினுயிர்கள்பெற்றும் முகிழ்முலைக்கன்னியாகும், அம்மை," "பெற்றாள்சக தண்டங்களனைத்தும் மனைபெற்றும், முற்றாமுகிழ்முலையாள்" எனப்பட்ட இறைவியின் இளமையோடு ஒப்பிடுக. செயல்மறத்தல் - மிகுந்த வியப்பின் காரியம். 'வாழ்த்துதும்' என்பதைத் தனித்தன்மைப்பன்மை யென்று வது, நூலாசிரியர் தம்மோடொத்த தமிழ்மக்களனைவரையும் உளப்படுத்திய தென்றுவது கொள்க.

இந்த ஆறடித்தாவுகளிரண்டும் - நாற்சீர்களுங் காய்ச்சீர்களாய் வந்தன.

---

## கம்பர் வரலாறு.

ஸ்ரீராமபிரானது திவ்வியசரித்திரத்தைத் தமிழிற் பெருங்காப்பியமா கப் பாடியவர், கவிச்சக்கரவர்த்தியாகிய கம்பர். இவர், சோழநாட்டிலே திரு வழுந்தூரில் நான்காம்வருணத்திற் பிறந்தவர். இவரது சமயம், வைஷ்ண வம். இவர், இளமையிலேயே தந்தை இறந்ததனால், போஷகரில்லாமல் தாயுடனே திருவெண்ணெய்நல்லூரிற் சடையப்பரென்னும் வள்ளலினிடம் போய்ச்சேர்ந்து, அவரால் ஆதரிக்கப்பெற்று, அவர்வீட்டுப்பிள்ளைகளுக்குப் பாடசாலைக்குப் புத்தகமெடுத்துக்கொண்டு போகின்றவராய் அவர்களுடன் படித்துவந்தனர். இவர்க்குச் சரசுவதிகடாக்ஷமும், கம்பரென்னும் பெயரும் உண்டானதைப்பற்றி, ஒரு கதை உண்டு. இவர் அங்ஙனம் பள்ளியிற் படித்து வருநாளில், அவ்வுபாத்தியாயர், வைரபுரமென்னுங்கிராமத்திலுள்ள தமது கம்பங்கொல்லை தினைக்கொல்லைகளைக் காப்பதற்காகத் தம்மிடத்திற் படிக் கும் பிள்ளைகளைத் தினம் ஒவ்வொருவராக அனுப்பும் முறைப்படி ஒருநாள் இப்பிள்ளையை அனுப்ப, இவரும் அன்று காலைதொடங்கிக் கொல்லையிற் காத்து வந்து, நல்லவெயிலில் நித்திரைவந்ததனால், அக்கொல்லையினருகி

விருந்த காளிகோயிலிற் போய்ப் படுத்துத்தூங்கினர். தூங்குகையிற் கொல்லேயில் ஒரு குதிரை வந்து மேய்வதாகக் கனாக்கண்டு எழுந்து பார்க்க, கனவிற்கண்டபடியே பயிரை அவ்வூராள்வோனாகிய காளிங்கராயனது குதிரை மேயக்கண்டு, அதனைத்துரத்தியும் அதுபோகாமையால் அஞ்சிநடுங்கிக் காளிகோயிலுக்கெதிரே போய் நின்று புலம்பினார். அதுகண்டு காளி கருணைகூர்ந்து பிரசன்னையாகி, 'பிள்ளாய்! அழாதே: உன் நாவை நீட்டு' என்றாள். இவர் அங்ஙனமே நீட்ட, தேவி அதிற் பீஜாக்ஷரத்தை எழுதி அநுக்கிரகித்தனள். பின்பு இவர் திரும்பிச் சென்று கொல்லேயிற் போய்ப்பார்க்க, அப்பொழுதும் குதிரை அப்புறம்போகாது அங்கேயே மேய்ந்துகொண்டிருந்தது. அப்பொழுது, காளிகாதேவியின் அநுக்கிரகத்தாற் சரசுவதீகடாக்ஷம்பெற்ற இவரது வாக்கினின்றும், அதுகண்ட கோபத்தால் தற்செயலாக, "வாய்த்த வயிரபுர மாகாளி யம்மே கேள், காய்த்த தினைப்புனத்துக்காலைவைத்துச்— சாய்த்துக், கதிரைமாளத்தின்ற காளிங்கராயன் குதிரை, மாளக் கொண்டு போ" என்று ஒருகவி உண்டாயிற்று. அங்ஙனம் இவர் பாடியவுடனே அக்குதிரை கீழே விழுந்து இறந்தது. அதனைக் கேட்டறிந்த உபாத்தியாயர் ஓடிவந்து பார்த்து, 'அதிகாரியின் கோபத்திற்கு ஆளாவோமே!' என்று கலக்கமுற, இவர், முன்பாடிய வெண்பாவின் நான்காம் அடியை "குதிரை மீளக் கொண்டுவா" என்று திருப்பிப்பாட, மாண்ட குதிரை மீண்டெழுந்தது. காளிங்கராயன் இதனைக் கேள்வியுற்று, அக்காலத்தில் அரசு செலுத்திவந்த குலோத்துங்கனென்னுஞ் சோழனுக்கு அறிவிக்க, அவன் அச்சிறுவனைத் தான் பார்க்கவேண்டுமென்று வருவித்தனன். அங்ஙனமே இவர் கோலுங் கையுமாய்ப் போய்நிற்க, அவன், *'இக்கம்பனா அங்ஙனஞ் செய்தவன்?' என்றனன். இதனாலும், கம்பங்கொல்லேயைக் காத்ததனாலும், இவர்க்குக் **கம்பர்** என்று பெயராயிற்று: இதற்கு வேறுசில காரணமுங் கூறுவர். இவர் பின்பு சோழராஜனது ஸம்ஸ்தான வித்துவான்களுக்குத் தலைவராகி இராசசபைக்கு நாள்தோறுஞ்சென்று சமயோசிதமாகவுஞ் சாதுரியமாகவும் பலகவிகள் பாடிப் பிரசங்கிக்கத் தலைப்பட்டு "புவிச் சக்ரவர்த்திகள் போற்றிப்பழிச்சுங், கவிச்சக்ரவர்த்தியாங் கம்பர்" என்பது போன்ற பலவிருதுகூறப் புலமைசெலுத்திவந்தனர்.

கம்பர் இராமாயணம்பாடியது, சடையப்பவள்ளலினது பெருமுயற்சியால். எங்ஙனமெனின்,—அவர் கம்பரது புலமைத்திறம் விளங்குமாறு இவரை ஏதாவது ஒருபிரபந்தம் பாடும்படி செய்யவேண்டுமென்று சோழராசனுக்கு அறிவிக்க, அவன், தனியே ஒருவரைப் பாடச்செய்தலினும் இருவரை ஒருசேரப் பாடும்படி செய்தாற் புலமைத்திறம் நன்றாகவிளங்கு மென நினைத்து, கம்பர் ஒட்டக்கூத்தர் இருவரையும் 'ஸ்ரீராமசரித்திரத்தைத் தமிழ்ப் பாவினாற் பாடிமுடிக்கவேண்டும்' எனக் கட்டளையிட்டனன். கட்டளையிட்ட பின்பும் கம்பர் பலநாள் பாடாமலிருந்து, ஒட்டக்கூத்தர் சுந்தரகாண்டம்வரையிற் பாடிமுடித்து யுத்தகாண்டம் பாடிக்கொண்டிருக்கையில், மறுபடி அரசனால் ஏவப்பட்டு, இவ்விராமாயணம்பாடினார். பாடுகையிற் பிரதிதினம் இராப்பொழுதெல்லாம் வடமொழிப்புலவர்களை வைத்துக்கொண்டு வால்மீகம், அத்யாத்மம், போதாயநம் முதலிய ராமாயணங்களையும், பலபுராணங்களையும் ஆராய்ச்சிசெய்து, பகற்பொழுதில் நாளொன்றுக்கு எழுநூறுபாடலாக யுத்தகாண்டம்வரையில் ஆறுகாண்டமும் பதினாயிரத்துச் சொச்சம் பாடல்களாற் பதினைந்துநாளிற் பாடிமுடித்தனர். அங்ஙனமிருக்கையில் ஒருநாள், கம்பர், ஒட்டக்கூத்தர் வீட்டுவாயிலின்வழியே போகையில், அவர், தாம்செய்த இரா

* கம்பன் - கம்புடையவன்; கம்பு=கொம்பு: உலகவழக்கு.

மாயணம் கம்பராமாயணத்திற்குமுன் தலையெடாதென அறிந்து அதனைக் கிழித்தெறிந்துகொண்டிருக்க, கண்டு, அவ்விடஞ் சென்று, அதற்குள் யுத்த காண்டம்வரையிற் கிழிபட்டுப் போகவே, மிச்சமான உத்தரகாண்டத்தை அப்படியே கிழியாது வைத்திருக்க வேண்டிக்கொண்டார்; அதுவே, கம்ப ராமாயணத்திற்கு ஏழாவது காண்டமாக வழங்கலாயிற்று. பின்னர் இவ்விரா மாயணம், திருவரங்கம் பெரியகோயிலில் மேட்டழகியசிங்கர் சிரக்கம்பஞ் செய்யுமாறு நாதமுனிகள் திருவோலக்கத்தில் அரங்கேற்றப்பட்டது. கம்பர் ஸ்ரீரங்கத்திற் சென்று ஸ்ரீமந்நாதமுனிகளின் அநுமதிப்படி சுபதினத்திலே அரங்கேற்றத்தொடங்குகையில், ஸ்ரீரங்கநாதன் 'நீ நம் சடகோபனைப் பாடினையோ? பாடினால்தான் நாம் உனது ராமாயணத்தைத் திருவுள்ளம்பற்றுவோம்; இல்லாவிடின் அது நமக்கு அங்கீகாரமாகாது' என்று அருளிச்செய்ய, உடனே கம்பர் நூறுகட்டளைக்கலித்துறையிற் சடகோபரந்தாதியைப் பாடினர்.

## கம்பர் தனியன்கள்.

நூலுள் அடங்காது தனியே பாயிரமாய் நிற்றல்பற்றி, 'தனியன்' என்று பெயர்: 'அன்' விகுதி - உயர்வுப்பொருளது. இவை பத்துச்செய்யுளும் கம்பரைப்பற்றிப் பிறர் பாடியவை.

1.—(இ - ள்.) இராவணன் மேல் - இராவணன்மீது, அம்பு நாட்டு - பாணங்களைப் பிரயோகித்த, ஆழ்வான் - (யாவரையும்) ஆட்கொண்டு பாது காப்பவனாகிய ஸ்ரீராமபிரானது, அடி - திருவடிகளை, பணியும் - வணங்கிக் கவிபாடித் துதிக்கின்ற, ஆதித்தன் - சூரியன் போன்றவராகிய, கம்பநாட்டாழ்வான் - கம்பநாட்டாழ்வாரது, கவி - செய்யுளானது,—தராதலத்தில் உள்ள - பூமியிலுள்ள, தமிழ் குற்றம் எல்லாம் - தமிழ்ப்பாடல்கட்கு நேரக்கூடிய குற்றங்களெல்லாவற்றையும், அராவும் - போக்குகின்ற, அரம் ஆயிற்று அன்றே - அரமென்னுங் கருவியைப்போன்றதாகுமல்லவோ! (எ-று.)—அன்றே-தேற்றம்.

கம்பருடைய பாடல்கள் - தமிழ்ப்பாடல்களில் நேருங் குற்றமொன்றும் தம்மிடத்துச் சேரப்பெறாமல் விளங்குமென்பதாம். கம்பர்செய்த கவியைப் படித்துப் புலமைபெற்ற புலவர்கள் பாடும் கவிகளும் குற்றமின்றி விளங்குமென்பார் 'தமிழ்க்குற்றமெல்லாம் அராவும் அரமாயிற்று' என்று உருவகஞ் செய்தாரெனினுமாம்.

ஆழ்வான் = ஆள்வான்; போலி. சூரியன் தனது கிரணங்களினால் இருளைக் கடிந்து எங்கும் ஒளியை வீசுதல்போல, கம்பர் தாமும் தமது பாடல்களினால் மனிதரது அறியாமையை நீக்கி நன்ஞானத்தைப் பரவச்செய்தலால், கம்பரை ஆதித்தனென்றே உருவகமாகக்கூறினார். தராதலம்-வடமொழித்தொடர். ஆதித்தன் = ஆதித்யன்: வடமொழித் தத்திதாந்த நாமம்: அதிதி யென்பவளது புதல்வனென்று பொருள்படும். எம்பெருமானது குணக்கடலில் ஆழ்ந்து ஈடுபடுபவரென்ற காரணம்பற்றி, கம்பரை 'ஆழ்வார்' என்றார். (க)

2.—(இ - ள்.) வாழ்வு ஆர் - வாழ்வுக்குக்காரணமாகிய செல்வம் நிறையப்பெற்ற, திருவெண்ணெய்நல்லூர் - திருவெண்ணெய் நல்லூரிற் பிறந்த, சடையப்பன் - சடையப்பமுதலியாரென்பவர், வாழ்த்து பெற - (கம்பராமாயணத்துள் ஆங்காங்கு) புகழப்பெறவும்,—தாழ்வார் உயர - இழிந்த குலத்தவர்களும் (கம்பராமாயணத்தைப்படிப்பதனால்) மேன்மைபெறவும்,—புலவோர் அகம் இருள் தான் அகல - தமிழ்ப்புலவர்களது மனத்திலுள்ள அஜ்ஞாந அந்தகாரம் ஒழியவும்,—(கம்பராமாயணத்தைச் செய்யும் பொருட்டு),— பேரழ் - (இருளைப்) பிளக்கின்ற, வார் - நீண்ட, கதிரின் - கிரணங்களையுடைய சூரியன் போல, உதித்த - தோன்றிய, தெய்வம் புலமை கம்பநாட்டுஆழ்வார் - தெய்வத்

தன்மையான கல்வியறிவு நிரம்பிய கம்பருடைய, பதத்தை - திருவடிகளை, சிந்திப்பவர்க்கு - தியானிப்பவர்கட்கு, யாதும் - எதுவும், அரியது அன்று- அருமையானதல்ல ; (எ - று.)

கம்பரது திருவடிகளைத் தியானிப்பவர் இஷ்டசித்தி பெறுவரென்பதாம். கம்பர் திருவவதரித்து இராமாயணம் பாடியதனால், அவரை யாதரித்த சடையப்பமுதலியார் அக்கம்பராமாயணத்தில் ஆங்காங்குப் புகழப்பெறுவதும், கம்பராமாயணத்தில் வல்லவரான இழிகுலத்தவரும் அவ்விராமாயணத்தைப் பிரசங்கஞ்செய்து சபையில் நன்குமதிப்புப்பெற்றுப் பெருமைபெறுவதும், சாதாரணமான தமிழ்ப்புலவர் இக்கம்பரது ராமாயணத்திற் பயின்று தேர்ச்சி பெற்றுத் தமது அறியாமை நீங்கப்பெறுவதும் நிகழ்ந்தனவென்க. இனி, சடையப்பன் வாழ்த்து பெற - (கம்பரை ஆதரித்ததனால்) சடையப்பமுதலியார் உலகத்தவரால் புகழ்ச்சிபெறவும், தாழ்வார் உயர - (நான்காம்வருணத்தவரான) வேளாளர் (தங்கள் சாதியிற் கம்பர் பிறந்ததனால்) மேன்மைபெறவும் என்றும் கூறலாம்.

வாழ்வு - அதன்காரணமாகிய செல்வத்துக்குக் காரியவாகுபெயர். திருவெண்ணெய் நல்லூர் - நடுநாட்டி லுள்ளது. புலவர்=புலவோர்: ரகரவீற்று அயல் அகரம் ஓகாரமாயிற்று; [நன் - பொது 2-உரை.] கதிர் - சினையாகுபெயரால், கதிரவனை யுணர்த்திற்று. ஸரஸ்வதியின் கடாக்ஷம்பெற்றவ ராதலால், கம்பரை 'தெய்வப்புலமைக் கம்பநாட்டாழ்வார்' என்றார். சிந்திப்பவர்க்கு + யாதும்=சிந்திப்பவர்க்கியாதும்: குற்றியலிகரம். (உ)

3.—(இ - ள்.) அம்பு - (கங்காநதியின்) நீரையும், அரா-சர்ப்பங்களையும், அணி - தரித்திருக்கின்ற, சடை - (கபர்த்தமென்னும்) ஜடையையுடைய, அரன் - சிவபிரானும், அயன் - பிரமதேவனும், முதல் - முதலாகிய, உம்பரால் - தேவர்களாலும், முனிவரால் - தேவருஷிகளாலும், யோகரால் - (அணிமா முதலிய அஷ்டஸித்திகளைப் பெற்ற) சித்தர்களாலும், உயர் இம்பரால்-சிறந்த இவ்வுலகத்தவர்களாலும், பிணிக்க அரு - கட்டுதற்கு அரியதான, இராம வேழம் - இராமனாகிய யானையை, சேர் - (தம்மனத்தில்) சேர்த்துக் கட்டிய, கம்பர்ஆம் புலவரை - கம்பரென்று பெயர்பெற்ற மகாவித்துவானை, கருத்து இருத்துவாம் - மனத்திற் கொண்டு தியானிக்கக்கடவோம், (யாம்).

ஒருவராலும் கட்டுதற்குஅரிய ஸ்ரீராமனென்னும் மத்தகஜத்தைத் தமது மனத்திற் பக்தியாகியகயிற்றினாற் கட்டிய கம்பரை நாம் எப்போதும் மனத்திற் கொள்வோமென்பதாம். "பத்துடையடியவர்க்கெளியவன் பிறர்களுக்கு அரிய வித்தகன்" என்றபடி எம்பெருமான் பக்திமான்கட்கு அன்றி மற்றையோர் எத்துணைச்சிறப்புடையோராயினும் அவர்களால் அறிதற்கு அருமையனாதல்பற்றி, 'அரனயன்முதல் உம்பரால்...உயர்இம்பரால் பிணிக்கரும் இராமவேழம்' என்றார். யானையானது - ஒருநாள் கண்டோமென்று திருப்தியாயிருக்கவொண்ணாதபடி தினந்தோறுங் காணவேண்டுமென்னும் விருப்பத்தை யுண்டாக்குவதும், மிக்கசெருக்கையுடையதும், கைக்கெட்டினாரை நினைத்தபோது எடுத்துக் கழுத்திலே வைத்துக்கொள்வதும், தன்மீது ஏறநினைப்பார்க்குத் தன்னைப் பணிந்துகொடுப்பதும், உகவாதாரை ஆராயாது கிழித்துப்போடுவதும், தன்னைக்கட்டுமாறு தானே கயிற்றையெடுத்துக்கொடுப்பதுமாக விருக்கும்; அவ்வாறே, எம்பெருமான் தினந்தோறும் காணத்தக்க வடிவழகும், எப்பொருட்கும் இறைவனாயிருக்குந்தன்மைதோன்றக் கொண்டிருக்குஞ் செருக்கும், நித்தியசம்சாரியொருவன் தன்னைச்சரணமடைந்ததே காரணமாக அவனுடைய குற்றங்களைப் போக்கியமாகக்கொண்டு தன்னைக்கொடுத்தால் கேட்பாரில்லாத ஸ்வாதந்திரியமும், கர்மம் ஜ்ஞாநம் முதலிய உபாயங்களால் தன்னை அடையவிரும்பினவர்க்கும் தன்னைக்கொடுக்

குஞ் சீலமும், தனது அடியார்களின் விரோதிகளை ஆராயாது அழிக்கின்ற விரோதிநிரஸநஸ்வபாவமும், தன்னைக்கட்டுப்படுத்துமாறு பக்தியைத் தானே தருகிற ருசிஜநகத்வமும் உடையவனுமவன். ஆதலால், இராமபிரானை மூன்றுவகைபற்றி வேழமாக உருவகஞ்செய்தார்.

அரன் = ஹரன்: அழித்தற்கடவுள். அயன் = அஜன்: திருமாலினிடத்தினின்று தோன்றியவன். உம்பர் - மேலிடம்: மேலிடத்திலுள்ளார்க்கு, இடவாகுபெயர்: இம்பர்என்பதும் இவ்வாறே. பிணிக்கரும் - பிணிக்கவரும் என்பதன் தொகுத்தல். புலம் - தேர்ந்தஅறிவு: அதனை யுடையவர் - புலவர். இருத்துவாம் - கவிகட்குஉரிய தனித்தன்மைப்பண்பை: படிப்பவரையுங் கூட்டிய உளப்பாட்டுத் தன்மைப்பன்மையுமாம்.

**சிவபெருமான் கங்கை தரித்த கதை:**—சூரியகுலத்துத்தோன்றிய பகீரத சக்கரவர்த்தி கபிலமுனிவரது கண்ணின் கோபத்தீக்கு இலக்காய் உடலெரிந்து சாம்பராகி நற்கதியிழந்த தனதுமூதாதையரான சகரபுத்திரர் அறுபதினாயிரம்பேரையும் நற்கதிபெறுவித்தற்பொருட்டு நெடுங்காலந் தவஞ்செய்து கங்காநதியைத் தேவலோகத்திலிருந்து கீழுலகத்துக்குக் கொணர்கையில், அதன் விசையோடுவரும் வெள்ளப்பெருக்கை ஏற்றுக்கொள்ளுதற்கு ஏற்ற வலிமை பூமிக்கு இல்லையென்ற காரணத்தால் அவ்வரசன் சிவபிரானைப் பிரார்த்திக்க, அவன் வேண்டுகோளின்படி அப்பெருமான் அந்நதியைச் சடைமுடியிலேற்றுப் பின்பு சிறிதுசிறிதாகப் பூமியில் விட்டருளினனென்பதாம். (௩)

4.—(இ - ள்.) சம்பு - சிவபிரான், அ நாள் - முற்காலத்தில், தன் உமை - தனது தேவியான பார்வதியினது, செவி - காதில், சாற்று - உபதேசித்த, பூ கொம்பு அனாள் கொழுநன் இராமன் பேர் - பூங்கொம்புபோன்றவளான சீதாதேவியினது கணவனாகிய ஸ்ரீராமபிரானுடைய திருநாமம், பம்ப - பரவும்படி, நாடு அழைக்கும் - தேசத்திலுள்ளாரெல்லாரும் விரும்பிப்படிக்கின்ற, கதை - ராமகதையை, பா செய்த - தமிழ்ப்பாடல்களாகச் செய்தருளிய, கம்பநாடன் - கம்பநாட்டாழ்வாரது, கழல் - திருவடித்தாமரைகளை, தலையில் கொள்வாம் - தலைக்கு அணியாகச் சூடுவோம், (யாம்); (எ - று.)

ஒருகாலத்தில் பார்வதீதேவி பரமசிவனை நோக்கி, 'எம்பெருமானது ஆயிரந்திருநாமங்களையும் எளிதாகக் கூறும் உபாயம் யாது?' என்று வினவ, பரமசிவன் 'ராம என்னுந் திருநாமத்தை உச்சரித்தால் அது ஆயிரந்திருநாமங்களையும் சொல்லியதற்கு ஈடாகும்' என்று உபதேசித்தன னென்பதை, பார்வத்யுவாச: "கேநோபாயேநலகுநா விஷ்ணோர்நாமஸஹஸ்ரகம் - பட்யதே பண்டிதைர்நித்யம் ஸ்ரோதும் இச்சாம்யஹம்ப்ரபோ"; ஈச்வரஉவாச: "ஸ்ரீராமராமராமேதி ரமேராமேமநோரமே - ஸஹஸ்ரநாமதஸ்துல்யம் ராமநாம வராநநே" என்ற மகாபாரதத்தா லறிக.

இச்செய்யுளில் திரிபு என்னுஞ் சொல்லணி காண்க. திரிபாவது - முதலெழுத்துமாத்திரம் வேறுபட்டிருக்க, இரண்டுமுதலிய சிலஎழுத்துக்கள் ஒன்றிநின்று பொருளால்வேறுபட்டு வருவதாம். பொதுநகரத்துக்கும் சிறப்புணகரத்துக்கும் வரிவடிவில் மிக்கவேறுபாடு இருப்பினும், ஒலிவடிவில் மிக்க வேறுபாடு இல்லாமைபற்றி, யமகம், திரிபு, சிலேடை இவற்றில் நகரணகரங்களை அபேதமாகக்கொண்டு அமைத்தல் மரபாதலால், 'கொம்பனாள்' என்று இருக்கவேண்டிய இடத்து, 'கொம்பநாள்' எனப்பட்டது. சம்பு - அடியார்க்குச்சுகத்தையுண்டாக்குபவன்; சம் - ஸுகம். அந்நாள் - அநாள்: தொகுத்தல். இளமையில் பார்வதீதேவி சிவபிரானைநோக்கித் தவஞ்செய்யச் சென்றபோது பெற்றோர் 'அம்ம! வேண்டா' என்று தடுத்ததுபற்றி, பார்வதீதேவிக்கு உமையென்று பெயராயிற்று; [உ - அம்ம! மா - வேண்டா என்று பொருள்]. இராமன் + பேர் = இராமப்பேர்; "சிலவிகாரமா முயர்திணை." (௪)

5.—(இ - ள்.) நாரதமுனிவன் - நாரதமஹர்ஷி, நாரணன் விளையாட்டு எல்லாம் - திருமாலினது அமிசமான ஸ்ரீராமபிரானது சரித்திரம்முழுவதையும், கூற - உபதேசிக்க, அறிந்த - அதனைக்கேட்டு உணர்ந்த, வான்மீகி என்பான் - வால்மீகியென்று சிறப்பித்துச்சொல்லப்பட்ட முனிவன், ஆரணம் கவிதை செய்தான் - (அதனை) வேதத்தோடொத்த [மிகச்சிறந்த] வடமொழிச்சுலோக ரூபமாகச் செய்தான்; (பிறகு அந்த ராமசரித்திரத்தை), சீர் அணி சோழ நாட்டு திருவழுந்தூருள் வாழ்வோன் - சிறப்புப்பெற்ற சோழநாட்டிலுள்ள திருவழுந்தூரென்னுந்தலத்திற் பிறந்துவாழ்பவனும், காரணம் கொடையான் - புகழ்க்குக்காரணமான ஈகைக்குணமுடையவனுமாகிய, கம்பன் —, தமிழினால் கவி செய்தான் - தமிழ்ப்பாடலாகச் செய்துமுடித்தான்; (எ - று.)

ஸ்ரீநாரதபகவான் உபதேசித்த ராமசரித்திரத்தை ஸ்ரீவால்மீகிமுனிவர் ஸ்ரீராமாயணமென்ற ஆதிகாவியமாக வடமொழியில் இயற்ற, கம்பர் அம்முதனூலையே துணையாகக்கொண்டு, தமிழ்ப்பாஷையிலும் ராமசரித்திரத்தை அதன்வழிநூலாகப் பாடினரென்பதாம். வால்மீகிமுனிவர், வேதத்தில் மாத்திரம் வழங்கிவந்த சந்தசைக்கொண்டு முதலில் வடமொழியில் ஸ்ரீராமாயணத்தைச் செய்தனராதலால் 'ஆரணக்கவிதைசெய்தான்' என்றாரென்னலாம். வால்மீகிமுனிவர் ஆதிகாவியமாகிய ஸ்ரீராமாயணத்தைச் செய்தபின்புதான் லோகத்திலே வடமொழியிற் சுலோகங்கள் செய்யப்பட்டனவென அறிக.

நாரணன் - நாராயணன் என்ற வடமொழியின் திரிபு: பிரளயப்பெருங்கடலைத் தனக்குஇருப்பிடமாகக் கொண்டவனென்றும், எல்லாப்பொருள்கட்கும் இருப்பிடமானவனென்றும், எல்லாப்பொருள்கட்குந் தான் ஆதாரமானவனென்றும், மற்றும்பலவாறும் உரைக்கப்படும். காத்தற்றொழிற்கடவுளாகிய திருமால் தருமத்தைநிலைநிறுத்துதற்பொருட்டு ஸ்ரீராமனாகத் திருவவதரித்தனனாதலின், அப்பிரானை 'நாரணன்' என்றே கூறினார். நாரதன் - தத்துவஞானத்தை உபதேசிப்பவனென்றும், உலகத்தாரது ஒற்றுமையைக் கெடுப்பவனென்றுங் காரணப்பொருள்படும். கவிதா - வடசொல். என்பான் - முதல்வேற்றுமைச் சொல்லுருபு. காரணக்கொடையான் என்பதை, கார் அண் அ கொடையான் என்று பிரித்து - மேகத்தையொத்த கைம்மாறு கருதாத கொடையையுடையவனென்று உரைப்பாருமுளர். (ரு)

6.—(இ - ள்.) அன்று - முற்காலத்தில் [தேவர்கள் தமது செல்வத்தையிழந்தகாலத்தில்], அம்பிலே - திருப்பாற்கடலிலே, சிலையை - மந்தரமலையை, நாட்டி - (மத்தாக) நிறுத்தி, (கடைந்து), அமரர்க்கு - தேவர்கட்கு, அமுதம் - அமிருதத்தை, ஈந்த - கொடுத்தருளிய, தம் பிரான் என்ன - தமது தலைவனை திருமாலைப்போலவே,—கவி சக்கிரவர்த்தி - கவிகளுக்குட் சிறந்தவனும், கம்பநாடு உடைய வள்ளல் தானும் - கம்பநாட்டுக்குத் தலைமைபூண்டு வரையாதுகொடுப்பவனுமாகிய கம்பனும், இன்று - இக்காலத்தில், தமிழிலே - தமிழ்ப்பாஷையாகிற திருப்பாற்கடலில், தாலை நாட்டி - தனது நாவாகிய மந்தரமலையை நிறுத்தி(க் கடைந்து), நம்பு பாமாலையாலே - (யாவரும்) விரும்புகின்ற பாக்களின் தொகுதியினால், பார்மேல் - இந்நிலவுலகத்தில், நரருக்கு - மனிதருக்கு, அமுதம் ஈந்தான் - (ராமசரித்திரமாகிய) அமிருதத்தை யுண்டாக்கிக்கொடுத்தான்; (எ - று.)

முற்காலத்தில் திருமால் மந்தரமலையைக்கொண்டு திருப்பாற்கடலைக் கடைந்து விண்ணுலகத்தவரான தேவர்கட்கு அமிருதத்தைக் கொடுத்தது போல, இக்காலத்தில் கம்பரும் தமது நாவினால் தமிழ்க்கடலைத்துழாவிக் கடைந்து ஸ்ரீராமசரித்திரமாகிய அமிருதத்தை மண்ணுலகத்தவரான மனிதர்கட்குத் தந்தருளினரென்பதாம். உவமையணி. "மறைப்பாற்கடலைத் திருநாவின் மந்தரத்தாற்கடைந்து, துறைப்பாற்படுத்தித் தமிழாயிரத்தின்சுவையை

முதம், கறைப்பாம்பணைப்பள்ளியானன்பரீட்டங் களித்தருந்த, நிறைப்பான்" என்றதனோடு இதனை ஒருசார் ஒப்பிடுக.

அம்பு - நீர்: இலக்கணையால், கடலை யுணர்த்தும்; இங்கு, சிறப்பாய், திருப்பாற்கடலைக் குறித்தது. சிலை - கல்லினாலாகிய மலைக்கு, ஆகுபெயர்: தாலை=தாலுவை. 'கவிச்சக்ரவர்த்திபார்மேல்' என்ற பாடம் ஓசைக்குப் பொருந்தும். "நம்பும் மேவும் நசையாகும்மே" என்ப வாதலால், நம்பு என் பதற்கு - விரும்புகின்ற எனப் பொருளுரைக்கப்பட்டது. நம்பு பாமாலை - வினைத்தொகை.

பாற்கடல் கடைந்து அமரர்க்கு அமுதமீந்த கதை:—முன்னொரு காலத்தில், இவ்வண்ட கோளத்துக்கு அப்புறத்திலுள்ள விஷ்ணுலோகத்துச் சென்று திருமகளைப் புகழ்ந்து பாடி அவளால் ஒரு பூமாலை பிரசாதிக்கப் பெற்ற ஒரு வித்தியாதரமகள், மகிழ்ச்சியோடு அம்மாலையைத் தன்கை வீணையில் தரித்துக்கொண்டு பிரமலோகவழியாய் மீண்டுவருகையில் துர்வாசமகாமுனி எதிர்ப்பட்டு அவளை வணங்கித்துதிக்க, அவ்விஞ்சைமங்கை அம்மாலையை அம்முனிவனுக்கு அளித்திட்டாள். அதன் பெருமையை யுணர்ந்து அதனைச்சிரமேற்கொண்ட அம்முனிவன் ஆனந்தத்தோடு தேவலோகத்துக்குவந்து, மிக்க உல்லாசமாக ஐராவதயானையின்மேற் பவனிவந்து கொண்டிருந்த இந்திரனுக்கு அம்மாலையைக் கைநீட்டிக்கொடுக்க, அவன் அதனை அங்குசத்தால் வாங்கி யானையின்பிடரியின்மேல் வைத்தவளவில், அம்மதக்களிறு அதனைத் துதிக்கையாற் பிடித்து இழுத்துக் கீழெறிந்து காலால் மிதித்துத் துவைத்தது. அதுகண்டு முனிவரன் கடுங்கோபங்கொண்டு 'இங்ஙனஞ் செல்வச்செருக்குற்ற நினது ஐசுவரியங்களெல்லாம் கடலில் ஒளித்து விடக்கடவன' என்று சாபங்கொடுக்க, உடனே தேவர்செல்வம்யாவும் ஒழிந்தன. ஒழியவே, அசுரர் வந்து பொருது அமரரை வெல்வாராயினர். பின்பு இந்திரன் தேவர்களோடு திருமாலைச் சரணமடைந்து அப்பிரான் அபயமளித்துக் கட்டளையிட்டபடி அசுரர்களையுந் துணைக்கொண்டு மந்தரமலையை மத்தாக நாட்டி வாசுகியென்னும் பாம்பைக் கடைகயிறாகப்பூட்டிப் பாற்கடலைக்கடைகையில், வாசுகியின் வாலைப்பிடித்துக்கொண்ட தேவர்களும் தலையைப்பிடித்துக்கொண்ட அசுரர்களும் ஆகிய இருதிறத்தாரும் அதனை வலியப்பிடித்து இழுத்துக் கடையவல்ல வலிமையில்லாதவராய் நிற்க, அதுநோக்கித் திருமால் தான் ஒருதிருமேனியைத் தரித்துத் தேவர்கள் பக்கத்திலேயும் வேறொரு திருமேனியைத் தரித்து அசுரர்கள் பக்கத்திலேயும் நின்று பாம்பின் வாலையும் தலையையும் பிடித்து வலமும் இடமுமாக இழுத்து அமிருதமுண்டாகுமாறு கடைந்தருளி, பிறகு அதனினின்று தோன்றிய அமிருதத்தை மோகினியென்னும் பெண்வடிவங்கொண்டு அசுரர்களை மயக்கித் தேவர்கட்கே யீந்தனன் என்பதாம். இவ்வரலாற்றால், தன் சிரமம்பாராமல் தன்னைச் சரணமடைந்தாரைப் பரிபாலிக்கும் பகவானது கருணை வெளியாம். (சு)

7.—(இ - ள்.) எண்ணிய - கணக்கிடப்பட்ட, சகாத்தம் எண்ணூற்றேழின்மேல் - சாலிவாகநசகாப்தம் எண்ணூற்றேழாவது வருஷத்திற்குமேல், சடையன் வாழ்வு நண்ணிய - சடையப்ப முதலியார் வாழ்தல்பொருந்திய, வெண்ணெய்நல்லூர்தன்னிலே - திருவெண்ணெய்நல்லூரிலே, கம்பநாடன் - கம்பன்,— பண்ணிய - தான் இயற்றிய, இராம காதை - ஸ்ரீராமசரித்திரமாகிய ராமாயணத்தை,—பங்குனி அத்தம் நாளில் - ஒரு பங்குனிமாதத்து ஹஸ்தநக்ஷத்திரத்திலே, கண்ணியர் அரங்கர் முன்னே - (யாவராலும்) தியானிக்கப்படுகின்ற ஸ்ரீரங்கநாதரது சந்நிதியில், கவி அரங்கு ஏற்றினான் - வித்துவான்கள்திரண்டுள்ள சபையிலே யாவரையும் அங்கீகரிக்கும்படி செய்தான்; (எ - று.)

கண்ணிய அரங்கர் - மாலையைச்சூடிய திருவரங்கநாதருமாம். அரங்கேற்றுதலாவது - கவி தான்செய்த பிரபந்தத்தை வித்துவான்கள்பலரும் திரண்டுள்ள சபையிற் கொணர்ந்து படித்துக்காட்டி அவரவர்கள் கேட்கின்ற ஆட்சேபங்கட்கெல்லாம் தக்கசமாதானங்கூறி, அப்புலவர்களால் இந்நூல் குற்றமில்லாததே யென்று அங்கீகரிக்குமாறு செய்தலாம். காதை - கதை என்பதன் நீட்டல்; இனி, காதை - பாடல் என்று கொண்டு உரைப்பினுமாம்.

8.—(இ - ள்.) இம்பர்நாட்டில் - இந்நிலவுலகத்தில், செல்வம் எல்லாம் எய்தி - எல்லாச்செல்வங்களையும் அடைந்து, அரசு ஆண்டு இருந்தாலும் - அரசாட்சிசெய்துகொண்டிருந்தாலும்,— உம்பர்நாட்டில் - மேலுலகத்தில், ஓங்கு கற்பகம் கா நிழல் இருந்தாலும் - உயர்ந்து வளர்ந்த கற்பகமரச்சோலையினது நிழலில் வசித்தாலும்,—செம் பொன் மேரு அனைய - சிவந்த பொன்மயமான மேருபர்வதத்தைப்போன்ற, புயம் - தோள்களில், திறல் சேர் - வலிமையமைந்த, இராமன் - ஸ்ரீராமபிரானது, திருக்கதையில் - திவ்யசரித்திரத்தைக் கூறுகின்ற நூல்களுள், கம்பநாடன் கவிதையில்போல் - கம்பராமாயணப்பாடல்களிற் பயில்வதனால் மனங்களிப்பதுபோல, கற்றோர்க்கு - கற்றறிந்த வித்துவான்கட்கு, இதயம் களியாது - மனமானது திருப்தியடையாது; (எ - று.)

கம்பராமாயணமானது - கற்றறிந்த புலவர்கட்கு, இம்மைமறுமையின் பயன்களைக்காட்டிலும் மிக்கஇன்பத்தைத் தருமென்பதாம். (அ)

9.—(இ - ள்.) கழுந்தர் ஆய் - வில்லின்தழியைப் போன்றவர்களாய் [நெறிப்புக்கொண்டு], உன கழல் - உம்முடைய திருவடிகளில், பணியாதவர் - வணங்காத ராக்ஷஸர்களுடைய, கதிர்மணி முடிமீது - ஒளியைவீசுகின்ற இரத்தினங்களை யிழைத்துச் செய்யப்பெற்ற கிரீடங்களையணிந்த தலைகளின்மேல், அழுந்த - நன்றாகப்பதியும்படி, வாளிகள் தொடு - அம்புகளைப் பிரயோகித்த, சிலை - (கோதண்டமென்னும்) வில்லை யேந்திய, ராகவ - இராமபிரானே!— அபிநவ கவிநாதன் - (உன்விஷயத்தில்) புதுமையாகக் கவிபாடித் துதிக்கின்ற கம்பன்,—விழுந்த நாயிறு எழுவதன் முன் - அஸ்தமித்த சூரியன் உதிப்பதற்கு முன் [இராத்திரிவேளையில்], மறை வேதியருடன் - வேதம் வல்ல அந்தணர்களுடன், ஆராய்ந்து - (வால்மீகிராமாயணம் முதலிய ஸ்ரீராமசரித்திரத்தைக் கூறும் வடமொழி நூல்களை) ஆராய்ச்சிசெய்து, எழுந்த நாயிறு விழுவதன் முன் - உதயமான சூரியன் அஸ்தமிப்பதற்குள் [பகற்பொழுதில்], பாடினது கவி - பாடிய பாடல்கள், எழுநூறு - எழுநூறாகும்; (எ - று.)

கவிபாடினது எழுநூறு - ஒருமைபன்மை மயக்கம். கம்பர் இராப்பொழுதில் வடமொழியில் வல்லவர்களை உதவியாகக்கொண்டு ஸ்ரீராமசரித்திரத்தை ஆராய்ச்சி செய்து, பகற்பொழுதில் நாளொன்றுக்கு எழுநூறுபாடல் வீதம் ஆறுகாண்டங்களையும் பதினைந்துநாளிற் பதினாயிரத்துஐந்நூறு செய்யுள்களாற் பாடி முடித்தன ரென்பதாம். (கூ)

---

ஆழ்வார் நூற்றந்தாதி என்கிற

## சடகோபரந்தாதி.

சடகோபரது அந்தாதி என விரியும்; சடகோபர் விஷயமாக அந்தாதித் தொடையாற் பாடப்பட்டதொரு பிரபந்தம் என்பது பொருள்: இத்தொடர் மொழியில் தொக்குநின்ற ஆறும்வேற்றுமையுருபின் பொருளாகிய சம்பந்தம், விஷயமாகவுடைமை; விஷ்ணுபுராணம், விநாயகரகவல் என்பவற்றிற் போல. சடகோபரைப்பற்றிய அந்தாதி என விரித்தால், இரண்டாம் வேற்றுமை யுருபும் பொருளும் உடன்தொக்க தொகையாம்.

'சடகோபர்' என்பது - ஸ்ரீவைஷ்ணவமதத்திற் சிறந்த மெய்யடியார்களென்று கொண்டாடப்படுகிற * ஆழ்வார்கள் பன்னிருவரில் ஐந்தாமவரான நம்மாழ்வாரது திருநாமங்களி லொன்று. பாண்டியநாட்டில், தாமிரபர்ணி நதிதீரத்தி லுள்ளதான திருக்குருகூரில் வேளாளவருணத்தவராகிய திருவழுதிவளநாடரென்பவரது சந்ததியிலே காரியென்பவர்க்கு உடையநங்கையார் திருவயிற்றில் திருவவதரித்த இவர் பிறந்தபொழுதே தொடங்கி அழுதல் பால் குடித்தல் முதலிய குழந்தைச்செய்கையொன்றையுங் கொள்ளாமலே வாட்டமின்றிப் பரிபூர்ணராய் வளர்ந்து வருகிற ஆச்சரியத்தைத் தாய்தந்தையர் கண்டு இவரை அத்திருப்பதியிலுள்ள திருமாலின் திருக்கோயிலிற் கொண்டுபோய் விட, இவர் அங்கு இருந்த ஒருபுளியமரத்தின் கீழ்ச் சென்று வீற்றிருந்து பதினாறுபிராயமளவும் கண்திறவாமல் மௌனமாக எழுந்தருளியிருக்க பின்பு, மதுரகவிகள் இவ்வாழ்வாருடைய மகிமையை யறிந்து வந்து அடைந்து அடிமைத்தொழில் செய்துவருகையில், ஆழ்வார் இருக்கு யசுர் அதர்வணம் சாமம் என்ற நான்குவேதங்களின் சாரார்த்தங்கள் முறையே அமையத் திருவிருத்தம் திருவாசிரியம் பெரியதிருவந்தாதி திருவாய்மொழி யென்னும் நான்குபிரபந்தங்களை அருளிச்செய்து உலகத்தை உய்வித்தனரென்று வரலாற்றின் சுருக்கம் அறிக. கர்ப்பத்திலிருக்கிறபொழுது ஞானமுடையனவாயிருக்கின்ற குழந்தைகளைப் பிறந்தவுடனே தனதுஸ்பரிசத்தால் அஜ்ஞானத்துக்கு உள்ளாக்கி அழுதல் அரற்றுதல் முதலியன செய்யும்படி பண்ணிவிடுந் தன்மையதான சடமென்னும் வாயு, இவ்வாழ்வார் அவதரித்தபொழுது இவரையும் தொடுதற்கு வர, அப்பொழுது இவர் அதனை ஹுங்காரத்தால் ஒறுத்து ஓட்டி யொழித்ததனால், சடகோபர் என்று இவர்க்குத் திருநாமமாயிற்று: எம்பெருமானுடைய திவ்யமங்கள குணகணங்களாகிய அமுதவெள்ளத்திலே முழுகி மிகவும் ஈடுபட்டு நன்றாக ஆழ்ந்திடுபவராதல் பற்றி 'ஆழ்வார்கள்' என்று பெயர்பெற்ற பரமபாகவதர்களில் இவர் பிரதான ராதலால், 'ஆழ்வார்' என்பது இவர்க்குச் சிறப்புப்பெயராக வழங்கும். மாறன், பராங்குசன், வகுளாபரணன், திருநாவீறுடையபிரான், திருக்குருகூர்நம்பி, குருகைப்பிரான் முதலிய திருநாமங்களும் இவர்க்கு உண்டு.

அந்தாதி - அந்தத்தை ஆதியாகவுடையது; அன்மொழித்தொகை; வடமொழித்தொடர், தீர்க்கசந்தி: அந்த ஆதி எனப் பிரிக்க. அந்தாதியாவது - முன்நின்ற செய்யுளின் ஈற்றிலுள்ள எழுத்தாயினும் அசையாயினும் சீராயினும் அடியாயினும் அடுத்துவருஞ் செய்யுளின் முதலாக அமையும்படி பாடுவது; இங்ஙனம்பாடும் நூலினது ஈற்றுச்செய்யுளின் அந்தமே முதற் செய்யுளின் ஆதியாக அமையவைத்தல் மண்டலித்த லெனப்படும். இது, தொண்ணூற்றாறுவகைப் பிரபந்தங்களுள் ஒன்றாம். பதிற்றந்தாதி, நூற்றந்தாதி என்ற வகைகளில் இந்நூல், நூற்றந்தாதியாம்; அதாவது - நூறுவெண்பாவினாலேனும், நூறு கட்டளைக்கலித்துறையினாலேனும் அந்தாதித்தொடையாற் கூறுவது. இந்நூல் - அந்தாதித்தொடையா லமைந்த நூறு கட்டளைக் கலித்துறைகளை யுடையது. சொற்றொடர்நிலைச்செய்யுள் பொருட்டொடர்நிலைச்செய்யுள் என்ற வகையில், இது சொற்றொடர்நிலை; "செய்யுளந்தாதி சொற்றொடர் நிலையே" என்றார் தண்டியலங்காரத்தும்.

ஆசிரியர் தொல்காப்பியனார் செய்யுளியலில் "விருந்தே தானும் புதுவது கிளந்த யாப்பின்மேற்றே" என்பதனால், 'விருந்துதானும் பழங்கதை

---

* இவர்கள் சரித்திரத்தை, 'ஆழ்வார்கள் சரித்திரம்' என்ற வசன நூலிற் பரக்கக்காணலாம்.

மேலதன்றிப் புதிதாகத் தாம்வேண்டியவாற்றால் தொடுக்கப்படுந் தொடர்நிலை மேலது' என்று கூறினமையின், இந்நூல், அங்ஙனங்கூறிய விருந்தா மென்று உணர்க. அச்சூத்திரவுரையில் அந்தாதியும் கலம்பகமும் முதலாயின உதாரணங் காட்டப்பட்டுள்ளவாறுங் காண்க. இனி, இதனைச் சிறுகாப்பியத்துள் அடக்குவர் பிற்காலத்தார். இப்பிரபந்தம், தோத்திரரூபமானது.

## சடகோபரந்தாதியிலுள்ள கம்பர் தனியன்.

10.—(இ-ள்.) தேவில் - (பிரமன் ருத்திரன் இந்திரன் முதலிய) தேவர்களனைவருள்ளும், சிறந்த - மேம்பட்டவனான, திருமாற்கு - ஸ்ரீமந்நாராயணனுக்கு, தக்க - தகுந்த, தெய்வம் கவிஞன் - தெய்வத்தன்மையுள்ள கவிபாடவல்ல புலவன், பாவில் சிறந்த திருவாய்மொழி பகர் பண்டிதனே - எல்லாப் பாடல்களிலும் மேம்பட்ட திருவாய்மொழியென்னுந் திவ்யப்பிரபந்தத்தைத் திருவாய்மலர்ந்தருளிய ஞானபண்டிதரான நம்மாழ்வாரேயல்லது வேறில்லை; (அவ்வாறே), நாவின் சிறந்த அ மாறற்கு தக்க நல் நா வலவன் - அங்ஙனம் பாடவல்ல நாவினாற்சிறந்த அச்சடகோபர்க்குத் தக்க கவிபாடவல்ல சிறந்த புலவன், பூவில் சிறந்த ஆழ்வான் கம்பநாட்டுப் புலமையனே - இந்நிலவுலகத்திற் சிறந்த கம்பநாட்டாழ்வாரென்னும் வித்துவானேயல்லது வேறில்லை.

தேவாதிதேவனான திருமாலின் வைபவத்துக்கு ஏற்றபடி கவிபாடவல்லவர் சடகோபரே; அச்சடகோபருடைய வைபவத்திற்கு ஏற்றபடி கவிபாடவல்லவர் கம்பநாட்டாழ்வாரே என்பது கருத்து. ஏகாரமிரண்டும் - பிரிநிலையோடு, தேற்றம் இச்செய்யுளில் முன்னிரண்டடியை உபமானமாகவும், பின்னிரண்டடியை உபமேயமாகவுங் கொண்டு எடுத்துக்காட்டுவமையணியென்னலாம்.

திருமால் - திருமகள்கொழுநனான ஸ்ரீமகாவிஷ்ணு. தேவிற்சிறந்த திருமால் — "பூவிற்குத் தாமரையே பொன்னுக்குச் சாம்புநதம், ஆவிற்கு அருமுனியா யானைக்கு அமரரும்பல், தேவில்திருமா லெனச்சிறந்ததென்பவே" என்றார் கவிசாகரப்பெருந்தேவனாரும். தெய்வக்கவிஞன் - எல்லாப்பொருளையும் உள்ளபடி உணர்ந்து அங்ஙனமே உரைக்குந் திவ்யஞானத்தையுடைய கவி; பரதேவதையான திருமாலின் திருக்கல்யாணகுணங்களையே பாடுங் கவி. இனி, ஆழ்வாரை 'தெய்வக்கவிஞன்' என்றற்கும் திருவாய்மொழியை 'பாவிற்சிறந்தது' என்றற்கும் ஏற்றதொரு வரலாறு வருமாறு:—நம்மாழ்வாரதுசிஷ்யரான மதுரகவியாழ்வார், அச்சடகோபர் திருநாட்டையலங்கரித்தபின்பு, அந்த ஆசிரியரைப் பிரிந்ததற்கு மிகஇரங்கி அரிதில் தேறி, அர்ச்சாரூபமான ஆழ்வார்விக்கிரகத்தை ஏறியருளப்பண்ணி ஆழ்வாரவதாரஸ்தலமான திருக்குருகூரென்னுந் திருநகரியிலே பிரதிஷ்டைசெய்து, அந்தத் திவ்யமூர்த்திக்கு நித்தியநைமித்திக உத்ஸவங்களையெல்லாம் சிறப்புற நடத்திக்கொண்டுவந்தார். அத்திருவிழாக்களில் 'வேதந்தமிழ்செய்த மாறர் வந்தார்,' 'திருமாலுக்குஉரிய தெய்வப்புலவர் வந்தார்', 'அளவிலாஞானத்து ஆரியர் வந்தார்' என இவைமுதலாக அநேகவிருதுகளைக் கூறித் திருச்சின்னம் ஒலிமுழங்குதலைக் கேள்வியுற்றவளவிலே, மதுரைச் சங்கத்தாரது தூண்டுதலால் அவர்கள் மாணாக்கர்கள் வந்து எதிரிட்டு 'உங்கள் ஆழ்வார் பக்தரேயன்றிப் பகவானல்லரே: அவர் சங்கமேறியபுலவரோ? அவர்பாடிய திருவாய்மொழி முதலியன சங்கமேறிய செய்யுளல்லவே: அவரை வேதந்தமிழ்செய்தவ ரென்று சிலாகிப்பது தகுதியோ?' என்று பல குதர்க்கம் பேசி விருதுகளைத் தடுத்திட்டனர்; அதற்கு மதுரகவிகள் மனம்பொறாது வருந்தி

'இவர்கட்குச் சர்வபங்கமாம்படி தேவரீர் செய்தருளவேண்டும்' என்று ஆழ்வாரையே பிரார்த்திக்க, சடகோபர் ஒருகிழப்பிராமணவடிவத்தோடு வந்து திருவாய்மொழியில், "கண்ணன்கழலிணை, நண்ணும்மனமுடையீர், எண்ணுந் திருநாமம், திண்ணம்நாரணமே" என்ற பாசுரத்தின் முதலடியை ஒருசிற்றேட்டில் எழுதிக்கொண்டுபோய்ச் சங்கப்பலகையில் வைத்திட்டால் அவர்கள் செருக்கு அடங்கும்' என்று கூறியருளினர்; அந்நியமனத்தின்படியே சடகோபபக்தர், கண்ணன்கழலிணையை யெழுதிய ஏட்டை யெடுத்துப்போய் வைத்திட்டமாத்திரத்தில், சங்கப்புலவர்கள் ஏறியிருந்த பலகை பொற்றாமரைப்பொய்கையில்மூழ்கித் தன்மேலிருந்த புலவர்களையெல்லாம் நீரில்வீழ்த்தி உடனே எழுந்து தன்மீதுவைத்த சிறுமுறியைமாத்திரம் ஏந்திக்கொண்டு மிதந்தது; அப்பொழுது நீரில்விழுந்து அமிழ்ந்து தடுமாறி எழுந்து மெல்ல நீந்திக் கரைசேர்ந்த சங்கப்புலவர்கள், சகலவேதசாஸ்திரங்களையும் பிறர்கற்பியாமல் தாமேயுணர்ந்த பகவதம்சமான ஆழ்வாருடைய தெய்விகபாண்டித்தியத்தை யுணர்ந்து இறுமாப்புஒழிந்து, தாம் முன்பு அபசாரப்பட்டதற்கு அநுதாபமுற்று, அதனைக்ஷமிக்கும்பொருட்டு அவரது மகிமைதங்கிய பிரபாவத்தைக்குறித்துத் தோத்திரமாகத் தனித்தனி ஒவ்வொருபாடல்பாடி வெளியிடுபவரானர்கள்; அங்ஙனம் வெளியிடுகையில், அப்பாடல்கள் யாவும் "சேமங் குருகையோ செய்யதிருப்பாற்கடலோ, நாமம் பராங்குசமோ நாரணமோ— தாமம், துளவோ வகுளமோ தோளிரண்டோ நான்கு, முளவோ பெருமானுனக்கு" என்ற இப்பாடல்வடிவாகச் சிறிதும் வேற்றுமையின்றி ஒற்றுமைப்பட்டிருக்கக்கண்டு அவர்களனைவரும் 'இதுஎன்ன அற்புதம்! இதுவும் ஆழ்வாரது தெய்வத்திருவருளே' என்று அதிசயப்பட்டு, "ஈயாடுவதோ கருடற்கெதிரே இரவிக்கெதிர் மின்மினி யாடுவதோ, நாயோடுவதோ வுறுமிப் புலிமுன் நரிகேசரிமுன் நடையாடுவதோ, பேயாடுவதோ வழகூர்வசிமுன் பெருமான்வகுளாபரணன்னருள்கூர்ந், தோவாதுரையாயிரமாமறையின் னொருசொற்பொறுமோவுலகிற்கவியே" என்பது முதலாகச் சிற்சிலகவிகள்பாடிப் புகழ்ந்து அன்று முதல் ஆழ்வார்க்கு விருதுகூறல் முதலிய சகலவைபவங்களையும் முன்னினும் பலமடங்கு மிகுதியாக நடப்பித்துவந்தார்கள் என்பதாம்.

ஆழ்வார் பிறந்தபொழுதே தொடங்கி அழுதல் பால்குடித்தல் முதலிய லோகவியாபாரம் ஒன்றுமின்றி உலகநடைக்கு மாறாகஇருந்ததனால், இவர்க்கு 'மாறன்' என்று திருநாமமாயிற்று; வலியவினைகட்கு மாறாகஇருத்தலாலும், அந்யமதஸ்தர்களை அடக்கி அவர்கட்குச் சத்துருவாயிருத்தலாலும், பாண்டியநாட்டில் தலைமையாகத்தோன்றியதனாலும் வந்த பெய ரென்றலுமுண்டு. கம்பநாட்டுப்புலமையன்-கம்பநாட்டில் தோன்றிய புலவன்; "கம்பநாட்டாழ்வான்கவி," "தெய்வப்புலமைக்கம்பநாட்டாழ்வார்," "கம்பநாடன்," "கம்பநாடுடையவள்ளல்" என்பனவுங் காண்க. இவர், ஆழ்வார்கள் பன்னிருவரி லொருவரல்லராயினும், அவர்கள்போலப் பக்தியிற்சிறந்தவ ரென்பதுபற்றி, ஆழ்வார் என்று வழங்கப்பட்டனர். இப்பெயரால் மற்றுஞ்சிலபக்தர்களை வழங்குவதை, பரதாழ்வான் சத்துருக்நாழ்வான் பிரகலாதாழ்வான் கஜேந்திராழ்வான் சுதரிசநாழ்வான் கூரத்தாழ்வான் வில்லிபுத்தூராழ்வார் முதலிய பெயர்களிலுங் காண்க. அன்றியும், நம்மாழ்வார்விஷயமாக 'கண்ணிநுண்சிறுத்தாம்பு' என்ற பதிற்றந்தாதியைப் பாடிய மதுரகவிகளை 'மதுரகவியாழ்வார்' என்றல்போல, நம்மாழ்வார்விஷயமாக 'சடகோபரந்தாதி' என்னும் நூற்றந்தாதியைப் பாடிய கம்பநாடரையும் 'கம்பநாட்டாழ்வார்' என்று சொல்லத்தகும்; "மன்றேபுகழுந்திருவழுந்தூர்வள்ளல் மாறனைமுன், சென்றேமதுரகவிப்பெருமாள் தென்தமிழ்த்தொடையில், ஒன்றேபதிகமுரைத்த

வன்பொன்னடியுற்றுநின்றான், என்றேபதிகம்பதிகமதாகவிசைத்தனனே" என இந்நூலினிறுதியில் வருஞ் சிறப்புப்பாயிரச் செய்யுள்கொண்டும், மதுரகவியாழ்வாரும் கம்பநாட்டாழ்வாரும் ஒருபுடையொப்புமை யுடையாராதலுணர்க. மற்றும், ஸ்ரீராமபக்தியை மிகுதியாகவுடைமைபற்றிப் பரதன் 'பரதாழ்வான்' என்று வழங்கப்படுதல்போல, ஸ்ரீராமபக்தியை மிகுதியாகவுடைய கம்பநாடரும் 'கம்பநாட்டாழ்வார்' என்று வழங்கப்படுதற்கு ஏற்றவரானவர். இனி, வாழ்வான் என்று எடுத்து, நிலவுலகத்துச் சிறந்த வாழ்வையுடையவரென்றலும் ஒன்று.

'தேவ' என்ற வடமொழி, தமிழில் 'தே' என்று சிதைந்து வழங்கும்; இதனைத் தமிழ்மொழியே யென்பாரு முளர். 'தே' என்ற ஓரெழுத்தொருமொழியின்மேல், 'இல்' என்ற ஏழனுருபு சேரும்போது, இடையில் வகரவுடம்படுமெய்பெற்று 'தேவில்' என்று நின்றது; "ஏமுன் இவ்விருமையும்" என்றார் நன்னூலார். தைவம், கவி, பண்டிதன், பூ - வடசொற்கள். கவிஞன் - கவிபாடுபவன்; ஞ் - பெயரிடைநிலை. திருவாய்மொழி - மேன்மையான வாய்மொழிகளினாலாகிய பிரபந்தம்; அடையடுத்தகருவியாகுபெயர்: 'திருவாசகம்' என்பதும் இது. பகர்தல் - சொல்லுதல். நாவிற்சிறந்த மாறன் - 'திருநாவீறுடையபிரான்' என்று ஆழ்வார்க்கு ஒருதிருநாமமிருத்தலுங் காண்க. நாவலவன் - கவிபாடுதல் பிரசங்கஞ்செய்தல் முதலிய நாவின்வல்லமையுடையவன். புலமை - கல்வித்தேர்ச்சி: அதாவது - பலவேறுவகைப்பட்ட நூலுணர்ச்சிகளையெல்லாம் ஒருங்கேகொண்ட பேரறிவுடைமை; பாண்டித்தியம்: அதனையுடையவன், புலமையன்; பண்புப்பகுதி, ஈறுபோதல் முதலிய விகாரங்களுள் ஒன்றையும் பெறாமல் இயல்பாய்நின்றது. செம்மையன் கருமையன் என்பனபோல: ஈறுபோமிடத்து 'புலவன்' என்று நிற்கும். (௧0)

# மனு முறை கண்ட வாசகம்.

மனுவென்னுஞ் சோழராஜன் நீதிநடத்திய செய்தியைக் கூறும் வசனம். கண்ட வென்பது செய்தவென்னும் பொருளதாதலை, திருவிளையாடற் புராணத்துத் திருநகரங்கண்டபடல மென்றவிடத்திலுங் காண்க. இனி, மனுவென்னுஞ்சோழராஜனது நீதியை(ச் சிவபெருமான்) பரிசோதித்துப்பார்த்த செய்தியைக் கூறும் வசனநூலென்று பொருள்கொள்ளலும் அமையும். முந்தினபொருளில், மனு முறை - அல்வழிப்புணர்ச்சி, எழுவாய்த்தொடர்; இப்பொருளில், மனு முறை - வேற்றுமைப்புணர்ச்சி, ஆறும் வேற்றுமைத் தொகை. இருபொருளிலும், முறை கண்ட - இரண்டாம் வேற்றுமைத் தொகை. கண்ட வாசகம் - பெயரெச்சத்தொடர். (இவ்வரசனை மனுமுறை கண்டசோழ னென்றும், மநுநீதிகண்டசோழ னென்றும், மனுநீதிச்சோழ னென்றும் வழங்குவர்; அப்பெயர்கள் - மநுவென்னும் பழைய அரசனால் (தருமசாஸ்திரத்திற்) கூறப்பட்ட நீதியை நடத்திய சோழராஜ னென்னும் பொருளனவாம்.) மநு, வாசகம் - வடசொற்கள். வாசகம் - சொல்; இங்கே வசனநூலுக்கு வழங்கப்பட்டது.

இச்சரித்திரம் - சேக்கிழார்நாயனார் அருளிச்செய்த திருத்தொண்டர் புராணமென்னும் பெரியபுராணத்தில் திருவாரூர்ச்சிறப்பில் முப்பத்தேழு செய்யுள்களாற் கூறப்பட்டிருக்கின்றது. அந்தப்பாகத்தை மனுநீதி கண்ட புராணமென வழங்குவர். அதனை ஆதாரமாகக்கொண்டு சரித்திரத்தை விரித்து எழுதப்பட்டது இவ்வசநகாவ்ய மென்று அறிக. எனவே, அதன்வழிநூலாதும் இது. தொகுத்தல், விரித்தல், தொகைவிரி, மொழிபெயர்ப்பு என்னும் வழிநூல்வகைகளில், இது - விரித்தல். (மனுமுறைகண்டவாசகம் முழுப்புத்தகத்திலிருந்து சுருக்கியதே, இப்படபுத்தகத்தி லுள்ளது.)

இவ்வசனநூல் - திருவருட்பிரகாசவள்ளலாரென்றும், சிதம்பரம் இராமலிங்கஸ்வாமிக ளென்றும் வழங்கப்பெற்ற இராமலிங்கபிள்ளையவர்களால் எழுதப்பட்டது.

இவர் சோழநாட்டிலே சிதம்பரத்திற்குச் சமீபத்ததான மருதூரில் இப்பொழுதைக்குத் தொண்ணூறு வருஷங்களுக்கு முன்பு பிறந்து, சென்னபட்டணம் முதலிய இடங்களில் வசித்து, சிவஸ்தோத்திரமான பாடல்கள் பதிகங்கள் பிரபந்தங்கள் மிகப்பல இயற்றி, சில வசனநூல்களுஞ் செய்து, பலர்க்குக் கல்விகற்பித்தும் பற்பலர்க்கு நல்லறிவு புகட்டியும் அவர்களை நல்வழிப்படுத்தி, சமரசவேதசன்மார்க்கசங்கம் தாபித்து, இல்லறப்பற்றில்லாமலே சிவபக்தி சிவத்தியான சிவஸ்துதிகளே செயலாகக் கொண்டு ஐம்பத்தொரு பிராயம் வாழ்ந்து, பின்பு, சிதம்பரத்திற்கு அடுத்த வடலூரைச் சார்ந்த கருங்குழியருகிலுள்ள மேட்டுக்குப்பத்திலே பரகதிபுக்கவர்.

இவர் பிறந்தது - கருணீகர்குலம்; (கருணீகர் - கணக்கர்.) இவர் தந்தையார் - இராமையபிள்ளை. தாயார் - சின்னம்மை. இவர் கல்விபயின்றது, தமது தமையனாரும், சென்னையிற் பிரபலவித்வானாயிருந்த காஞ்சீபுரம் சபாபதி முதலியாரது மாணக்கருமான சபாபதிபிள்ளையினிடத்தில். இளமைதொடங்கியே இவரது அறிவு, கல்வித்தேர்ச்சி, அடக்கம், ஒழுக்கம், பொறுமை, வைராக்கியம், இன்சொல், சிவபக்தி, கவநசக்தி, போதநாசக்தி, பிரசங்கசக்தி, மெய்யுணர்வு, அருட்பேறு முதலியன, கண்டவர் கேட்டவ ரனைவரும் மிகப்பாராட்டத் தக்கனவா யிருந்தன. தமது ஒன்பதாம்பிராயந் தொடங்கியே இவர் பாடல்கள் பாடத் தொடங்கின ரென்பர்.

இவரியற்றிய செய்யுள் நூல்கள்—திருவடிப்புகழ்ச்சி, விண்ணப்பக்கலி வெண்பா, நெஞ்சறிவுறுத்தல், சிவநேசவெண்பா, மகாதேவமாலை, திருவருண் முறையீடு, வடிவுடைமாணிக்கமாலை, இங்கிதமாலை முதலாக அநந்தம். வசன நூல்கள்—ஜீவகாருண்ய வொழுக்கம் முதலிய சில.

இவரியற்றிய பாடலனைத்தும் ஒருங்குசேர்த்து ஆறு திருமுறைகளாக வகுத்து 'இராமலிங்கசுவாமிகள் திருவருட்பாத் திருமறை' என்ற பெயரால் அச்சிடப்பட்டிருக்கின்றது. இவரது சரித்திரவிவரத்தை, அந்த அச்சுப்புத்த கத்தின் முதலிற் காணலாம்.

---

பக்கம்—27.

பூமிதேவி - பூமியாகிய பெண்; அல்லது, பூலோகத்திற்கு உரியவளான தெய்வப்பெண்.

சோழநாட்டின் எல்லையை "கடல் கிழக்குத் தெற்குக் கரைபொருவெள்ளாறு, குடதிசையிற் கோட்டைக் கரையாம் - வடதிசையில், ஏணாட்டுப் பெண்ணை இருபத்துநாற்காதம், சோணாட்டுக் கெல்லை யெனச் சொல்" எனக் காண்க.

பரம்பரை - வம்சக்கிரமம்.

ராஜதானி - அரசன் வீற்றிருக்கும் நகரம்.

நிலமகள் - பூமிதேவி.

திலகம் - நெற்றிப்பொட்டு.

திரு ஆர் ஊர் - இலக்குமி வீற்றிருக்கின்ற இடம் எனப் பொருள் படும்; செல்வவளம் நிறைந்த ஊரென்க. கமலாலயம், ஸ்ரீபுரம் என்ற பெயர்களும் இதுபற்றியன.

நடு நிலை - பக்ஷபாதமில்லாமல் வாதிப் பிரதிவாதிகளுக்குப் பொதுவாக இருந்து விவகாரவிசாரணை செய்து நியாயப்படி தீர்ப்புச்சொல்லுந் தன்மை.

மநு நீதி - மநுவென்னும் முதலரசனால் தருமசாஸ்திரத்திற் கூறப்பட்ட இராஜநீதி. இங்கு, மநு - பிரமன்மகனான ஸ்வாயம்புவமனு. செம் கோல் - கோணலில்லாமல் நேராக இருக்குங் கொம்பு; நீதிதவறாமலிருக்கும் அரசாட்சிக்கு உவமையாகுபெயராய் வழங்குகின்றது; (இதன் எதிர்மொழி, கொடுங்கோல்.)

அறுபத்துநான்கு கலைகள் - அக்கரவிலக்கணம், லிகிதம், கணிதம், வேதம், புராணம், வியாகரணம், நீதிசாஸ்திரம், ஜ்யோதிஷம், தருமசாஸ்திரம், யோகம், மந்திரம், சிற்பம், சகுனம், வைத்தியம் முதலாக அகராதியிற் காண்க. கலை - சாஸ்திரம்.

கேள்வி - பல நூற்பொருள்களைக் கற்றறிந்தவர்சொல்லத் தாம்கேட்டல்.

ஹிதம் - நன்மை. (எதிர், அஹிதம்).

வழக்கு - வியவகாரம். இலேசிலே - எளிதில். ஸமுகத்துக்கு=ஸம்முகத்திற்கு: முன்னிலையில். முடித்து - பூர்த்திசெய்து. இந்தவாக்கியத்தில்முறை நிரனிறைப்பொருள்கோள் காண்க.

வசநம் - வார்த்தை.

பகைவலி-பகைவருடையவலிமை.

துணை வலி - தனக்கும் பகைவர்க்கும் துணையாகுபவரது வலிமை.

ஊக்கம்-தொழில்செய்தலில் மனம் மெலிதலின்றிக் கிளர்ச்சி யுடையதாதல்.

பழமை பாராட்டுதல் - சிநேகிதர்களது நெடுநாளைப்பழக்கங் காரணமாக அவர்செய்த பிழைகளைப்பொறுத்தல்.

சுற்றம் தழுவுதல் - உறவினரை ஆதரித்தல்.

கண்ணோட்டம் - தன்னோடுபழகியவரைக்கண்டால் அவர் கூறியவற்றை மறுக்கமாட்டாமை. இது, அவர்மேற் கண்சென்றவிடத்து உண்டாவதாதலால், கண்ணோட்டமெனப் பெயர் பெற்றது.

அவலம் - துன்பம்.

அம்ருதம் - மரணத்தைத் தவிர்ப்பதென்று பொருள்படுங் காரணக்குறி.

கைகொடுப்பது-வழுக்கிவிழுபவர்க்குக் கைகொடுத்து உதவுவது போலச் சமயத்தில் உதவுவது: இலக்கணை.

ஸ்நேஹன் = ஸ்நேஹிதன்.

பக்கம்—28.

அணு-மிகவும் நுட்பமானபொருள்.

இரக்கம் - இரங்கு - பகுதி.

அனையவர் - ஒத்தவர்.

போதித்து - அறிவித்து.

குரு என்ற வடசொல் - அஜ்ஞாந மாகிய மனவிருளை யொழிப்பவ ரென்று பொருள்படும். கு - இருள்.

இஹ பர ஸாதகம் - இம்மையிலடையும் நன்மையும், மறுமையிலடையும் நன்மையும்.

முன்னின்று - முன் நின்று.

இடையூறு - தடை; (காரியஞ்செய்யும்போது) இடையில் உறுவதெனக் காரணப்பொருள்படும்.

ஆச்சிரமம் - பிரமசரியம், கிருகஸ்தம், வாநப்ரஸ்தம், ஸந்யாஸம் என்னும் நிலைகள்.

ஸமயம் - மதம்.

ஸ்வர்ணம்=ஸ்வர்ணம் - பொன்.

கோ - பசு.

எடுத்தல் - வெட்டுவித்தல்.

ஓங்கி - உயர்ந்து, வளர்ந்து.

த்ரிகாலம்-காலை, நடுப்பகல், மாலை என்னும் மூன்று காலங்கள்.

திருப்பணி - கைங்கரியம்; கோவில்வேலை.

திருவிழா - உத்ஸவம்.

ஆக்கினை-ஆஜ்ஞா என்றவடசொல்லின் சிதைவு; கட்டளை, அதிகாரம்.

ஒப்பு உயர்வு இல்லாத - தனக்குச் சமமானதும் தனக்கு மேலானதுமாக வேறொன்று இருக்கப்பெறாத; எல்லாவற்றினும் தானே உயர்ந்த.

கடிநம் - வன்மை. [பிரிநிலை.

'கல்லே' முதலியவற்றில், ஏகாரம்-

பரி - குதிரை. கட்டுண்பது - கட்டுப்படுவது.

போர்படுவது - போராக அமைக்கப்படுவது.

மது - தேன்.

தரித்ரம் தரித்ரப்படுவது - தரித்ரம் இல்லையாவது.

பொய்படுவது - இல்லையாவது.

போர் - யுத்தம். படுதல்-இறத்தல்.

மது - கள்.

பொய்படுபோர் - பொய்பேசுபவர்.

கடினம் முதலியவற்றை மனிதர்களினின்று ஒழித்துக் கல்முதலியவற்றிற்காட்டியது, ஒழித்துக்காட்டணி.

ப்ரகாரம் - விதம்.

புத்ரப் பேறு-பிள்ளைபெறுதல்; புத்திரனுகிய பாக்கிய மெனினுமாம்.

பேறு - பாக்கியம்.

பக்கம்—29.

புத்ரோத்பத்தி - புத்ர உத்பத்தி: வடமொழிப்புணர்ச்சி, குணசந்தி; 'அ ஆ முன் உ ஊ வரின், இரண்டும்கெட ஓகாரம் தோன்றும்.'

கமலாலயம், திருவாரூரிலுள்ளது. கமல ஆலயம் என்று பிரிந்து - தாமரைகளுக்கு இடமான தென்றும், கமலா ஆலயம் என்று பிரிந்து - செந்தாமரைமலரில்வாழ்பவளான திருமகள் வீற்றிருக்கு மிட மென்றும் பொருள் படும்.

புண்ய தீர்த்தம் - பரிசுத்ததீர்த்தம்.

த்யாகராஜப்பெருமான் - திருவாரூர்ச் சிவபெருமான். த்யாகம் - வேண்டுவார் வேண்டுவனவற்றை யெல்லாம் வரையாது கொடுத்தல். அக்குணத்திற்குத் தலைவன் - த்யாகராஜன், த்யாகேசன். அத்தன்மையிற் சிறந்தவ னென்க. இக்குணத்தோடு அரசனுய் ஆட்சி செய்தமைபற்றித் தியாகராஜனென வழங்கியதாகவுங் கொள்ளலாம். தியாகராஜனுகியபெருமான் என்க.

எம்பெருமான் - எமது தலைவன்.

விண்ணப்பித்து - விஜ்ஞாபித்து: பணிவோடுகூறி.

இங்ஙனம் - இப்படி.

வழிபட்டு - உபசரித்து, வணங்கி.

வந்தனை - வணங்குதல். வந்தநம் - வடசொல்.

தேவியார் - அரசன்மனைவி; 'ஆர்' விகுதி, உயர்வுப்பன்மைபற்றிவந்தது.

லட்சணம் - லக்ஷணம்.

புத்த்ர னென்ற வடசொல் - புத் த்ர என்று பிரிந்து, (தனது தாய்தந்தையரைப்) புத் என்னும் நரகத்தினின்று நீக்கிப் பாதுகாப்பவ னென்று பொருள்படும். புத் - பிள்ளையில்லாதவர் அடைவதொரு நரகம்.

பூரித்து - (மகிழ்ச்சியாற்) பருத்து. தொட்டு-தொடங்கி; தொடு-பகுதி.

பாலக்கிரகாரிஷ்டம் பன்னிரண்டு பிராயமளவும் உளதாதலால், அதற்குச் சாந்தியாகப் பன்னிரண்டு வருஷம் கடமைகொள்ளாதொழிதல்,அாசரியல்பெனக.

திறை-கப்பம். எழுவகைப்பிறப்பிலும்உள்ள தீவினைகள் ஒழியும்பொருட்டு எழுவருஷம் கடமைகொள்ளாரென்க. 'ஏழுநாள்' என்பதற்கும், இது கொள்க.

புதிதாகத் திருப்பணிகள் = புதியனவாகத் திருப்பணிகள்.

'வீதிவிடங்கன்' என்றது, திருவாரூர்ச் சிவபிரானது திருநாமம். வீதியிலெழுந்தருளும் விடங்க னென்க. டங்கம் - உளி. அதன் சம்பந்தமில்லாதவன், விடங்கன். செயற்கைமூர்த்தியல்லாத ஸ்வயம்புமூர்த்தி யென்றபடி. விடங்கம் - அழகு: அதனையுடையவன் விடங்க னென்னவுமாம். பரிசுத்திகரமென்றகாரணத்தால், கடவுளின்பெயரை மனிதர்க்குஇட்டுவழங்குவது மரபு.

சடங்கு - ஷடங்கமென்ற வடசொல்லின் விகாரம்; வேதத்தின் ஆறு அங்கங்களாகிய கல்பம்முதலிய சாஸ்திரங்களை யநுசரித்துச் செய்யும் வைதிகச்செயல்.

பருவம் - காலம்.

அக்ஷர அப்யாஸம் - எழுத்துக் கற்றுக்கொடுத்தல். அப்யாஸம் - பயிற்சி. உபநயநம் - பூணூல்தரிக்குஞ்சடங்கு. வித்யாஆரம்பம்-கல்விதொடங்குதல்.

'கர்ப்பந்தொடங்கி எட்டாவதுவயதில் பிராமணனுக்கும், பதினோராவதுவயதில் க்ஷத்ரியனுக்கும், பன்னிரண்டாவதுவயதில் வைசியனுக்கும் உபநயனம் செய்யத்தக்கது' என்ற பொதுவிதிக்கு, 'வேதமோதுதல் வேதார்த்தங்களை நன்கு அறிதல் முதலான விசேஷங்களால் வருகிற ஞானமிருத்தியை அபேக்ஷித்த பிராமணனுக்கும், யானை தேர் குதிரை முதலிய ராஜ்யபலத்தை அபேக்ஷித்த க்ஷத்ரியனுக்கும், பலவிதமான கிருஷிமுதலிய ஸம்பத்தை விரும்பிய வைசியனுக்கும் மேற்குறித்த பிராயங்களுக்குமுந்தியே உபநயனத்தைச் செய்விக்கலாம்' என்ற சிறப்புவிதி உள்ளதாதலால், அதன்படி இங்கு மனுச்சோழர் தம்மகனுக்குக் கர்ப்பம்முதல் எட்டாம் வயதில் [அதாவது பிறந்தது முதல் ஏழாவது பிராயத்தில்] உபநயனம் செய்வித்தனரென்க. பெரும்பான்மையான வழக்கப்படி செய்வதைக்காட்டிலும், மேலான பயனைக் கருதிச்செய்யும் இது சிறந்ததாகும்.

ஸ்ம்ருதி-தருமசாஸ்திரம்; (வேதத்தின்கருத்து இன்னதென்று) நினைத்துச் செய்யப்பட்டதாதலால், இப்பெயர்.

எண் மடங்கு - எட்டுப் பங்கு.

பக்கம்—30.

யானை யேற்றம் - யானையின்மேல் ஏறி நடத்துதல். ஏற்றம், ஏறு-பகுதி. ரத ஆரோஹணம் - தேரில் ஏறுதல்.

வித்தை - வித்யா என்ற வடசொல்லின் விகாரம்.

அற - இல்லாமல்.

ஆண்மை-பௌருஷம்: பராக்கிரமம்.

வாய்மை - சத்தியம்.

கொடை - ஈகை; கொடு - பகுதி, ஐ - தொழிற்பெயர்விகுதி.

நமஸ்காரம், மூன்றுவகைப்படும்; அஷ்டாங்கம், பஞ்சாங்கம், த்ரியங்கம் என. அஷ்டாங்க நமஸ்காரமாவது - எட்டுஉறுப்பு நிலத்திற்படும்படி வணங்குதல்; எட்டுஉறுப்புக்கள்-தலை, கையிரண்டு, செவியிரண்டு, மோவாய், புயங்களிரண்டு என்பன; (சிறிதுவேறுபடவுங்கூறலாகும்.) இதுவே, ஸாஷ்டாங்கநமஸ்காரம். பஞ்சாங்கநமஸ்காரமாவது - ஐந்துஉறுப்பு நிலத்திற்படும்படி வணங்குதல்; ஐந்துஉறுப்பாவன-தலை, கையிரண்டு, முழங்காலிரண்டு. த்ரியங்க நமஸ்காரம் - தலைமேல் இரண்டு கைகளையுங் கூப்பித்தொழுதல்.

தண்டனிட்டு - நன்றாக நமஸ்கரித்து. கைவிடப்பட்ட தடி தரையில் விழுமாறு போலத் தரையில் உடம்பு நன்றாகப்படும்படி விழுந்து வணங்கியென்க.

கமலாலயம் - இங்கே, திருவாரூர்க் கோயிலின் பெயர்.

விண்ணப்பம் - விஜ்ஞாபமென்ற வடசொல்லின் சிதைவு; பணிவோடு கூறுதல்.

பூர்வம் - முன்பு.

கோல் - ஊன்றுகோல்.

அபயம்கொடுத்தல்- 'அஞ்சவேண்டா' என்று உறுதிகூறிப் பாதுகாத்தல்.

சிவஞானி தரிசனம் - சிவபிரானைப் பற்றிய ஞானமுடையவனைத் தரிசித்தல்.

கால் - காலமென்பதன் விகாரம்.

தடுக்கப்படாது-தடுத்தல்கூடாது.

ஆண்டவன் - (எல்லாவுயிர்களையும்) அடிமையாகக்கொண்டவன்; கடவுள்.

தீர்க்க ஆயுள் - நீண்ட ஆயுள்.

பணிவுடன் ஏற்றுக்கொள்ளுதலை, 'தலைமேற்கொள்ளுதல்' என்றல், மரபு.

விடை - அநுமதி. பணிந்து - நமஸ்கரித்து.

கூப்பி - குவித்து ; கூம்பி யென்பதன் பிறவினை: மெலி வலியாதல், பிறவினைக்குறி.

பக்கம்—31.

ஒருமித்து - சம்மதித்து.

குறை யிரந்து - தன்குறையைச் சொல்லிப் பிரார்த்தித்து.

உருக்கம்-அன்புமிகுதியால் மனம் உருகுதல். உருகு - பகுதி, அம்-தொழிற்பெயர்விகுதி, பகுதி தன்ஒற்று இரட்டியது - சந்தி.

த்யாகேசர் - த்யாகராஜப்பெருமான்.

கடவுள் -(உலகசம்பந்தத்தைக்)கடத்தலையுடையவன் எனத் தொழிலாகு பெயராகியகாரணக்குறி; இதில்,உள்-தொழிற்பெயர்விகுதி: விக்குள்,விளையுள் என்பவற்றிற் போல.

அடுத்த - தக்க. கோலம் - காட்சி.

மணம் - விவாகம். முடித்தல்-நிறைவேற்றுதல்.

அபிஷேக த்ரவ்யங்கள் - ஸ்வாமிக்குத் திருமஞ்சனஞ்செய்வதற்கு வேண்டிய பொருள்கள்; பால்,தயிர் முதலியன.

ஆடை - வஸ்திரம்.

கார்ய காரர் - வேலைக்காரர்.

வாசம் நீர் ஆடி - பரிமளஞ்சேர்க்கப்பட்ட தீர்த்தத்தில் நீராடி.

திருநீறு-விபூதி. பூஷணம்-ஆபரணம்.

பூண்டு - அணிந்து; பூண் - பகுதி.

பீதாம்பரம் - பீத + அம்பரம்: மஞ்சள்நிறமான ஆடை. பொற்பட்டாடைக்கு வழங்கும். உத்தரீயம்-மேலாடை. (அந்தரீயம், அரையில் தரிக்கும் ஆடை.)

நவ ரத்நம் - ஒன்பதுவகை இரத்தினங்கள்; கோமேதகம், நீலம், பவழம், புஷ்பராகம், மரகதம், மாணிக்கம், முத்து, வைடூரியம், வைரம்.

ரத்ந கசிதம்-ரத்நங்க ளிழைத்தது.

ஆரோஹணித்து - ஏறி.

வித்யா வல்லவர் - கல்வியில் தேர்ந்தவர். வித்யாவல்லபர் என்று இருக்கலாம் ; வித்யைக்குத் தலைவரென்று பொருள்.

புரோஹிதர் - (வைதிககாரியங்களில்) முன்னே வைக்கப்படுபவரெனக் காரணப்பொருள்படும் பெயர்.

பாடகர் - கீதம்பாடுவோர்.

வந்தியர் - பராக்கிரமத்தைச் சொல்லிப் புகழ்பவர், மாகதர் - வம்சாவளியைச் சொல்லிப் புகழ்பவர் என வேறுபாடு அறிக.

மங்கையர் - இளம்பெண்கள்.

ஆ ஆ - ஆச்சரியக்குறி; வியப்பிடைச்சொல்லடுக்கு.

பக்கம்—32.

சீமான் - ஸ்ரீமாந் : செல்வமுடையவன்.

யௌவனம்-பதினாறுபிராயத்திற்கு மேல்முப்பதுபிராயத்திற்குஉட்பட்ட பருவம்.

குண ரத்நம் - குணங்கள் நிறைந்த இரத்தினம்; குணங்களாற்சிறந்தவன்.

நோன்பு - விரதம். [பகுதி.

நோற்றல் - அநுஷ்டித்தல்; நோல் -

வீர சிங்கம்-வீரத்தன்மையையுடைய சிங்கம்; வீரரிற் சிறந்தோன்.

சாந்தம் - அமைதி, பொறுமை.

ததும்புதல் - நிறைந்து மேல்வழிதல் ; இங்கே, மேல்நோக்கிலேயே விளங்குதல்.

கடைக் கண் - கண்ணின் கடை;

முன்பின்னுகத்தொக்க ஆறும்வேற்றுமைத்தொகை; இலக்கணப்போலி.

அவ் வவ் வீதி - அ அ வீதி: அந்த அந்தத் தெரு.

19·ஆவது வரியில் பலவிமாக என்பதை, பலவிதமாக என்று திருத்திக்கொள்க.

தேர்ப்பாகன் - தேர்செலுத்துபவன்.

தருணம் - சமயம்.

பசுங்கன்று-இளங்கன்று. பசுமை· இங்கே, இளமைமேலது.

துள்ளிகுதித்து = துள்ளிக்குதித்து.

திரள் - கூட்டம்.

ஊழ்வினை-முற்பிறப்பிற்செய்தகருமத்தின் பயன் ; விதி.

நாகம் - பாம்பு; நகத்தில்வாழ்வது: நகம் - மரமும், மலையும்.

நடுநடுங்கி-மிகநடுங்கி: இரட்டைக்கிளவி.

**பக்கம்—33.**

மதி - அறிவு: வடசொல்.

நடுக்கு-நடுங்கு என்னும் முதனிலை திரிந்த தொழிற்பெயர்.

சோபம் - மூர்ச்சை.

பரிதபித்தல் - மிகஇரங்குதல், துக்கித்தல்.

சிவம் - சுபம்; அதனை (அடியார்க்கு)ச் செய்பவன், சிவன்.

சங்கரன்—ஶம் - இன்பத்தை, கரன் - செய்பவன்.

சம்பு - சிவபிரான்.

மஹாதேவன் - சிறந்ததேவன்.

இடர்-துன்பம். உம்-இழிவுசிறப்பு.

பாவி - பாபீ என்ற வடசொல்லின் விகாரம்; தீவினையையுடையானென்று பொருள்.

பிழை-குற்றம். நோவது-வருந்துவது.

பாதகம் - பாவம்.

மறைநெறி-வேதங்களிற்கூறியவழி.

மநு - இங்கே, சூரியன்மகனை வைவஸ்வதமனு.

எதிர்அற்ற - ஒப்பில்லாத. எதிர் - பரிகாரமுமாம்.

சீர் - நன்மை.

ஹரன் - (பகைவர்களை அல்லது அடியார்களுடையதுன்பங்களை)அழிப்பவன்; சிவபிரான்.

மூதாதைகள்-தந்தைக்குமுன்னோர்.

ஊட்டு-உண் என்பதன் பிறவினை; பகுதி முதல்நீண்டது - விகாரம்: டு - பிறவினை விகுதி.

சேங்கன்று - ஆண்கன்று. சேக்கன்று என்று இருப்பின் நலம்.

கால் - சக்கரம். ஸுந்தரம்-அழகு.

ஈன்ற - பெற்ற; ஈன் - பகுதி.

பாடு படும் - துன்பமனுபவிக்கும்.

**பக்கம்—34.**

துக்க ஸமுத்ரம் - துக்கமாகிய ஸமுத்ரம்; உருவகம்.

அமைச்சர் - மந்திரிகள்: அமாத்யரென்ற வடசொல்லின் சிதைவு.

ப்ரலாபித்தல் - அழுதல்.

மடிதல்-இறத்தல். அவலம்-துக்கம்.

ப்ராயஶ்சித்தம் - தீவினைதீர்தற்பொருட்டுச் செய்யுஞ் சாந்தியாகிய சடங்கு.

ஆலைபாய்தல் - மனச்சுழற்சி; ஆலையில் அகப்பட்ட கரும்புபோல வருந்துத லென்னலாம். அலைபாய்தலென்பதன் நீட்ட லென்றலும் ஒன்று.

சித்தம் - மனம்.

நடு ஆக - நிஷ்பக்ஷபாதமாக.

வேற்றுமை - வேறுபாடு.

முகநட்பு - மனம்மலராமல் முகம் மாத்திரம்மலரும்படிசெய்யும் வெளிச்சினேகம்.

பக்ஷம் - இறகு: அதனையுடையது பக்ஷீ எனக் காரணக்குறி.

ஸாமாந்யப்பிறவி-விசேஷமில்லாத பிறப்புவகை.

கருடன் - பறவைகளுக்குஅரசன்.

காருண்யம் - கருணை: அருள்.

சிபிசக்கரவர்த்தி அரசாளுகையில் அவரதுமேன்மைக்குணத்தைப் பரிசோதிக்கும்பொருட்டு இந்திரன் பெரும்பருந்தாகவும் யமன் சிறுபுறாவாகவும் வடிவமெடுத்து அப்புறாவைப் பருந்து துரத்திவர, அது சக்ரவர்த்தியைச் சரணமடைய, அரசர் அதற்கு அபயமளிக்க, பின்னேவந்த பருந்து 'என் இரையைக்கொடுத்துவிடு'என்று கேட்க, மன்னவர் ' அடைக்கலம்புகுந்தவரை ஆதரியாதுவிடுதல் அதிபாதக மாதலால், இதையன்றி எதைக் கேட்டாலும் கொடுப்பேன்' என்ன,

பருந்து 'இந்தப்புறுவின் எடையளவு தசையை உன் உடம்பில் அரிந்து கொடு' என்ன, வேந்தர் சம்மதித்து உடனே உடம்பிலுள்ள உறுப்புக்களை யெல்லாம் ஒவ்வொன்ருக அறுத்து வைத்தும் எடை குறைந்தமையால் தாமே தராசுத்தட்டில் ஏறி எடையை நிறைக்க, உடனே அத்தேவர்கள்பிரதி யக்ஷமாகி மிகக்கொண்டாடி, அவரது உடம்பு முன்போல நிறைவுறும்படி வரமளித்துப் போயின ரென்ற வரலாறு, இங்குக் குறித்தது.

பக்கம்—35.

அடைக்கலம் - சரணம், புகலிடம்.

அபயாஸ்தம்=அபயஹஸ்தம் என்று திருத்துதல் நலம்; அபய ஹஸ்தம் கொடுத்தல் - 'பயப்படாதே' என்று சொல்லிக் கைகாட்டித் தேற்றிப் பாதுகாத்தல். உள்ளங்கை வெளியேதெரியுமாறு கையை மலர்த்தி விரல்கள் மேல்நோக்கும்படி வைத்துக்காட்டுதல், அபயமளிக்குங் குறியாம்.

க்ரமம் - முறைமை.

கோ பூஜை-பசுக்களைப் பூஜித்தல்.

கடன் - கடமை: கட மென்பதன் ஈற்றுப்போலி.

வ்ருத்தி - ஜீவநோபாயம். வருத்தியெனக்கொண்டால், வளர்ச்சி.

துயரம் - துன்பம்; அம்- சாரியை.

இச்சை - விருப்பம், மகிழ்ச்சி.

அல்லம் - அல்லோம்: அன்மையென்னும் எதிர்மறைப் பண்பினடியாப் பிறந்த தன்மைப்பன்மைக் குறிப்பு முற்று; அம் - விகுதி.

ஸ்வபாவம் - இயற்கை.

புலப்பட - தெரிய.

தொடுத்து - கல்பனைசெய்து.

'அல்ல'என்ற எதிர்மறைப்பலவின் பால்முற்று; வேறு இல்லை உண்டுஎன்பனபோல, ஐம்பால் மூவிடங்களுக்கும் பொதுவாக வழங்குகின்றது.

பலன் - பயன். பலம்-வடசொல். பலன் - ஈற்றுப்போலி.

தண்டம்கொடுப்பது - வீணாய்இழப்பது, தண்டனையாகக்கொடுப்பது.

ஆடவர்க்கு இடமும், மகளிர்க்கு வலமும்துடித்தல், தீநிமித்தம். இடதுதோள் = இடத்தோள். இடதுகண் = இடக்கண்.

பக்கம்—36.

உற்பாதம்-உத்பாதம்: பின்நிகழும் பெருந்தீங்குக்கு முன்காணப்படும் அறிகுறி; தீநிமித்தம்.

இறப்பு - இறத்தல்; பு - தொழிற்பெயர்விகுதி.

முற்ற - (உடம்பு) முழுவதும்.

பழிப்பட்ட - பழியில் அகப்பட்ட.

கடக்க-மீற. புனிதன்-பரிசுத்தன்.

கடைத்தேற்றுவது - ஈடேறச்செய்வது. கடை - உபசர்க்கம்.

தலையீற்றுப் பசு - முதற்கன்றை ஈன்ற பசு. ஈற்று-ஈனுதல்; பெறுதல்; தொழிற்பெயர்:ஈன்-பகுதி,று-விகுதி.

குலைகுலைந்து - மிகப்பதைத்து:இரட்டைக்கிளவி.

சூறைக்காற்று - சுழல்பெருங்காற்று.

சுழன்று சுழன்று - அடுக்கு, பன்மைப்பொருளது:

சோர்ந்து - தளர்ந்து. ப்ரஜ்ஞை - அறிவு.

27 - ஆம்வரி: முகர்ந்து முகர்ந்து= மோந்து மோந்து என்று திருத்துக.

தீவினை - பாவம்.

இந்த்ரஜாலம் - பெருமாயை.

விபரீதம் - மாறுபாடு.

கால் விசைத்து - கால்களில்வேகங்கொண்டு.

இடிஇடிக்கும் - மீளவொண்ணாத பெருந்துன்பம் நேர்ந்திடும்.

தெருவில்விடுதல்- அகதியாக்குதல்.

பக்கம்—37.

'பெருநெருப்பு' என்றது, இங்கே மிக்கசோகத்தை.

ஸஹித்து - பொறுத்து.

அழுந்தி - ஆழ்ந்து; சோகத்தில் மூழ்கி. 'மனமழுந்தி' என்றஇடத்தில் 'மனமழுங்கி' என்று முந்தியபதிப்புக்களில் இருக்கிறது; அது - மனம் அழுங்கி என்றுபிரிந்து, மனம் (துன்பத்தினால்) வருந்தி என்று பொருள்படும்.

ஏறுண்டு - ஏறப்பெற்று.

ரக்தம் - வடசொல்.

ஏழை மதி - தேர்ச்சியில்லாத அறிவு.

ஸ்வல்பம் - மிகச்சிறிது.

சின்னப்பட்டு - துண்டாகி. சிந்நம் - வடசொல்.

ஸம்பவித்தல் - நேர்தல்.

குழந்தாய் - குழந்தை யென்பதன் ஈறுதிரிந்த விளி.

குழம்பி - சிதைந்து. விம்மி - பொருமி.

வெதும்பி-தபித்து. மெய்-உடம்பு.

கண்மூடி - பார்வையில்லாதவன், கண்ணோட்டமில்லாதவன், அறிவில்லாதவன்.

மைந்தர் - பிள்ளைகள். ஆ-அந்தோ!

வெம்பியது - கோபித்தது.

இன்று - இன்றைக்கு. மாய்த்து - கொன்று.

தாய்-தாய்ப்பசு. இறைவர்-அரசர்.

நிவிர்த்தி = நிவ்ருத்தி - நீக்குதல்.

பக்கம்—38.

வாயில் - அரண்மனைவாசல். 'இல்வாய்' என்பது 'வாயில்' என முன் பின்னாக மாறிநிற்கும்: இலக்கணப் போலி; வீட்டின் முன்னிட மெனக.

ஸிம்ஹாஸநம்-சிங்கந் தாங்குவதுபோலச்சித்திரவேலைசெய்யப்பட்டபீடம்.

வீற்றிருத்தல் - மிக்கசிறப்புடன் இருத்தல். வீறு - மிக்கசிறப்பு.

தள்ளாடி - சோர்ந்து தடுமாறி.

வாசல் - வாயில் என்பதன் மரூஉ.

அஞ்சி அஞ்சி -மிகஅஞ்சி; அடுக்கு, மிகுதிப்பொருளது.

அடி - பாதம்.

ஆண்டவர் – தலைவர்: ஆட்சிசெய்கின்றவர்; ஆள் - பகுதி.

மந்த்ரித்வம் - மந்திரித்தன்மை.

'நன்றாக இருந்தது' என்றது - இங்கே, எதிர்மறையிலக்கணை; 'கல்லைக்கடிக்க நன்றாய்ச் சமைத்தாய்' என்றவிடத்துப் போல; இகழ்ச்சிக் குறிப்பாகிய பிறகுறிப்பு.

பக்கம்—39.

ஆறாத் துயர் - தணியாத துன்பம். ஆறா - ஆறாத: ஈறுகெட்ட எதிர்மறைப்பெயரெச்சம்.

வெந்த புண் - நெருப்புப்பட்டதனாலாகிய புண். 'வெந்த' என்ற பெயரெச்சம், காரணப்பொருளது; 'சங்குசுட்ட சுண்ணாம்பு' என்றவிடத்திற் போல. வெந்த, வே - பகுதி.

உருவுதல் - முழுதும்துளைத்துச் செல்லுதல்.

வெதுப்பியது - தபிக்கச்செய்தது, எரித்தது.

அஞ்சு புலன் - மெய், வாய், கண், மூக்கு, செவி. இங்கே, பொறி, புலனெனப்பட்டது. புலன் - புலம்: ஈற்றுப்போலி.

பஞ்ச ப்ராணன் - பிராணன், அபானன், வியாநன், உதானன், ஸமாநன்என்னும்ஐந்து. பிராணவாயுக்கள்.

சாந்தோபசாரம் - சாந்தஉபசாரம்: மூர்ச்சையைத்தணிக்கும் உபசாரங்கள்.

சோர்வு-மூர்ச்சை. பதறுதல் - துடித்தல்.

சிவசிவ—பொறுத்தற்கு அரியசோகம்நேர்கையிற் கடவுளின் பெயரைச் சொல்லிவிளித்தல், இயல்பு.

பக்கம்—40.

அவமிருத்து - அபம்ருத்யு: அகால மரணம், துர்மரணம்.

ஸஞ்சீவகரணி — ம்ருதஸஞ்ஜீவநீ, விசல்யகரணீ, ஸாவர்ண்யகரணீ, ஸந்தாநகரணீ என்ற நான்கு திவ்விய மௌஷதிகளுள் முதலது இது; இறந்தவர்களைப் பிழைப்பிப்பது. மற்றவை - முறையே, ஆயுதங்களைவெளிப்படுத்தி விரணத்தை ஆற்றுவதும், பழையநிறத்தை யுண்டாக்குவதும், முறிந்த உறுப்புக்களை ஒன்றுசேர்ப்பதுமாம். சூரியகுலத்துஅரசர்களான இராமலக்ஷ்மணர்க்கும் இராவணன் முதலியஅரக்கர்கட்கும் இலங்கையில் நடந்த பெரும்போரில் இராக்கதர்களாற் கொல்லப்பட்ட வாநரர்கள் அநுமான்கொணர்ந்த ஔஷதிபருவதத்துமூலிகைகளினாற் பிழைத்தெழுந்தன ரென்பது, இராமாயணவரலாறு.

அறம்நெறி - தருமமார்க்கம்.

19-ஆவது வரியில், பிறநதான் என்பதை, பிறந்தான் என்று திருத்துக.

பண்பு – நற்குணம்; எல்லாரியல்புகளும் அறிந்துஒத்துஒழுகுதலுமாம்: "பண்பெனப்படுவது பாடறிந்தொழுகல்" என்பது, கலித்தொகை.

இறுமாப்பு - மிக்கமகிழ்ச்சி; இறுமா - பகுதி, பு-தொழிற்பெயர்விகுதி.

பூரித்து - மகிழ்ச்சியால் உடம்பு பருத்து.

மனோ ராஜ்யம் - தான் மகிமையடைந்து அனுபவிப்பதாக மனத்தினால் சிந்தித்து மகிழ்தல்.

போகப்படாது = போதல்கூடாது.

பரிக்காரர் - குதிரைக்காரர்.

வரவு குறித்து - தேர்வருவதைச் சொல்லிக்கொண்டு.

மெல்லென - மெதுவாக: மந்தக் குறிப்பு.

பரபரப்பு - மிக்கவிரைவு: இரட்டைக்கிளவி.

பக்கம்—41.

பட்டப் பிள்ளை - பட்டாபிஷேகமடையும் பிள்ளை.

நட்பு-சினேகம்; இங்கே, சிநேகிதனுக்கு ஆகுபெயர். நள்-பகுதி, பு-விகுதி.

தண்டம் - தண்டனை.

காணிக்கை - தக்ஷிணை.

தந்தைதாய் - தந்தைதாயர்; பன்மைவிகுதிபெறாத பொதுத்திணையும்மைத்தொகை.

சூன்று - தோண்டி; இந்த இறந்தகாலவினையெச்சத்தில், சூல் - பகுதி.

செம்புநீர்உருக்கி விட்டு - தாமிரத்தை நெருப்பிலிட்டு நீர்போலஉருக்கி அவ்வுருக்குச்சுடுநீரை வார்த்து.

தாழ்ந்து = தாழ்த்து: தாமதித்து. 'தாழ்த்திருக்கின்ற' என்றே முந்திய பதிப்புகளில் இருக்கிறது.

கண்டித்து - வெட்டி.

பாவிக்குத் தீர்க்காயுள்—"பாபீ சிராயு:" என்பது வடநூல்.

பக்கம்—42.

ஒருமித்து - இணங்கி.

கிரக சக்கரம் - பேய்பிடித்தவரை உட்கார்த்தி வைக்குமாறு தரையிற் கீறும் வட்டம்.

புல்லாற் செய்த புருஷன் - புல்லைக்கொண்டு மனிதன்போலச் செய்யப்பட்ட வடிவம்; "புல்லுரு."

புன்செய் - புல் செய்: தாழ்ந்த நிலம்; நெல்ஒழிந்ததானியங்கள்விளையும்நிலம். நெல்விளையும்நிலம், 'நன்செய்' எனப்படும். வயலை 'செய்' என்பது, கொடுந்தமிழ்நாடு பன்னிரண்டனுள்ஒன்றாகிய பன்றிநாட்டிலிருந்து செந்தமிழில் வந்து வழங்குந் திசைச் சொல்.

வேலைவேண்டி - வேலையைப்பெற விரும்பி.

வெறுங் காவல் - சம்பளமில்லாத சேவகம்.

'அரிச்சந்திரன்' என்றது, மயானத்தலைவனை. அரிச்சந்திரமகாராஜன் மயானங்காத்தமைபற்றி, இப்பெயர் வழங்கலாயிற்று. சரித்திரம், பிரசித்தம்.

அமங்கலவாரம், மங்கலவாரம் - செவ்வாய்க்கிழமை. இவற்றிற் பிந்தியது, மங்கலவழக்கு.

16-ஆம்வரியில் நாகப்பாம்மை என்பதை நாகப்பாம்பையென்று திருத்துக.

மனையாள் - வீட்டிலேயிருந்து ஸம்ஸாரகார்யங்களை நிர்வஹிப்பவளென்பது பற்றிய பெயர்.

உரித்து - உரியது. உரிமை-பகுதி.

உரித்தாகிய பொருள்கள் - ஒருமைப்பன்மை மயக்கம்.

மனுச் சக்ரவர்த்தி — "சிலவிகாரமாம் உயர்திணை" என்றதனால், வருமொழிமுதல்வலி மிக்கது.

தொழுது - வணங்கி, நமஸ்கரித்து.

மந்த்ரம் - ஆலோசனை; அதற்கு உரியவன் மந்த்ரீ.

பக்கம்—43.

ப்ரமை - திகைப்பு.

அநேகம் - பல. ஏகம் - ஒன்று, அல்லாதது அநேகம். ந + ஏகம் = அநேகம்.

ப்ரஜைகள் - ஜனங்கள். லேசமும் - சிறிதும்.

மாயமாய் குதித்து = மாயமாய்க் குதித்து.

அணிஅணி ஆக - வரிசைவரிசையாக.

விருது - வெற்றிக்குஅடையாளமானது; கொடி.

எச்சரிக்கைசெய்வோர்- தேர்வருவதை முன்அறிவித்து ஜனங்களுக்கு ஜாக்கிரதையுண்டாக்குபவர்.

கட்டியம் கூறுவோர் - புகழ்ச்சிப் பிரபந்தஞ் சொல்பவர்.

பட்டாங்குபடிப்போர் - பழைய வரலாறுகளைக் கூறித் துதிப்போர்.
சோர்வு பார்ப்போர்-அஜாக்கிரதையினால் தீங்குநேராதபடி கவனிப்பவர்.
20-ஆவது வரி, இதுவே-'இதுவோ' என்று திருத்துக.
நோவது - வெறுப்பது.
எய்தவன் - அம்பைத்தொடுத்துவிட்டவன்; எய் - பகுதி.
சாந்தி - பரிகாரம், பிராயச்சித்தம், தோஷத்தைத்தீர்க்குஞ் சடங்கு.

பக்கம்—44.

விதி - இருவினைப்பயன் செய்த உயிரையே சென்றுஅடைதற்கு ஏதுவாகிய நியதி; விதி.
வினைவசம் - கருமவசம்.
முன்னிலே - வியாஜம்; முன்னிலை-மேல்நோக்காகப்பார்க்குமிடத்துக் காரணம்போல முன்நிற்பது.
முறை - நீதி, வியர்வு - வேர்வை.
நகை - சிரிப்பு. இது வெகுளிநகையெனப்படும்.
ஒப்பு - சம்மதம்.
சஞ்சலம் - துன்பம், கலக்கம்.
ஜீவநம் - பிழைக்கும்உபாயம்.
திசை - திக்கு. பழுது-குற்றம்.
நைச்ய வார்த்தைகள் - பணிவோடு கூறும் வார்த்தைகள்; நீசத்தன்மையை [இழிவை] யுடைய வார்த்தைகளென்றும் பொருள்படும்.
இம்மை - இப்பிறப்பு, மறுமை - இறந்தபின்வரும்நிலை.
மீளாத - அடைந்தவர் திரும்பிவருதலில்லாத.
சிவ கதி - சிவலோகம், முக்தி.
அவ கதி - கெட்டபதவி, நரகம்.
ஆ ஆ - இரக்கம்.
ஓரவஞ்சனை - பக்ஷபாதமான வஞ்சனை.
திடுக்கிடுதல், அச்சக்குறி.
இதுகார்யம் - இந்தக்காரியம்.
சலிப்பு - அசைவு, மாறுதல்.
வழக்கு அழிவு - வியவஹாரத்திற்குக் கெடுதல்.
மனு நூல் - மநுவினால் இயற்றப்பட்ட நூல்; மூன்றும்வேற்றுமையுருபும் பயனுந் தொக்க தொகை.

பக்கம்—45.

தவிர்க்க - ஒழிக்க, நீக்க.
9-ஆவது வரி, நெரி - நெறி என்று திருத்துக.
ஸாவதாநமாக - கருத்துஊன்றுதலுடன். அவதாநம் - நிதானம், கவனம்.
தயவு = தயை; தயாஎன்ற வடசொல்லின் விகாரம்.
ஆன்மா - ஆத்மா, உயிர்.
இங்கு முறைநிரனிறைப்பொருள்கோள் காண்க. அறிவின் உயர்வுபற்றிப் புண்யபாபங்கள் ஏறும், அறிவின் தாழ்வுபற்றிப் புண்ணிய பாவங்கள் குறையும் என்க.
சுருதி - வேதம்; எழுதாக்கிளவியாய்க் குருசிஷ்யகிரமத்திற் கர்ணபரம்பரையாக வருவது.
தர்ம அர்த்த காம மோக்ஷம் - அறம் பொருள் இன்பம் வீடு.
யோக்யம் - தக்கது.
மனிதப் பிறவி - மநுஷ்ய ஜந்மம்.
மதப்பட்டு - மதங்கொண்டு, மதம் பிடித்து; மதம் - கொழுப்பு.
அடவி - காடு.
காமக்ரோத ஆதிகள் - காமம் கோபம் முதலியவை.
காக்கை ஏறிப் பனம்பழம் விழுந்தது-இது, காகதாலீயந்யாய மெனப்படும்: ஏறி=ஏற: எச்சத்திரிபு. காக்கைஏறுகின்றசமயத்திற் பனம்பழம் தானேவிழ, அவ்விழுதலுக்குக் காக்கைஏறியமை காரணமென்று கருதப்படுவது. பனை+பழம்=பனம்பழம்; 'ஐ' கெட 'அம்' சாரியை தோன்றிற்று: [நன் - உயிர் - நிஙு.]
அச்சம் உறுத்தி - மிக்க பயத்தையுண்டாக்கி.
27 - ஆவது வரி, அரிசனம் - 'அநசனம்' என்று திருத்துக. (வேறுபதிப்புக்களில் அவ்வாறேயிருக்கிறது.) அநசநம் - (சிலநாள்) உணவின்றியிருத்தல். அசநம்-உணவு, ந+அசநம்.
தரம் - தகுதி.
குண அகுணங்கள்-குணமும், அகுணமும்.
அற நூல் - தருமசாஸ்திரம்.
அபூர்வமான-முன்புஇல்லாததான.

பக்கம்—46.

நன்றாய்இருந்தது உமதுவார்த்தை- எதிர்மறையிலக்கணை, பிறகுறிப்பு: இகழ்ச்சிக்குறிப்பு.

பூர்வ பாகம் - வேதத்தின் முற்ப குதி. இது, கர்மகாண்டமெனப்படும்.

உத்தர பாகம் - அதன் பிற்பகுதி: ஞானகாண்டமெனப்படும் உபநிஷத் துகள்.

பரமேசுவரன் - பரமஈஸ்வரன்: சிற ந்தகடவுள். குணசந்திபெற்ற வட மொழித்தொடர்; "அ ஆ முன் இ ஈ வரின், இரண்டுங்கெட ஏ்ஏகாரம் தோன்றும்".

விகல்பம் - வேறுபாடு.

நாடாது - கருதாமல்.

14 - ஆவது வரி, தேறில் - தேரில் என்று திருத்துக.

மறதி - மறத்தல்; இங்கே, அஜாக் ரதை; தி - தொழிற்பெயர்விகுதி.

முடிவு - தீர்மானம்.

24-ஆவதுவரி. உத்தரபாதம்-உத்தர பாகம் என்று திருத்துக.

குல ஆசாரம் = ஜாதிதர்மம்.

க்ரமப்பாடு - முறைமை.

பக்கம்—47.

நடுக் காடு - காட்டின் நடு.

நிவிர்த்தி = நிவ்ருத்தி.

சொன்னதே-சொன்னசொல்லையே.

என்பீரேல்-என்றுசொல்வீரானால்.

ஏல் - என்னில் என்பதன் மரூஉ.

சித்சக்தி - ஞானரூபமான (இறை வனது) சக்தி: சித்சக்தி, பராசக்தி, இச்சாசக்தி, ஜ்ஞானசக்தி, க்ரியா சக்தி என்று சக்தி ஐந்துவகைப்படும்: உயிர்க்கு ஒளியாகநிற்பது, சிற்சத்தி. பிராணன்முதலிய வாயுவாகநிற்பது, பராசத்தி. பஞ்சபூதமாகநிற்பது, இச் சாசத்தி. ஐம்பொறியுணர்ச்சியாக நிற் பது, ஞானசத்தி. மற்றைவினைத் துணையாக நிற்பது, கிரியாசத்தி.

உருவம் - ரூபம்.

இறைவன் - கடவுள்; தலைவன்: இறைமையையுடையவன். (எல்லாப் பொருள்களிலும்) இறுத்தலையுடைய வனெனினுமாம்; இறுத்தல் - தங்கு தல்.

தநு கரணங்கள் - உடம்பும் உறுப் புக்களும். [காத.

நினைக்கப்படாத - நினைத்தற்குந்த

அபராதம் - குற்றம்.

19-ஆம் வரியில், அவ்வவ் உடம்பை என்பது அவ்வவ்வுடம்பை என்று இருக்கவேண்டும்.

இறப்பு-மரணம்; 'பு' விகுதிபெற்ற தொழிற்பெயர்.

ஸ்வதந்த்ரம் - உரிமை.

ஆகாமியம் - முற்பிறப்பிற்செய்த கருமங்களை யனுபவித்தற்காக எடுத்த ஜந்மத்திற் செய்யுங் கருமம்.

இதுபர்யந்தம் - இதுவரையிலும்.

பக்கம்—48.

வர்க்கம் - வகுப்பு. [ருக்கு.

அஹங்காரம் - யானென்னுஞ் செ

அந்யமானவர் - அயலார், உறவின ரல்லாதவர்.

கறுவு-வைரம். முரண்-மாறுபாடு.

மரபு - குலகோத்திரங்களும், வம்ச பரம்பரையும்; ஸம்பிரதாய மெனினு மாம்.

ஏகதேசம் - சிறுபான்மை.

துணிவு - உறுதி, நிச்சயம்.

ஐயறிவு-மெய் வாய் கண் மூக்குச் செவி என்னும் ஐம்பொறிகளின் அறி வுகள்; சப்த ஸ்பர்ச ரூப ரஸ கந்தங் களை யறியும் உணர்ச்சிகள். [இங்கு, நன்னூல் - உரியியல் ௩-ஆம்சூத்திரம் முதல் ரு - சூத்திரங்கள் பார்க்கத்தக் கன.] ஐயறிவுள்ளமிருகவர்க்கம்--"மா வும் மாக்களும் ஐயறிவினவே" என்ற தொல்காப்பியத்தைக் காண்க.

பசுவர்க்கத்தது - பசுவர்க்கத்திற் சேர்ந்தது.

ஏர் - கலப்பை.

ஆறுஅறிவு - முன்கூறிய ஐவகை யறிவோடு, நன்மைதீமைகளைப்பகுத் துஉணரும் விவேகமும்; "மக்கள்தா மே ஆறறிவுயிரே" என்பது தொல் காப்பியம்.

ஊழ்வினை - விதி.

பக்கம்—49.

அரசன் உரைக்கலுற்றார் — ஒரு மைப்பன்மைமயக்கம். பன்மை, உய ர்வுபற்றியது.

ஆற்றப்படாத - தணிக்கமுடியாத.

வடித்து - பெருக்கி.

முன்தவக்குறை - முற்பிறப்பிற்செய்து முடிக்காமல்விட்ட தவத்தின் குறை.

இப்படிப்பட்ட மேன்மையுள்ளபசுவை ஐயறிவுடைய ம்ருகவர்க்கத்துள் ஒன்று என்று சொல்லல் தகுமோ?—"மக்கள்தாமே ஆறறிவுயிரே, பிறவும் உள‍வ அக்கிளைப்பிறப்பே" என்ற சூத்திரத்தின்கீழ் உரைகாரர் 'பிறப்பென்றதனால், குரங்கு முதலாகிய விலங்கினுள் அறிவுடையன வெனப்படும் மனவுணர்வுடையனஉளவாயின் அவையும் ஈண்டு ஆறறிவுயிராய் அடங்கு மென்பது' என்றமை காண்க. எனவே, "மாவும் மாக்களும் ஐயறிவினவே" என்ற கீழ்ச்சூத்திரத்தில்நாற்கால்விலங்கை ஐயறிவுயிரென்ற பொதுவிதிக்கு இது விலக்காயிற்று.

திருவாரூர் தன்னிடத்திற்பிறந்தவர்கட்கு முத்தியளிக்குந் தல மாதலால், முத்திபெறுதற்பொருட்டு அத்தலத்திற் பிறக்குமாறு தேவர்களும் தவஞ்செய்வ ரென்க.

மஹத்வம் - மகிமை.

ஏமப்பேறூரில் அந்தணர்குலத்தில் தோன்றித் திருவாரூர்க்கு வந்து அங்குச் சிவபிரானுக்கு நீரினால்திருவிளக்கேற்றியவரான நமிநந்தியடிகள்நாயனார், ஓர்உத்ஸவகாலத்திற் பலசாதியார்களும்கூடிநெருங்குதலால் தாம் தீட்டுப்பட்டதாக நினைத்தபோது,சிவபிரான், அவர்கனவில்தோன்றி, 'திருவாரூரிற்பிறந்தஉயிர்களெல்லாம் நமது கணங்கள்' என்றுசொல்லி, மறுநாள் அவ்வாறே அந்நாயனார்க்குக் காட்சிசெய்வித்தருளின ரென்ற வரலாறு, இங்கு அறியத்தக்கது.

சிவ கணம் - சிவபிரானைச்சார்ந்த அடியார்களாகிய பிரமதகணங்களின் கூட்டம்.

ஸித்தாந்தம் - தேர்ந்தகருத்து.

க்ஷேத்ரம் - ஸ்தலம்.

32-ஆவதுவரி. ப்ராரத்வம்=ப்ராரப்தம் என்று திருத்துக. இப்பிறப்பில் அநுபவிக்கும்படி எடுத்துக்கொண்ட கர்மங்கள். அதனாலேயே எல்லாம்நேர்கின்றன வென்று வாதஞ்செய்பவர், ப்ராரப்தவாதிகள்.

ஜீவன் - உயிர்.

ஆகாம்ய கர்த்தா-ஆகாம்யகர்மத்திற்குவினைமுதல். கர்த்தா-செய்பவன்.

கர்மம் மூன்றுவகைப்படும்; ஸஞ்சிதம், ப்ராரப்தம், ஆகாம்யம் என. அவற்றில், ஸஞ்சிதமாவது - பிறப்பு அநாதியாய்வருதலின் உயிரால் அளவின்றிஈட்டப்பட்ட வினைகளின் பயன்கள். ப்ராரப்தமாவது - அவ்வினைப் பயன்களுள் இறந்தஉடம்புகளால் அனுபவித்தன போகப் பிறந்தஉடம்பால் அனுபவிக்கத்தொடங்கியவை. ஆகாம்யமாவது - எடுத்த இப்பிறப்பிற் செய்யப்படுவன. கர்மம் - மனம் வாக்குக் காய மென்னுந் திரிகரணங்களாலும் உயிர்கள் செய்துகொண்ட புண்ணிய பாபங்கள்.

உத்தம மார்க்கம் - மேலான வழி.

பக்கம்—50.

நிவாரணம் - நீங்குதல்.

சமைவேன் - அமைவேன்.

இரண்டு-இரண்டாவது, மாறுனது.

தீர்ப்பு - தீர்மானம், முடிவு.

கலா வல்லபன் என்ற வடமொழிப்பெயர் - சாஸ்திரங்களுக்குத் தலைவனென்று பொருள்படும்; கல்வியில் தேர்ந்தவ னென்பது கருத்து.

கிடத்தி-படுக்கவைத்து. கிட என்பதன் பிறவினையான கிடத்து-பகுதி.

அரும்ப - துளிக்க.

பஞ்ச வர்ணக் கிளி - ஐந்து வர்ணங்களையுடைய கிளி. பஞ்ச வர்ணங்கள் - வெண்மை, கருமை, செம்மை, பசுமை, பொன்மை.

உணர்வு - அறிவு.

திகைப் பூடு-தனது ஸ்பரிசத்தால் மயக்கத்தையுண்டாக்குவதொரு பூண்டு.

நெடுமூச்சு - பெருமூச்சு.

சம்போ-சிவபிரான் திருநாமமாகிய 'சம்பு' என்ற வடமொழிப்பெயரின் விளி. சம்பு - இன்பமுண்டாதற்குக் காரணமானவன்; சம் - சுகம்.

இரு தலைக் கொள்ளி - மேல் கீழ் என்னும் இருபுறத்தும் தீப்பற்றப்பெ

ற்றதொரு கட்டை. அதனிடையே அகப்பட்டஎறும்பு, ஒருபக்கமும்போய்த்தப்பிப்பிழைக்கமாட்டாமல் திகைக்கும்.

திகைத்தல் - பிரமித்தல்.

ஊசல் - ஊஞ்சல். உரிமை-கடமை.

பக்கம்—51.

எண்ணுதல் - நினைத்தல்.

நடைத் தூக்கம் கொண்டவன்-நடக்கும்பொழுது தூக்கம்வரப் பெற்றவன்.

உடை வாள் - உடுப்பிற் சொருகப்பட்டிருக்கும் வாள்.

ஊட்டி - தொண்டை.

ஒற்றர் - வேவுகாரர்; ஆங்காங்கு நிகழுஞ் செய்திகளை யறிந்து வந்து அரசனிடஞ் சொல்வோர். வடமொழியில், சாரரெனப்படுவர். தூதரினும் வேறானவர் இவர்.

இடர்-துன்பம். துன்பமெல்லாம் தனக்கு வந்தது-பன்மை யொருமை மயக்கம். சோதனை - சோதித்தல். ஆள் - அடிமை.

பக்கம்—52.

புறம் - வெளி.

மேனி - உடம்பின் நிறம்.

நா - நாக்கு.

32-ஆம் வரி. இருந்தோ - எங்கிருந்தோ என்று திருத்துக. [ஞெட்டம்.

தாக்ஷண்யம் = தாக்ஷிண்யம்: கண்

பக்கம்—53.

ஆவலித்தார் = அவலித்தார். அவலப்படுதல் - சோகித்தல்.

பற்றுதல் - எரிதல்.

மார் - மார்பு : மரூஉ.

கர்த்தர்கள் - முதற்கடவுளர்.

கடக்கக்கூடுமோ - 'கடக்க' என்ற செயவெனெச்சம், தொழிற்பெயர்த் தன்மைப்பட்டு எழுவாயாய்நின்றது.

நாணம்-வெட்கம், லஜ்ஜை: தகாத செயல் செய்துவிட்டதனு லாகியது. தொழிற்பெயர்; நாண் - பகுதி, அம்-விகுதி.

குற்றவாளி - குற்றம் ஆளி: குற்றத்தை யுடையவன்.

பக்கம்—54.

கிடத்துங்கள் - படுக்கவையுங்கள்.

8 - ஆம் வரி. ஐஸ்வரியம்—ஐம்வரியம் என்று திருத்துக; செல்வம்.

தாழி - இங்கே, தயிர்ப்பானை.

எமன்-யம னென்ற வடசொல்லின் சிதைவு.

எதிர்ப்பட்டது - நேர்ந்தது, எதிரில்வந்தது.

த்வஜம் - கொடி.

காவல் - காவலாளர்: இலக்கணை.

பக்கம்—55.

நின் அடிமையில் - உனக்குத் தொண்டுசெய்தலில்; உனது அடியார்களில் என்றும் கொள்ளலாம்.

உரித்தாயிருந்த மற்றவர்கள் = உரியவராயிருந்த மற்றவர்கள்.

புலால் உடம்பு - மாம்ஸ சரீரம்.

போட்டு, போடு - பகுதி.

நீழல் - நிழல்: நீட்டல்விகாரம். செய்யுளுக்குஉரிய இவ்விகாரம், சிறுபான்மை வசனநடையிலும் வரும்; அளபெடைபோல.

திருவடி = முக்தி.

பக்கம்—56.

பஞ்சாக்ஷரம்-பஞ்ச அக்ஷரம்: ஐந்து எழுத்துகளையுடைய சிவமகாமந்திரம்.

யோக நித்ரை-அறிதுயில்; எல்லாம் அறிந்துகொண்டே தூங்குவது போலிருத்தல். யோகாப்பியாச முறைப்படி கருத்துப் பரம்பொருளினிடத்தே செல்லுதலாற் பிரபஞ்சவிஷயம் தெரியாதிருத்தலுமாம்.

ஆள் கொண்ட-அடிமைகொண்ட.

ப்ரத்யக்ஷம்-கட்புலன், கண்ணுக்கு எதிர். ப்ரதி - எதிர்.

திருவுள்ளப் பாங்கு - ஸங்கல்பம், மனத்தின் நோக்கம்.

தருமநூல் - தர்மசாஸ்திரம்.

மாறுட்டம் - மாறுபடுதல், தடுமாறுதல், தவறுதல்.

திரிகரண சுத்தி - மனம் வாக்குக் காயம்என்னும் மூன்றுஉறுப்புக்களும் பரிசுத்தமாயிருத்தல்.

பாப ஆத்மா - பாவஞ்செய்தஉயிர்.

கடாக்ஷிக்க - அருள.

நசுக்குண்டு - நசுங்கி.

பக்கம்—57.

கண்யவான் - பெருமையுடையவன், நன்குமதிக்கத்தக்கவன்.

2-ஆம்வரி. சுபகரம்=சுபம் என்று கற்பகம் - தேவதரு. [திருத்துக.

3 - ஆம் வரி. துர்துமி=துந்துபி என்க; பேரிகைவாத்தியம்.

ருஷபம் - வடசொல்; எருது.

புல்நகை - புன்சிரிப்பு. சிரிக்கும்போது பற்களின்வெள்ளொளி வெளித்தோன்றுதலால், 'நிலவு தனும்பி வீசுகின்ற' என்றார். நிலவு - நிலா, சந்திரகாந்தி.

செய்வித்து=செய்து.

அருள்நோக்கம்-கிருபாகடாக்ஷம்.

விடாய் - சிரமம், இளைப்பு.

இவ்வரசனைச் சோதிக்கும்பொருட்டுச் சிவபிரானே பசுவாகவும், யமனே கன்றாகவும் வந்தனரெனச் சிலநூல்கள் கூறும்.

வேண்டாம்=வேண்டா: வேண்டும் என்ற வியங்கோளின்எதிர்மறை.

கடாக்ஷித்து - கடைக்கண்ணால் நோக்கி, அன்போடு பார்த்து.

அருகே - சமீபத்திலே.

'அற்புதம் அற்புதம்' முதலிய அடுக்குகளுக்குக் காரணம், வரம்புகடந்த மகிழ்ச்சி யென்க; [நன்-பொது-சச.]

பக்கம்—58.

எதிர்ப்பட்டால் - பிரதியக்ஷமாய்த் தரிசனந்தந்தால்.

எக்களித்தல் - மிகமகிழ்தல்.

கோலங்கள் - அலங்காரங்கள்.

ஆனந்தநீர் - ஆனந்தக்கண்ணீர்.

வண்டலாட - சுழிகொள்ள. வண்டல் - நீர்ச்சுழி.

விதிர்விதிர்த்து - நடுநடுங்கி. இதுவும், 'சிலிர்சிலிர்த்து' என்பதும்-இரட்டைக்கிளவி.

11 - ஆம் வரி. மயிர்க்குச்சு=மயிர்க்கூச்சு என்க. [நெகிழ்ந்து.

என்பு - எலும்பு. நெக்குவிட்டு -

சித் பரன் - ஞானஸ்வரூபியான சிறந்தகடவுள்; அல்லது, ஞானத்திற்கு எட்டாது மேலாய் நிற்பவன்.

தத் பரன் - ஜீவாத்மாவைக்காட்டிலும்மேலானவன். [மாகவுடையவன்.

சித் குணன் - ஞானத்தையே குண

சித்மயன்-ஞானமயமாயுள்ளவன்.

தண்டு - தண்டம்: தடி.

அனந்த முறை - எல்லையில்லாத [மிகப்பல] தடவை. அந்தம் - எல்லை. ந+அந்தம்=அநந்தம்.

புழுதி ஆடி - புழுதிபடிந்து.

நனவு - பிரதியக்ஷமான தோற்றம். (இதன் எதிர், கனவு; சொப்பனம்.)

கருணாநிதி-கருணை நிறைந்தவன்,அருட்செல்வத்திற்கு இருப்பிடமானவன்.

வேதங்கள் இளைக்கின்றது-பன்மையொருமைமயக்கம்: பால்வழுவமைதி; தனித்தனி இளைக்கின்றதென அமைக்க. 'இளைக்கின்றன' என்றிருப்பது, வழாநிலை.

க்ருமி=க்ரிமி; புழு. கீடம் - வாற்புழு; கோற்புழு வெனவும்படும்.

அசேதநன் - அறிவில்லாதவன்.

திருவடிக் காட்சி - திருவடிகளைத் தரிசித்தல்.

பலிக்கும்படி - வாய்க்கும்படி.

கைம்மாறு - பிரதியுபகாரம்.

திரு அருள் கோலம் - திருவருளோடு கூடிய வடிவம்.

சலியாத - அசையாத, மாறாத.

பக்கம்—59.

போற்றி - வாழ்வாயாக; இ-விகுதி. போற்றியவென்னும் யகரவீற்றுவியங்கோளின் விகார மென்றலும் அமையும். அடுக்கு - மகிழ்ச்சிபற்றியது.

ஒருகுடையின்கீழ் - தனிஅரசாட்சியின்கீழ்.

மெய்அறிவு - தத்துவஞானம்.

மீளாத பேரானந்த போகம் - முத்திப்பேரின்பமனுபவித்தல்.

அந்தர்த்தானம் - மறைதல்.

"வாழி மனுச்சோழர் வாழி யவர்மைந்தன்
வாழி யவர்மந்திரியாம் வல்லவனும்—வாழியவர்
செங்கோன்முறை யவர்தஞ்சீர்கேட்டவர் வாழி
யெங்கோன்பதம் வாழியே"

---

# இக்கதையின் சுருக்கம்.

மனுச்சோழனது புத்திரன் இளம்பிராயத்தில் ஒருநாள் தேரிலேறி வீதியிற்செல்லுகையில், பசுவின்கன்றொன்று துள்ளி வந்து தேர்ச்சக்கரத்தின்கீழ்அகப்பட்டு இறந்தது. அதுகண்ட அந்தராஜகுமாரன் மிகமனம்வருந்தினன். இப்படியிருக்கையில், கன்றையிழந்த பசு, துன்பம்பொறுக்கமாட்டாமல் கதறிக்கொண்டு கண்ணீர்பெருக ஓடிச்சென்று, மனுவினது அரண்மனைவாயிலிற் கட்டியுள்ள ஆராய்ச்சிமணியைத் தன்கொம்பினு லடித்தது. அவ்வொலிகேட்ட அரசன் விரைந்துவந்து, நடந்தசெய்தியை அங்கிருந்த ஒருமந்திரியால் அறிந்து மனந்தளர்ந்து 'இதற்குப் பரிகாரம் யாது?' என்று மந்திரிகளைக் கேட்க, அவர்கள் 'கோவதத்திற்குத் தருமசாஸ்திரங்களில்விதிக்கப்பட்ட பிராயச்சித்தத்தைக் குமாரனுக்குச் செய்விப்பதே தருமம்' என்றார்கள். அரசன் 'அந்தப் பிராயச்சித்தம், கன்றையிழந்து அலறுகிற இப்பசுவின் துன்பத்திற்கு ஈடாகாது. இப்பசு தன்கன்றையிழந்து துயரடைதல் போல, நானும் என்மகனையிழந்து துயரடைவதே நீதி' என்றுசொல்லி, ஒரு மந்திரியைநோக்கி, 'என்பிள்ளையை வீதியிலேகிடத்தித் தேரை மேல்நடத்து' என்று கட்டளையிட, அவன் அதுசெய்யத்துணியாமல் தன்உயிரை விட்டிட்டான். பின்பு மனு தன்மகனைத் தானே வீதியிற்கிடத்தித் தேரை மேலேஓட்டினன். அவனது தருமநெறியையும், நடுவுநிலைமைசிறிதுந்தவறாத பெருந்தன்மையையுங் கண்டு களித்துக் கடவுள் பிரதியக்ஷமாகி, இறந்த மூன்றுபிராணிகளையும் பிழைப்பூட்டி அரசனைக்கொண்டாடிமறைந்தனர்.

("சால மறைத்தோம்பிச் சான்றவர் கைகரப்பக், காலை கழிந்ததன் பின்றையும் - மேலைக், கறவைக்கன் றூர்ந்தானைத் தந்தையு மூர்ந்தான், முறைமைக்கு மூப்பிளமை யில்" என்று பழமொழியிலும், "வாயிற் கடைமணி நடுநா நடுங்க, ஆவின் கடைமணி யுகுநீர் நெஞ்சுசுடத் தான் தன், அரும்பெறற் புதல்வனை யாழியின் மடித்தோன்," "கறவை முறைசெய்த காவலன்' என்று சிலப்பதிகாரத்திலும், "மகனைமுறைசெய்தமன்னவன்" என்று மணிமேகலையிலும், "அவ்வருக்கன்மகனுகு மனு மேதினிபுரந்து அரியகாதலனை ஆவினதுகன்றுநிகரென்று, எவ்வருக்கமும்வியப்ப முறைசெய்த கதையும்" என்று கலிங்கத்துப்பரணியிலும், 'மையல்கூர், சிந்தனை யாவிற்கு முற்றத் திருத்தேரில், மைந்தனை யூர்ந்த மறவோன்" என்று விக்கிரமசோழனுலாவிலும், "பார்மேல், மருளும் பசுவொன்றின் மம்மர்நோய் தீர, உருளுந் திருத்தே ருரவோன்" என்று குலோத்துங்கசோழனுலாவிலும், "செம்மலைப் பண்டேர்ந்த தேரோன்" என்று சங்கரசோழனுலாவிலும் இச்சரித்திரம் கூறப்பட்டிருத்தல் காண்க.

---

# விநோதரசமஞ்சரி.

விநோதரஸம் - விசித்திரமான சுவையையுடைய விஷயங்கள், மஞ்சரி - கொத்து. ஆகவே, விசித்திரமான சுவையையுடைய விஷயங்களின் தொகுதியையுடைய நூல் என்று பொருள்படும். விநோதரஸம் - பண்புத்தொகையன்மொழி. ரஸமஞ்சரி - வேற்றுமைத்தொகையன்மொழி. இதனை இயற்றியவர் - அஷ்டாவதானம் - வீராசாமிசெட்டியார்.

பக்கம்—60.

கற்று ஆய்ந்து ஒழுகல் - படித்து அவற்றை ஆராய்ந்து அதன் படியே நடத்தல்.

'கற்க கசடற' என்று திருத்துக. அகரவீற்று முற்றின்முன் வலியியல் பாதலை "செய்யியவென்னும் வினையெச்சம் பல்வகைப், பெயரினெச்சம் முற்று ஆறனுருபே, அஃறிணைப்பன்மையம்மமுன்னியல்பே" என்றவிதியா லுணர்க. கற்க - அகரவீற்றுவியங்கோள் வினைமுற்று. (இ - ள்.) கற்பவை - கற்கவேண்டிய நூற்பொருள்களை, கசடுஅற - (ஐயம் திரிபுஆகிய) குற்றமில்லாதபடி, கற்க - (ஒவ்வொரு மனிதரும்) கற்கக்கடவர்; கற்றபின் - அவ்வாறு படித்தபின்பு, அதற்கு தக - (தாம்) படித்ததற்குத்தக்கபடி (ஒழுக்கந்தவறாமல்), நிற்க - (தருமநெறியில்) நடக்கக்கடவர்; (எ - று.) ஐயமாவது - 'குற்றியோ மகனோ' என்றாற்போலத்தோன்றும் சந்தேகவுணர்வு. திரிபாவது - குற்றியைமகனென்றும், சிப்பியை வெள்ளியென்றும் மாறுகக்கருதுவது போன்ற விபரீதஞானம்.

மக்கட்பிறப்பிற் பிறந்தவர்கள் வேடர்போலவும் அஃறிணைபோலவும் வாழ்நாள் கழியாமல் கல்விப்பொருளைத் தேடல் வேண்டும் என்க.

வறிது இருந்து - சும்மாவிருந்து.

கல்விப்பொருளாவது என்று தொடங்கும் வாக்கியம், செல்வப்பொருளைவிடக் கல்விப்பொருளுக்கு உள்ள ஏற்றத்தை விளக்கும்.

வவ்வப்படாதது - வெளவப்படாதது, கவரமுடியாதது.

தாயத்தார் - பங்காளிகள்.

வழங்கினல் - கொடுத்தால்.

அஞ்ஞானம் - அஜ்ஞாநம் என்ற வடமொழியின் விகாரம். அறியாமையென்று பொருள்.

வரையறை - இவ்வளவு என்று எல்லையிடுதல்.

பக்கம்—61.

சாமானியவாசகம் - ஸாதாரணமாக வழங்கும் வார்த்தை.

ரஞ்சனக்கூத்து - அயலாரைமகிழ்விக்க ஆடுங் கூத்து.

உள்ளிட்ட - முதலாகிய என்ற [படி.

புன்கல்வி - அற்பப்படிப்பு.

விழுமிது - சிறந்தது.

இலக்கியம் - லக்ஷ்யம்; இலக்கணநூற்கு உதாரணமாகக் காணத்தக்கது.

சம்பிரதாயம் - வரன்முறை.

சந்நிதானத்தில் - எதிரில்.

ஏக்கற்று - ஏங்கி.

கருணைகூர்ந்து - அருள் மிகுந்து.

பேருண்டி - மிகுந்த ஆஹாரம்.

அம்பலம் - பலர்தங்குதற்கு உரிய இடம்.

பிரதிஷ்டை - கீர்த்தி.

பயின்ற - அப்பியாசஞ்செய்த.

சீத்து - கிளறித்தள்ளி.

அநுஷ்டித்தல் - ஒழுகுதல்.

முக்கனி - மா பலா வாழை என்ற இவற்றின் கனி.

பக்கம்—62.

சாரதாபீடம் - ஸரஸ்வதியெழுந்தருளியிருக்கும் இடம்.

உற்பாதபிண்டம் - உற்பாதமாகத் தோன்றியபொருள்.

5-ஆம் வரியிலும் 25-ஆம் வரியிலும் என்றும் என்பதை என்னும் என்று திருத்துக.

அஜ கஜ அந்தரம் - யாட்டிற்கும் யானைக்குமுள்ள வித்தியாசம் இவனுக்கும் நமக்கும்உள்ளது என்றபடி.

விளக்கை நெய்விட்டு ஏற்றினாற் பிரகாசிக்குமேயன்றி நீர்விட்டேற்றினாற் பிரகாசியாததுபோல், பிறரால் புகழ்தோன்றவேண்டுமேயல்லது நம்மைநாமேபுகழ்தலால் புகழ்தோன்றாதென்க. "தன்னைவியப்பிப்பான் தற்புகழ்தல் தீச்சுடர், நன்னீர்சொரிந்து வளர்த்தற்றால்" என்றது காண்க.

சதஅமிசம் - நூறுபங்கு. ஏகஅமிசம் - ஒருபங்கு.

பட்டவர்த்தனப்பரி - பட்டவர்த்தனராகிய அரசர் ஏறுங் குதிரை.

பரதிரவியம் - அயலார்பொருள்.

பிரமஹத்தி - பிராமணனைக் கொன்ற பாவம்.

கற்பம் - பிரளயகாலம்.

கிருஷ்ணசர்ப்பம் - கருநாகம்.

பக்கம்—63.

பூஷணம் - ஆபரணம்.

சித்திரவதை - உறுப்புஉறுப்பாக அறுத்துவருத்திக்கொல்லுதல்.

ஒருவர் செய்த நன்றியை......அதில்லை - "எந்நன்றிகொன்றார்க்கு முய்வுண்டாமுய்வில்லை,செய்ந்நன்றிகொன்றமகற்கு" என்பது திருக்குறள்.

10 - வரி. முத்திரத்தார்களில்-மூத்திறத்தார்களில் என்று திருத்துக. மூன்றுவகையார்களில்.

ஓரம் - பட்சபாதம்.

துலாக்கோல் - தராசுகோல்.

காட்சிமாத்திரத்தால் - மேல்தோற்றத்தால்.

காஞ்சிரங்காய் - எட்டிக்காய்.

செவந்து = சிவந்து.

அம்பு வளைவின்றி...பகுத்தறிவதுபோல—"கணைகொடிது யாழ்கோடு செவ்விது தாங்கன்ன, வினைபடுபாலாற் கொளல்" என்பது, திருக்குறள்.

பக்கம்—64.

ஆடை......உதவி செய்கின்றவர்களும்—"உடுக்கை யிழந்தவன் கைபோலவாங்கே, யிடுக்கண்களைவதாம் நட்பு" என்றார், திருவள்ளுவனார்.

கொல்லன் - கருமான். கொல்லன்...... உபத்திரவத்தைஅநுபவிக்கின்றவர்கள்- "சுட்டுக்கோல்போல வெரியும் புகுவரே, நட்டாரெனப்படுவார்" என்பது, நாலடி.

காஷ்டம் - சிதை.

வெளி - ஆகாயம்.

பட்டிமாடு- திருட்டுத்தனமாக அயலார்வயல்களை மேய்கிற மாடு.

சரம் - அசையும்பொருள்; இயங்குதிணைப்பொருள். அசரம் - அசையாப் பொருள், நிலைத்திணைப்பொருள்.

பக்கம்—65.

அநுமான ப்ரமாணம் - ஒன்றைக் கொண்டு ஒன்றை ஊகித்தறிதல்; மேலேபுகைதோன்றுவதால் உள்ளே நெருப்புண்மையை யறிதல் போல்வன.

உபமானப்ரமாணம் - உபமேயப் பொருளை உபமானத்தைக்கொண்டு உணர்தல்; பசுவைக்கொண்டு கவயத்தையுணர்தல் போல்வன.

ஆகமப்ரமாணம் - சாத்திரத்தினாலுணர்தல்; 'அறஞ்செய்தவன் சுவர்க்கம்புகுவான்' என்று உணர்தல் போல்வன.

வாசாகயிங்கரியமாத்திரம் - வாக்கினால்மாத்திரம் உபசாரமாகப் பேசிவிடுதல்.

அபிமானம் - அகங்காரம்.

எய்த்து - இளைத்து.

11-ஆம் வரி. புணைபட்டு=பிணைபட்டென்று திருத்துக; ஜாமீன்தாரியாகி.

சுபாஷை=சுவபாஷை.

விவேககோசரத்தால்-பகுத்தறிவையுடையவனாயிருத்தலால்; கோசரம் - விஷயமாதல்.

கஷ்டஆர்ஜ்ஜிதம் - கஷ்டப்பட்டுச் சம்பாதித்தது.

ஸ்வஆர்ஜ்ஜிதம் - தானேசம்பாதித்தது.

அந்யஆர்ஜ்ஜிதம் ஆம்படி - பிறர்சம்பாதித்த பொருளாம்படி.

25 - ஆம் வரி. வறிதே - வறிதே என்று திருத்துக. வீணாக.

துறந்தார்முதலிய பதின்மர்—ஸந்யாஸி, பிரமசாரி, வாநப்ரஸ்தன், வறியவன், அகதி, பிதிருக்கள், தெய்வம், விருந்தினர், உறவினர், அரசன்என்ற

இவர். இதற்குப் பிறவாறும் உரைப்பர்.

துய்த்து - அநுபவித்து.

29, 30 - ஆவது வரிகள். பொறிபுலன்களை - பொறிகளையென்று திருத்துக. விஷய ஆகாரம் ஆம்படி - ஐம்புலன்களை உணவாகக்கொள்ளும்படி. ஐம்புலன்கள் - சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்பன. ஐம்பொறிகள் - மெய் வாய் கண் மூக்குச் செவி என்பன.

நெறிவழாது - முறைதவறாமல்.

பக்கம்—66.

11,12 - வரி. திருஷ்டாந்தரம் - திருஷ்டாந்தம் என்று திருத்துக.

வரன்முறை - பழமையாகி வருதலையுடையமுறைமை: சம்பிரதாயம்.

---

# பிரதாபமுதலியார் சரித்திரம்.

பக்கம்—67.

2, 3 - ஆம் வரி. தெருவீதிவழி - தெருவழி அல்லது வீதிவழி என்று திருத்துக.

அரவம் - சப்தம். ரவம்-வடசொல்.

16 - ஆம் வரி. வறுமாறு - வருமாறு என்று திருத்துக.

18 - வரி. விருத்தாப்பியமான = விருத்தாப்பியரான.

19 - வரி. விதந்துவாய்ப்போன - விதந்துக்களாய்ப்போன என்று திருத்துக.

பக்கம்—68.

பிரதிஜ்ஞை - சபதம்.

புரட்டு - மாறுபாடானவார்த்தை.

ருணபாதகம் - வாங்கின கடனை மோசஞ்செய்தலாலுண்டாகும்பாபம்.

யாவத்ஜீவபர்யந்தம் - யாவத்ஜீவம் என்றாவது, ஜீவபர்யந்தம் என்றாவது திருத்துக.

பக்கம்—69.

பரிதானம் - லஞ்சம்.

அச்சாரம் = அச்சகாரம். ஸத்யங்காரம் என்பது - வடசொல்.

தவசம் - பண்டம். [கள்.

பூபாலர்கள் - பூமிக்குஉரிய குடி

அகோராத்திரம் - இரவும் பகலும்.

பக்கம்—70.

உரைபோட - உறைபோட எனத் திருத்துக. உறையிடுதலாவது - பொருள்களைக் கணக்கிடும்போது ஞாபகத்தின்பொருட்டு ஒவ்வொரு பெருந்தொகைக்கு ஒன்றாக இடுவதோர் இலக்கக்குறிப்பு. எங்கள் கொள்ளைகளின் தொகை அதிகாரிகளின் கொள்ளைகளின்தொகைக்கு உறையிடவும் போதாதென்றுஅக்கொள்ளைகளின் வரம்பின்மையை விளக்கியவாறும். "அன்றுபட்டவர்க்கு உறையிடப்போதுமோ அநேகநாளினும்பட்டார்," "தறையிடத்தேயுழலெல்லாப்பிறவிதமக்கு மள, வுறையிடத்தேய்ந்திடு மிவ்வந்திவானத்துடுக்குலமே" என்பன காண்க.

சமயிகள் - மதஸ்தர்கள்.

த்ருஷ்டமாக - பிரத்யக்ஷமாக.

ருதுசாந்திகளும் - இச்சொல் விலக்குதற்கு உரியது.

வரி 19, 26-சிரார்த்தங்கள் - சிராத்தங்கள் என்று திருத்துக.

பக்கம்—71.

பிரார்த்தித்துக்கொண்டன = பிரார்த்தித்தன.

அதம் - ஹதம்; நாசம்.

நவதானியங்கள் - நெல், உளுந்து, பயறு, துவரை, அவரை, கடலை, எள்ளு, கோதுமை, கொள் என்பன.

மீந்தவை - மிகுந்தவை.

சில்லரை = சில்லறை.

பக்கம்—72.

விவகரிக்க - வியவகரிக்க: எடுத்துச் சொல்ல.

இழை - நூல். [துச் சொல்ல.

'கோடிவஸ்திரம் - சிலேடை: புதுவஸ்திரம்; நூறுலக்ஷம் வஸ்திரம் என்றும் பொருள்படும்.

அபாரம் - எல்லையில்லாதது.

24-ஆவது வரி. பசுக்கல்லே - பசுங்கல்லே என்று திருத்துக.

நுளையன் - நெய்தல்நிலத்து மனிதன்.

வரி - 27. எத்தி - எற்றி என்று திருத்துக. [கள்.

பொடிகள் - சிறிய இரத்தினக்கற்

இருபதுஎன்னுந்தொகைகொண்ட ரத்தினக்கற்களை 'கோடி' என்பது, மரபு.

பாடவேளை யில்லை = பாடவேளையன்று.

என்ன = என்ன ?

பக்கம்—73.

பரிபாஷை - சங்கேத மென்றும், குதிரைப்பாஷையென்றும் பொருள்படும்.

17-வரி. உலேகங்களை - உலோகங்களை என்று திருத்துக.

வாதிகள் - ரஸவாதிகள்:

பிரத்தியக்ஷம் = பிரதியட்சம்.

கரவடம் - மோசம்.

பக்கம்—74.

ஒட்டாக ஒட்டியும் - சத்தியமாகச் சொன்னாலும்.

மா - ஒருசிற்றளவை: இருபதில் ஒருபங்கு.

பூரணம் = பூர்ணம்.

ஜெபம் = ஜபம்.

பக்கம்—75.

மீசரம் - மிஞ்சியது.

பாரிப்பது - சுமத்துவது.

பிரமாணிக்கம் = பிராமாணிகம்.

பக்கம்—76.

"சிட்டுக்குருவிமேல் ராமபாணம் தொடுத்ததுபோல்" என்று வழங்குகிறது. பாரதம் - பாரதயுத்தத்திற் பிரயோகித்தபாணம்.

உச்சிட்டம் = உச்சிஷ்டம் ; எச்சில்.

பக்கம்—77.

மாற்சரியம் - பகைமை.

விகாதம் - தடை.

பக்கம்—78.

நிமை = இமை.

தோஷஆரோபணம் - குற்றஞ்சாட்டுதல்.

தோஷகிரஸ்தி = தோஷக்ரஸ்தை, குற்றங்கொண்டவள்.

22-வரி. சாமக்கிரியை - சாமக்கிரி என்று திருத்துக.

பக்கம்—79.

தெய்வீகம்ஆக்க - தெய்வம்போலப் பாராட்டும்படி.

பக்கம்—80.

புருஷீகரித்தார்கள் = வேஷம்போட்டுக்கொண்டார்கள்.

பக்கம்—81.

உதயம்முகூர்த்தம்ஆனதால் என்க.

வரி-11-இல் திருமங்கிலியம் - திருமங்கலியம் என்று திருத்துக.

கிரியாசாரம் - நடக்க வேண்டிய சடங்கு.

வந்ததும் முதலான விவரங்களையும் என்க.

பக்கம்—82.

கிராஹியஞ்செய்தல் = க்ராஹ்யஞ் செய்தல் - மனத்திற் கொள்ளுதல்.

சூல் - கர்ப்பம்.

பக்கம்—83.

பிரதியக்ஷதரிசனம் - நேரானசாட்சி.

ஒப்பாரி - முன்நடந்ததைப் பலாக்கணம்பாடி யழுதல்.

வரி-33. இசைந்ததாயிருந்ததால் = இசைந்தவளாயிருந்ததால் என்று திருத்துக.

பக்கம்—84.

சாட்டினபடியால் - சாற்றினபடியால்.

பொருமுதல் - புலம்புதல்.

அவகடம் - வஞ்சனை.

பாணிக்கிரகணம் - கையைப்பிடித்தல் : கல்யாணம்.

அபக்கியாதி - பழி.

ஓயாமுயற்சி - இடைவிடாத பிரயத்தனம்.

---

The Vaijayanti Press, Mount Road, Madras.